# உமா வாசகம்

## முதற்புத்தகம்

1939-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட பாடத்திட்டத்தின்படி எழுதப்பெற்றது.



ஆசிரியர் :

த. சே. உமாபதி, M.A., L.T., (Dip-in-Geog.)

தலைமையாசிரியர்,

ஸி. அப்துல் ஹக்கீம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி, சென்னை.

பதிப்பாசிரியர் :

வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை




உமாதேவன் கம்பெனி,

109-c, மவுண்டு ரோடு, தேனாம்பேட்டை, சென்னை-18.

பதிப்புரிமை] 1954 [விலை அணா 5

முதற்பதிப்பு: 1949
மறு பதிப்புக்கள்: 1950, 1952, 1953
திருத்திய பதிப்பு: 1954




# திருத்தப் பதிப்பின் முகவுரை

1939-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தையொட்டி எழுதப்பெற்ற இந்நூல் முதன்முதல் 1949-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இப்போது இது, பாட புத்தகங்கள் சம்பந்தமாக அரசியலார் அண்மையில் வெளியிட்டுள்ள புது விதிகளுக்கிணங்கத் திருத்தங்கள் பல செய்து வெளியிடப்படுகிறது.

இத்திருத்தப் பதிப்பு வெளியிடுவதில் எமக்குத் துணையாயிருந்து, ஏடுகளைப் பரிசோதித்து உதவிய நண்பர் திருவாளர் வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களுக்கு எமது உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்!

இந்நூலின் முன் பதிப்புக்கள் போலவே இப்பதிப்பும் தமிழ் நாட்டு ஆசிரிய அறிஞரின் மதிப்புக்குரியதாகும் என்று நினைக்கிறோம்.

பிரசுரகர்த்தர்

THE JUPITER PRESS, LTD., MADRAS-18.




# முதற்பதிப்பின் முகவுரை

'உமா வாசகம்' என்னும் பெயருடன் வெளிப்போதரும் நூல் வரிசையில் இது முதற்புத்தகம்; 1939-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட பாடத் திட்டத்தின் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டது; அத்திட்டத்தை முற்றிலும் தழுவி இயற்றப்பெற்றது; ஆசிரியரின் நீண்டகால அனுபவத்தால் குழந்தை உள்ளத்தின் நிலையறிந்து எழுதப்பெற்றது.

குழந்தைகளின் கண்களைக் கவரும் படங்களும், கருத்தைக் கவரும் பாட்டுக்களும், மனத்தை மகிழ்விக்கும் விளையாட்டுக்களும், மொழியறிவை வளர்க்கத்தக்க பயிற்சிகளும் இந்நூலின்கண் நிரம்ப இடம் பெற்றுள்ளன. பட்டணங்களிலும் கிராமங்களிலும் உள்ள எல்லாக் குழந்தைகளும் எளிதில் அறியக் கூடிய சொற்கள் இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன.

மேனாட்டு நூல்களையொப்ப இஃது எல்லாச் சிறப்புக்களும் நிறைந்து விளங்க வேண்டுமென்பது ஆசிரியரின் ஆவல். இதன் ஏடுகளைப் புரட்டிப் பார்க்கும் எவர்க்கும் இஃது எளிதில் புலனும்.

இந்நூல் அச்சாகுங்கால் ஏடுகளைப் பரிசோதித்து, இன்றியமையாத திருத்தங்கள் செய்து உதவிய என் நண்பர் திருவாளர் **வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கட்கு** என் உளமார்ந்த நன்றி உரியது. தமிழ் நாட்டுக் குழந்தைகள் இதனைப் படித்துப் பயனுறுதற்கு ஆவன செய்யுமாறு ஆசிரிய அறிஞர்களை வேண்டுகிறேன்.

சென்னை,
5—10—49.

த. சே. உமாபதி

# ஆசிரியர்கட்கு வேண்டுகோள் :

**1. படங்களும் பாட்டுக்களும் :** குழந்தைகள் படங்களையும், பாட்டுக்களையும் பெரிதும் விரும்புவார்கள். ஆதலால், இந்நூலில் படங்களும், பாட்டுக்களும் தரப்பட்டுள்ளன. முதலில் பாட்டுக்களைக் கற்பித்துப் பிறகு படங்களை உரையாடற்பயிற்சிக்குப் பயன் படுத்திக்கொள்ளலாம்.

**2. உயிரும் மெய்யும் :** உயிர்களைக் கற்பிப்பதற்கு முன் படங்களின் பெயர்களைக் குழந்தைகள் சொல்லும்படி செய்து, பின்னர் - **அ, அம்மி ; ஆ, ஆடு** என்னும் முறையில் கற்பிக்கலாம். எழுத்துக்களை வாய்மொழியாகக் கற்பிக்க வேண்டுமேயொழிய, முதல் மூன்று மாதங்கள் வரை எழுதச் செய்வது கூடாது.

உயிர் எழுத்துக்களைக் கற்பித்த பின், குழந்தைகள் அவற்றை வரிசையாக நினைவில் வைத்துக்கொள்வதற்கு 'அ-ஆ அ-ஆ அணில்ஆடு' என்னும் பாட்டைக் கற்பிக்கலாம். மெய்களையும் படங்களின் மூலமே கற்பிக்க வேண்டும்.

**3. உயிர்மெய்யும் சொற்பயிற்சியும் :** உயிர் எழுத்துக்களால் மட்டும் சொற்கள் அமைவதில்லை. மெய்களும் அங்ஙனமே. சொற்கள் அமைவதற்கு உயிர், மெய், உயிர்மெய் ஆகிய மூன்று வகை எழுத்துக்களும் இன்றியமையாதவை. ஆதலால், ஒவ்வோர் உயிரும் பதினெட்டு மெய்களுடன் சேர்ந்து தோன்றும் உயிர்மெய்களில் முதல் வகுப்புக் குழந்தைகள் அறிவுக்கு உட்பட்ட சொற்களுக்கு அவசியமான உயிர்மெய்களே 10-ஆம் பக்கந்தொடங்கி ஒவ்வொரு பக்கத்திலும் சேர்க்கப்பெற்றுள்ளன. இந்த முறைப்படி ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள சொற்கள், அந்தப் பக்கத்தில், புதியனவாகக் கற்பித்தற்குரிய எழுத்துக்களாலும், ஏற்கெனவே கற்பிக்கப்பட்ட எழுத்துக்களாலும் ஆக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பக்கத்திலும் செந்நிறத்தில் காணப்படும் எழுத்துக்கள் புதியனவாகக் கற்பிக்கப்பட வேண்டுவன.

**4. எழுத்துப் பயிற்சி :** ஒவ்வொரு பக்கத்திலும் புதியனவாகக் கற்பிக்கப்பட வேண்டிய எழுத்துக்கள், அந்தப் பக்கத்தின் இறுதியில் எழுத்துப் பயிற்சிக்காக, **'எழுதப் பழகு'** என்னும் தலைப்பின்கீழ்த் தரப்பட்டுள்ளன. முன்னரே கூறியபடி இந்தப் பயிற்சி முதல் மூன்று மாதங்களுக்குப் பிறகு மேற்கொள்ளப்பட வேண்டும்.

**5. விளையாட்டு :** இத்தலைப்பின்கீழ்த் தரப்பட்டுள்ளது குழந்தைகளுக்கு மகிழ்ச்சியளிப்பதோடு அவர்களிடம் உற்று நோக்கி உணரும் தன்மையையும் வளரச் செய்யும். பயிற்சிகள் விளையாட்டு முறையில் தரப்பட்டுள்ளன. அவை குழந்தைகட்கு வெறுப்பை உண்டுபண்ணாமல் மொழிப் பயிற்சியை நல்குவது திண்ணம்.

ஆசிரியர்கள், இந்நூலில் உள்ள சிறப்பியல்புகளை மேற்கூறிய வகையில் கையாளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

## உயிர் எழுத்துக்களைக் கற்பித்தல்

படத்தின் பெயரைச் சொல்லச் செய்து, பெயரின் முதல் எழுத்தைக் கற்பித்தல் :

எழுத்துக்களை எழுத வேண்டுவதில்லை.

அ

ஆ

இ

ஈ

உ

ஊ

| | | |
|---|---|---|
| | எ | |
| | ஏ | |
| | ஐ | |
| | ஒ | |
| | ஓ | |
| | ஔ | |

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ

ஒ ஓ ஔ

# உயிர் எழுத்துக்கள்

(பாட்டு)



அ, ஆ அ, ஆ
அணில் ஆடு ;
அழகாய் இதனை நீபாடு.



இ, ஈ இ, ஈ இலைஈட்டி ;
எழிலாய் நடநீ
கைநீட்டி.



உ, ஊ உ, ஊ உளிஊசி ;
உள்ளம் மகிழ நீவாசி.



எ, ஏ எ, ஏ எலிஏணி ;
ஏற்றம் இறைக்கும்
நீர்க்கேணி.



ஒ, ஓ ஒட்டகம் ஓர்ஓடம் ;
உண்மை உரைப்பது
நற்பாடம்.



ஐ, ஔ ஐயர்
ஔடதமாம் ;
அன்பாய்த் தமிழைப்
படிப்போம்நாம்.

## மெய் எழுத்துக்களைக் கற்பித்தல்

படங்களின் பெயர்களைச் சொல்லச் செய்து, பிறகு படங்களின்கீழ் உள்ள எழுத்துக்களைக் கற்பித்தல் :

எழுத்துக்களை எழுத வேண்டுவதில்லை.

| | | | |
|---|---|---|---|
| க் | ங் | ச் | ஞ் |
| ட் | ண் | த் | ந் |
| ப் | ம் | ற் | ன் |

| | | |
|---|---|---|
| ய் | ர் | ல் |
| வ் | ழ் | ள் |

க் ங் ச் ஞ் ட் ண்
த் ந் ப் ம் ற் ன்

ய் ர் ல் வ் ழ் ள்

# இரண்டாம் பாகம்

[அ, ஆ என்னும் இரண்டு உயிர் எழுத்துக்கள் மெய்யெழுத்தோடு கூடப் பிறக்கும் உயிர்மெய் எழுத்துக்களைக் கற்பித்தல்.]







அணில் படம் பட்டம்

| | | |
|---|---|---|
| அ | ட | ப |
| ட் | ம் | ல் |

எழுதப் பழகல் :

ு ப ஒ அ அ
ட ட ப ப ட ஈ ம ல ல



ஆடு



பாப்பா



பாய்

# பல் அப்பம்
# பால் ஆல்

அப்பா

பட படா

பாப்பா படம்

பால் அப்பம்

எழுதப் பழகல் :

| |
|---|
| ஆ டா ப் பா ய் |



மயில்



பழம்

மடம் மாடம்

மட்டம் மாமா

ஆழம்

ஆட்டம்

மாம்பழம்

பால் பழம்

எழுதப் பழகல் :

ம மா ழ



முயல்



மரம்

அயல் அரம்
பயம் பாரம்
யார் பாடம்

பாய் மரம்
பாப்பா படம்
பழம்பாய்
பழம்பாடம்

எழுதப் பழகல் :

யர



சட்டி



கதிர்

சரம் கரம்

சாரம் காரம்

யார் கால்?

கப்பல் பார்.

கார சாரம்

எழுதப் பழகல்:

க கா ச சா ர்



நண்டு



தச்சன்

| | |
|---|---|
| நட | அச்சம் |
| கண் | தபால் |
| நார் | பாலர் |
| நாகம் | தாயார் |

நட நட.

நாகம் பார்.

யார் கண்?

தபால் சேவகர்

எழுதப் பழகல் :

ந நா த தா ச் ண் ன்



வண்டி



பாலம்

வடம் பலம்

வயல் காலம்

வாய் பலா

வால் அல்லா

வயல் பார்.

நாய் வால்

ஆல மரம்

பலாப் பழம்

எழுதப் பழகல் :

வ வா ல லா



சன்னல்



கிண்ணம்

கனம் அண்ணன்

கன்னம் கண்ணன்

கனு அணு

அன்னம் பார்.

கனுக் கண்டான்.

அவன் கண்ணன்.

அணு தா.

எழுதப் பழகல் :

ன று ண ணு



குளம்பு



ஏற்றம்

களம் வற்றல்

குள்ளன் நாற்றம்

களா கற்றான்

தாளம் தா.

களாப் பழம்

வற்றல் காரம்.

பாடம் கற்றான்.

எழுதப் பழகல் :

ள ளா ற் ற று

பயிற்சி—1

## படங்களின் பெயர்களைக் குறிக்கும் சொற்களைக் காட்டல்:



| | | |
|---|---|---|
| **பாப்பா** | **பாய்** | **பட்டம்** |
| **மரம்** | **கால்** | **பழம்** |
| **தச்சன்** | **வாய்** | **கண்** |

பயிற்சி—2

விட்ட எழுத்தைச் சேர்த்துப் படி :

**க, கா, ப, பா,**

**ம, மா** **ழ, ர, ச், ண்** **ம், ல், ன்**

| | | |
|---|---|---|
| 1. — ல் | 1. ப — ம் | 1. கள — |
| 2. — ல் | 2. ஆ — ம் | 2. தாள — |
| 3. — ல் | 3. அ — ம் | 3. வய — |
| 4. — ல் | 4. ஆ — ம் | 4. தபா — |
| 5. — டம் | 5. அ — சம் | 5. கண்டா — |
| 6. — டம் | 6. த — சன் | 6. கன்ன — |
| 7. — டம் | 7. அ — ணன் | 7. கன்ன — |
| 8. — டம் | 8. க — ணன் | 8. நாற்ற — |




| | |
|---|---|
| கிளி | விசிறி |
| பிடி | மணி |
| கதிர் | நிலா |
| தமிழ் | தயிர் |
| கரி | எலி |
| அழி | கனி |

| | |
|---|---|
| கிளி பிடி. | மயில் விசிறி |
| தமிழ் படி. | தயிர்க் கிண்ணம் |
| மணி அடி. | காய் கனி |

எழுதப் பழகல் :

கி சி டி ணி தி நி
பி மி யி ரி லி வி
ழி ளி றி னி ழ்





கீரி மீன்

சீவல் தண்ணீர்

தீபம் நீலம்

பீங்கான் வீதி

படீர்

கீரி வால் தண்ணீர் தா.

சீனு, வா. மீன் பிடி.

தீபம் பார். நீல நிறம்

வீதி நீளம்

எழுதப் பழகல் :

கீ சீ டீ ணீ தீ

நீ பீ மீ வீ





| | |
|---|---|
| குடம் | பசு |
| காடு | நுங்கு |
| பந்து | முயல் |
| புலி | எலும்பு |
| ஒரு | கழுகு |
| கணு | எறும்பு |

| | |
|---|---|
| மண் குடம் | பந்து அடி. |
| பசு மாடு | நுங்கு தின்னு. |
| பாசி படியும். | ஒரு கழுகு |

எழுதப் பழகல் :

கு சு டு ணு து நு பு மு
யு ரு லு ழு று னு ங்






| | |
|---|---|
| பூட்டு | மூக்கு |
| கூரை | நூல் |
| சூது | பாழூர் |
| பூணூல் | பாலூர் |
| தூண் | வர்னூர் |

| | |
|---|---|
| பூட்டுச் சாவி | கல் தூண் |
| மூக்கு நீளம் | மஞ்சள் நூல் |
| கூரை விடு | சூது ஆட்டம் |

எழுதப் பழகல் :

கூ சூ ணூ தூ நூ பூ
மூ லூ ழூ னூ ஞு





செடி பெட்டி

தெளி நெல்

மெய் வெடி

சுண்டெலி எண்ணெய்

செடி நடு.

நீர் தெளி.

நெய் வார்.

பெரிய தெரு

பந்தயம் கெலி.

வெடிச் சத்தம்

எழுதப் பழகல் :

கெ செ டெ ணெ தெ

நெ பெ மெ வெ த்





கேணி சேவல்

தேர் நேர்

பேன் மேல்

வேலி கண்ணே

கேணி ஆழம். நேர் வழி

சேவல் அழகு. பேன் பார்.

தேர்ச் சக்கரம் முள் வேலி

கண்ணே, வா.

எழுதப் பழகல் :

கே சே ணே தே

நே பே மே வே





| | |
|---|---|
| கை | தலை |
| சைகை | அரை |
| அடை | புடைவை |
| எணை | மழை |
| தைலம் | வளை |
| குப்பை | பாறை |
| மைஒ | பனை |
| படுக்கை விரி. | மலை உச்சி |
| சைகை செய். | பாறை நிலம் |
| கடை மூடு. | எலி வளை |
| தரை மட்டம் | பனை மரம் |

எழுதப் பழகல் :

| |
|---|
| கை சை டை தை |
| பை மை ரை வை ழை |
| ணை லை ளை னை |





கொக்கு தொட்டி

சொறி பொன்

நொண்டி மொட்டு

ரொட்டி

வெள்ளைக் கொக்கு நொண்டி மாடு

சொறிச் சிரங்கு பொன் நகை

ரொட்டி தின். தாமரை மொட்டு

எழுதப் பழகல் :

கொ சொ தொ நொ

பொ மொ ரொ





கோலம் சோளம்

தோட்டம் நோய்

போடு மோர்

கோலம் போடு.

சோளக் கொல்லை

தோட்ட வேலை

கண் நோய்

மோர் குடி.

எழுதப் பழகல் :

கோ சோ தோ நோ
போ மோ



ஔவை



வௌவால்

கௌரி சௌரி

கௌ சௌ வௌ

பயிற்சி—3

விட்ட எழுத்துக்களைச் சேர்த்துப் படி :

| ங்க | ஞ்ச | ண்ட |
| --- | --- | --- |
| ச — — ம் | ம — — ள் | ப — — ம் |
| த — — ம் | ப — — ம் | பா — — ம் |
| பொ — — ல் | கு — — ம் | வ — — ல் |
| செ — — ல் | வ — — ம் | சு — — ல் |

| ந்த | ம்ப | ன்ற |
| --- | --- | --- |
| ப — — ம் | ர — — ம் | கு — — ம் |
| ம — — ம் | க — — ம் | கொ — — து |
| த — — ம் | சா — — ல் | தி — — து |
| சொ — — ம் | சோ — — ல் | தெ — — ல் |

பயிற்சி—4

# படம் சேர்த்துப் படித்தல்:



புல் மேயும்.



நிறம் கறுப்பு.



காலையில் கூவும்.

இது  படம்.

இமே  இருக்கிறது.

பால்  இருக்கிறதா ?

இது மயில் 

இது என் 

கீரிக்குப் பகை 

## விளையாட்டு—1

வார்த்தை ஒன்றைச் சொன்ன உடனே அதன் எழுத்துக்களை வைத்திருப்பவர் வந்து நின்று வார்த்தையை அமைத்தல் :




**‘அப்பம்’ என்று சொல்லு ;**
**அன்பாய் வந்து நில்லு.**
**‘பட்டம்’ என்று சொல்லு;**
**பணிவாய் வந்து நில்லு.**

குறிப்பு :—ஒவ்வொரு குழந்தையின் கையிலும் ஒவ்வோர் எழுத்து எழுதிய அட்டையைக் கொடுத்து வரிசையாய் நிறுத்தி வைக்க வேண்டும். பிறகு ஆசிரியர் அப்பம், பட்டம் என்பவை போல அவ்வெழுத்துக்களாலாகத்தக்க ஒவ்வொரு சொல்லைச் சொல்ல வேண்டும். அச்சொல்லில் உள்ள எழுத்துக்களை வைத்திருக்கும் குழந்தைகள் ஒவ்வொருவராய் வந்து முறையே வரிசையாய் நின்று சொல்லை அமைக்க வேண்டும்.





ரோஜா    ரிஷபம்

ஜலம்    கஷாயம்
பஜ்ஜி    ரிஷி







ஸர்ப்பம்    ஹம்ஸம்    லக்ஷ்மி

ஸரம்    ஹாரம்    பக்ஷம்
புஸ்தகம்    ஹிமாலயம்    பக்ஷி

1. கூஜா ஜலம்    3. தமிழ்ப் புஸ்தகம்
2. புஷ்ப ஹாரம்    4. ஹம்ஸப் பக்ஷி
5. ஆல விருக்ஷம்

# காய் கறி


வாழைக் காய்


கத்தரிக் காய்


புடலங்காய்


பாகல் காய்


பீர்க்கங்காய்


வெண்டைக் காய்


அவரைக் காய்


பறங்கிக் காய்

# நிறங்கள்

கொக்கின் நிறம் வெண்மை.



காகத்தின் நிறம் கறுப்பு.



கிளியின் நிறம் பச்சை.



மாதுளம்பழ நிறம் சிவப்பு.



எலுமிச்சம்பழ நிறம்
மஞ்சள்.



ஆகாயத்தின் நிறம் நீலம்.



## விளையாட்டு—2



# இவை என்ன?

கோடிட்ட இடங்களைப் படத்தில் விடப்பட்டதன் பெயரையும் கட்டத்தில் உள்ள ஏற்ற சொல்லின் பெயரையும் சேர்த்துப் பூர்த்தி செய் :

| | | |
|---|---|---|
| மலர்கள் | பழங்கள் | மிருகங்கள் |
| பெண்கள் | காய்கறிகள் | பறவைகள் |

1. ____, மா இவை____.
2. தாமரை, ____ இவை____.
3. ____, வெண்டை இவை____.
4. ஆடு, ____ இவை____.
5. ____, புரு இவை____.
6. கமலம், சரசு இவர்கள்____.

பயிற்சி—5

## விட்ட எழுத்துக்களைச் சேர்த்துப் படி :

க் க　　　　ச் ச　　　　ட் ட

| | | |
|---|---|---|
| ப — — ம் | அ — — ம் | ப — — ணம் |
| ஏ — — ம் | கூ — — ம் | க — — ம் |
| தூ — — ம் | காய் — — ல் | தோ — — ம் |
| தே — — ம் | வெளி — — ம் | ஓ — — ம் |

பயிற்சி—6

## பெயர்களைக் கீழே எழுது :



| | | | |
|---|---|---|---|
| 1.—— | 2.—— | 3.—— | 4.—— |
| 5.—— | 6.—— | 7.—— | 8.—— |
| 9.—— | 10.—— | 11.—— | 12.—— |

# கீரை, கிழங்கு





| | |
|---|---|
| அறைக் கீரை | உருளைக் கிழங்கு |
| சிறு கீரை | சேமைக் கிழங்கு |
| முளைக் கீரை | கருணைக் கிழங்கு |
| வெந்தயக் கீரை | வள்ளிக் கிழங்கு |
| பருப்புக் கீரை | கொட்டிக் கிழங்கு |

கறி சமைக்க



ஊறுகாய் போட



| | |
|---|---|
| தேங்காய் | மாங்காய் |
| வெங்காயம் | எலுமிச்சங்காய் |
| கருவேப்பிலை | நார்த்தங்காய் |
| கொத்துமல்லி | நெல்லிக்காய் |

பச்சை மிளகாய்

# பழங்கள்



வாழைப்பழம்



இச்சிலிப்பழம்



மாம்பழம்



முந்திரிப்பழம்



பலாப்பழம்



அன்னாசிப்பழம்



மாதுளம்பழம்



திராட்சைப் பழம்

# பூக்கள்



மல்லிகைப் பூ



ரோஜாப் பூ



தாமரைப் பூ



சம்பங்கிப் பூ



சாமந்திப் பூ



தாழம்பூ

## விளையாட்டு—3

# எது, எதற்கு உதவும்?

கோடு இட்ட இடத்தில் ஆயுதத்தின் பெயரை எழுது :



1. ——ஆணி அடிக்க உதவும்.
2. ——பென்ஸில் சீவ உதவும்.
3. ——மரம் அறுக்க உதவும்.
4. ——எழுத உதவும்.
5. ——மரம் பிளக்க உதவும்.
6. ——தேங்காய் துருவ உதவும்.

பயிற்சி—7

விட்ட எழுத்துக்களைச் சேர்த்துப் படி :

| த் த | ப் ப | ற் ற |
|---|---|---|
| ச — — ம் | அ — — ம் | ஏ — — ம் |
| சு — — ம் | ஏ — — ம் | கு — — ம் |
| ப — — ர் | கு — — ம் | நா — — ம் |
| அ — — ர் | தெ — — ம் | வ — — ல் |

# வண்டிகள்



ஒற்றை மாட்டு வண்டி



ரிக்ஷா வண்டி



இரட்டை மாட்டு வண்டி



ஜட்கா வண்டி



இரயில் வண்டி



மோட்டார் வண்டி

## எண்கள்

1 ஒன்று, ஒன்று,
ஒற்றைக்கல் குன்று.

2 இரண்டு, இரண்டு,
இளவாழைத் தண்டு.

3 மூன்று, மூன்று,
மூன்றுவிதை ஊன்று.

4 நான்கு, நான்கு,
நன்றாகத் தூங்கு.

5 ஐந்து, ஐந்து,
பஞ்சவர்ணப் பந்து.

6 ஆறு, ஆறு,
அன்புமொழி கூறு.

7 ஏழு, ஏழு,
ஏழைகுடிப்பது கூழு.

8 எட்டு, எட்டு,
எதற்கும்வேண்டும் துட்டு.

9 ஒன்பது, ஒன்பது,
உனக்குவேண்டுமா தின்பது?

10 பத்து, பத்து,
பாலர்வாழ்வோம் ஒத்து.

# ஆறு சுவை



பலாப்பழம் இனிக்கும்.



பாகற்காய் கசக்கும்.



புளியங்காய் புளிக்கும்.




உப்புக் கரிக்கும்.




மிளகு காரும்.




பாக்குத் துவர்க்கும்.

இனிப்பு, கசப்பு, புளிப்பு, கரிப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்பவை ஆறு சுவை ஆகும்.

# எதிர்ச் சொற்கள்



மலை உயரம்.

மடு ஆழம்.



யானை பெரியது.

எலி சிறியது.



ஆடு இருப்பது மேடு.

ஆமை இருப்பது பள்ளம்.



தாய் வடிவம் நெட்டை.

மகள் வடிவம் குட்டை.





சிறுமியர்நாம் கூடுவோம்;
சேர்ந்துவிளை யாடுவோம்.
கயிற்றுட்டம் ஆடுவோம்;
கண்ணும்பூச்சி ஆடுவோம்.
பாண்டிவிளை யாடுவோம்;
பல்லாங்குழி ஆடுவோம்.
கோலாட்டம் ஆடுவோம்;
கும்மிகொட்டிப் பாடுவோம்.
சிறுமியர்நாம் கூடுவோம்;
சேர்ந்துவிளை யாடுவோம்.









# பாப்பா பாட்டு



அழகு நிறைந்ததிந்தப் பாப்பா;
அன்பு மிகுந்ததிந்தப் பாப்பா.

சின்னஞ் சிறியதிந்தப் பாப்பா;
சிரித்த முகம்காட்டும் பாப்பா.



அ, ஆ, எனப்படிக்கும் பாப்பா;
அழகாகப் பாடுகின்ற பாப்பா.

கற்பலகை மீதெழுதும் பாப்பா;
கைகொட்டி நகைத்திடும் பாப்பா.



ஓடிவிளை யாடுகின்ற பாப்பா;
ஒன்றுக்கும் அஞ்சாத பாப்பா.

பாப்பா இதனைப்போல நீயே
பழகிடக் கற்றுக்கொள்ளு வாயே



சிறுவரெல்லாம் கூடுவோம்;
        சேர்ந்துவிளை யாடுவோம்.
பச்சைக்குதிரை தாண்டுவோம்;
        பந்துவிளை யாடுவோம்.
நொண்டியடித் தாடுவோம்;
        நூல்பிடித்துத் தாண்டுவோம்.
கொம்புசுற்றிப் பழகுவோம்;
        குதிரைஏறி மகிழுவோம்.
எண்ணாட்டம் எழுத்தாட்டம்
        எல்லாம்விளை யாடுவோம்.





## நிலாப் பாட்டு

நிலா, நிலா, வா! வா!
நில்லாமலே ஓடிவா!

மலைமேலே ஏறிவா!
மல்லிகைப்பூக் கொண்டுவா!

நடுவீட்டில் வையே!
நல்லதுதி செய்யே!

தத்தித்தத்தி ஓடிவா!
தம்பியோடே ஆடவா!









## கைவீசம்மா

கைவீ சம்மா கைவீசு ;
கடைக்குப் போகலாம் கைவீசு ;

மிட்டாய் வாங்கலாம் கைவீசு ;
மெதுவாய்த் தின்னலாம் கைவீசு.

கம்மல் வாங்கலாம் கைவீசு ;
காதில் போடலாம் கைவீசு.

கோவிலுக்குப் போகலாம் கைவீசு ;
கும்பிட்டு வரலாம் கைவீசு.

பள்ளிக்குப் போகலாம் கைவீசு ;
பாடம். படிக்கலாம் கைவீசு.

ஊஞ்சல் ஆடலாம் கைவீசு ;
ஓடிக் குதிக்கலாம் கைவீசு.



## கிளிப் பாட்டு

பச்சைக் கிளியே! வாவா;
பாலும் சோறும் உண்ணவா;
கொச்சி மஞ்சள் பூசவா;
கொஞ்சி விளை யாடவா.

கவலை எல்லாம் நீங்கவே
களிப்பெ ழுந்து பொங்கவே
பவழ வாய்தி றந்துநீ
பாடு வாயோ தத்தம்மா!

பையப் பையப் பறந்துவா;
பாடிப் பாடிக் களித்துவா;
கையில் வந்தி ருக்கவா;
கனிய ருந்த ஓடிவா.

—கவிமணி. தேசிக விநாயகம் பிள்ளை

# பொன் மொழிகள்

ஓடி விளையாடு பாப்பா!—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!
கூடி விளையாடு பாப்பா!—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா! 1

சின்னஞ் சிறுகுருவி போல—நீ
திரிந்து பறந்துவா பாப்பா!
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனத்தில் மகிழ்ச்சிகொள்ளு
பாப்பா! 2

காலை எழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும்நல்ல பாட்டு,
மாலை முழுதும்விளை யாட்டு—என்று
வழக்கப் படுத்திக்கொள்ளு பாப்பா! 3

பொய்சொல்லக் கூடாது பாப்பா!—
என்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா!
தெய்வம் நமக்குத்துணை பாப்பா!—ஒரு
தீங்குவர மாட்டாது பாப்பா! 4

—சி. சுப்பிரமணிய பாரதியார்

உயிர் + மெய் = உயிர்மெய்

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ |
| த் | த | தா | தி | தீ | து | தூ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ |

# உமா வாசகம்

## ஆறும் புத்தகம்—பொதுப் பகுதி

[முதல் பாரத்துக்கு உரியது.]

1951௵ ஜூன்௴ வெளியிடப்பட்ட புதிய பாடத்திட்டத்தின்படி
திருத்தி அமைக்கப்பெற்றது.



த. சே. உமாபதி, M.A., L.T.,
தலைமையாசிரியர்,
ஸி. அப்துல் ஹக்கீம் இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளி, சென்னை.




உமாதேவன் கம்பெனி
16, செம்புதாஸ் தெரு, சென்னை—1

 1951 [விலை அணா, 14.




# முகவுரை

உமா வாசகம் என்னும் பெயருடன் வெளிப்போதரும் நூல் வரிசையில் இஃது ஆறும் புத்தகம். 1951-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தையொட்டி இது திருத்தி அமைக்கப்பெற்றுள்ளது.

சிறுவர் சிறுமியரின் மனோநிலையையும், அவர்தம் தமிழறிவின் எல்லையையும் மனத்திற்கொண்டு இஃது இயற்றப் பெற்றுள்ளது. இதன்கண் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடமும் பாடத்-திட்டத்தின் நோக்கமாகிய மொழிப்பயிற்சியை அடிப்படையாகக் கொண்டு இயன்றிருத்தல் குறிப்பிடத் தக்கது. ஒவ்வொரு பாடத்-தின் இறுதியிலும் தரப்பட்டுள்ள பயிற்சியே இதற்குச் சான்றா-கும். அன்றியும், மொழி வளர்ச்சிக்குரிய புதிய சொற்களும், சொற்றொடர்களும் ஒவ்வொரு பாடத்திலும் ஏற்ற அளவில் இடம் பெற்றுள்ளன.

மாணவர் மாணவிகட்கு அகராதி உபயோகிக்கும் பழக்கம் உண்டாதற்பொருட்டு ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற்களைக் குறித்து, அவற்றுக்குப் புத்தகத்தின் இறுதி-யில் தரப்பட்டுள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதும்-படி அமைக்கப்பெற்றுள்ள பயிற்சி குறிப்பிடத்தக்கதாம். செய்-யுட்பகுதிக்குக் குறிப்புரைகள் தரப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் இதனைப் படித்துப் பய-னுறுதற்கு ஆவன செய்யுமாறு ஆசிரிய அறிஞர்களை வேண்டு-கிறோம்.

சென்னை,
9-11-51.

பதிப்பாளர்

# உள்ளுறை

## உரை நடைப் பகுதி



## செய்யுட்பகுதி




# உமா வாசகம்

## (ஆரும் புத்தகம்)

## 1. காந்தியடிகள் காட்டிய வழி

1. உத்தமர் காந்தியடிகளின் பெயரை அறியாத இந்தியர் எவரும் இருக்க இயலாது. நம் நாட்டில் மட்டுமன்றி, பிற நாடுகளிலும் அவர் பெயரைக் கேளாதவர் இரார். **மோகன் தாஸ் கரம்சந்து காந்தி** என்பது அவரது முழுப் பெயர். அவர் புத்தரைப் போலவும், இயேசு நாதரைப் போலவும் ஒப்புயர்வற்ற உத்தமர் என்பதே மக்களின் கருத்து. அத்தகைய பெரியாரின் வரலாற்றை அறிந்து, அவர் அருள் மொழிகளைப் பின்பற்றி, அவர் காட்டிய வழியில் நடப்பதே நமது கடமையாகும்.

2. நமது நாட்டின் மேற்குக்கரையில் **கத்தியவார்** என்னுந் தீபகற்பம் உளது. அங்குள்ள **போர்பந்தர்** என்னும் ஊரில், 1869-ஆம் ஆண்டில் காந்தியடிகள் பிறந்தார். அவர் தந்தையார் வணிக குலத்தைச் சேர்ந்தவர்; **இராசக் கோட்டைச்** சிற்றரசரிடம் அமைச்சராயிருந்தவர்; வாய்மை, நேர்மை என்னுஞ் சிறப்பியல்புகள் வாய்ந்தவர். அவருடைய மனைவியாரின் பெயர் **புத்தளிபா** என்பது. அவ்வம்மையார் கடவுள் பத்தியும், சமயப் பற்றும் நிறைந்தவர்; இந்து சமயத்துக்குரிய விரதங்கள் எத்தனையுண்டோ, அத்தனையும் மேற்கொள்ளும் வழக்கமுடையவர்; பொறுமைக்கு இருப்பிடமானவர்.

3. இத்தகைய பெற்றோர்க்குப் பிறந்த மைந்தர் எவ்வாறிருப்பர்? '**மகனறிவு தந்தையறிவு**,' என்பதும், '**தாயைப் போல் சேய்**,' என்பதும் நம் நாட்டு முதுமொழிகள். இவற்றிற்கிணங்கக் காந்தியடிகள் தந்தையார் வாயிலாக வாய்மை, நேர்மை ஆகிய பண்புகளையும், தாயார் மூலமாகச் சாந்தம், சமயப்பற்று, கடவுள் பத்தி ஆகிய உயர்ந்த குணங்களையும் பெற்றார்.

4. உயர்குணங்களுக்கு உறைவிடமாய் விளங்கிய காந்தியாரும் பள்ளி வாழ்க்கையில் பல தவறுகள் செய்துள்ளார். ஒரு குடம் பாலில் ஒரு துளி நஞ்சு சேருமானால், அந்தப் பால் முழுதும் நஞ்சாகும். அது போல, நற்குணங்கள் நிறைந்த பலரிடையே துர்க்குணங்கள் நிறைந்த சிலர் சேரினும், நல்லவர் தீயவராய் மாறிவிடுவர். அவ்வாறே நம் அடிகளும் தீயவர் உறவால் தீய ஒழுக்கங்களை மேற்கொண்டார். ஆயினும், அவர் தம் தவற்றையுணர்ந்து, உடனே திருந்திவிட்டார். இந்நெறியை நாம் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டும்.

5. உள் நாட்டில் படிப்பு முடிந்த பிறகு, காந்தியடிகள் வழக்கறிஞர் படிப்புக்காக இங்கிலாந்துக்குப் போக விரும்பினார். அதற்கு அவருடைய அன்னையார் ஒப்புக்கொள்ளவில்லை. வெள்ளையர் நாட்டிற்குச் சென்றால், மாமிசம் தின்னல், சாராயங் குடித்தல் போன்ற துர்ப்பழக்கங்கள் தம் மைந்தருக்குப் படிந்துவிடும் என்று பயந்தார் அவ்வம்மையார். அதை அறிந்த அடிகள், அன்னையார் கால்களில் விழுந்து வணங்கி, "அம்மா, நான் சாராயம் குடிக்க மாட்டேன்; மாமிசத்தைத் தொடமாட்டேன்," என்று சத்தியம் செய்தார்; அதன்படியே நடந்துகொண்டார்; எத்தனையோ இடையூறுகளுக்கிடையே தம் அன்னையாருக்களித்த வாக்குறுதியை நிறைவேற்றினார்.

6. காந்தி மகான் மூன்றாண்டுகள் இங்கிலாந்தில் தங்கிப் 'பாரிஸ்டர்' பரீட்சையில் தேறி, இந்தியாவுக்குத் திரும்பினார். இராசக் கோட்டையில் வழக்கறிஞர் தொழிலை நடத்தத் தொடங்கினார்; ஆனால், சில நாட்களுக்குள் ஒரு வழக்குக் காரணமாகத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றார். அக்காலத்தில் வாணிகம் செய்து பொருள் திரட்டவும், கூலி வேலை செய்து வயிறு வளர்க்கவும் பல இந்தியர் அங்குச் சென்று குடியேறியிருந்தனர். அவர்களை அங்கு வசித்த ஆங்கிலேயர் மிகத் தாழ்வாக நடத்தினர். படித்தவர், பணக்காரர் முதலிய எல்லா இந்தியரையும் ஆங்கிலேயர் 'கூலிகள்' என்றே வழங்கி வந்தனர். அன்றியும், வண்டிகளிலும் சிற்றுண்டிச் சாலைகளிலும், பிற பொது இடங்களிலும் இந்தியரை வெள்ளையர் தம் அருகிலிருக்கவும் விடுவதில்லை.

7. அத்தகைய நிலை, அடிகள் மனத்தைப் புண்படுத்தியது. அவர் இந்தியருக்கு வெள்ளையர் செய்து வந்த கொடுமைகளை எங்ஙனமாவது போக்க வேண்டுமென்று தீர்மானித்தார். ஆட்சி உரிமையும், படையின் பலமும் பெற்றிருந்த ஆங்கிலேயரோடு மறப்போர் தொடுக்க இயலாதென்பதை அறிந்த அடிகள், அறப்போர் தொடுத்தார். அவர் தொடுத்த போரில் குண்டு, துப்பாக்கி முதலிய படைகளை நீக்கித் '**துன்புறுத்தாமை**' என்னும் படையைத் துணையாகக் கொண்டார்; இந்த அறப்போர்தான் '**சத்தியாக்கிரகம்**' எனப்படுவது. தாம் மேற்கொண்ட போரில் அடிகள் வெற்றி கண்டார்.

8. காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் இருந்த போது, அங்கு வாழ்ந்திருந்த இந்தியர் ஒவ்வொருவரும் அரசியலாரிடமிருந்து அனுமதிச் சீட்டுகள் பெறவேண்டுமென்னும் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அவ்வனுமதிச் சீட்டில் அதற்குரியவர் **கல்வி கற்றவராயினும், கல்வியற்றவராயினும், தம் கைவிரல் பத்திலும்** மையொற்றி அடையாளம் வைக்கவேண்டும்; பிறகு அச்சீட்டை எங்குச் சென்றாலும் எடுத்துச் செல்ல வேண்டும். அந்த அவமானத்தை நீக்க அடிகள் அறப்போர் தொடுத்தார்; வெற்றியும் கண்டார். அரசியலார் சமாதானம் செய்துகொண்டனர். அதன்படி விருப்பமுள்ளவர் மட்டும் சீட்டுப் பெறலாமெனவும், விருப்பமற்றவர் சீட்டுப் பெறவேண்டுவதில்லையெனவும் முடிவு செய்யப்பட்டது. அப்போது சிலர் சீட்டுப்பெற விரும்பினர். மற்றவர் அதை எதிர்த்தனர்.

9. சீட்டுப் பெற விரும்பியவர்களுள் காந்தியடிகள் முதன்மையானவர். ஒரு நாள் அவரும் அவருடைய நண்பர் சிலரும் சீட்டுகளைப் பெறுதற்குப் புறப்பட்டனர். காந்தியடிகளின் நண்பரான **மீர் ஆலம்** என்ற பட்டாணியரும், அவர் நண்பர் சிலரும் அவர்களை வழி மறித்தனர். அதைக் கேளாமல் சென்ற அடிகளை அவர்கள் நையப் புடைத்தார்கள். அவர் உதடு கிழிந்தது; முன் பற்கள் விழுந்தன. மூர்ச்சித்துக் கீழே விழுந்த அவரைச் சிலர் தூக்கிச் சென்று சிகிச்சைஅளித்தனர். இதற்குள் மீர் ஆலமும் அவர் நண்பர்களும் சிறை செய்யப்பட்டார்கள். காந்தியடிகள் நினைவு பெற்றெழுந்தவுடனே, "மீர் ஆலம் எங்கே?" என்றார்; அவர் சிறை செய்யப்பட்ட செய்-

தியை அறிந்தார் ; அவர்களைச் சிறையிலிருந்து அப்பொழுதே விட்டுவிட வேண்டுமென்றும், அவர்களைத் தண்டிக்கக் கூடா-தென்றும் காந்தியடிகள் கடிதம் எழுதிப் போலீஸ் அதிகாரிக்கு அனுப்பினர். அதற்கிணங்க அதிகாரி அவர்களை விடுதலை செய்தார்.

10. மகாத்துமாவின் இச்செயல் இயேசுநாதரின் இறுதிச் செயலை ஒத்திருக்கின்றதன்றோ ? இயேசுநாதரைப் பகைவர்-கள் சிலுவையிலறைந்த போது, அவர், "ஆண்டவரே இவர்-கள் தங்கள் அறியாமையால் செய்த இச்செயலுக்காக இவர்-களை மன்னிக்க வேண்டும்," என்று ஆண்டவரை வேண்டிக்-கொண்டாரல்லவா ? அங்ஙனமே தீமை புரிந்தார்க்கும் நன்மையே செய்ய வேண்டுமென்ற ஒப்பற்ற கொள்கைக்-காகவே உத்தமர் காந்தியடிகள் இறுதிக் காலத்தில் தம் உயிரை அர்ப்பணம் செய்தார்.

11. மகாத்துமா காந்தி காட்டிய நல்வழிகள் இன்னும் எத்தனையோ உண்டு. 'ஜாதி' என்னும் சொல்லையே அவர் விரும்பியதில்லை. ஒரு நாள் காந்தியடிகள் வடநாட்டிலுள்ள ஓர் ஊருக்குப் போயிருந்தார். அன்று மாலை ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அக்கூட்டத்-துக்கு வந்த ஹரிஜனங்கள், சிறிது தூரத்தில் தனியே அமர்த்-தப்பட்டார்கள். காந்தியடிகள் பேச்சு மேடைக்கு வந்தார். அவர் தூரத்தில் அமர்ந்திருந்தவர்கள் ஹரிஜனங்களென்பதை அறிந்துகொண்டார். மேடையை விட்டு இறங்கி அவர்க-ளிடையே போய் அமர்ந்தார். உயர் ஜாதியினரும் வேறு வழி-யின்றி ஹரிஜனங்களுடன் கலந்து அமர்ந்தனர். அதுகண்ட அடிகள் பேரானந்தமடைந்தார்.

12. மத சம்பந்தமாகக் காந்தியடிகள் கொண்டிருந்த கொள்கை நாம் கருத்தில் வைக்கத்தக்கது. அவர் தம்மை **வைஷ்ணவர்** என்று சொல்லிக்கொள்வது வழக்கம். ஆனல், அவருக்கு எல்லா மதங்களிடத்தும் பற்றுண்டு. அவர் ஒவ்-வொரு மதத்திற்குமுரிய நூல்களை நன்கு ஆராய்ந்தவர். 'கடவுள் ஒருவரே.' என்பது எல்லா மதங்களும் கூறும் உண்மை. ஆதலால், மதம் காரணமாக மக்கள் ஒருவரை-யொருவர் வெறுப்பதும், ஒருவரோடொருவர் சண்டையிடு-

வதும் அறியாமை காரணமாகவும், ஆணவம் காரணமாகவும் நிகழ்வன என்பது காந்தியடிகளின் கருத்து. எல்லா மதத்தினரும் ஒன்றுபட்டு வாழ வேண்டுமென அவர் விரும்பினர்; அம்முயற்சியில் தம் ஆருயிரையுமிழந்தார்.

*13.* அடிகள் தென்னப்பிரிக்காவில் தமது அறப்போரை முடித்துக்கொண்டு, 1914ல் இந்தியாவுக்கு வந்தார். அவர் விரும்பியிருந்தால், தம் வழக்கறிஞர் தொழிலில் அளவற்ற செல்வம் திரட்டியிருக்கலாம்; அரசர்போல வாழ்ந்திருக்கலாம். ஆனல், தந்நலமற்ற அவர், அயலார் ஆட்சியிலிருந்து தம் நாட்டுக்கு விடுதலை பெறும் வேலையில் முனைந்தார்; ஆயுதமின்றி அறப்போர் நிகழ்த்தினர்; தம் முதுமையைக் கருதாமல் முப்பதாண்டுகள் உழைத்து வெற்றி கண்டார். 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 15-ஆம் நாள் நள்ளிரவில் நம்மையும் நம் நாட்டையும் சூழ்ந்திருந்த அடிமையாட்சி என்னுமிருள் மறைந்து, சுதந்தரம் என்னும் சூரியன் உதிக்கக் கண்டு, அடிகள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார். ஆனல், நம்மை நல்வழிப்படுத்தவும், நம் நாடு மேலும்மேலும் முன்னேறவும் அவர் நீண்ட நாள் வாழவில்லை. நாடு சுதந்திரமடைந்து ஐந்து திங்களுக்குள்ளேயே அவர் மறைந்தார்.

*14.* நமக்கும், நமது நாட்டுக்கும் தம்முடைய உடல், பொருள், உயிர் மூன்றையும் கொடுத்துதவிய உண்மைத் தியாக மூர்த்திக்கு நாம் செய்யத்தக்கது யாது? அஃது அவர் காட்டிய வழியில் நிற்றலேயாம். **சாதி வேறுபாடு, சமயப்பூசல், மதுபானம், தீண்டாமை, கல்வியின்மை** ஆகிய பேய்களை நம் நாட்டினின்றும் வெளியேற்றி வெற்றி காண்பதே நாம் அவர் காட்டிய வழியில் நிற்றலுக்கு அடையாளமாகும். அதுவே நமது நாட்டுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையாகும்.

### பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. காந்தியடிகள் எப்பெரியார்களுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறார்?

ஆ. புத்தளிபாவின் அரிய குணங்கள் யாவை?

இ. காந்தியடிகள் தம்மைப்பற்றிய தீய ஒழுக்கங்களினின்று எவ்வாறு தம்மை விடுவித்துக்கொண்டார்?

ஈ. காந்தியடிகள் இங்கிலாந்துக்குச் செல்வதற்கு முன் மேற்கொண்ட விரதங்கள் யாவை?

உ. மகாத்துமா தென்னுப்பிரிக்காவில் அறப்போர் தொடுக்க நேர்ந்த காரணம் யாது?

ஊ. 'மீர் ஆலம்' என்பவர் யார்? அவரும் அவர் துணைவ-ரும் காந்தியடிகளை ஏன் புடைத்தனர்?

எ. இயேசுநாதரின் இறுதிச் செயலோடு மகாத்துமாவின் எந்தச் செயலை ஒப்பிடலாம்?

ஏ. காந்தியடிகள் மத சம்பந்தமாகக் கொண்டிருந்த கருத்து யாது?

2. கீழ் வரும் சொற்றெடுதிகளை வாக்கியங்களாக அமைக்க :

அ. மதத்திற்கும் ஒவ்வொரு உரிய நன்கு நூல்களை ஆராய்ந்தவர்.

ஆ. தம்முடைய நமக்கும் உடல், பொருள், உயிர் நமது நாட்டுக்கும் மூன்றையும் உதவியவர் அவர்.

3. கீழ் வரும் சொற்களுக்குப் புத்தகத்தின் இறுதியிலுள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

உத்தமர், இயலாது, ஒப்புயர்வு, அமைச்சர், வாய்மை, நேர்மை, உறைவிடம், நஞ்சு, களவாடு, வழக்கறிஞர், இடையூறு, கொடுமை, போர் தொடுக்க, துன்புறுத்து, கையப் புடைத்தார், சிகிச்சை, அர்ப்பணம், தியாகம்.

4. வாக்கியங்களில் அமைக்க :

இயலாது, கடமை, வாய்மை, ஒழுக்கம், உறுத்தியது, ஆறுதல், பொருள் திரட்ட.

# 2. கவியரசர் கம்பர்

"வெண்பாவிற் புகழேந்தி ; பரணிக்கோர் சயங்கொண்டான் ;
விருத்த மென்னும்
ஒண்பாவிற் குயர்கம்பன் ; கோவைஉலா அந்தாதிக்(கு)
ஒட்டக் கூத்தன் ;
கண்பாய கலம்பகத்துக்(கு) இரட்டையர்கள் ; வசைபாடக்
காள மேகம் ;
பண்பாய பகர்சந்தம் படிக்கா(சு) அலால்ஒருவர்
பகரொ ணாதே."

என்பது ஒரு பழம்பாட்டு. இது புகழேந்தி, சயங்கொண்டார், கம்பர், ஒட்டக்கூத்தர், இரட்டையர், காளமேகம், படிக்காசுப் புலவர் ஆகிய சிறந்த புலவர்களின் சிறப்பை விளக்குகிறது; ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான பாட்டோ, நூலோ இயற்றுவதில் மேன்மை பெற்று விளங்கினர் என்பதைத் தெளிவாகக் கூறுகிறது. எனவே, தமிழில் ஆக்கப் பெறும் பல வகைப் பாக்களில் விருத்தப்பா இயற்றுவதில் கம்பர் தலை சிறந்தவர் என்பது நன்கு விளங்குகின்றது. கம்பரைக் கவிச்சக்கரவர்த்தி என்று தமிழறிஞர் கூறுகின்றனர். 'கம்பசூத்திரம்' என்னும் வழக்கும், 'கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்,' என்னும் வாக்கியமும் கம்பரின் கல்வித் திறத்தை விளக்க எழுந்தவை.

2. கம்பர் சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரில் ஏறத்தாழ எண்ணூறுண்டுகட்கு முன்பு பிறந்தார். இவர் வேளாண்குலத்தவரென்பர் பலர் ; இளமையில் உவச்சர் வீட்டில் வளர்ந்தமையால், உவச்சர் குலத்தவரென்று கூறுவர் சிலர். இவர் தமது இளமையிலேயே பெற்றோரை இழந்து, உவச்சர் குலத்தவர் ஒருவரால் வளர்க்கப்பெற்றார். பின்னர், திருவெண்ணெய் நல்லூரை அடைந்து, அங்கு அக்காலத்தில் சிறந்த கொடையாளியாய் விளங்கிய சடையப்ப வள்ளல் என்பவரால் ஆதரிக்கப் பெற்று, அவர் இல்லத்திலேயே வளர்ந்து வந்தார் ; அச்சடையப்பரின் பிள்ளைகளுடன் ஓர் ஆசிரியரிடத்துத் தமிழ் கற்றார். தமது ஊக்கத்தாலும், இறைவன் இன்னருளாலும்

இவர் விரைவில் பெரும்புலவரானுர். இவரது புகழ் நாடெங்கும் பரவியது.

3. அக்காலத்திற் சோழ நாட்டை ஆண்டவர் **இரண்டாம் குலோத்துங்கர்.** அவர் தமிழ் மொழியின்மீது பேரன்புடையவர்; தமிழ்ப் புலவர்களை ஆதரித்துத் தமிழ் வளர்த்த மன்னருள் ஒருவர். அவரது அவைக்களத்தை **ஒட்டக்கூத்தர்** முதலான பெரும்புலவர்கள் அலங்கரித்துத் தமிழாராய்ந்தார்கள்.

4. கம்பரைப்பற்றிக் கேள்வியுற்ற குலோத்துங்க மன்னர் அவரை வரவழைத்தார்; இவர் புலமையை நேரிலறிந்து அவருக்குப் பல சிறப்புக்கள் செய்தார்; '**கவிச்சக்கரவர்த்தி**' என்னும் பட்டத்தையும் வழங்கினுர்; சிறு நாடொன்றையும் நன்கொடையாக நல்கினுர்; அன்றியும், இவரைத் தம் அவைப்புலவராகவும் அமர்த்திக்கொண்டார். கம்பர் அவ்வப்போது அழகிய பாக்கள் இயற்றி மன்னரை மகிழச் செய்தார்.

5. ஒரு நாள் ஏதோ காரணம்பற்றி அரசர்க்குப் புலவர் மீது சீற்றம் பிறந்தது. கம்பரை நோக்கி, "நீர் இனி எமது நாட்டில் இருத்தல் கூடாது. விரைவில் வெளியேறுக!" என்று ஆணையிட்டார் அரசர். கம்பநாடர் வெகுண்ட மன்னரை நோக்கி, "**கோல்லிமலை நாடாளும் கோற்றவா, நீ முனிந்தால், இல்லையோ எங்கட்கிடம்?**" என்று கூறிச் சோழநாட்டை விட்டகன்ருர். பண்டைப் புலவரின் பண்பு இதுவே. தன்மதிப்பே அவர்தம் தனிப் பண்பு. பட்டம் பதவிகளை ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல், மானத்தையே பெரிதாக மதிப்பது அவர் மனப்பாங்கு.

6. சோழநாட்டை விட்டகன்ற கம்பர், ஆந்திர நாட்டை அடைந்தார். அங்குள்ள **ஓரங்கல்** என்னும் சிறுநாட்டை அக்காலத்தில் **பிரதாபருத்திரர்** என்னும் அரசர் ஆண்டு வந்தார். அவர் கம்பநாடர் தம் நாட்டில் வந்திருந்த செய்தியை அறிந்தார்; உடனே தம் பிரதானிகளை அனுப்பி, அவரை அழைத்து வரச் செய்தார்; புலவருக்கு நல்வரவு கூறி, பரிசுகள் வழங்கித் தம் அவையில் இருக்குமாறு இவரை வேண்டிக்கொண்டார். கம்பரும் அதற்கிசைந்து, அங்கு வீற்றிருந்து, ஆந்திர அரசரைத் தம்முடைய இனிய தமிழ்ப் பாக்களால் மகிழ்வித்து வந்தார்.

7. சில நாட்கள் கழிந்தன. கம்பநாடரில்லாத குலோத்துங்கரின் சபை சந்திரனில்லா வானம் போலப் பொலிவிழந்து காணப்பட்டது. மன்னர் மனத்தில் கம்பநாடரைப் பற்றிய நினைவு அடிக்கடி தோன்றித் துன்புறுத்தத் தொடங்கியது. அவருக்குத் தாமிழைத்த துன்பத்தைப்பற்றி அரசர் எண்ணியெண்ணி வருந்தினர்; இறுதியில் கம்பநாடார் தங்கியிருந்த இடத்தைக் கண்டறிந்து வரும்படி ஏவலாளரைப் போக்கினர். பிரதாபருத்திரரின் சபையில் அவர் தங்கியுள்ளார் என்பதை அறிந்த குலோத்துங்கர், அவசர புத்தியால் தவறு செய்த தம்மை மன்னித்து, மீண்டும் தம் நாட்டிற்கு வந்து, தம் அவையை அலங்கரிக்க வேண்டுமென்று கோரிக் கம்பருக்கு ஓலையனுப்பினர். அறியாமையாற் செய்த தீமையை மறந்து விடுவதே அறிஞரின் பண்பாதலால், கம்பர், சோழ மன்னரை மன்னித்து, மீண்டும் சோழநாட்டை அடைந்தார்.

8. கம்பர் சோழ நாட்டுக்குத் திரும்பிய பின்பு, சடையப்ப வள்ளலின் வேண்டுகோளாலும், சோழ அரசரின் தூண்டுதலாலும் இராமாயணத்தை இயற்றத் தொடங்கினர். பல வடமொழிப் பண்டிதர்களை வால்மீகி இராமாயணத்தைப் படிக்கச் சொல்லிக் கேட்டு, நாளொன்றுக்கு நூற்றுக் கணக்கில் செய்யுட்களைப் பாடித் தம் காவியத்தை முடித்தார்.

9. கம்பராமாயணம் பன்னீராயிரஞ் செய்யுட்களாலியன்றது. அவற்றுள் இறுதியிலுள்ள ஆயிரத்தைந்நூறு பாடல்கள் ஒட்டக் கூத்தரால் பாடப்பட்டவை. மற்றவை கம்பரால் பாடப்பட்டவை. கம்பர் நன்றியறிதல் மிக்கவர். அவர் தம்மை இளமையில் பாதுகாத்த சடையப்ப வள்ளலைத் தாம் இயற்றிய இராமாயணத்தில் பத்திடங்களில் புகழ்ந்து பாடித் தம் நன்றியை வெளிப்படுத்தியுள்ளார்.

10. அக்காலத்தில் புலவர் எவரேனும் நூலியற்றினல், அதனைக் கற்றவர் நிறைந்த சபையில் படித்துக் காட்டுவது வழக்கம். சபையிலுள்ள அறிஞர், அந்நூலின்கண் ஏதேனும் ஐயமெழுப்பினல், நூலாசிரியர் தக்க விடை கூறி, அவ்வையத்தை நீக்க வேண்டும். பின்பு சபையார் அந்நூலுக்குப் புகழுரை கூறுவர். இந்த முறை '**அரங்கேற்றுதல்**' எனப்படும். கம்பர் தாமியற்றிய இராமாயணத்தைத் **திருவரங்கத்தில்** பெரும்புலவர் பலர் முன்னிலையில் அரங்கேற்றினர். அக்காலத்-

திலும், இக்காலத்திலும் அவர் நூலைப் புகழாத தமிழ்ப்புலவர் எவருமிலர். இராமாயணத்தைத் தவிரக் கம்பர் இயற்றிய வேறு நூல்களும் உண்டு. கம்பநாடர் வாழ்க்கையைப் பற்றிய கதைகள் பற்பல. அவற்றைப் படித்தறிய வேண்டுவது தமிழ் மாணவ மாணவிகள் கடமையாம்.

பயிற்சி:

1. விடை எழுதுக:

அ. கம்பர் எவ்வகைச் செய்யுள் இயற்றுவதில் வல்லவர்?

ஆ. வசை பாடுவதில் வல்ல புலவர் யார்?

இ. கம்பர் எப்போது, எங்குப் பிறந்தார்?

ஈ. கம்பர் தம் இளமைப் பருவத்தில் எங்கு வளர்ந்தார்?

உ. கம்பர் ஏன் சோழ நாட்டை விட்டகன்றார்?

ஊ. பண்டைப் புலவர்களிடம் காணப்பட்ட தனிப் பண்புகள் எவை?

எ. கம்பராமாயணத்தைப் பற்றிச் சிறு குறிப்பு ஒன்று எழுதுக.

ஏ. 'அரங்கேற்றம்' என்பது யாது?

2. சொல்லியபடி செய்க:

அ. கம்பர் திருவழுந்தூரில் பிறந்தார். (வாக்கியத்தைத் 'திருவழுந்தூர்' என்று தொடங்கி எழுதுக.)

ஆ. கம்பர் இளமையிலேயே பெற்றோரை இழந்து, உவச்சர் குலத்தவர் ஒருவரால் வளர்க்கப்பெற்றார். (இதனை இரண்டு வாக்கியங்களாக எழுதுக.)

இ. குலோத்துங்கர் சோழநாட்டை யாண்டார். ('சோழ நாடு' எனத்தொடங்கி வாக்கியத்தை எழுதுக.)

ஈ. சிறு நாடொன்றை நன்கொடையாக நல்கினர். ('நல்கினர்' என்பதற்குப் பதில் 'நல்கப்பட்டது' என்னும் சொல்லை அமைத்து வாக்கியத்தை எழுதுக.)

3. இப்புத்தகத்தின் இறுதியிலுள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

ஒழுக்கம், அறிஞர், திறம், வள்ளல், இல்லம், இன்னருள், அவைக்களம், நன்கொடை, வெகுண்டு, சீற்றம், பண்பு, மனப்பாங்கு, அகன்ற, பிரதானி, இசைந்து, பொலிவு.

## 3. மாண்டவன் மீண்ட மாயம்

1. பண்டைக் காலத்தில் வடநாட்டில் **மட்டி புரம்** என்ற சிற்றூர் ஒன்றிருந்தது. அதன் புரத்தே இருந்த மரங்கள் செறிந்த சோலையொன்றில் முற்றுந்துறந்த முனிவரொருவரின் ஆசிரமம் இருந்தது. அதற்கு **மௌட்டிய மடம்** என்பது பெயர். அதன் தலைவராய் விளங்கியவர் **பரமார்த்தர்** என்னும் குரு சிரேட்டர். அற்புதமான சீடர் ஐவரை அவர் தம் பூர்வ புண்ணியவசத்தால் பெற்றிருந்தார். **மட்டி, மடயன், மூடன், மிலேச்சன், பேதை** என்பன அச்சீடர்களின் பெயர்கள்.

2. ஒரு நாள் குருவும் சீடரும் ஏதோ வேலை காரணமாக அயலூருக்குப் போக நேரிட்டது. வழியில் யாறு ஒன்று குறுக்கிட்டது. அதன் கரையை அடைந்தவுடனே மட்டி என்னுஞ் சீடன், குரு நாதர் முன்னே வந்து அவரடிகளில் விழுந்து வணங்கி, "குரு நாதரே, அடியேன் கூறுவதைக் கேட்டருளக் கோருகிறேன்; இந்நதி கொடியது. என் தந்தையார் இதைப் பற்றிய செய்தியொன்றை எனக்குக் கூறியுள்ளார். அதனை அவர் உரைத்தவாறே தெரிவிக்கின்றேன். கேளுங்கள்; ஒரு நாள் என் தந்தையாரும் அவர் நண்பரொருவரும் உப்புப் பொதி ஏற்றப்பட்டிருந்த இரண்டு கழுதைகளை ஓட்டிக் கொண்டு இவ்வாற்றைக் கடந்து சென்றார்களாம். கோடை காலமாதலின் நட்டாற்றில் கழுதைகளை நிறுத்திக் குளிப்பாட்டித் தாங்களும் குளித்துக் கரையேறினார்களாம். அந்தோ! என்னென்று சொல்வது இந்நதியின் கபடச் செயலை! சிறிதும் சந்தில்லாதபடி தைக்கப்பட்டிருந்த கோணிப் பையின் வாய் சற்றும் திறவாதிருக்க, **தோலிருக்கச் சுளை விழுங்கியது போலக்** கோணியினுள்ளிருந்த உப்பையெல்லாம் இந்த யாறு தின்றுவிட்டிருந்ததாம். ஆதலால், நம்முள் எவரையேனும் இது விழுங்கிவிடக்கூடும். இந்நதி விழித்திருக்கும்போது நாம் இதனைக் கடத்தலாகாது," என்று பயபக்தியுடன் மொழிந்தான்.

3. அது கேட்ட அனைவரும் வியப்பெய்தினர். "மட்டி சொல்வதில் உண்மையிருக்க வேண்டும். '**ஜாக்கிரதைக்குப் பயமில்லை,**' என்பர் பெரியார். ஆதலால், நாம் யாறு தூங்கும்

நேரத்தை அறிந்து அதனைக் கடத்தலே சிறந்தது,'' என்றார் குரு நாதர்.

4. உடனே மடயன் குரு நாதரைப் பார்த்து, "நீங்கள் இங்கேயே இருங்கள். நான் சென்று யாறு விழித்திருக்கிறதா, தூங்குகிறதா என்பதை அறிந்து வருகிறேன்,'' என்று கூறிச் சுருட்டு பற்ற வைப்பதற்காகத் தான் கையில் வைத்திருந்த கொள்ளிக்கட்டையோடு யாற்றை அணுகினான்; நீரில் இறங்காமல் சிறிது தூரத்திலேயே நின்று, கொள்ளிக்கட்டையைத் தண்ணீரில் தோய்த்தான். உடனே அது சுரீரென்று புகைந்ததைக் கண்டு, துள்ளிக் குதித்து ஓடி வந்தான்; "ஐயா, நதியைக் கடக்க இது தருணமன்று! அது விழித்திருக்கிறது! நான் அருகிற்சென்று தொட்டவுடனே அது பாம்பெனச் சீறிப் பாய்ந்தெழுந்து, என்னைப் பற்றித் தின்ன வந்தது! அடியேன் உங்கள் கிருபா நோக்கம் பெற்றவனாகையால், உயிர் தப்பி வந்து சேர்ந்தேன்!'' என்று நடுநடுங்கிக்கொண்டே கூறினான்.

5. சிறிது நேரங்கழித்துக் குரு நாதர், "யாராவது சென்று நதி தூங்கிவிட்டதா என்பதை அறிந்து வந்தால் நாம் சீக்கிரம் மடத்தையடையலாம்,'' என்றார்.

6. அதுகேட்ட மூடன், குரு நாதர் ஆணையைச் சிரமேற்றாங்கி, கொள்ளிக்கட்டையைக் கையிலெடுத்துக்கொண்டு, விரைவாயோடினான்; மிக்க பயத்துடன் தொலைவில் நின்று, கொள்ளிக்கட்டையை மெல்லத் தண்ணீரில் நனைத்தான். முன்னமே அக்கட்டையின் நெருப்பு அணைந்திருந்தமையால், எவ்வித ஓசையும் எழவில்லை. அது கண்ட அவன் மகிழ்ச்சி மிக்கவனாய், ஒரே பாய்ச்சலாய்க் குரு நாதரிடம் ஓடி வந்து, 'குரு சிரேஷ்டரே, எழுந்திருங்கள்! ஒரு விநாடி கூடத் தாமதித்தல் கூடாது! நதி நன்றாய்த் தூங்குகின்றது! புறப்படுங்கள் சீக்கிரம்!'' என்றான்.

7. அதைச் செவியுற்ற அனைவரும் யாற்றை அணுகி, வாயைத் திறவாமல் மூச்சை அடக்கிக்கொண்டு, மெல்ல மெல்ல அடிமேலடி வைத்து, நதியைக் கடந்து கரையேறிவிட்டார்கள்.

8. அப்போது அவர்கள் அடைந்த ஆனந்தத்தை அளவிட்டுக் கூறல் இயலாது. "நாமனைவரும் நம் குரு நாதரின் அருள் விசேடத்தாலன்றோ நதியால் விழுங்கப்படாமல் கரை ஏறினோம்!" என்றான் பேதை.

9. இதற்குள் குரு நாதருக்குத் தம் அருள் விசேடத்தில் ஐயம் பிறந்துவிட்டது. அவர், "அது கிடக்கட்டும்; நாம் அனைவரும் வந்து சேர்ந்து விட்டோமா என்று எண்ணிப் பாருங்கள்," என்று கூறினார்.

10. உடனே மட்டி எண்ணத் தொடங்கினான். அவன் தன்னைக் கூட்டிக்கொள்ளாமல் மற்றவரை மட்டும் எண்ணி, ஐந்து பேர் மட்டுமே இருக்கக்கண்டு, "ஐயையோ! இப்பொல்லாத நதி நாம் அறியாதபடி நம்முள் ஒருவரை விழுங்கி விட்டதே! என்ன செய்வது!" என்று கதறத் தொடங்கினான். மற்றச் சீடர் ஒவ்வொருவரும் மட்டியைப் போலவே கணக்கிட்டு, "ஐயோ! நம்முள் ஒருவன் மாண்டானே! என்ன செய்வோம்!" என்று வாயிலும் தலையிலும் அறைந்து கொண்டு அழத் தொடங்கினர். குரு சிரேட்டர் என்ன செய்வார்! பாவம்! அவரும் கணக்கிட்டார். விதி யாரை விட்டது! அவர் கணக்கும் மற்றவர் கணக்கே போன்றதாயிற்று. ஆதலால், அவரும் ஒப்பாரி வைக்கத் தொடங்கினார்.

11. அவர்கள் இங்ஙனம் அழுதுகொண்டிருந்த போது, ஒரு வழிப்போக்கன் அவ்விடத்தை அடைந்தான். அவன் அவர்கள் அடைந்த துன்பத்தைக் கண்டு, அவர்களை அணுகி, "ஏனையா இவ்வாறு புலம்புகிறீர்கள்? உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று வினவினான். தங்கள் துக்க மேலீட்டால் ஒருவரும் வழிப்போக்கனுக்கு விடை கூற முன்வரவில்லை. ஆயினும், வழிப்போக்கன் பல முறை கேட்ட பின், மிலேச்சன் சிறிது மனம் தேறி, "ஐயா, எங்கள் துன்பத்தை என்னென்று கூறுவது! நாங்கள் ஆறு பேர் ஒரு வேலை நிமித்தம் பிரயாணம் தொடங்கினோம். இந்த யாறு குறுக்கிட்டது. இதன் கொடுமையை முன்னமே அறிந்திருந்த நாங்கள், முன் சாக்கிரதையாய் இது தூங்குந்தருணம் பார்த்து இதைக் கடந்தோம். அப்படியும், பாழாய்ப்போன இந்நதி அறுவருள் ஒருவரை விழுங்கிவிட்டது. நாங்கள் இனி எப்படி உயிர் வாழ்வோம்!" என்று அழுதுகொண்டே கூறினான்.

12. அது கேட்ட வழிப்போக்கன் அவர்களை எண்ணிக் கணக்கிட்டான். அறுவர் இருக்கக் கண்டான்; அவர்களுடைய அறிவின்மையை நன்கு தெரிந்து கொண்டான். குறும்புத்தனம் நிறைந்த அவன், தன் குறும்பை வெளிப்படுத்த நல்ல வாய்ப்புக் கிடைத்ததையெண்ணி மகிழ்ந்தான். உடனே அவர்களை நோக்கி, "ஐயன்மீர், நீங்கள் அழவேண்டா. நான் மந்திரத்தில் வல்லவன். என் மந்திர சக்தியாலும், என் குரு நாதரின் அருளாலும் நதியில் மாண்டவனை நான் வருவிக்கிறேன். ஆனால், நான் சொல்கிறபடி மட்டும் நீங்கள் கேட்க வேண்டும். அன்றியும் ஐம்பது பணம் எனக்களிக்கவேண்டும். இவற்றிற்கு நீங்கள் உடன்படுவீர்களாயின், ஒரு கணப்பொழுதில் மாண்டவன் மீண்டும் வரும்படி செய்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?" என்றான்.

13. அவர்களுக்கு மந்திரவாதியிடம் நம்பிக்கை பிறந்தது. அவன் விரும்பியபடி நடந்துகொள்ள அவர்கள் உடன்பட்டார்கள். ஆனால், ஐம்பது பணத்துக்கு எங்குப் போவது எனத் திகைத்தார்கள். ஆயினும், குரு நாதர் சிறிது மனம் தேறியவராய், மந்திரவாதியை அணுகி, "ஐயா, நீர் சொல்லுகிறபடியே கேட்க நாங்கள் உடன்படுகிறோம்; ஆனால் எங்களிடம் உமக்குக் கொடுக்க ஐம்பது பணமில்லையே என்றுதான் யோசிக்கிறோம். எங்கள் வழிச் செலவுக்காக வைத்திருக்கும் பதினைந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு, உமது மந்திர பலத்தால் மாண்டவனை மீண்டும் வருவிக்கக் கோருகிறேன். உமக்குக் கோடிப் புண்ணியமுண்டு!" என்றார்.

14. தன் குறும்புத்தனத்துக்குப் பதினைந்து பணம் பரிசு கிடைப்பதைக்கண்ட வழிப்போக்கன் சிறிது நேரம் சிந்தித்துவிட்டு, "நீங்கள் மிகவும் நல்லவர்களாய்க் காணப்படுகிறீர்கள்! உங்களிடம் என்னையறியாமலே எனக்குக் கருணை பிறக்கிறது. ஆதலால், உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய யான் உடன்படுகிறேன். பதினைந்து பணத்தை முதலில் என்னிடம் கொடுங்கள்," என்றான். ஐம்பது பணம் கேட்ட மந்திரவாதி பதினைந்து பணத்துக்குச் சம்மதித்துத் தங்கள் குறையைத் தீர்க்க உடன்பட்டது தங்கள் பூர்வ புண்ணியமெனக் கருதிய அவர்கள், பதினைந்து பணத்தை உடனே அவனிடம் கொடுத்துவிட்டார்கள்.

15. பிறகு மந்திரவாதி அவர்களை வரிசையாக நிறுத்தினன். "நான் சொல்கிறபடி செய்யவேண்டும், தெரிகிறதா? என் கையில் உள்ள இத்தடி மந்திர சக்தி வாய்ந்தது. நான் இதனுல் ஒவ்வொருவர் முதுகிலும் ஓர் அடி கொடுப்பேன். முதலில் அடி படுபவர் தம் பெயரைக் கூறிவிட்டு '**ஒன்று**' என்று எண்ண வேண்டும். இரண்டாவது அடி வாங்குபவர் தம் பெயரைக் கூறிவிட்டு, "**இரண்டு**" என்று சொல்ல வேண்டும். இவ்வாறே ஒவ்வொருவரும் சொல்லவேண்டும், தெரிகிறதா?" என்று எச்சரித்தான். பிறகு தன் கைத்தடியால் தாட்சணியமின்றியும், கை கூசாமலும் ஒவ்வொருவன் முதுகிலும் ஒவ்வோர் அடி அடித்தான். ஒவ்வொருவனும் தன் பெயரைக் கூறிவிட்டு, ஒன்று, இரண்டு என்று கூறிக்கொண்டே வந்தபோது, இறுதியில் அடிபட்ட குரு நாதர், "அப்பா! என் பெயர் பரமார்த்தன்; **ஆறு**," என்ருர்.



16. உடனே மந்திரவாதி, "பார்த்தீர்களா! இப்பொழுது ஆறு பேரும் இருக்கின்றீர்கள் அல்லவா? மாண்டவனை மீண்டும் வருவித்துவிட்டேன்! மகிழ்ச்சியாய்ப் போங்கள்," என்று கூறிவிட்டுப் பதினைந்து பணத்தை எடுத்துக் கொண்டு போய்விட்டான்.

பயிற்சி :

1. விடை எழுதுக :

அ. மௌட்டிய மடத்தில் வசித்துக் கொண்டிருந்தவர்கள் யார்? அவர்களுடைய பெயர்கள் யாவை?

ஆ. யாற்றின் கபடச் செயலாகக் கூறப்படுவது யாது?

இ. யாற்றின் தூக்கம் எங்ஙனம் சோதிக்கப்பட்டது?

ஈ. குருவும் சீடரும் ஏன் அழுதனர்?

உ. வழிப்போக்கன் எப்படிப்பட்டவன்? அவன் கூறிய மொழிகள் யாவை?

ஊ. குரு நாதர் வழிப்போக்கனிடம் கூறியது யாது?

எ. வழிப்போக்கன் மாண்டவனை எவ்வாறு மீளச் செய்தான்?

2. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

ஆசிரமம், சிரேட்டர், செய்தி, பொதி, கபடம், வியப்பு, அணுகி, அளித்து, கண்கூடு, ஆணை, மகிழ்ச்சி, ஐயம், ஒப்பாரி, வாய்ப்பு, கருணை.

3. பொருள் எழுதி வாக்கியங்களில் அமைக்க :

கரை - கறை ; கூரிய - கூறிய ; உரை - உறை ; இரங்கு - இறங்கு.

4. தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதில் அப்பொருளுடைய வேறு சொற்களை அமைத்து எழுதுக :

அ. **பண்டைக்** காலத்தில் வட நாட்டில் மட்டி புரம் என்னும் **சிற்றூர்** ஒன்றிருந்தது.

ஆ. இதைப் பற்றிய செய்தியொன்றை என் **தந்தையார் கூறியுள்ளார்.**

இ. இவர்கள் உரையாடிக்கொண்டிருந்த போது, ஒருவன் குதிரையைச் **செலுத்திக்கொண்டு** வந்தான்.

ஈ. அவர்கள் அடைந்த **ஆனந்தத்தை** அளவிட்டுக் கூற **இயலாது.**

# 4. கலைக்கோயில்

1. கலை என்பது வித்தை; கோயில் என்பது இருப்பிடம். ஆகவே, '**கலைக்கோயில்**' என்னுந் தொடருக்கு '**வித்தைக்கு இருப்பிடம்**' என்பது பொருளாகும். ஓவியம், சிற்பம், விஞ்ஞானம் முதலிய சில கலைகள் பயிலப்படும் இடம் '**கலா சாலை**' எனப்படும். எல்லாக் கலைகளும் பயிலப்படும் இடம் '**சர்வகலாசாலை**' எனப்படும். இத்தகைய கலாசாலைகளும், சர்வகலாசாலைகளும் நமது நாட்டில் பல உள்ளன. ஆனால் இவற்றுள் பல, பெயரின் பொருளுக்கேற்றவாறு அமைந்தவை அல்ல. பெயரின் பொருளுக்கேற்றதாயும், இயற்கையோடு ஒத்ததாயும், மாணவ மாணவிகளின் மனத்துக்கு இயைந்ததாயும் கலா சாலை இருக்கவேண்டுமென்று நமது நாட்டுப் பெருங்கவிஞர் **இரவீந்திரநாத தாகூர்** கருதினார்.



தம் கருத்திற்கிணங்க ஒப்புயர்வற்றதொரு கலைக் கோயிலையும் தோற்றுவித்தார். அதற்குச் '**சாந்தி நிகேதனம்**' என்பது பெயர்.

2. கவி சிரேட்டரான இரவீந்திரநாத தாகூரை அறியாதவர் இரார். அவர் இந்தியத் தாயின் இணையற்ற புதல்வர். நமது நாட்டில் இக்காலத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ள கல்விப் பயிற்சி நமது நாட்டுக்கு ஏற்றதன்று என்பது அவருடைய கருத்து. ஆதலால், அவர் நமது நாட்டுக்கேற்ற கலைப் பயிற்சியை அளிக்கத்தக்க கலைக்கோயில் ஒன்றை நிறுவத் துணிந்தார்; 1901-ஆம் ஆண்டில் அதை நிறுவினார்.

3. இரவீந்திரநாத தாகூர் இளைஞராயிருந்தபோது ஒரு சம்பவம் நிகழ்ந்தது: அவர் தந்தையாரான **மகரிஷி தேவேந்திரநாத தாகூர்**, **போல்பூர்**என்னும் ஊருக்கு இரண்டு மைல் தூரத்தி-

லுள்ள மரங்கள் செறிந்த ஓர் இடத்தில் ஓர் ஆசிரமத்தை அமைத்தார் ; அவர் அதிற்றங்கி அருந்தவம் புரிந்து, அமைதி-யாய் வாழ்ந்து வந்தார். இளைஞராயிருந்த இரவீந்திரநாத தாகூர், ஒரு நாள் அத்தனியிடத்துக்குச் செல்ல நேர்ந்தது. அங்குச் சில நாட்கள் தங்கியிருந்த தனயரும் தந்தையாரும், பல செடிகொடிகளை உற்பத்தி செய்து, அவ்விடத்தைப் பொலிவு மிக்க பொழிலாக்கினர்.

4. பல ஆண்டுகட்குப் பின்னர் இரவீந்திரநாத தாகூர் தம் கருத்திற்கிசைந்த கலைக் கோயிலைச் **'சாந்தி நிகேதனம்'** என்னும் பெயருடன் அப்பொழிலின்கண் நிறுவினர். **'சாந்தி'** என்னும் சொல்லுக்கு **'அமைதி'** என்பது பொருள். **'நிகேதனம்'** என்பது 'வீடு,' **'தேவர் கோயில்'** என்னும் பொருள் களையுடையது. ஆகவே, **'அமைதிக்கு இருப்பிடம்'** என்னும் பொருள்படுவது **'சாந்தி நிகேதனம்'** என்னும் தொடர்.



5. பாரத நாட்டுப் பண்டைக் கல்வி முறையைப் பின்-பற்றியதாய், இயற்கைக்கு ஒத்ததாய், ஆசிரமம்போன்றதாய்ச் சாந்தி நிகேதனம் விளங்கவேண்டும் என்பது இரவீந்திரநாத

தாகூரின் நோக்கம். அங்ஙனமே அமைக்கப்பட்ட அக்கலைக்-கோயில் இன்றும் புகழுக்குரியதாய் விளங்கி வருகின்றது. அங்குத் தினசரி வாழ்க்கை எவ்வாறு நடைபெறுகின்றதென்பதைத் தெரிந்துகொள்வோம் :

6. விடியற்காலம் 4-30 மணிக்குச் சில மாணவர் இன்னிசை பாடிக்கொண்டு அக்கலா நிலையத்தைச் சுற்றி வருவர். அதைக் கேட்டு ஆசிரியரும் மாணவரும் துயில் நீத்து எழுவர் ; உடனே தத்தம் விடுதியைக் கூட்டிச் சுத்தம் செய்துவிட்டு, வெளியே செல்வர். மலஜலம் கழித்த பிறகு, எல்லாரும் வெளியிடத்திலிருந்து, உடற்பயிற்சி செய்வர் ; அதன் பின்னர்க் கிணறுகளிலிருந்து இராட்டினங்களால் தண்ணீர் முகந்து, குளித்தல், துணி தோய்த்தல் முதலிய வேலைகளைச் செய்வர்.

7. காலைக் கடன்களைக் கழித்த பிறகு எல்லாரும் தியானத்தில் இருப்பர். இது பதினைந்து நிமிஷ நேரம் நடைபெறும். இதில் எல்லா மாணவரும் கலந்து கொள்ளவேண்டுமென்பது கட்டாயமன்று. கலந்துகொள்ள விருப்பமில்லாதவர், மற்றவருக்கு இடையூறின்றி, அமைதியாயிருத்தல் வேண்டும். தியானம் முடிந்த பிறகு மணியடிக்கும். உடனே எல்லாரும் கலா நிலையக் கோயிலுக்குப் போக வேண்டும். அங்கே வணக்கம் முடிந்தவுடனே காலையுணவு கொள்ளச் சாப்பாட்டு விடுதிக்குப் போவர். இவையாவும் காலை ஏழு மணிக்குள் முடிவு பெறும்.

8. ஏழு மணி முதல் பத்து மணி வரை கல்விப்பயிற்சியும், கலைப்பயிற்சியும் நடைபெறும். பத்து மணி முதல் இரண்டு மணி வரை பகல் உண்டியை முடித்துக்கொண்டு ஓய்வு கொள்வர். மீண்டும் இரண்டு மணி முதல் ஐந்து மணிவரை பாடங்கள் கற்பிக்கப்படும். பின்னர் விளையாட்டு நடைபெறும். பிறகு இராச் சாப்பாட்டுக்குப் போகும் வரை ஆசிரியர் மாணவரைக் கூட்டிக் கதைகள் சொல்லுவர்; அவர்களைப் பாடச் செய்வர் ; நடிக்கச் செய்வர். இரவு சாப்பிட்டு முடிந்த பின் ஒன்பதரை மணிக்கு அனைவரும் படுக்கைக்குச் செல்ல வேண்டும். அப்போதும் சில மாணவர் பண் இசைத்துக் கொண்டு கலாநிலையத்தைச் சுற்றி வருவர். இங்ஙனம் இன்னிசையோடு நாளைத் தொடங்கி இன்னிசையோடேயே நாளை

முடிக்கும் கலா நிலையத்தைக் கலைக்கோயில் என்று கூறுவது பொருத்தமன்றோ?

9. சாந்தி நிகேதனத்தில் வகுப்புக்கள் நடைபெறும் முறை விநோதமானது! சாதாரணக் கலாசாலைகளில் இருப்பவை போல அங்கு வகுப்பு அறைகள் இல்லை. வகுப்புக்கள் எல்லாம் மரங்களின் கீழேதான் காணப்படும். மாணவர்க்கோ ஆசிரியர்க்கோ நாற்காலி மேசைகள் அங்கிரா. தரையின்மீது விரிக்கப்பட்டுள்ள பாய்களின்மீதுதான் அனைவரும் அமர வேண்டும். ஆங்கில போதனா முறையைப் பின்பற்றும் கலாசாலைகளில் உள்ள வகுப்பறை ஆடம்பரங்கள் அங்குக் காணப்படா. ஒவ்வொரு வகுப்பிலும் பதினைந்து மாணவ மாணவியருக்குமேல் இரார். அன்றியும், குறித்த நாட்களில் குறித்த பாடங்களே நடைபெற வேண்டும் என்னும் கட்டுப்பாடும் அங்கில்லை. ஒவ்வொரு மரத்தின் கீழும் ஒவ்வொரு கலையில் வல்ல பேராசிரியர் அமர்ந்திருப்பர். அவர்கள் நம் நாட்டுச் சர்வகலாசாலைகளிற் பயின்று உயர்ந்த பட்டங்கள் பெற்றவர்கள்; அன்றியும், அவர்கள் அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்சு, இங்கிலாந்து முதலிய அயல் நாட்டுச் சர்வகலாசாலைகளிலும் பயின்று பட்டங்கள் பெற்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. மாணவ மாணவிகள் தாங்கள் விரும்பும் கலையை அக்கலை போதிக்கப்படும் இடத்திற்குச் சென்று அமர்ந்து கற்கலாம். ஆகவே, பிள்ளைகள் விரும்பாத பாடங்களை அவர்கள்மீது சுமத்தும் துர்ப்பழக்கம் அங்கில்லை. அவர்கள் விருப்பப்படி கலைகளைப் பயிலும் உரிமையிருப்பதால், மாணவ மாணவிகள் அவற்றில் உலையா ஊக்கத்தோடு பயின்று, குறைந்த கால அளவில் நிறைந்த தேர்ச்சியடைய முடிகிறது.

10. சாந்தி நிகேதனத்தில் ஆண்களும் பெண்களும் ஒருங்கிருந்து கலை பயில்கின்றார்கள். ஆனால், பெண்களுக்குத் தனி விடுதியுண்டு. அவ்விடுதியை மேற்பார்க்கப் பெண் அதிகாரிகளுமுண்டு. பெண்கள் வைகறையில் துயிலெழுந்து, மலர்களைக் கொய்து, மாலைகள் தொடுக்கும் பணியில் ஈடுபடுவார்கள். ஆயினும், ஆடவரும் பெண்டிரும் ஒன்றுபட்டுப் பல தொழில்களையும் இயக்கங்களையும் நடத்துகின்றார்கள். நெசவுத்தொழில், அச்சுத்தொழில், பாற்பண்ணைத் தொழில்,



# 12. புலவர் தூது

1. பண்டிதை விஜயலட்சுமி அம்மையார் ரஷ்யாவுக்கு இராயபாரியாக அனுப்பப்பட்ட செய்தி கேட்டு, நாம் வியப்படைந்தோம்; ஒரு பெண்மணி இராயபாரியாக அயல் நாட்டுக்குச் செல்வது இதுவே முதல் தடவை என்று மகிழ்ந்தோம்; இந்திய நாட்டு வரலாற்றில், இது ஒரு புதுமை என்றும் எண்ணினோம். ஆனால், ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னரே, நம் தமிழ் நாட்டில் பெண்பாலர் அரசர்பால் தூது செல்லும் வழக்கம் இருந்தது என்று கூறினால் நீங்கள் ஆச்சரியம் அடைவீர்கள். ஆனால் இது உண்மை. இச்செய்தி சங்க நூலிற் காணப்படுகிறது.

2. ஏறத் தாழ ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் தமிழ் நாடு மூன்று பெரிய இராச்சியங்களாகப் பிரிந்திருந்தது. அவை **சேர** நாடு, **சோழ** நாடு, **பாண்டிய** நாடு என்பவை. அவற்றையாண்டவர் **சேரர், சோழர், பாண்டியர்** என்று வழங்கப்பட்டனர். அவரை மூவேந்தரென்றும், முடியுடை மன்னர் மூவர் என்றும் கூறுவர். அக்காலத்தில் அம்மூவரேயன்றி, வேறு பல சிற்றரசர்களும் தமிழ் நாட்டின் சிறு சிறு பகுதிகளை

ஆண்டுவந்தார்கள். அவர்களுக்குக் 'குறுநில மன்னர்கள்' என்னும் பெயர் வழங்கி வந்தது.

3. அக்குறுநில மன்னர்களுள் ஒருவர் **தொண்டைமான் இளந்திரையர்** என்பவர். அவர் சோழ மன்னர் ஒருவருக்கும் **பீலிவளை** என்ற நாககன்னிகைக்கும் பிறந்தவர். பீலிவளையின் விருப்பத்தின்படி சோழ மன்னர் தம் நாட்டின் ஒரு பகுதியை இளந்திரையருக்கு ஈந்தார். அப்பகுதிக்குத் **தொண்டை நாடு** என்பது பெயர். இளந்திரையர் **காஞ்சீபுரத்**தைத் தலைநகராக்கிக்கொண்டு, தொண்டை நாட்டை ஆண்டு வந்தார்.

4. தொண்டைமான் அறிவிலும் ஆற்றலிலும் சிறந்தவர்; முடியுடை மன்னர் மூவரோடு சேர்த்து எண்ணப்படும் பெருமையும் வீரமும் நிறைந்தவர்; தமிழ்ப் புலமை நிரம்பியவர்; செந்தமிழ்ச் செய்யுட்கள் பலவற்றை அவர் இயற்றியுள்ளார். அவர் **அதியமான்** என்ற மற்றொரு சிற்றரசர்பால் எக்காரணத்தாலோ பகை கொண்டார்.

5. **அதியமான்** என்பவர் கடையெழு வள்ளல்களுள் ஒருவர். தம்மை அடைந்த இரவலர்க்கு வரையாது பொருள் வழங்குபவர் **வள்ளல்** எனப்படுவர். அதியமான் ஒருவகை வீரர்களாகிய **மழவர்**களுக்குத் தலைவர்; சேரமானுக்கு உறவினர்; ஒரு தருணத்தில் ஏழு அரசர்களைப் போரில் வென்றவர். **தகடூர்** என்பது அவர் தலைநகரம். அஃது இக்காலத்துள்ள மைசூர் இராச்சியத்தில் இருப்பதாகக் கூறுவர் சிலர். சேலம் ஜில்லாவில் உள்ள தருமபுரியையடுத்த அதமன் (அதியமான்) கோட்டை என்னும் பகுதியே அக்காலத்தில் தகடூர் என வழங்கப்பட்டது என்பர் சிலர். அதியமான் ஊரைச் சார்ந்த ஒரு மலை உண்டு. அதற்குக் **குதிரைமலை** என்பது பெயர். அதியமானுக்கு **அதிகமான் நெடுமானஞ்சி, நெடுமானஞ்சி, எழினி** என்னும் வேறு பெயர்களும் வழங்கி வந்தன.

6. அதியமான் புலவர்களைப் போற்றி ஆதரிக்கும் பண்புடையவர். **அவ்வையார், பரணர்** முதலிய பெரும் புலவர்கள் அதியமானைப் புகழ்ந்து பாடியுள்ளார்கள். ஒரு நாள் அதியு-

மான் தமது குதிரை மலையின் மீதிருந்த இயற்கைக் காட்சி-களைப் பார்த்துக்கொண்டு வந்தார். அப்போது மலையின் ஒரு பிளவில் இருந்த கருநெல்லி மரத்தில் ஒரு கனியிருக்கக் கண்-டார். அக்கனியைத் தின்றவர் நெடுநாள் சீவித்திருப்பர் என்-பது அவருக்குத் தெரியும். அவர் தனியே இருந்தமையால், ஆபத்துக்குள்ளாகக்கூடிய இடத்தில் அம்மரம் இருந்ததையும் பொருட்படுத்தாமல், அதில் ஏறி அக்கனியைப் பறித்தார்.

7. தாம் பறித்த கருநெல்லிக் கனியைத் தின்று, அதன் பயனை அடைய அதியமான் மனம் எண்ணவில்லை. தாம் நீண்ட நாள் வாழ்ந்திருப்பதைவிடத் தம்மைப்போன்ற அரசர் பலருக்கு அறிவுரை கூறி நல்வழிப்படுத்தும் பெருமையு-டைய **அவ்வையார்** அதனைத் தின்று நீண்ட ஆயுளைப்பெறட்டும் என்று எண்ணியது அவர் மனம். அவர் தன்னலமற்ற தன்-மையைப் பாருங்கள்! அவர் விரும்பியபடியே அக்கனியைக் கொண்டு வந்து தம்மரண்மனையில் இருந்த அவ்வையாருக்கு அளித்தார். அவரும் அதைத் தின்று அதியமானைப் புகழ்ந்து பாடினர்.

8. அத்தகைய அதியமானோடு போர்தொடுக்க எண்-ணிய தொண்டைமான், பெரியதொரு படையைத் திரட்டி-னர்; புத்தம் புதிய போர்க்கருவிகள் பலவற்றைச் செய்வித்-தார்; அவற்றிற்கு மெருகிட்டு, நெய் பூசி, மலர் மாலையும் மயிர்பீலியும் அணிவித்து, ஆயுதச்சாலையில் அழகுபெற அமைத்தார்; அதியமான் ஒப்பற்ற வீரராதலின், அவரை எதிர்க்கத்தக்க தருணத்தை எதிர்நோக்கி இருந்தார்.

9. அச்செய்தி அதியமானுக்கு எட்டியது. ஆனல், அதியமான் மனத்தில் அப்போது போர் புரியும் எண்ணம் எழவில்லை. ''நாம் தொண்டைமானுடன் போர் தொடுத்தால், வீரர் பலர் வீணில் மடிவர்; நாடு நாசமாகும்; குடிமக்கள் இடர்ப்படுவார்கள். ஆதலால், போர் தொடுக்காமல் இருப்-பதே நலம்,'' என்று அவர் எண்ணினர்; அரும்பெரும் புலவர் அவ்வையாரை அணுகி, ''அம்மையீர், தொண்டைமானிடம் தூது சென்று போரைத் தடுக்கத் தக்கவர் நீரே. என் பொருட்டும், என்னுடைய குடிமக்கள் பொருட்டும் நீவிர் இதனைச் செய்ய வேண்டுகிறேன்,'' என்றார்.

10. அதியமான்பால் அளவற்ற அன்புகொண்டிருந்த அவ்வையார் அதற்கிசைந்து, உடனே தகடூரை விட்டுப் புறப்பட்டார்; பல நாட்கள் நடந்து காஞ்சிபுரத்தை அடைந்தார். அருந்தமிழ் மூதாட்டியராகிய அவ்வையாரின் வரவை அறிந்த தொண்டைமான், அவருக்கு நல்வரவுக் கூறிப் பெரிதும் உபசரித்தார். அவ்வையார் நெடு நேரம் தொண்டைமானுடன் பற்பல விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தார்; பின்பு தாம் தூது வந்த காரியத்தைத் தெரிவித்தார்; தம் இன்னுரைகளால் தம் கருத்தைத் தொண்டைமான் நன்கு உணரச் செய்தார். அவ்வுரைகளைக் கேட்ட தொண்டைமானுக்குப் போரில் இருந்த விருப்பம் விரைவில் மாறிவிட்டது.

11. ஆயினும், தம் ஆயுத பலத்தை அவ்வையார் அறிந்து சென்று, அதியமானுக்கு அறிவிக்கவேண்டும் என்னும் அவா தொண்டைமான் உள்ளத்தில் தோன்றியது. ஆகவே, அதற்கு முன்னர் அவ்வையார் தம் அரண்மனைக்கு வந்ததில்லையாதலால், அதனை அவருக்குக் காட்டுவதுபோல அழைத்துச் சென்றார்; அரண்மனையின் பல பாகங்களையும் காட்டிக்கொண்டே படைக்கலக் கொட்டிலுள் நுழைந்தார்; அங்கிருந்த படைக்கலங்களை அவ்வையாருக்குக் காட்டி நின்றார். அவற்றைக் கண்ட அவ்வையார், தொண்டைமான் கருத்தை அறிந்தார்; அதியமான் வீரத்தை அவர் நன்குணரும்படி செய்ய நிச்சயித்தார்.

12. "காஞ்சிபுர வேந்தரே, உமது அரண்மனையின் வன்மையும், படைக்கலங்களின் பெருமையையும் என்னென்றுரைப்பேன்! ஆ! புத்தம் புதிய படைக்கலங்கள்! எவ்வளவு அழகாகச் செய்யப்பட்டுள்ளன! இவற்றின் கைப்பிடிகளும் காம்புகளும் எவ்வளவு அழகாயுள்ளன! ஒவ்வொன்றும் மெருகிடப்பட்டு மின்னுகின்றதே! நெய் பூசப்பெற்ற இவை பீலி அணியப்பட்டு, மாலை சூட்டப்பெற்றல்லவா காட்சியளிக்கின்றன! தொண்டைநாட்டு மன்னரே, உம்முடைய படைக்கலங்களின் பெருமையை எவ்வாறு புகழ்வேன்! இவற்றை நோக்க அதியமானுடைய ஆயுதங்கள் எம்மாத்திரம்! அவை பகைவரைக் குத்திக்குத்தி நுனி மழுங்கியும், அடி முறிந்தும், காம்பிழந்தும், கைப்பிடி உடைந்தும், இரத்தக்கறை நிறைந்தும் கொல்லன் கொட்டிலிற் கிடக்-

கின்றன. அவற்றிற்கு இவ்வளவு அழகும், பெருமையும் எங்ஙனம் அமையும்?'' என்று கூறினர் அவ்வையார்.

13. அவ்வையாரின் சொற்களின் ஆழ்ந்த பொருளைத் தொண்டைமான் அறிந்தார்; தம்முடைய படைக்கலங்களைப் புகழ்வது போல இகழ்ந்தும், அதியமான் படைக்கலங்களை இகழ்வது போலப் புகழ்ந்தும் பேசிய அவ்வையாரின் அறிவைக் கண்டு வியந்தார். தம்முடைய படைக்கலங்கள் போரில் உபயோகிக்கப்படாமையால் புத்தம் புதியவையாய்க் காட்சி அளித்தன; அதியமானுடையவை அடிக்கடி போரில் உபயோகிக்கப்பட்டமையால் உடைபட்டுக் கொல்லன் உலைக்களத்திற் கிடந்தன. இவ்வளவு நுட்பமாகத் தம்மை இகழ்ந்த அவ்வையார்மீது தொண்டைமான் சினம் கொள்ளவில்லை. அதற்கு மாருக, அவருக்கு அவ்வையாரிடம் இருந்த மதிப்பு மேலும் அதிகரித்தது. அவ்வையார் மொழிகளுக்கிணங்கித் தொண்டைமான் போரைத் தவிர்த்தார்.

14. அக்கால புலவர்களின் நுட்ப அறிவைக் கவனித்தீர்களா? அதுமட்டு மன்று; தாம் விரும்பியதை மன்னனுயிற்றே என்று மறைக்காமல் கூறும் மன வல்லமையைக் கவனியுங்கள். அரசர்களுக்கு அறிவு புகட்டும் ஆற்றல் அவ்வையாரிடம் மட்டுமன்றி, அக்காலப் புலவர் எல்லாரிடத்தும் இருந்தது என்பதை விளக்கப் பண்டைய நூல்களில் பற்பல செய்திகள் உண்டு.

பயிற்சி:

1. விடை எழுதுக:

அ. பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டையாண்ட மூவேந்தர் யாவர்?

ஆ. குறுநில மன்னர் என்பார் யார்?

இ. இளந்திரையர் என்பவர் யார்? அவர் சிறப்புக்கள் யாவை?

ஈ. அதியமான் என்பவர் யார்? அவர் பெருமைகள் யாவை?

உ. அதியமானிடம் அன்புகொண்டிருந்த புலவர் யார்?

ஊ. அப்புலவருக்கு அதியமான் செய்த அருஞ்செயல் யாது?

எ. அதியமான் தொண்டைமானுடன் போர் புரிய ஏன் விரும்பவில்லை ?

ஏ. தொண்டைமானிடம் தூது சென்றவர் யார் ?

ஐ. தொண்டைமானுடைய படைக்கலச் சாலையைக் கண்ட அவ்வையார் கூறிய மொழிகள் யாவை ?

ஒ. அவற்றின் உட்பொருள் யாது ?

2. பொருத்தமான வினைமுற்றுக்களைக் கோடிட்ட இடங்களில் முக்காலங்களிலும் அமைத்து எழுதுக :

அ. நானும் என் நண்பனும் கோட்டைக்கு — (போ)

ஆ. நானும் நீயும் பந்து — (விளையாடு)

இ. நானும், நீயும், மணியும் வேலைகளை — (செய்)

3. கீழே தரப்பட்டுள்ளவற்றைக் கவனித்துச் சொல்லியபடி செய்க:

சோறு + செலவு = சோற்றுச்செலவு

று என்னும் எழுத்தை இறுதியில் உடைய சொல்லோடு மற்றொரு சொல் வந்து சேரும்போது று என்னும் எழுத்திலுள்ள ற் என்னும் எழுத்து இரட்டும். கீழே தரப்பட்டுள்ளவைகளைச் சேர்த்தெழுதுக :

வயிறு + வலி =
கயிறு + கட்டில் =
கிணறு + தவளை =
பயறு + உருண்டை =
தாறு + கோல் =
சேறு + நண்டு =
வரலாறு + நூல் =

4. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :

இராயபாரி, ஈந்தார், ஆற்றல், செய்யுள், வரையாது, பண்பு, பிலி, இடர், அவா, படைக்கலம், கொட்டில், சினம்.



# 13. கண்ணகி வழக்குரைத்தல்

[நாடகம்]

## காட்சி—1

| | |
|---|---|
| நடிகர் : | பாண்டிமாதேவி, தோழியர் |
| இடம் : | பாண்டிமாதேவியின் அந்தப்புரம் |
| காலம் : | முற்பகல் |

(பாண்டிமாதேவியார் ஒரு பீடத்தில் அமர்ந்திருக்கிறார். தோழியர் அருகில் அமர்ந்துள்ளனர்.)

ஒரு தோழி : தேவியரே, மன்னிக்க வேண்டும். உங்கள் அழகிய முகம் என்றும் போல் இல்லை இன்று ; சிறிது வாட்டமுற்றிருக்கின்றது ; பொலிவிழந்து காணப்படுகின்றது. காரணம் யாதோ? உடல் நலம் இன்மையால் அங்ஙனம் உளதோ? தெரிவித்தால் உடனே ஆவன செய்யலாமே!

பாண்டிமாதேவி : பாங்கி, நீ கூறுவது உண்மையே. ஆனால், உடலில் நோய் ஒன்றுமில்லை ; மனந்தான் நலிவடைந்துளது.

**தோழி :** கோப்பெருந்தேவியீர், வளம் கொழிக்கும் வையை நாட்டுக்கிறைவியரே, மீனுட்சிசுந்தரர் அருளால் எல்லாச் செல்வங்களையும் பெற்று விளங்கும் உங்கள் மனம் நலிவடையக் காரணம் யாதோ? விருப்பமிருப்பின் அடியாள்மீது அன்புகூர்ந்து அதனை வெளியிடுங்கள். இன்றே—இல்லை—இப்போதே அதனை அகற்றற்குரிய முயற்சிகளை மேற்கொள்ளலாம்.

**பா—தேவி :** உங்களுக்குத் தெரியாமல் மறைக்க வேண்டிய இரகசியம் ஒன்றுமில்லை. இன்று விடியற்காலையில் சில தீக்கனவுகள் கண்டேன். கடைசி ஜாமத்திற்காணுங் கனவு உடனே பலிக்கும் என்று கனு நூல் வல்லார் கூறக் கேட்டுள்ளேன். அதனுற்றுன் என் மனம் கவல்கின்றது!

**தோழி :** பாண்டிமாதேவியீர்! நீங்கள் கூறுவது உண்மையே, ஆயினும், ஆண்டவன் அருள் பெற்றவர்களிடத்தில் 'நாளென் செயும்? வினைதான் என் செயும்? நாடி வந்த கோள் என் செயும்?' என்ற ஆன்றோர் வாக்குக்கிணங்க தீக்கனவு யாது செய்யவல்லது? அக்கனவு இன்னதென விவரிக்கலாமன்றோ?

**பா—தேவி :** பாங்கி, விவரிக்கலாம். அதை நினைக்குந்தோறும் மனம் வேதனையுறுகின்றது! விவரிக்கவும் வாய் நடுக்குறுகின்றது; ஆயினும், கூறுவேன், கேள்: நான் கண்ட கனவுகள் பல. ஒன்றில் செங்கோலும் வெண்குடையும் நிலத்து வீழ்ந்தன; ஆசார வாயில் ஆராய்ச்சி மணியின் குரல் நடுங்கியது. ஒரு கனவில் எட்டுத் திக்குகளும் அதிர்ந்தன; சூரியனை விழுங்கக்கூடிய இருள் உண்டாயிற்று. மற்றொரு கனவில் இரவில் இந்திரவில் இட்டிருந்தது; பகலில் விண் மீன்கள் விழுந்தன. ஆதலால், வருவதோர் உற்பாதம் உண்டு. இவற்றை மன்னர்க்கு உரைப்போம், வருக.

**தோழி :** அங்ஙனமே செய்வோம். ஆரடியங்கே! நம் கோப்பெருந்தேவியார் அரசர் அவைக்குச் செல்கின்றார். அதிவிரைவில் அட்டமங்கலங்கள் ஏந்தி வாருங்கள்.

**ஏவல் மகளிர் :** இதோ வந்துவிட்டோம் அம்மணி.

[திரை]

## காட்சி—2

நடிகர் : பாண்டியன் நெடுஞ்செழியன், கோப்பெருந்தேவி, கண்ணகி, மந்திரிகள், பிரதானிகள், வாயிற்காவலன், ஏவல் மகளிர் முதலியவர்.
இடம் : பாண்டியன் அவைக்களம்
காலம் : முற்பகல்

[பாண்டியன் நெடுஞ்செழியன் அரியணையில் அமர்ந்திருக்கின்றான். மந்திரிமார், பிரதானிகள் அவையில் அமர்ந்திருக்கின்றனர். பாண்டிமாதேவி சபையைநோக்கி வருகின்றாள். அவளை ஏவல் மகளிர் அட்டமங்கலங்களை ஏந்திக்கொண்டு சூழ்ந்து வருகின்றனர்.]

**ஏவல் மகளிர் :** பாண்டியரின் பெருந்தேவியார் வாழ்க! கோப்பெருந்தேவியார் வாழ்க! (பாண்டிமாதேவியார் அரசன் அருகில் வந்து வணங்குகின்றார்.)

**நெடுஞ்செழியன் :** தேவி, மீனாட்சிசுந்தரர் அருளால் மங்களம் உண்டாகட்டும்! (தன் அரியணையின் ஒரு புறத்தைச் சுட்டி) இங்கு அமர்க. திடீரென்று நம் அவையின்கண் வரக் காரணம் யாதோ? ஏன் உன் முகம் வாடியிருக்கின்றது? உடல் நலமின்றோ? பிற காரணம் யாதேனுமுண்டோ?

**கோப்பெருந்தேவி :** நாதரே, அடியாள் இன்று விடியற் காலையில் சில தீக்கனவுகள் கண்டேன். அது முதல் என் உள்ளம் நடுங்காநின்றது. நம் செங்கோலும் வெண்கொற்றக் குடையும் நிலத்தில் வீழ்ந்தன! ஆசார வாசலில் ஆராய்ச்சி மணியின் குரல் நடுங்கியது!

**நெடுஞ்செழியன் :** ஆ—என்ன! செங்கோலும் குடையும் நிலத்தில் வீழ்ந்தனவா? அமைச்சர் பெருமக்களே, கேட்டீர்களா கோப்பெருந்தேவி கூறியதை!

[அத்தருணத்தில் அவைக்கு வெளியே நின்ற வாயிற்காவலனைக் கண்ணகி அணுகி,]

**கண்ணகி :** வாயிலோயே, வாயிலோயே, அறநெறி மறந்த அரசனின் வாயிலோயே, 'கணவனை இழந்தாள் ஒருத்தி, கையிற் சிலம்பொன்று ஏந்தி வந்து வாயிலில் காத்திருக்கின்றாள்' என்று நீதி கெட்ட நெடுஞ்செழியனுக்கு அறிவிப்பாயாக!

**காவலன் :** (அரசனை யணுகி) அரசர் பெருமானே, வாயிலில் வந்திருக்கிறாள் ஒருத்தி; அவள் எருமைக்கடாவை வாகனமாகக்கொண்ட கொற்றவையும் அல்லள்; பிடாரியும் அல்லள்; பத்திரகாளியும் அல்லள். அவள் கண்கள் கோபக்கனலைக் கக்குகின்றன. கணவனை இழந்தவளாம்; கையிற் சிலம்பொன்று ஏந்தியுள்ளாள்.

**நெடுஞ்செழியன் :** அவள் வருக. அவளை விரைவில் உள் விடுக.

[கண்ணகி சபையில் வந்து மன்னன் முன் நிற்கின்றாள்.]

**நெடுஞ்செழியன் :** பெண்ணே, ஏன் கண்ணீர் சொரிகின்றனை? நீ யார்?

**கண்ணகி :** நான் புகார் நகரில் வாழ்வேன். அவ்வூர்ப் பெருங்குடி வணிகர் மாசாத்துவான் என்பவரின் புதல்வர் கோவலருக்கு மனைவி யான். அவர் ஊழ்வினையால் உமது நகரில் வந்து, என் காற்சிலம்பொன்றை விலைப்படுத்த விரும்பி, உம்மாற் கொலையுண்டார்; என் பேர் கண்ணகி.

**நெடுஞ்செழியன் :** நன்று! கள்வனைக் கொல்லுதல் நீதிதானே?

**கண்ணகி :** தீரக் கேட்டறியாமல் கொலைக்கட்டளையிட்டுக் கோவலரைக் கொன்றமையால், உமது நீதி முறைமை கெடுவதாயிற்று; அதனைக் காட்டுவேன். என் சிலம்பின் அரி மாணிக்கம்.

**நெடுஞ்செழியன் :** என் தேவியுடைய சிலம்பின் பரல் முத்தே.

(உடனே இரண்டு சிலம்புகளும் கொண்டு வந்து வைக்கப்படுகின்றன. கண்ணகி தன் காற்சிலம்பை எடுத்துத் தரையின்மீது வீசி எறிகிறாள். அது உடைகிறது. அதனுள் இருந்த அரி மாணிக்கம் என்பதை அரசன் காண்கின்றான்.)

ஆ! என்னே என் மதி! என்னே என் முறை! அந்தோ! பொற்கொல்லன் பொய்யுரை கேட்ட யானோ அரசன்! யானே கள்வன்! என் அருமரபு என்னால் பழியுற்றதே! என் ஆயுள் கெடுவதாக! (அரசன் அரியணையிற்சாய்ந்து மரணமடைகின்றான்.)

[திரை]

பயிற்சி:

1. விடை எழுதுக:

அ. அரசியின் முகம் பொலிவிழந்ததற்குக் காரணம் என்ன?

ஆ. பாண்டிமாதேவி கண்ட தீக்கனவுகள் யாவை?

இ. கண்ணகி வாயிற் காவலனிடம் கூறியவை யாவை?

ஈ. காவலன் கண்ணகியை எவ்வாறு வருணிக்கிறான்?

உ. பாண்டியன், "நீ யார்?" என்று கேட்டதற்குக் கண்ணகி கூறிய விடை யாது?

ஊ. கண்ணகி தன் வழக்கை எவ்வாறு வென்றாள்?

எ. தான் நீதி தவறிவிட்டதை அறிந்த மன்னன் கூறியது என்ன?

2. இக்காட்சிகளில் அடங்கிய கதையை உன் சொந்தச் சொற்களால் எழுதுக.

# 14. உழவுத்தொழில்

1. இந்தியா விவசாய நாடு. இதில் ஏறத்தாழ ஆறு லட்சம் ஊர்கள் உள்ளன. அவற்றில் வாழும் மக்களுள் பெரும்பாலார் பயிர்த்தொழில் செய்து பிழைக்கின்றனர். நம் நாட்டு மக்களுள் நூற்றுக்கு அறுபத்தைந்து பேர் ஏர்த்-தொழிலில் ஈடுபட்டுள்ளனர் என்பது கணக்கிடப்பட்டுள்-ளது. இதனுல், நம் நாட்டவர் முற்காலத்தில் வேறு தொழில்களை அறிந்ததில்லை என்று நினைக்கலாகாது. உழவுத் தொழிலை ஒப்புயர்வற்ற தொழிலாக அவர்கள் மதித்ததே அதற்குக் காரணம். இது பற்றியே, **'சீரைத்தேடின் ஏரைத்-தேடு; ஓதுவாரெல்லாம் உழுவார் தலைக்கடையில்,'** என்னும் பழமொழிகள் தோன்றின. அன்றியும்,

**" உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்."**

**" உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை; கண்டீர்**
**பழுதுண்டு வேறோர் பணிக்கு."**

என்னும் வள்ளுவர் வாக்கும் உழுதொழிலின் உயர்வை நன்கு விளக்கும்.

2. இத்தகைய சிறந்த தொழில் இக்காலத்தில் இழிநிலை எய்தியுள்ளது. அதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்-றுள் முக்கியமானவை இரண்டு: ஆங்கில ஆட்சியில்—உழு-தொழிலைவிட, பிற கைத்தொழில்களைவிட—ஏதேனும் உத்தி-யோகம் செய்வதே சிறந்ததென்னும் தவறான கொள்கை பரவலாயிற்று. அதிலும், அரசாங்கத்தில் உத்தியோகம் செய்வது சாலச்சிறந்தது என்னும் கொள்கை வலியுற-லாயிற்று. இது பற்றியே, **'கோழி மேய்த்தாலும் கும்பினியில் மேய்க்கவேண்டும்,'** என்னும் முது மொழியும் தோன்றியது. இதில் 'கும்பினி' என்னும் சொல் **ஆங்கிலக் கிழக்கு இந்தியக் கம்பெனியைக்** குறிப்பதாகும். ஆதலால், பட்டணவாசிகளே-யன்றிக் கிராமவாசிகளும் ஆங்கிலம் கற்று உத்தியோகம் தேடத் தொடங்கி விட்டார்கள். இக்கொள்கையால் உழு-தொழிலேயன்றிப் பிற தொழில்களும், நம் தாய் மொழியாம் தமிழ் மொழியும் சீர்குலையத் தொடங்கின. ஏர்த்தொழிலின்

இன்றைய இழிநிலைக்கு இவ்வுத்தியோக மோகம் ஒரு காரணம்; மற்றொரு காரணம், நம் மக்களின் கல்வியின்மை. கிராம மக்களிடையே போதிய கல்வி இல்லாமையால், அவர்கள், 'பழங்காலைத் தூர்க்காதே; புதுக்காலை வெட்டாதே,' என்னும் பழமொழிக்கிணங்கப் பண்டைப் பயிர்த்தொழில் முறைகளைக் கைவிடவும், நவீன முறைகளை மேற்கொள்ளவும் மறுக்கின்றார்கள். இனிப் பயிர்த்தொழில் முறைகளைப்பற்றிக் கவனிப்போம்.

3. பயிர்த்தொழிலுக்கு இன்றியமையாத சில சாதனங்கள் உண்டு. அவற்றைக் கீழ் வரும் பாட்டால் அறிக:

" ஏரும் இரண்டுளதாய் இல்லத்தே வித்துளதாய்,
நீர்அருகே சேர்ந்த நிலம்உளதாய்—ஊர்அருகே
சென்று வரற்கெளிதாய், செய்வாரும் சோற்கேட்கில்
என்றும் உழவே இனிது."

இப்பாட்டால் உழவுத்தொழில் இனிது நடைபெறுதற்கு ஏரும், வித்தும், நீர் வசதியுள்ள சிறந்த நிலமும் இன்றியமையாதவை என்பது தெளிவாகின்றது. முதலில் நிலத்தைப்பற்றிக் கவனிப்போம்: **நன்செய், புன்செய்** என நிலம் இரு வகைப்படும். ஆறு, ஏரி, குளம், கிணறு முதலிய நீர்நிலைகளினின்று நீர் பாய்ச்சிப் பயிரிடப்படும் நிலம் நன்செய்; மழையொன்றினையே ஆதாரமாகக்கொண்டு பயிரிடப்படுவது புன்செய்; இது 'வானம் பார்த்த பூமி,' என்றும் வழங்கப்படுகிறது. இவற்றுள் நன்செய்யே பெரும்பயன் அளிக்க வல்லது.

4. நன்செய் நிலத்தில் விதைக்கும் முறைகள் இரண்டு: ஒன்று, **புழுதிக்கால் விதைப்பு**; மற்றொன்று, **சேற்றுக்கால் அல்லது சேடை விதைப்பு**. புழுதிக்கால் விதைப்பென்பது நிலத்தை நீர் இல்லாமல் சிறிது ஈரம் இருக்கும்போது, நன்றாக ஆழ உழுது, அதில் தானியத்தை விதைப்பதாகும். இந்த முறையில் விதைப்பது சிறந்தது. சேடை விதைப்பென்பது நிலத்தில் நீர் பாய்ச்சி, ஆழ உழுது, சேறாக்கி விதைப்பதாகும்.

5. நிலத்தின் தன்மைக்கேற்றபடி விதைத்த பிறகு, அல்லது விதைப்பதற்கு முன்பு, எருவிட வேண்டுவது மிக்வும்

அவசியமாகும். இதை வள்ளுவர் ஒரு குறளின் மூலம் வற்புறுத்தியுள்ளார். அது வருமாறு :

"ஏரினும் நன்றால் எருவிடுதல்; கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு."

ஏர் உழுதலைக்காட்டிலும் எருவிடுதல் நன்று என்பதையும், உழுது எருவிட்ட பிறகு களை கட்டலும், நீர் பாய்ச்சுதலும், பயிரைப் பட்டிமாடு முதலியவற்றினின்று பாதுகாத்தலும் சிறந்த பயனைத் தரக்கூடியவை என்பதையும் இக்குறள் உணர்த்துகிறது. பயிரைப் பாதுகாத்தால், அது கதிர் விட்டு விளையும். தானிய மணிகள் நன்கு முற்றிய பிறகு அறுவடை செய்து, கட்டுகள் கட்டிக் களத்திற்கொண்டு சேர்க்கவேண்டும். அங்குப் பயிரை அரியரியாக எடுத்துத் தரையின் மீது அடித்துத் தானியத்தைப் பிரிக்க வேண்டும். தாளில் எஞ்சி நின்ற தானியத்தைப் பிணையடித்துப் பிரிப்பது வழக்கம். தானியம் பிரிக்கப்பட்ட பிறகு, அதை வெயிலில் உலர்த்த வேண்டும். பிறகு தூற்றிப் பதர்களை நீக்க வேண்டும். ஆனால், விதைக்கென ஒதுக்கப்படும் தானியம் சிறிதும் ஈரமில்லாதிருக்கும்படி உலர வேண்டும். இதுவரை பயிரிடும் முறைகளைப்பற்றிக் கூறப்பட்டது.

6. இனி நமது நாட்டுப் பயிர்த்தொழிலும், பயிரிடும் முறையும் முன்னேறுதற்கான செயல்களைப்பற்றிக் கவனிப்போம்: இந்தியாவில் ஓர் ஏக்கரில் 1000 பவுண்டு எடை நெல்லுக்குமேல் உற்பத்தியாவதில்லை. ஆனால், ஜப்பானில் இரு மடங்கும், இத்தாலியில் ஐந்து மடங்கும் உற்பத்தியாகின்றன. இங்ஙனமே இந்தியாவில் கோதுமை ஓர் ஏக்கருக்கு 750 பவுண்டுக்குமேல் விளைவதில்லை; ஆனால் இங்கிலாந்தில் 2000 பவுண்டுக்குமேல் விளைகிறது. இக்குறிப்புக்களால் நம் நாட்டுப் பயிர்த்தொழில் மிகவும் முன்னேற்றமடைய வேண்டுமென்பதை அறிகிறோம். முன்னேற்றத்துக்கு இடர்ப்பாடுகள் எத்தனையோ உண்டு. ஆயினும், ஒரு சில சீர்திருத்தங்களை மேற்கொண்டாற்கூட நம் நாட்டுப் பயிர்த்தொழில் முன்னேற்றமடைவது திண்ணம்.

7. இந்தியாவில் எலிகளாலும் பூச்சிகளாலும் சேதமடையும் பயிரின் வருஷ மதிப்பு 13 கோடி பவுன் என்பது

மதிப்பிடப்பட்டுள்ளது. நெல் சரியான முறையில் சேமித்து வைக்கப்படாமையால், நூற்றுக்கு ஐந்து வீதம் சேதமாகிறதாம். ஆகவே, இந்த இரண்டு விஷயங்களில் கவனத்தைச் செலுத்துவதனுலேயே நம் நாட்டுக்கு எவ்வளவு இலாபம் ஏற்படுகிறது என்பதைக் கவனியுங்கள்.

8. நம் நாட்டில் இயற்கை எருவைச் சரியாகச் சேமித்து வைப்பதில்லை. சாணியை வரட்டியாகத் தட்டி விற்றுவிடுகின்றார்கள்; அல்லது எரித்துவிடுகிறார்கள். தழை எருவை அதிகமாகப் பயன்படுத்துவதில்லை. இவற்றைச் சரியான முறையில் மிகுதியாகப் பயன்படுத்த வேண்டும். அன்றியும், செயற்கை எரு வகைகளில் நிலத்துக்குத் தக்கதை அறிஞர்களின் ஆலோசனையைக் கேட்டு உபயோகிக்க வேண்டும்.

9. விதைகளை உபயோகிப்பதிலும் கவனம் செலுத்த வேண்டும். நன்றாக முற்றிய விதையைத் தேர்ந்தெடுத்து வெயிலில் உலரவைத்து, உபயோகிக்க வேண்டும். நல்ல விதை கிடையாவிட்டால், விவசாயப் பண்ணைகளில் விற்கப்படும் விதைகளை வாங்கிப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

10. பண்டு முதல் பழக்கத்தில் இருந்து வரும் உழவுக் கருவிகளே சாலச் சிறந்தவை என்று எண்ணுவது தவறு. புதுக் கருவிகளை உபயோகிக்க வேண்டும். '**அகல உழுவதைக் காட்டிலும் ஆழ உழுவதே நல்லது,**' என்பது பழமொழி. ஆதலால், புதுமாதிரிக் கலப்பையை உபயோகிப்பதால் ஆழ உழுவது சாத்தியமாகும்.

11. நீர்ப்பாசன வசதியும் மிக முக்கியமானது. மழை நீரையே நம்பி இருத்தல் கூடாது. கிணறுகளைத் தோண்ட வேண்டும். குழாய்க்கிணறுகளை அமைக்கவேண்டும். கிணற்று நீரை இறைப்பதிலும் சில நல்ல முறைகளைக் கையாள வேண்டும். மாடுகளை முன்னுக்கும் பின்னுக்குமாக ஓட்டித் துன்புறுத்தும் கபிலை ஏற்றம் நீக்கப்பட வேண்டும். சுற்றும் கபிலையே சாலச் சிறந்தது. கிணற்றுப்பாசனம் உள்ள நிலங்களை வேலியால் பாதுகாத்து, கறிகாய், பூ, பழம் முதலிய பல பொருள்களைப் பயிர் செய்யலாம். வெறுந்தானியங்களை

மட்டும் பயிரிடுவது அவ்வளவு சிறப்புடையதன்று. காய்கறி-களையும், பழ மரங்களையும் உற்பத்தி செய்ய வேண்டுவது அவசியமாகும்.

12. நம் நாட்டுப் பயிர்த்தொழில் முன்னேற்றமடைய இன்னும் எத்தனையோ முறைகளைக் கையாளலாம். ஆயினும், இதுவரையில் கூறப்பட்ட முறைகளை ஒவ்வொரு விவசாயியும் மேற்கொண்டால், உணவுப் பஞ்சம் என்பது இந்தியாவை விட்டு நிரந்தரமாக ஓட்டமெடுப்பது நிச்சயம்.

பயிற்சி :

1. விடை எழுதுக :

அ. நமது நாட்டை விவசாய நாடு என்று கூறக் காரணங்-கள் யாவை?

ஆ. பண்டு முதல் இன்றளவும் நம் நாட்டில் பயிர்த் தொழிலே முக்கியத் தொழிலாய் இருக்கக் காரணம் யாது?

இ. பயிர்த்தொழிலே சிறந்த தொழில் என்பதற்குக் கூறப்-படும் காரணங்கள் யாவை?

ஈ. உன் பாடத்திலிருந்து பயிர்த்தொழில் சம்பந்தமான குறள் வெண்பாக்கள் இரண்டும், பழமொழிகள் இரண்-டும் எழுதுக.

உ. நம் நாட்டில் பயிர்த்தொழில் இழி நிலையில் இருக்கக் காரணம் யாது?

ஊ. நம் நாட்டில் பயிர்த்தொழில் முன்னேற்றமடைவதற்கு மேற்கொள்ளத்தக்க சில முறைகளைக் கூறுக.

2. இரண்டு வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாக எழுதுக :

இந்தியா விவசாய நாடு.

இதில் ஆறு லட்சம் கிராமங்கள் உள்ளன.

3. கேள்விகளாக மாற்றுக :

அ. நம் நாட்டவர் வேறு தொழில்களை அறிந்துவைக்கவில்லை.

ஆ. அதற்குப் பல காரணங்கள் உண்டு.

4. வாக்கியங்களில் அமைத்தெழுதுக :

இழிநிலை, கொள்கை, சாலச்சிறந்தது, முதுமொழி, சீர்குலைய, போதிய, இன்றியமையாத, உயர்வு.

5. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

ஒப்புயர்வு, சீர், தலைக்கடை, இழிநிலை, எய்தி, சால, சீர்குலைய, வித்து, சேடை, களைகட்டல், அரி, பண்ணை.

## 15. இசையால் நேர்ந்த இன்னல்

1. அச்சுதபுரம் என்பது தமிழ் நாட்டில் உள்ள பேரூர்களுள் ஒன்று. அதன் அண்மையில் உயர்ந்து தழைத்த மரங்கள் நிறைந்த ஒரு பொழில் உண்டு. அதனுட்சென்றால் ஓர் ஆசிரமத்தைக் காணலாம். அது மிகப்பரந்தது; மண் சுவர் எழுப்பிக் கட்டப்பட்டது; அதன் கூரை, பனையோலையால் வேயப்பட்டது. அது ஒரு பாடசாலை; அதைச் சூழ்ந்து பல குடிசைகள் காட்சியளித்தன. அவற்றுள் ஒன்று, சற்றுப் பெரியது. அதில் ஆசிரியரும் அவர் மனைவியாரும் வசித்தனர். மற்றக் குடிசைகள் மாணவர் வாழும் விடுதிகள். அச்சுதபுரத்துச் சிறுவர் அனைவரும் அங்குத் தங்கி, ஆசிரியர்க்குப் பல தொண்டுகளைப் புரிந்துகொண்டு, கல்வி கற்று வந்தனர். இதுவே பண்டைக் கல்வி முறை. அக்காலத்தில் **குருகுல வாசம்** என வழங்கியது இதுவே.

2. அச்சுதபுரத்துக் குருகுலத்தின் தலைவர் **அன்பானந்தர்** என்னும் கணக்காயர். அக்காலத்தில் ஆசிரியர், கணக்காயர் என்றே வழங்கப்பட்டார். அன்பானந்தர் **இயல், இசை, நாடகம்** என்னும் முத்தமிழிலும் வல்லவர். ஆசிரியர்க்கிருக்கவேண்டிய குணங்கள் அனைத்தும் அவரிடம் நிரம்பி இருந்தன; ஆனால், ஒரு துர்க்குணம் மட்டும் குடிகொண்டிருந்தது; கட்டுப்பாட்டை மிதமிஞ்சி வற்புறுத்தியதே அத்துர்க்குணம்.

3. தம் மாணவர்கள் குருகுலத்தை விட்டு வெளியேறும் போது, சிறந்த கவிஞர்களாய்த் திகழ வேண்டும் என்பது அவரது ஆவல். அதற்குத் தக்க வாய்ப்பு அளிப்பதற்காகத் தம் மாணவர்கள் தம்மிடம் தெரிவிக்க விரும்பும் செய்திகளைப் பாட்டாக இசையுடன் கூறவேண்டும் என்பது அவர் கட்டளை. "பாட்டென்பது இசையுடையது. பாட்டை இசையுடன் படிக்கவேண்டும். அல்லாவிடில், அது பாட்டாகமாட்டாது," என்று அவர் அடிக்கடி தம் மாணவர்க்குக் கூறுவார்; அன்றியும், இசையோடு பாட்டைப் பாடாதவரைக் கடுமையாகவும் தண்டிப்பார்.

4. இக்காரணத்தால் அக்குருகுலத்தில் இருந்த மாணவர் அனைவரும் குருவினிடம் தம் விருப்பங்களையும், செய்திகளையும் பாட்டுக்களின் மூலம் இன்னிசையோடு தெரிவித்து வந்தனர். இம்முறையில்,

"மும்மல மறுத்த மூர்த்தியே, வணக்கம் !
நம்முடைப் பசுவை நலமுடன் கொண்டு
சென்றதை மேய்த்துத் திரும்பிட யானும்
இன்றுநும் மாணையை எதிர்பார்க் கின்றேன்,"

என்று பாட்டிசைத்துப் பசுவைக் கொண்டுபோய் மேய்த்து வர உத்தரவு கேட்பான் ஒரு மாணவன். ஆசிரியர் ஆனந்தமடைவார்.

"கோதறு குணங்கள் மிக்க குருநாத ! போற்றி ; இன்று
ஆதர வுடனே யென்றன் அன்னையா ரென்னை யழைத்துத்
தாதுறு வனத்துக்கேகித் தர்ப்பையும் விறகும் கொண்டு
போதுடன் வரப் பணித்தார் போய்வரு கின்றே னையா !"

என்று இசையோடு பாட்டைக்கூறி, காட்டுக்குச்சென்று தர்ப்பையும் விறகும் கொண்டு வரும்படி குருபத்தினியார் தனக்கு இட்ட ஆணையைக் கூறி விடை கொண்டு செல்வான் ஒரு மாணவன்.

5. இங்ஙனம் பாட்டும் இசையும் பேச்சுக்களில் நிரம்ப இடங்கொள்ளலாயின அச்சுதபுரத்துக் குருகுலத்தில். இதைக் கண்டு கணக்காயர் அன்பானந்தர் மகிழ்ச்சியுற்றிருந்தார்.

6. சிற்சில சமயங்களில் ஆசிரியர் சுற்றுப்புறங்களிலிருந்த கிராமங்களுக்குச் சென்று, தம் குருகுலத்துக்கு அவசியமான பொருள்களைக் கிராமத்தவரிடமிருந்து பெற்று வருவார். அப்போது அவர் தம்மிடமிருந்த ஒரு குதிரையின்மீது ஏறிச் செல்வார். அக்குதிரையை அவர் அன்புடன் வளர்த்துவந்தார். அது எப்போதும் ஒரு கொட்டகையில் கட்டப்பட்டிருக்கும்.

7. ஒரு நாள் அன்பானந்தரும் சீடர்களும் அண்மையில் இருந்த அடவிக்குச் சென்றார்கள். ஒரு மாணவன் மட்டும் பள்ளியிலிருந்தான். அத்தருணம் தற்செயலாகக் குதிரைக் கொட்டகையில் தீப்பிடித்துக் கொண்டது. தனிமையாய் இருந்தபடியால், ஒன்றும் செய்ய இயலாத அம்மாணவன், குருவும் சீடர்களும் சென்றிருந்த அடவி நோக்கி ஓடினான்;

ஓடும்போதே ஆசிரியரிடம் தான் சொல்ல வேண்டிய செய்தி அமையும்படி ஒரு பாட்டை இயற்றி அதை மோகன ராகத்திற் பாடி ஆசிரியரை மகிழச்செய்ய வேண்டுமென்று முடிவு செய்து கொண்டே போனான்.

8. ஆசிரியரை அணுகினான். வியர்வை சொட்ட, மூச்சுத் திணற அவன் தம் முன் நின்றதைக்கண்ட ஆசிரியர் மனத்துள் பல ஐயங்கள் எழுந்தன. ''அப்பனே, இத்துணை விரைவாக நீ வந்த காரணம் என்ன ?'' என்றார் அவர். மாணவன் தொண்டையைச் சிறிது கனைத்துக்கொண்டு, பாடத் தொடங்கினான்:

**“ மாசறுகுணத்தாய் போற்றி ! மாதவத்தலைவா போற்றி !”**

என்று கூறி இராகத்தைச் சிறிது விஸ்தரிக்கத் தொடங்கினான். குருநாதர் இடை மறித்து, ''அடே! இராகம் பாடியது போதும்! எங்களைத் தேடி ஓடி வந்ததற்குக் காரணத்தைக் கூறு!'' என்று அதட்டினார். மாணவன் உடனே இரண்டாம் அடியைப் பாடத் தொடங்கினான் :

**“ வீசுநல் மூச்சு வாங்க வியர்வைமேன் மேலும் சிந்த ”**

''சரி, போதும்! மூச்சு வாங்குவதும், வியர்வை சிந்துவதும் தெரிகின்றன. ஆசிரமத்தில் என்ன நேர்ந்தது? எம் பத்தினிக்குத் திடீரென நோய் ஏதேனும் கண்டுவிட்டதா ? குழந்தைகட்கு ஏதேனும் துன்பம் நேர்ந்ததா? சொல் சீக்கிரம்!'' என்றார் குருநாதர். மாணவன் பாட்டையும் இசையையும் விட்டுவிடுவானா! அவன் மேலும் பாடத் தொடங்கினான் :

**“ நேசம தோமேம் ஓடி நான்வந்த நிலையே தேன்றல்,”**

இதற்குள் குரு பொறுமையை இழந்துவிட்டார். ''உன் பாட்டும் இசையும் நாசமாய்ப் போக! நீ பாடியது போதுமடா ; செய்தி இன்னதென்று கூறுகிறாயா, உன்னை நையப்புடைக்கட்டுமா ?'' என்று கூறி, கையிலிருந்த பிரம்பை ஓங்கினார். உடனே மாணவன் நடுக்கத்துடனே,

**“ தேசுறு குதிரை லாயம் தீப்பற்றிக் கோண்ட தையா !”**

என்று கூறி முடித்தான்.

9. இதைக் கேட்டவுடனே எல்லாரும் ஆசிரமத்தை நோக்கி ஓடினர். ஓடி என்ன பயன்? அவர்கள் போய்ச் சேர்வதற்குள் குதிரை லாயம் முற்றிலும் நெருப்புக்கு இரையாயிற்று. அதனுள்ளிருந்த குதிரையும் தீயில் வெந்து மடிந்து-

விட்டது. பார்த்தார் குருநாதர். என்ன செய்வார் பாவம்! தமது விவேகமற்ற கட்டுப்பாட்டால் விளைந்த துன்பத்துக்கு யாரைக் குறை கூறுவது! துக்கக்கடலில் ஆழ்ந்தார்.

10. மறுநாள் அதிகாலையில் மாணவர் அனைவரையும் அழைத்தார்; ''மாணவர்களே, என் மடமையால் எனது அரிய குதிரையை இழந்தேன்! இனி, நீங்கள் பாட்டின் மூலம் எதையும் தெரிவிக்கக் கூடாது. தெரிகின்றதா? உரை நடை மூலமே உரையாடல் வேண்டும். இது எனது கண்டிப்பான உத்தரவு. இதை மீறுபவர் கடுமையான தண்டனைக்குள்ளாவர்,'' என்று கூறி, அவர்களைத் தத்தம் வேலைகளைக் கவனிக்குமாறு அனுப்பினர்.

பயிற்சி:

1. விடை எழுதுக:

அ. 'குருகுலம்' என்பது என்ன?
ஆ. அச்சுதபுரத்துக் குருகுலத்துக் கணக்காயர் யார்?
இ. அவருடைய குணநலங்கள் யாவை?
ஈ. அவரிடம் காணப்பட்ட குறை யாது?
உ. அவர் தம் மாணவர்கட்கு விதித்திருந்த கட்டளை யாது?
ஊ. அக்கட்டளையால் நேர்ந்த துன்பம் யாது?
எ. இக்கதையால் நாம் அறியும் நீதி யாது?
ஏ. முத்தமிழ் யாவை?

2. கீழ் வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்துச் சொற்களை நீக்கிவிட்டுப் பொருள் மாறுபடாமல் வேறு சொற்களை அமைத்து எழுதுக:

அ. அதன் அண்மையில் உயர்ந்து தழைத்த மரங்கள் நிறைந்த பொழில் ஒன்று இருந்தது.

ஆ. மற்றக் குடிசைகள் மாணவர் வாழும் விடுதிகள்.

3. சொல்லியுள்ளபடி செய்க:

அ. அச்சுதபுரத்துக் குருகுலத்தின் தலைவர் அன்பானந்தர் என்னும் கணக்காயர். (வாக்கியத்தை 'அன்பானந்தர்' என்னும் சொல்லைக்கொண்டு தொடங்கு.)

ஆ. அப்பாட்டுக்களை இசையுடன் வெளியிட வேண்டும். ('அப்பாட்டுக்கள்' என்று தொடங்கு.)

4. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக:

அண்மை, ஆசிரமம், விடுதிகள், குருகுலம், வாய்ப்பு, இயற்றி, இசைத்து, தர்ப்பை, திணற, இடை மறித்து.

# 16. எங்கள் செஞ்சிச் செலவு

1. 1948-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள் கடைசி வாரத்தில் ஒரு நாள் எங்கள் தலைமை ஆசிரியரிடமிருந்து ஒரு சுற்றறிக்கை வந்தது. அதில் பள்ளியிலுள்ள எல்லா மாணவரும் அன்று மாலை 4 மணிக்குப் பிரார்த்தனை மண்டபத்தில் கூட வேண்டும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. எங்களுக்குக் காரணம் புலப்படவில்லை. நாங்கள் என்னென்னவோ காரணங்களைக் கற்பித்துக்கொண்டே குறித்த இடத்தில், குறித்த நேரத்தில் கூடினோம். தலைமையாசிரியர் வந்தார்; "மாணவர்களே, உங்கள் மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தி: பிப்பிரவரி மாதம் 10-ஆம் நாள் உங்களைத் தென்னார்க்காட்டு ஜில்லாவில் உள்ள தேஜ்சிங்கு மன்னன் செங்கோல் செலுத்திய செஞ்சிக்கோட்டைக்கு அழைத்துச் செல்லப்போகிறேன்; அங்கு மூன்று நாட்கள் தங்க முடிவு செய்துள்ளேன். அதற்கு ஒவ்வொருவரும் செலுத்த வேண்டிய கட்டணம் எட்டு ரூபாய். அப்பிரயாணத்திற் கலந்துகொள்ள விரும்புபவர் இந்தத் தாளில் பெற்றோர் அல்லது போஷகர் கையொப்பம் பெற்று, இதனோடு எட்டு ரூபாயும் சேர்த்துப் பள்ளிக் கணக்கரிடம் பிப்பிரவரி மாதம் 5-ஆந் தேதிக்குள் செலுத்திவிட வேண்டும்," என்று கூறி, ஒவ்வொருவருக்கும் ஓர் அனுமதித்தாளை வழங்கினார். அது கேட்ட எங்கள் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

2. பிப்பிரவரித் திங்கள் 6-ஆம் நாள் மாலை செஞ்சிக்குச் செல்லப் பணம் செலுத்தியிருந்த அனைவரும் கூட்டப்பட்டோம். தலைமை ஆசிரியர், "மாணவர்களே, நான் கூறுவதைக் கவனமாய்க் கேளுங்கள்: சென்னையிலிருந்து செஞ்சிக்கு 92 மைல் தூரம் இருக்கிறது. இதில் எழுபத்தைந்து மைல் புகைவண்டியிலும், பதினேழு மைல் மோட்டார் பஸ்ஸிலும் செல்லவேண்டும். ஆதலால், பெட்டி, படுக்கை முதலிய கனத்த பொருள்களை எவரும் கொண்டுவரக் கூடாது; அவசியமான ஆடைகளை ஒரு பையில் போட்டு எடுத்து வருதல் வேண்டும். பையில் ஒரு துப்பட்டி இருத்தல் நலம். அதைக் கீழே விரித்து, பையைத் தலையணியாக உபயோகித்துக் கொள்ள வேண்டும். இப்போதே வெயில் கடுமையாய் இருப்பதால், தலைக்குத் தொப்பியும், காலுக்குச் செருப்பும்

அவசியம். ஒவ்வொருவரும் தண்ணீர் வைத்துக்கொள்ளக் கண்ணடிச் சீசா ஒன்று கட்டாயமாகக் கொண்டுவர வேண்டும். இது மறக்கத் தக்கதன்று. 'டார்ச்சு' விளக்கு அவசியம் வேண்டும். புகைப்படம் எடுக்கும் கருவி இருந்தால், கொண்டுவருவது நலம். கருப்பு மூக்குக் கண்ணடியும் உதவியாக இருக்கும். இப்பொருள்கள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு, 10-ஆந் தேதிக் காலை 6-30 மணிக்கு எழும்பூர்ப் புகைவண்டி நிலையத்தில் இருக்க வேண்டும்,'' என்று கூறி முடித்தார்.

3. உடனே உடற்பயிற்சியாசிரியர் வந்து மாணவர் நூற்றுவரையும் பத்துப்பேர் அடங்கிய பத்துக் குழுக்களாகப் பிரித்து, ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவனை ஏற்படுத்தினார். குழுவினர் தலைவனுக்கு அடங்கி நடக்க வேண்டுமென்றும், தலைவனே குழுவின் அமைதிக்கும், ஒழுங்குக்கும் பொறுப்புடையவன் என்றும் கூறிச் சென்றார்.

4. பிப்பிரவரித் திங்கள் 10-ஆம் நாள் காலை 6-30 மணிக்கு எழும்பூர்ப் புகைவண்டி நிலையத்தில் நூற்றுவர் மாணவரும், பதின்மர் ஆசிரியரும் வந்து கூடினோம்; குழுவாரியாக நின்று கணக்கெடுத்து முடித்தோம். வண்டி மேடையினருகே வந்து நின்றதும் அனுமன் இலங்கைக்குத் தாவினாற்போலத் தாவிக்குதித்து ஒரு பெட்டியைப் பிடித்துக்கொண்டோம். பிறகு சொல்ல வேண்டுமா! எங்கள் ஆனந்தத்துக்கு அளவேது! ஒரே சந்தை இரைச்சல்தான்! வண்டி நகரத்தொடங்கியது. கூச்சல் அடங்கியது; இன்னிசை தொடங்கியது; ஆசிரியருள் சிலரும், கச்சேரியில் கலந்து கொண்டனர். புகைவண்டி எங்கெங்கு நின்றதோ, அங்கங்கு விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த சிற்றுண்டித் தட்டுகளும், சோடாப் புட்டிகளும் காலியாயின.

5. முற்பகல் 11 மணிக்குத் திண்டிவனம் புகைவண்டி நிலையத்தை அடைந்து, அங்கு எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்த 'இலட்சுமி விலாஸ்' மோட்டார் பஸ்ஸுகளில் ஏறிக்கொண்டு செஞ்சியை அடைந்தோம். அங்குள்ள போர்டு உயர்நிலைப்பள்ளியில் நாங்கள் தங்கினோம். நாங்கள் புறப்படுவதற்கு முன் தினமே அங்குச் சென்றிருந்த ஆசிரியர் இருவர் போர்டு பள்ளியின் தலைமையாசிரியர் உதவியால் நல்ல

சமையற்காரர்களை அமர்த்தி அரிய உண்டி தயாரித்து வைத்திருந்தனர். அதை உண்டபின் சிறிது இளைப்பாறினோம். சரியாக மூன்று மணிக்குப் புறப்பட்டு **இராணி மலை** என வழங்கும் **கிருஷ்ணகிரி**க்குச் சென்றோம்.

6. போகும்போதே செஞ்சிக்கோட்டையின் அமைப்பு எங்களுக்கு நன்கு தெரிந்தது. அது சங்கராபரணி யாற்றின் மேற்புறம் இருக்கிறது. மூன்று சிறு குன்றுகளை அகன்றுயர்ந்த சுவர்களால் இணைத்து அமைக்கப்பட்டுள்ளது அக்கோட்டை. கோட்டையின் உட்பரப்புச் சற்றேறத் தாழ இரண்டு சதுர மைல் இருக்கலாம். அக்கோட்டைக்கு இரண்டு வாயில்கள் உள்ளன; ஒன்று வடமேற்கிலும், மற்றொன்று தென்கிழக்கிலும் உள்ளன; வடமேற்கில் இருப்பதற்கு **ஆர்க்காட்டு வாயில்** என்பது பெயர். தென்கிழக்கில் உள்ளது **புதுச்சேரி வாயில்.** மூன்று குன்றுகள் அக்கோட்டைக்கு அரண் செய்கின்றன என்று கூறப்பட்டதல்லவா? அவற்றுள் வடக்கில் இருப்பதுதான் இராணி மலை. தென்மேற்கில் **இராசகிரி**யும், தெற்கில் **சந்திராயன் துர்க்க**மும் உள்ளன.

7. இராணி மலையின் மீது ஏறிச் செல்லக் கோட்டைச் சுவரோடு இணைந்த படிகள் அமைக்கப்பெற்றுள்ளன. இவற்றின்மீது ஏறிச் சென்றால், குன்றின் உச்சியில் செங்கற்களாலான சிறந்த மண்டபம் காணப்படுகிறது. அது செஞ்சியை ஆண்ட தேஜ்சிங்கு மன்னரின் கொலு மண்டபம் என்று கூறப்படுகிறது. அங்குப் பல புகைப்படங்களை எடுத்தோம். அங்கு இரண்டு களஞ்சியங்கள் உள்ளன. அவை மிகப் பெரியவை. அவற்றின் உச்சிக்குச் செல்லக் குறுகிய படிகள் உள்ளன. மேலே சென்றால், அங்கு வீசும் காற்று நம்மை அடித்துக்கொண்டு போய்விடும் போல இருக்கிறது. இவற்றைத் தவிர, அங்கு ஒரு பெரிய கோவில் இருக்கிறது. அதற்கு **அரங்கநாதர் ஆலயம்** என்பது பெயர். ஆனால், அதனுள் விக்கிரகம் இல்லை. அங்குச் சில நீர்ச்சுனைகள் இருக்கின்றன. நாங்கள் சென்றபோது அவற்றுள் ஒன்றில் மட்டுமே நீர் இருந்தது. அது பனிக்கட்டிபோலச் சில்லென்றிருந்தது. மிகுந்த தாகத்தோடிருந்த நாங்கள், அந்த நீரை அரைமணி

நேரம் கொள்ளை கொண்டோம். மலையை விட்டு இறங்கி எங்கள் விடுதிக்கு மாலை ஆறு மணிக்கு அடைந்து தேநீர் பருகினோம். பிறகு இரவு எட்டு மணிக்குச் சாப்பிட அழைக்கப்படும் வரை எங்கள் விருப்பம் போலப் பேசியும், ஆடியும், பாடியும், ஓடியும் நேரத்தைக் கழித்தோம்.

8. மறுநாள் அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டோம். ஒவ்வொருவருக்கும் உப்புமாவும், வடையும் தரப்பட்டன. வேண்டிய அளவு காப்பியும் வழங்கப்பட்டது. சீசாக்களில் நீர் நிரப்பிக்கொள்ளுமாறு தலைமையாசிரியர் கூறினார். சரியாக ஏழு மணிக்கு எங்கள் உடற்பயிற்சி ஆசிரியர் தம் ஊது குழலால் எச்சரிக்கை அளித்தார். உடனே குழுத் தலைவர்கள் தங்கள் குழுவினரை ஒழுங்காக நிறுத்தினார்கள். பத்துக் குழுவினரும் இரண்டு வரிசையாய்த் தலைமையாசிரியரைத் தொடர்ந்து சென்றோம். எங்களுக்குப் பின்னே மற்ற ஆசிரியர் வந்தனர். நாங்கள் படைவீரர்களைப் போல அணி வகுத்துச் சென்றதைக்கண்ட அந்தக் கிராம மக்கள் பெரிதும் வியப்படைந்தார்கள். அது கண்டு நாங்கள் மிகவும் மகிழ்ந்தோம்!

9. ஏழரை மணிக்குப் புதுச்சேரி வாயிலின் மூலம் கோட்டைக்குள் நுழைந்தோம். அந்த வாயிலின் அமைப்பை என்னென்று கூறுவது! அது நேரே இல்லாமல் வளைந்து வளைந்து இருக்கிறது. உள்ளே சென்றால், அங்கு மற்றொரு கோட்டை காணப்படுகிறது. அது இராசகிரிக்கு மட்டும் அரண் செய்கிறது. அதற்குக் **கீழ்க்கோட்டை** என்பது பெயர். அதனுள் சென்று இராசகிரியின் அடிவாரத்தைஅடைந்தோம். அங்கிருந்து மலையின்மீது போகப் பத்து வாயில்கள் உள்ளன. அவற்றைக் கடந்து சென்றால், மலையின் தென்பாரிசத்தில் ஒரு சிறு பரப்பிடம் இருக்கிறது. அங்கு அக்கோட்டைக்குக் காவல் தெய்வமாகிய **கமலக்கன்னி கோவிலிருக்கிறது**. அதையடுத்து ஒரு சிறு கோவில் அழகிய வேலைப்பாடுடன் காணப்படுகிறது. ஆனால், உள்ளே விக்கிரகமில்லை. அங்கு ஒரு குளமும் சில பாழடைந்த மண்டபங்களும் உள்ளன. அங்கு மலையின் பிதுக்கங்களில் காணப்பட்ட பல தேன் கூடுகள் எங்களுக்கு

ஆச்சரியத்தை விளைத்தன. ஏன்! அவற்றுள் ஒவ்வொன்றும் ஒரு வண்டிச் சக்கரம் அளவு இருந்தது.

10. அவற்றைப் பார்த்துக்கொண்டே சென்றால், மலையின் உச்சியை அடையும் படிகள் ஆரம்பிக்கின்றன; அவை நன்கு செப்பனிடப்பட்டில்லை. அவற்றில் ஏறிச் செல்வது சற்றுத் துன்பமாகவே இருக்கிறது. ஆயினும், எங்கள் மன வேகம் அதைப் பொருட்படுத்தவில்லை. அப்படிகள் செல்லும் மார்க்கத்தில் ஒரு சுனை இருக்கிறது. அங்கு நாங்கள் செல்லும்போது மணி பத்து. ஆனால், அதற்குள் எங்கள் வசமிருந்த சீசாக்களில் ஒரு துளி நீரும் இல்லை. அந்த சுனையைக் கண்டவுடனே தொண்டை வறண்டிருந்த நாங்கள் மனமார நீரைப் பருகினோம்; சீசாக்களிலும் நிரப்பிக்கொண்டோம். மலையேற்றம் தொடங்கப் பெற்றது.

11. நாங்கள் ஏறிச்சென்ற படிகள் குன்றின் உச்சியில் உள்ள ஒரு பிளவில் முடிகிறது. இருபதடி அகலமுள்ள அப்பிளவைக் கடந்து இராசகிரியை அடைய மரப்பாலம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அதன்மீது செல்லும்போது கீழே பார்த்தால், தலை சுற்ற ஆரம்பிக்கிறது. இராசகிரியின் உச்சி சற்றுச் சமமாய் இருக்கிறது. அங்குப் பல சின்னங்கள் காட்சி அளிக்கின்றன. அவற்றுள் முதன்மையானது **சங்கீத மகால்**. அதனுட்சென்று பேசினால், ஒலிபெருக்கியிற் பேசுவதுபோலக் கேட்கிறது. அங்குள்ள எதிர் ஒலி அமைப்புப் புகழுக்குரியது. இராசகிரியில் உள்ள அரங்கர் ஆலயத்திலும் விக்கிரகமில்லை. மணிக்கூண்டு ஒன்றும், கொடி ஸ்தம்பம் ஒன்றும் காட்சியளிக்கின்றன. ஒரு புறத்தில் தேஜ்சிங்கின் நிலவரை அமைந்த நிதிச்சாலையும், மற்றோரிடத்தில் ஒரு பெரிய பீரங்கியும், பிறிதோரிடத்தில் ஒரு நீர்ச்சுனையும் உள்ளன. அந்தச் சுனையின் நீரையும் நாங்கள் விடவில்லை.

12. இவையனைத்தையும் மட்டற்ற மகிழ்ச்சியோடு பார்த்துக்கொண்டும், எங்கள் மனத்தையுங் கண்ணையுங் கவர்ந்த காட்சிகளைப் புகைப்படம் பிடித்துக்கொண்டும்



இராசகிரியை விட்டுக் கீழே வந்தோம். அங்குத் தேஜ்சிங்கு மன்னரின் சிலம்பக் கூடத்தையும், அரசியார் வசித்த கலி-யாண மகாலையும் தேஜ்-சிங்கின் மனைவி தீக்-குளித்த இடத்தையும், போர் வீரர்களின் விடுதிகளையும், மற்றும் பல சின்னங்களையும் கண்டு களித்துக் கொண்டே விடுதியை அடைந்தோம்.

13. பகல் உண்டிக்-குப் பிறகு சிறிது இளைப்பாறினோம். பின்னர்ப் புறப்பட்டு, தேஜ்சிங்கு மன்னர் பூசித்து வந்த அரங்கநாதர் ஆலயத்தைக் காணச் சென்றோம். அது செஞ்சியிலிருந்து மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அதற்குச் செல்லும் வழியில் கிருஷ்ணகிரியின் பாறைகளில் செதுக்கப்பட்டுள்ள ஜைனச் சிற்பங்களைக் கண்டு களித்தோம். முகத்தை முன்புறம் காட்டாமல் மறுபுறம் திருப்பிக்கொண்டிருக்கும் அரங்க-நாதரைத் தரிசித்துவிட்டு விடுதிக்கு வந்தோம். சாப்பாட்டை முடித்துக்கொண்டு அயர்ந்து தூங்கினோம். விடியற்காலையில் மோட்டார் பஸ்ஸில் ஏறித் திண்டிவனம் வந்து, சிற்றுண்டியை முடித்துக்கொண்டு புகைவண்டி ஏறிச் சென்னையை அடைந்-தோம். செஞ்சிக்குச் சென்று பல மாதங்கள் கழிந்துவிட்டன. ஆனால், செஞ்சிக் காட்சிகளை இன்றும் நான் என் மனக்-கண்ணாற் கண்டு மகிழ்கின்றேன்!

பயிற்சி :

1. விடை எழுதுக :—

அ. செஞ்சி எங்குள்ளது ?

ஆ. செஞ்சிக்குச் சென்றோர் கொண்டுசென்ற பொருள்கள் யாவை ? எதற்கு ?

இ. செஞ்சியை ஆண்ட அரசர் யார் ?

ஈ. 'இராணி மலை' என்பது எதற்குப் பெயர் ? அங்குக் காணப்படும் சிறந்த சின்னங்கள் யாவை ?

உ. இராசகிரியின்மீது காணப்படும் சின்னங்கள் யாவை ?

ஊ. 'கலியாண மகால்' என்பது யாது ? அது எங்குள்ளது ?

எ. உட்கோட்டையில் உள்ள சின்னங்கள் எவை ?

2. எங்கள் தலைமை ஆசிரியர் ஒரு சுற்றறிக்கையை அனுப்பினர். (வாக்கியத்தைச் 'சுற்றறிக்கை' என்னும் சொல்லைக் கொண்டு தொடங்குக.)

3. இதிற் கலந்துகொள்ள விரும்புவோர் இந்தத் தாளில் பெற்றோர் கையொப்பம் பெற்று, அதனோடு எட்டு ரூபாயும் சேர்த்துப் பள்ளிக் கணக்கரிடம் செலுத்த வேண்டும். (மூன்று சிறு வாக்கியங்களாக எழுதுக.)

4. எதிர்ப்பதங்கள் கூறுக :—

கடைசி, சேர்த்து, கூடாது, விரித்து, மகிழ்ச்சி, சிறந்த, கீழ்.

5. இப்புத்தகத்தின் இறுதியில் உள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

திங்கள், செங்கோல், கட்டணம், தாள், நிலையம், சூழ, இரைச்சல், பரப்பு, அரண், களஞ்சியம், விக்கிரகம், சுனை, அணி வகுத்து, வியப்பு.

# செய்யுட்பகுதி

## 1. கடவுள் வணக்கம்

வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சும்,
தாழ்த்தச் சென்னியும், தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யென்நெடுங் காலமே? 1

தேவாரம்] [திருநாவுக்கரசர்

"பச்சைமா மலைபோல் மேனிப்
பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே!
ஆயர்தம் கொழுந்தே!" என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகர்உ ளானே! 2

திவ்வியப்பிரபந்தம்] [தொண்டரடிப்பொடி யாழ்வார்

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட
ஞானமும் நன்மையும் நனிசி றந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தினரட் சகன்பதம் சிந்தித் தேத்துவாம். 3

இரட்சணிய யாத்திரிகம்] [H. A. கிருஷ்ணப்பிள்ளை

ஆதியாய் அனாதி யாகி
அரும்பொருள் அனைத்து மாகிச்
சோதியாய் சொரூப ஞானச்
சுடரொளித் தீப மாகி
நீதியாய்த் திறமை யாகி
நித்தியா னந்த மாகி
மாதிரப் புயமு மான
மகம்மதே! வருகு வீரே! 4

தனிப்பாடல்கள்] [மஸ்தான் சாகிபு

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவர் உயிர்க்கும் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம் ;

நினைத்ததும் அளிக்கும் ; மனத்தையும் உருக்கும் ;
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையும் எரிக்கும் பொறுப்பையும் இடிக்கும்
நிறைபுகழ் உரைக்கும் செயல்தாராய் ;

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்கும்
தளத்துடன் நடக்கும் கொடுசூரர்

சினத்தையும் உடற்சங் கரித்தமலை முற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா !
தினைக்கிரி குறப்பெண் ணவளொடு களித்தொண்
டிருத்தணி இருக்கும் பெருமாளே !

திருப்புகழ்] [அருணகிரிநாதர்

## II. வருணனைப் பகுதி

### 1. நிலா

மீன்கள்கோடி கோடிசூழ வெண்ணிலாவே !—ஒரு
வெள்ளியோடம் போலவரும் வெண்ணிலாவே !
ஆம்பல்களி கூறவரும் வெண்ணிலாவே !—உனக்(கு)
அம்புயம்செய் தீங்கெதுவோ வெண்ணிலாவே !
வளர்ந்துவ ளர்ந்துவந்த வெண்ணிலாவே !—மீண்டும்
வாடிவாடிப் போவதேனோ வெண்ணிலாவே !
பளிங்குபோலும் உன்உருவில் வெண்ணிலாவே !—கறை
பற்றியேஇ ருப்பதேனோ வெண்ணிலாவே !

பூமியின் உருவிழலோ வெண்ணிலாவே !—அது
போகாக்கு றுமுயலோ வெண்ணிலாவே !
குன்றும்கு கைகளுமோ வெண்ணிலாவே !—அன்றிக்
கூனற்கி ழவிதானே வெண்ணிலாவே !
துன்பம்மிகத் தாமடைந்தும் வெண்ணிலாவே !—பிறர்க்குச்
சுகமளிப்பார் உன்போல்உண்டோ வெண்ணிலாவே !
இருள்தனை விழுங்கவல்ல வெண்ணிலாவே !—உன்னை
இருள்விழுங்கும் சூழ்ச்சிஏதோ வெண்ணிலாவே !

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## 2. மழைக் குறி

ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதேகுறி—மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழமின்னுதே !
நேற்றுமின்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே !—கேணி
நீர்ப்படுஞ்சொ றித்தவளை கூப்பிடுகுதே !
சேற்றுநண்டு சேற்றில்வளை ஏற்றடைக்குதே !—மழை
தேடியொரு கோடிவானம் பாடியாடுதே !
போற்றுதிரு மாலழகர்க் கேற்றமாம்பண்ணைச்—சேரி
புள்ளிப்பள்ளர் ஆடிப்பாடித் துள்ளிக்கொள்வமே !

—முக்கூடற்பள்ளு

## 3. கடல்

வாழிய கடலே ! வாழிய கடலே !
உலகினுக் கமைந்த ஒருதுணைக் கருவியே !
அலகிலா உருவம் அடைந்தோய் ! நிலத்தினை
ஆக்கி அன்புடன் காக்கும் பரவாய் !
உன்னை யடுத்துவந் துறுநா வாய்களை
நன்னூர்ச் செலுத்தும் நங்காய் ! நின்னிளங்
காதற் றலைவனும் மோதுகாற்றினல்
புனல்கார் என்னும் புனிற்றிள மகனல்
உயிர்த்தொகை யோடு பயிர்த்தொகை மகிழத்
தாவா இன்பம் தருந்தனித் தாயே !
ஓவாது ஒல்லென ஒலிக்குங் கடலே !
உன்றன் பெருமையும் உயர்வும் கருணையும்
துன்றுமடி யின்மையும் தூய்மையும் பிறவும்
என்றனு லெடுத்து இயம்பல் இயலுமோ ?

—வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்

# III. கதைச் செய்யுள்

## 1. தருமரும் அருச்சுனனும்

[சித்திரசேனன் துரியோதனனைக் கட்டி இழுத்துக்கொண்டு செல்லும்போது, அவன் முறையிடுவதைத் தருமர் கேட்டு அவனை விடுவிக்க அருச்சுனனை அனுப்புதல்.]

தருமர்மனம் கொள்ளாமல் தம்பியரைத் தாம்அழைத்தே
''ஆறுல் அழகுமன்னு, அருச்சுனு, நீ கேளாய் :
பெரியதந்தை பெற்றெடுத்த புத்திரர் நூற்றுவருள்
திரியோத னன்நம்மைத் தேடியே பார்க்கவந்தான்.
ஆரோ ஒருவன் ஆகாசங் கொண்டுபோனுன்,
எவனே தெரியாது இழுத்துப்போகுன் அந்தரமாய்.
பார்த்தும் இருந்தோமானல் பாதகம் மெத்தவரும் !
மெத்த வருந்துகிறுன் வில்வேந்தன் இப்போது !
நம்மை அழைக்கிறுன் 'ரட்சிப்பீர்' என்று சொல்லி !
ஆபத்து வேளையிலே ஆதரித்தல் புண்ணியங்காண் !
கடுக விடுவித்துக் கையோடே கூட்டிவாராய்,''
என்ற உறைகேட்டே ஏதுசொல்வான் வாள்விஜயன் :
''ஊரோ டிருந்தநம்மை உரகதன் தானழைத்துக்
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சதிகாரன் !
எத்தனை வஞ்சனைகள் இடருகள் செய்தான்காண் !
நாடு பறித்தானே ! இராச்சியத்தைக் கொள்ளைகொண்டான் !
ஐவர்நம்மை விலங்கிட்டே அறையில் அடைத்தானே !
அரண்மனைப் பெண்களையும் அம்பலம் ஏற்றிவைத்தான் !
அண்ணன் பெருந்தேவி ஆடை உரியவைத்தான் !
பார வனவாசம் பரதேசம் ஓட்டிவிட்டான் ;
இந்தப் பரதேசம் இனித்திரியும் என்றுனே !
சாமத் துரோகனுக்குத் தயவு நினைப்பாரோ ?
பொல்லாத பாவிக்குப் புண்ணியந் தேடுவாரோ ?
தென்ன முடிவேந்தன் திரியோ தனராசன்
எத்தனைநா ளிருந்தாலும் இடரல்லோ தேடுகிறுன் ?
கொல்ல நினைக்கின்றுன் கொடும்பாவி திரியோதனன் ;
இன்றே டொழிந்தவனும் எமலோகம் சேர்ந்திருந்து
செத்தாற் பழுதுமில்லை சீரான அண்ணுவே !''
என்ற உரைகேட்டு ஏதுசொல்வார் தருமரவர் :
''அவரவர் செய்தவினை அவரவரே யனுபவிப்பார் ;

நன்மையைச் செய்தவர்கள் நாட்டரசை யாண்டிடுவார் ;
பொல்லாங்கு செய்தவர்கள் போவார் பெருநரகில் ;
நன்மையைச் செய்தவர்க்கு நட்சத்தி ரங்காணும் ;
தீமையைச் செய்தவர்க்குத் தெரியா திருளாகும் ;
வஞ்சனைகள் வேண்டாவே ; மாயர் துணையாவார் ;
இக்கணமே நீயேகி இட்டுவந்து சேர்த்திடுவாய் ;
என்வார்த்தை தள்ளாதே என்னுடைய தம்பியே நீ !''

—பஞ்சபாண்டவர் வனவாசம்

## 2. தேசிங்கு பாராசாரிக் குதிரையை அடக்குதல்

கனைத்த குதிரையைக் கண்ணாலே கண்டான் காளை தேசிங்கு
குதிரையைத்தட்டிச் சலாம்வாங்கினான் கொல்லும் சிங்கம்
''அண்ணா வாடா, தம்பி வாடா, மோவுத்துக் காரா நீ ! [போல
கால்கயிற்றைக் கழுத்துக் கயிற்றைக் கடுக அவிழ்'' என்றான் ;
அந்தச் சொல்லைக் காதிலே கேட்டான் மோவுத்துக் காரனும் ;
சொன்னவுடனே சல்தியாய்ப் பாய்ந்து சுருக்காயவிழ்த்தானும்;
தங்கத் தாலே சீனி போட்டுத் தடவியே கொடுத்தானும் ;
அந்தக் குதிரையைக் கண்ணாலே கண்டு அகமு மகிழ்ந்தானும் ;
அரிய ரிபரந் தாமா வென்று அலறி யெழுந்தானும் ;
கோவிந் தாஸ்ரீ கிருஷ்ணா வென்று கும்பிட் டெழுந்தானும் ;
பாரா சாரிக்குச் சலாம் வாங்கிப் பாய்ந் தேறினானும் ;
புலிக் குட்டியைப் போலே பாய்ந்து புரவி ஏறினானும் ;
ஏறின வுடனே பாராசாரி யென்ன செய்யுது பார் ;
தடதட வென்று தவிக்குது பாரு அந்தக் குதிரைதானும் ;
கிடுகிடுவென்று கிளம்பிக் குதித்தது அந்தக் குதிரைதானும் ;
லகானை இழுத்துக் கையிலே பிடித்தான் ராசா தேசிங்கு:

* * * *

''அரிஹரிஸ்ரீ முகுந்தா'' என்று அசுவத்தைத் தட்டிவிட்டான்;
தட்டின தட்டில் குதிரை கிளம்பித் தரையில் நில்லாமல்
ஆகாய மார்க்கம் வந்து பாயுது அந்தமுள்ள குதிரை ;
சூரியன் போலத் துலங்குது பாரு சொர்ணமேனிக் குதிரை ;
கண்கண்ட தூரம் பார்த்து ராசர்கள் கண் கலங்கினார்கள் ;
பாய்கிற குதிரையைக் கண்ணால் கண்டு பரிதவித் தார்கள்.

மேக மண்டலம் அளாவி வருவதைப் பார்த்தான் தேசிங்கு ;
லகானை இழுத்துச் சிமிட்டா கொடுத்தான் ராசா தேசிங்கு ;
சிமிட்டா கொடுத்த வேகத் தாலே சீறிப் பாயுதுபார் ;
கோபம் வந்து மூண்டு கொண்டது ராசாவுக் கானும்
காடு மலைகள் செடிக ளெல்லாம் கலங்கி நடுங்கிடவே,
மலைகள் இடிந்து தவிடு பொடியாய் மண்மேல் விழுந்திடவே,
குன்று மலைகள் தாண்டிக் குதிரை குதித்துப் போகிறது ;
குன்றுகள் எல்லாம் பொடிப் பொடியாய்க் குலுங்கி விழுந்தது
பார்.

—**தேசிங்குராசன் கதை**

### 3. இறந்த சிங்கத்தை எழுப்பியதால் நேர்ந்த இன்னல்

துளசா புரத்தில் நால்வர்ஒரு
தொடர்பாய்க் கல்வி பயின்றூர்கள் ;
வளமார் அவருள் ஒருமூவர்
மந்திரத்தின் மிக்க மையால்,
தளமார் அரசன் தனைக்கண்டு
தங்கள் வித்தைத் திறங்காட்டி
ஒளியார் தனங்கள் மிகஈட்டற்(கு)
உன்னித் தம்முள் கூறுவார் : 1
" இவன்றான் மிக்க கல்வியிலன் ;
எனினும் நம்மோடு இருந்துபடித்
தவனு தலினு மொருபங்கு
தருவோம்," என்றங்(கு) உடனழைத்துப்
புவியாள் அரச னிடைப்போகும்
போதில் அந்த வழியினிலே
சவமாம் சிங்கம் தனைக்கண்டு
தம்மந் திரம்சோ திக்கஎண்ணி 2
" கற்ற வித்தை யாற்செத்த
கண்டீ ரவத்தை யெழுப்புவேன் !
மற்றை யவர்க்குச் சம்மதமோ ?"
என்ன மந்த்ரம் தெரியாதே

உற்ற ஒருவன், " எழுப்பிலது
 கொல்லும்," என்ன உரைத்திடலும்,
பற்றி யவனைத் தள்ள அவன்
 பயந்தோர் மரத்தில் ஏறினன். 3
எழுப்பி னர்பின் பதுகொல்ல
 இறந்தார் அம்மூ வரும் ; இதனால்
**இழுக்கி லாத கல்வியினும்**
 **அறிவே பெரிதென்** றிசைத்திட்டான். 4

—வீரமார்த்தாண்ட தேவர்

# IV. பல்சுவைப் பகுதி

## 1. வெளி மயக்கம்

ஒளிமுடி யொடும்பி றந்தே
 உலகமாண் டவரும் இல்லை.
எளியராய் ஓடொன் றேந்தி.
 இங்குதித் தவரும் இல்லை,
குளிர்கடல் உடுத்த பாரில்
 குறைந்தவர் மேலோர் என்னல்
வெளிமயக் கன்றிச் சற்றும்
 மெய்யல உணர்வாய் நெஞ்சே !

—மாயூரம் வேதநாயகம் பிள்ளை

## 2. வெற்றிலை போடுவதன் விளைவு

ஒருவேளை அல்ல திருவேளை
வெற்றிலை போடு!—போடா
தொதுக்கலும் நல்லஏற் பாடு!
சுரந்திட்ட எச்சிலை
 வாயினில் தேக்குதல் போலே—வேறு
தூய்மையில் லாச்செயல்
 கண்டதில் லையைய மேலே (ஒருவேளை)
கரியாகுமே உதடு! கோவைக்
கனியைநீ காப்பதும் தேவை !
 தெரியாத ஆடவர்
வாய்நிறைய எச்சிலின் சேறு
தேக்கியே திரிவார்கள்
 அவருக்கும் நீஇதைக் கூறு ! (ஒருவேளை)

—பாரதி தாசன்

## 3. குறத்தி குறி சொல்லல்

என்னகுறி யாகிலுநான் சொல்லுவேனம்மே !—சதுர்
ஏறுவேன் எதிர்த்தபேரை வெல்லுவேனம்மே !
மன்னவர்கள் மெச்சுகுற வஞ்சிநானம்மே !—என்றன்
வயிற்றுக்கித் தணேபோதம் கஞ்சிவாரம்மே !
பின்னமின்றிக் கூழெனினுங் கொண்டுவாவம்மே !—வங்
பெரிய குடுக்கைமுட்ட மண்டுவேனம்மே ! [தால்
தின்ன இலே யும்பிளவும் அள்ளித்தாஅம்மே !—கப்பல்
சீனச்சரக் குத்துக்குணி கிள்ளித்தா அம்மே !
தும்மலுங்கா கமும்இடம் சொல்லுதே அம்மே !—சரம்
சூட்சமாகப் பூரணத்தை வெல்லுதே அம்மே !
செம்மையிது நன்னிமித்தம் கண்டுபார்அம்மே !—திரி
கூடமலேத் தெய்வமுனக் குண்டுகாண்அம்மே !

—திரிகூடராசப்ப கவிராயர்

## 4. ஏற்றப் பாட்டு

பிள்ளையாரே வாரீர் ! பெருமாளே வாரீர் !
பெருமாளே வாரீர் ! சிவனாரே வாரீர் !
சிவனும்பெரு மாளும் சேர்ந்துரதம் ஏற,
குருவும்பெரு மாளும் கூடிரதம் ஏற,
நானும்பெரு மாளும் நடுங்கிப்பணி செய்ய,
ராமாதுணே வாரீர் ; ராகவரே தண்டம் ;
ரட்சிப்பதும் பாரம் இரண்டுடனே வாரீர்.
உலகத்தாயி மாரி—அவள்—சதுரக்கூடைக் காரி ;
தாழனூராள் மாரி—அவள் தங்கக்கூடைக் காரி ;
எங்கும்பரா சக்தி—அவள் எல்லாம்ஆள ஒத்தி ;
ஆதிபரா சக்தி—அவள்—அங்காளம்மாள் தேவி ;
நெற்றிப்பச்சைக் காரி—அவள்—நெடுங்குணத்து ஆயி ;
பொன்னுக்கூடைக் காரி—அவள்—புறப்பட்டாளே மாரி ;
தங்கப் பொட்டுக்காரி—அவள்—தனித்துவந்தாள் மாரி ;
ஈசுவரி உமையே !—யான்—ஈடேறக்கண் பாராய்.

## V. தனிப்பாடல்கள்

கன்னபுர மாலே! கடவுளினும் நீயதிகம்;
உன்னிலுமோ யானதிகம்; ஒன்றுகேள்—முன்னமே
உன்பிறப்போ பத்தாம்; உயர்சிவனுக் கொன்றுமில்லை;
என்பிறப்பெண் ணத்தொலையா தே!

—காளமேகப் புலவர்

எட்டேகால் லட்சணமே! ஏமனே றும்பரியே!
மட்டில் பெரியம்மை வாகனமே!—முட்டமேற்
கூரையில்லா வீடே! குலராமன் தூதுவனே!
ஆரையடா சொன்னு யது.

—அவ்வையார்

வட்டமதி போலிருக்கும்; வன்னிக் கொடிதாவும்;
கொட்டுவார் கையினின்று கூத்தாடும்;—சுட்டால்,
'அரகர!' என்னுமே அம்பலசோ மாசி
ஒருநாள்விட் டேனி துரை.

—கம்பர்

சொல்லுக் கினிய கழுக்குன்ற ரே! உமைச்
 செல்லவென்ருல்,
அல்லற் பிழைப்புப் பிழைத்துவிட் டீர்; முப்பு
 ராதியர்மேல்
வில்லைக் குனித்தெய்ய மாட்டாமல் கீரந்த
 வேளையிலே
பல்லைத் திறந்துவிட் டீர்; இது வோநும்
 படைத்தொழிலே!

—சொக்கநாதப் புலவர்

# VI. நீதிப் பகுதி

## 1. சதகச் செய்யுள்

### குமரேச சதகம்

#### நட்பு நிலை

கதிரவ னுதிப்பதெங் கேநளின மெங்கே
களித்துள மலர்ந்ததென்ன?
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தில்நட் பானதென்ன?
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுகம்
மலர்ந்துமகிழ் கொண்டதென்ன?
வல்லிரவு விடிவதெங் கேகோழி யெங்கே
மகிழ்ந்துகூ விடுதலென்ன?
நிதியரசர் எங்கே இருந்தாலும் அவர்களொடு
நேசமொன் ருயிருக்கும்;
நீதிமிகு நல்லோர்கள் எங்கிருந் தாலுமவர்
நிறைபட்சம் மறவார்கள்காண்!
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட்டதிபனே!
மயிலேறி விளையாடு குகனே!புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே! 1

#### இதினும் இது நன்று

கடுகடுத் தாயிரம் செய்குவதின் இன்சொலாற்
களிகொண் டழைத்தல்நன்று;
கனவேள்வி யாயிரம் செய்வதிற் பொய்யுரை
கருத்தொடுசொ லாமைநன்று;
வெடுவெடுக் கின்றவோர் அவிவேகி யுறவினில்
விவேகியொடு பகைமைநன்று;
வெகுமதிகள் ஆயிரம் செய்வதின் அரைக்காசு
வேளைகண் டுதவல்நன்று;

சடுதியிற் பக்குவம் சொல்லும் கொடைக்கிங்குச்
சற்றுமிலை என்னல்நன்று ;
சம்பத்து டன்பிணியின் மெலிகுவதின் நோயற்ற
தாரித்தி ரியம்நன்று காண் ;
மடுவினிற் கரியோல மென்னவந் தருள்செய்த
மான்மருக னைமுதல்வா !
மயிலேறி விளையாடு குகனே!புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே ! 2

## அறப்பளீசுர சதகம்

### இதற்கு இது வேண்டும்

தனக்குவெகு புத்தியுண் டாயினும் வேறொருவர்
தம்புத்தி கேட்கவேண்டும் ;
தானதிக சூரனே யாயினும் கூடவே
தளசேக ரங்கள்வேண்டும் ;
கனக்கின்ற வித்துவா னாயினும் தன்னினும்
கற்றோரை நத்தவேண்டும் ;
காசினியை ஒருகுடையி லாண்டாலும் வாசலில்
கருத்துள்ள மந்த்ரிவேண்டும் ;
தொனிக்கின்ற சங்கீத சாமர்த்ய னாகிலும்
சுதிகூட்ட ஒருவன்வேண்டும் ;
சுடர்விளக் காயினும் நன்றாய் விளங்கிடத்
தூண்டுகோல் ஒன்றுவேண்டும் ;
அனற்கண்ண னே!படிக சங்கநிகர் வண்ணனே !
ஐயனே ! அருமைமதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே ! 3

### குறைவுற்றுங் குணம் கெடாமை

தறிபட்ட சந்தனக் கட்டைபழு தாயினும்
சார்மணம் பழுதாகுமோ ?
தக்கபால் சுவறிடக் காய்ச்சினும் அதுகொண்டு
சாரமது ரங்குறையுமோ ?
நிறைபட்ட கதிர்மணி அழுக்கடைந் தாலுமதன்
நீள்குண மங்கிவிடுமோ ?
நெருப்பிடை யுருக்கினும் அடிக்கினும் தங்கத்தின்
நிறையும்மாற் றுங்குறையுமோ ?

கறைபட்ட பைம்புயல் மறைத்தாலும் அதுகொண்டு
கதிர்மதி கனம்போகுமோ?
கற்றபெரி யோர்மகிமை அற்பர்அறி கிலரேனும்
காசினி தனிற்போகுமோ?
அறிவுற்ற பேரைவிட் டகலாத மூர்த்தியே!
ஐயனே! அருமைமதவேள்
அனுதினமு மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே! 4

### கயிலாச நாதர் சதகம்

### கல்விச் சிறப்பு

கடலுலகில் உற்றபொரு ளுக்குள்ளே நன்மைதரு
கல்விநிலை பெற்றபொருளாம்;
கனலினா லுருகாது; புனலினாற் கரையாது;
கள்ளரால் திருடொணாது;
திடமான ராசாதி ராசரா லும்மதைத்
தீண்டிச் சிதைக்கொணாது;
செயல்மிக்க மாதரால் சேதமா காதொருவர்
செலவிடிற் குறைவுறாதங்(கு)
அடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை
அளவிடவும் முடியாதுகாண்;
அப்பொரு ளினைப்பெறு திப்புவியில் அலைகின்ற
அற்பருறு பயனென்கொலோ!
கடகயம் உரித்துடலி னில்தரித் திடுதேவ!
கற்பக விராசமேவும்
கங்கைபுனை ஈசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலையங் கிரிவாசனே! 5

### 2. வாக்குண்டாம்

அல்லது

### மூதுரை

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா;—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். 1

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்லில் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். 2

அட்டாலும் பால்சுவையிற் குன்று(து) ; அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர் ;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே ;சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 3

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. 4

அடக்கம் உடையார் அறிவிலர்என் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா ;—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு. 5

—அவ்வையார்

## 3. நல்வழி

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே ?—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை ; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 1

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை ;—சிச்சீ !
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா(து)
உயிர்விடுகை சால வுறும். 2

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே ! கேளுங்கள் :—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின்(பு) ஆரே அனுபவிப்பார் !
பாவிகாள் ! அந்தப் பணம் ? 3

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும் ;
அன்றி அதுவரினும் வந்தெய்தும் ;—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும் :
எனையாளு மீசன் செயல். 4

பூவாதே காய்க்கும் மரமுமுள ; மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே ;—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலும் தோன்றா துணர்வு. 5

—அவ்வையார்

## 4. நீதி நெறி விளக்கம்

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும் ;
புறங்கடை நல்லிசையும் நாட்டும் ;—உறுங்கவலொன்(று)
உற்றுழியுங் கைகொடுக்கும் ; கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. 1

கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலன் வேண்டாவாம் ;—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா ; யாரே
அழகுக்(கு) அழகுசெய் வார்? 2

முற்றும் உணர்ந்தவர் இல்லை ; 'முழுவதூஉம்
கற்றனம்!' என்று களியற்க ;—சிற்றுளியால்
கல்லும் தகரும் ; தகரா கனங்குழாய் !
சொல்லுலைக் கூடத்தி னால். 3

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்பதொன் றுண்டு :—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல். 4

மெய்வருத்தம் பாரார் ; பசிநோக்கார் ; கண்துஞ்சார் ;
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் ;—செவ்வி
அருமையும் பாரார் ; அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 5

—குமரகுருபர அடிகள்

## 5. திருக்குறள்

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்? 1

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 2

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. 3

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 4

அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 5

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 6

முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம். 7

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது. 8

அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். 9

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 10

பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று. 11

அழுக்கற்று அகன்ருரும் இல்லை அஃதுஇல்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல். 12

அறங்கூருன் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூருன் என்றல் இனிது. 13

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்;
மக்கட் பதடி எனல். 14

தீயவை தீய பயத்தலான் தீயவை
தீயினும் அஞ்சப் படும். 15

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 16

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. 17

அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளிலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 18

உள்ளத்தால் உள்ளலும் தீதே 'பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம்' எனல். 19

வாய்மை எனப்படுவது யாதெனின், யாதொன்றும்
தீமை இலாத சொலல். 20

தன்னைத்தான் காக்கின் சினம்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். 21

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். 22

நல்லாறு எனப்படுவது யாதெனின், யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி. 23

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. 24

மேல்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு. 25

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்; அச்செல்வம்
செல்வத்து ளெல்லாம் தலை. 26

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 27

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 28

அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். 29

மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்; இனநலம்
எல்லாப் புகழும் தரும். 30

ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். 31

ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின். 32

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 33

இதனை இதனான் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல். 34

அச்ச முடையார்க்கு அரணில்லை; ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 35

உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். 36

முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 37

சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். 38

முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு. 39

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின். 40

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 41

பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. 42

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். 43

குணநலம் சான்றோர் நலனே; பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று. 44

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 45

# செய்யுட்பகுதி—குறிப்புரை

## I. கடவுள் வணக்கம்

1. மடநெஞ்சு - இளமனம், தாழ்த்த - வணக்க, சென்னி - தலை, வீழ்த்தவா - வீணுக்கவா ?

2. கமலம் - தாமரை, ஏறே - சிங்கமே, ஆயர் - இடையர், கொழுந்து - வளத்தை விளக்குபவன்.

3. நனி - மிகவும், ஊனம் - பழி, தீனர் - வறியவர், ரட்சகன் - காப்பாற்றுகிறவன்.

4. அனாதி - முதலற்றது, மாதிரம் - மலை.

5. சினத்தவர் - கோபித்தவர், முடி - தலை, செகுத்தவர் - வென்றவர், நிசி - இருள், கருவறுக்கும் - பிறப்பை ஒழிக்கும், பொருப்பு - மலை, பேரி - முரசம், துடி - உடுக்கை, தளம் - சேனை, எரி - பிரகாசம், கிரி - மலை, ஒண்டிருத்தணி - ஒளி பொருந்திய தணிகை மலை.

## II. வருணனைப் பகுதி

1. மீன்கள் - நட்சத்திரங்கள், ஆம்பல் - அல்லி மலர், களி கூர - சந்தோஷம் அதிகரிக்க, அம்புயம் - தாமரை மலர், பளிங்கு - கண்ணாடி, குறு - சிறு, சூழ்ச்சி - உபாயம்.

2. ஈழம் - சிங்கள நாடு, வானம்பாடி - ஒரு வகைப் பறவை, பண்ணை - நன்செய் நிலம், பள்ளர் - உழுதொழில் செய்பவர்.

3. இயைந்த - பொருந்திய, அலகிலா - அளவில்லாத, பரவாய் - கடலே, நாவாய் - மரக்கலம்; நன்னர் - நன்மை, நங்காய் - பெண்ணே, புனல் - நீர், கார் - மேகம், புளிற்றிள மகன் - சமீபத்திற்பிறந்த புதல்வன், தாவா - கேடில்லாத, ஓவாது - இடை விடாமல், துன்று - பொருந்திய, மடி - சோம்பல், இயம்பல் - கூறுதல்.

## III. கதைச் செய்யுள்

1. அந்தரம் - ஆகாயம், பாதகம் - பாவம், ரட்சிப்பீர் - காப்பீர், கடுக - விரைவாக, உரகதன் - பாம்புக்கொடியோன், இடர்கள் - துன்பங்கள், அம்பலம் - சபை, மாயன் - திருமால், ஏகி - போய்.

2. கடுக - சீக்கிரமாக, சினி - சேணம், அகம் - மனம், புரவி - குதிரை, அசுவம் - குதிரை, அந்தம் - அழகு, துலங்குவது - விளங்குவது, சொர்ணமேனி - பொன் போன்ற உடல், பரிதவித்தார்கள் - துன்புற்றார்கள்.

3. தொடர்பாய் - ஒன்றுபட்டு, வளமார் - வளம் பொருந்திய, தளமார் - சேனைகள் பொருந்திய, திறம் - சிறப்பு, ஒளியார் - பிரகாசம் பொருந்திய, தனங்கள் - பொருள், ஈட்டற்கு - சம்பாதிப்பதற்கு, உன்னி - நினைத்து, சவம் - பிணம், கண்டீரவம் - சிங்கம், இழுக்கு - குற்றம், இசைத்திட்டான் - கூறினன்.

## IV. பல்சுவைப் பகுதி

1. பார் - பூமி.
2. ஒதுக்குதல் - நீக்குதல், தேக்குதல் - தங்கும்படி செய்தல், தூய்மை - சுத்தம், வையம் - உலகம், ஆடவர் - புருடர்கள்.
3. பின்னம் - சிதைவு, குடுக்கை - சுரைக்குடுக்கை, முட்ட - முழுவதும், மண்டுவேன் - உண்பேன், பிளவு - பாக்கு, சரம் - சுவாசம், நன்னிமித்தம் - நற்சகுனம்.
4. ஆயி - தாய், ஈடேற - கடைத்தேற.

## V. தனிப்பாடல்கள்

1. கடவுள் - இங்குச் சிவனைக் குறித்தது.
2. எட்டேகால் - தமிழ்க்கணக்கில் ‘அ’ என்னும் எழுத்து ‘எட்டு’ என்னும் எண்ணையும், ‘வ’ என்னும் எழுத்து நான்கில் ஒரு பாகமாகிய ‘கால்’ என்னும் எண்ணையும் குறிக்கும். ஆகவே, ‘எட்டேகால்’ என்பதற்கு ‘அவ’ என்று பொருள் கொள்க. எமனேறும் பரி - எருமைக்கடா, பெரியம்மை - மூதேவி, பெரியம்மை வாகனம் - மூதேவியின் வாகனமாகிய கழுதை, முட்ட - முழுவதும், கூரையில்லா வீடு - குட்டிச்சுவர், இராமன் தூதவன் - அனுமன், (அதாவது குரங்கு), ஆரை - ஆரைக் கீரை.
3. வட்டமதி - வட்ட வடிவமுள்ள சந்திரன், வன்னிக்கொடி - நெருப்புக்கொழுந்து, கொட்டுவார் - (சாணியைத்) தட்டுகின்றவர், சுட்டால் அரகரா என்னும் - வாட்டி சுடப்பட்டால் விபூதியாக உதவும், ஒரு நாள் விட்டேன் - ஒரு நாள் தவணை கொடுத்தேன்.
4. அல்லல் - துன்பம், முப்புராதியர் - திருபுரத்தையாண்ட அசுரர்கள், பல்லைத் திறத்தல் - சிரித்தல், படைத்தொழில் - போர்த்தொழில்.

## VI. நீதிப் பகுதி

1. கதிரவன் - சூரியன், நளினம் - தாமரை, பசுந்தோகை - பச்சை நிறமுள்ள மயில், மதியம் - சந்திரன், குமுதம் - அல்லி மலர், நிதியாசர் - தனவந்தர், வாவி - ஆற்றோடை, புல் வயல் - புதுக்கோட்டையின் அருகில் உள்ள ஒரு சுப்பிரமணிய ஸ்தலம்.

2. களி - மகிழ்ச்சி, வேள்வி - யாகம், அவிவேகி - மூட்டாள், தாரித்திரியம் - தரித்திரம், கரி - (கஜேந்திராழ்வான் என்னும்) யானை.

3. தளசேகரம் - சேனைப் பலம், நத்த வேண்டும் - விரும்ப வேண்டும், காசினி - உலகர், தொனிக்கின்ற - ஒலிக்கின்ற, அனற்கண்ணன் - சிவபெருமான், படிகம் - பளிங்கு, சங்கம் - சங்கு, வண்ணன் - நிறமுடையவன், மதவேள் - பாட்டுடைத் தலைவன் பெயர், சதுரகிரி - சேலம் ஜில்லாவிலுள்ள ஒரு சிவஸ்தலம் என்று கூறப்படுகிறது.

4. தறிபட்ட - வெட்டப்பட்ட, பழுதாயினும் - குறைந்தாலும், சுவறிட - வற்றும்படி, மதுரம் - இனிய உருசி, கதிர்மணி - பிரகாசம் பொருந்திய இரத்தினம், புயல் - மேகம், காசினி - உலகம்.

5. தலைபெற்ற - முதன்மையான, கனல் - நெருப்பு, புனல் - நீர், சிதைத்தல் - அழித்தல், அடம் - பிடிவாதம், கடகயம் - மதம் சொரிகின்ற யானை.

2. 1. தருங்கொல் - கொல் என்பது அசை, என வேண்டா - என்று எண்ண வேண்டா, தெங்கு - தென்னை.

2. அல்லாத - (நல்லார்) அல்லாத, ஈரம் - கருணை, ஈந்த-செய்த.

3. அட்டாலும் - (அடுப்பின்மீது இட்டுக்) காய்ச்சினாலும், அளவளாய் - மனம் கலந்து.

4 கானம் - காடு, பொல்லா - அழகற்ற, கல்லாதான் - படியாதவன்.

5. கடக்க - வெல்ல, மடை - நீர் அணை, உறுமீன் - பெரிய மீன்.

3. 1. விழுமன்றே - விழும் அல்லவா? பணி - தொழில்.

2. மூத்த - (இழிவிற்) பெரிய, இடித்து - நெருக்கிப் பேசி, சால - மிக, உறும் - பொருந்தும்.

3. கூடு விட்டு - உடலை விட்டு, ஆவி - உயிர்.

4. எய்தும் - அடையும்.

5. ஏவாதே - கட்டளையிடாமலே, உணர்வார் - அறிகின்றவர், தூவா - தூவி, வித்து - விதை, பேதை - அறிவில்லாதவன், உணர்வு - அறிவு.

4. 1. இன்பம் - இல்லற வாழ்க்கை, வீடு - மோட்சம், பயக்கும் - அளிக்கும், புறங்கடை - பிற்காலம், நல்லிசை - நல்ல புகழ், உறும் கவல் - நேரும் துன்பம், உற்றுழி - நேர்ந்த போது, கை கொடுக்கும் - துணை நிற்கும்.

2. கலன் - ஆபரணம், அணிகலன் - ஆபரணம், முழு மணிப் பூண் - பெரிய இரத்தினங்கள் பதித்த ஆபரணம்.

3. தகரும் - உடைபடும், தகரா - உடைபடா, கனம் குழாய் - பொன் குண்டலத்தைக் காதில் அணிந்த பெண்ணே, குழை - காதணி, கொல் உலை - கொல்லனுடைய உலைக்களம், கூடம் - சம்மட்டி.

4. சுட்டு - நன்மதிப்பு, நோற்பது - மேற்கொள்ளத்தக்கது, சீர் - பெருமை, தூற்றி - வெளிப்படுத்தி, சிறுமை - இழி குணம், புறங்காத்து - வெளியாகாமற்காத்து, தாழ்ச்சி சொலல் - பணிவாகப் பேசுதல்.

5. துஞ்சார் - தூங்கமாட்டார், செவ்வி - தக்க காலம், கருமம் - காரியம்.

## 5. திருக்குறள்

1. வாலறிவன் - தூய அறிவு வடிவமான கடவுள், நற்றாள் - உயர்ந்த திருவடிகள்.
2. செய்கலாதார் - செய்து முடிக்காதவர்.
3. அறத்தினூங்கு - தருமத்தைவிட, ஆக்கம் - உயர்வு.
4. அமிழ்தினும் - அமிர்தத்தைவிட, ஆற்ற - மிக.
5. உரியர் - சொந்தமாக்கிக்கொள்வர், என்பு - எலும்பு (உடல்).
6. ஓம்பி - பொருள்களைக் காப்பாற்றி, வேளாண்மை - உதவி.
7. அகத்தாளும் - உள்ளத்திலிருந்து வரும் அன்பு கலந்த.
8. வையகம் - மண்ணுலகு, வானகம் - விண்ணுலகு, ஆற்றல் - கொடுத்து உதவுதல்.
9. உய்க்கும் - சேர்ப்பிக்கும், அமரர் - தேவர், ஆரிருள் - இருள் நிரம்பிய நரகம்.
10. நன்றி - நல் வாழ்வு, இடும்பை - துன்பம்.
11. இறப்பினை - பிறர் செய்யும் துன்பத்தினை.
12. அழுக்கற்று - பொறாமையடைந்து, அகன்றார் - பெருமை அடைந்தவர், பெருக்கம் - செல்வம், தீர்ந்தார் - நீங்கியவர்.
13. அல்ல செயினும் - பாவம் செய்தாலும், புறம் - நிந்தனை.
14. பயனில் - உபயோகமில்லாத, பாராட்டுவானை - உபயோகிப்பவனை, பதடி - உபயோகமில்லாதவன்.
16. ஒத்ததறிவான் - உபகாரத்தின் உயர்வை அறிந்தவன்.
17. இசைபட - புகழுண்டாகும்படி, ஊதியம் - பயன்.
18. அவ்வுலகம் - மோட்ச உலகு, இவ்வுலகம் - மண்ணுலக சுகம்.
19. உள்ளல் - கருதுதல், கள்வேம் - கவர்ந்துகொள்வோம்.
20. வாய்மை - சத்தியம்.

21. சினம் காக்க - கோபத்தை அடக்க வேண்டும்.

22. இன்னா - துன்பம், ஒறுத்தல் - தண்டித்தல், நன்னயம் - நல்ல உதவி.

23. நல்லாறு - நல்வழி, சூழும் நெறி - கருதும் மார்க்கம்.

25. பாடு - பெருமை.

26. செவிச் செல்வம் - கேள்வி ஞானம், தலை - சிறந்தது.

27. காண்பது - சிந்தித்து அறிவது.

28. தினைத்துணை - மிகச் சிறிதளவு, பனைத்துணை - மிகப் பெரிதளவு, நாணுவார் - வெட்கப்படுவோர்.

29. அறன் - அறநூல்கள், கேண்மை - நட்பு, திறன் - தேடும் வகை.

30. மன்னுயிர் -நிலைபெற்ற உயிர்கள், ஆக்கம் - நன்மை, இனநலம் - நண்பர்களின் இணக்கம்.

31. ஆக்கம் - செல்வம், ஊக்கார் - மேற்கொள்ளமாட்டார்.

32. ஞாலம் - உலகம், இடத்தால் - இடத்திற்கு ஏற்றவாறு.

33. ஏனை - மற்ற, கட்டளைக்கல் - உரைகல்.

35. அரண் - பாதுகாவல், பொச்சாப்பு - மறதி, ஆங்கில்லை - அவற்றால் பயனில்லை.

36. உள்ளம் உடைமை - ஒரு காரியத்தை விடாமுயற்சியுடன் செய்யும் திறமை, உடைமை - நிலைபெற்ற பொருள்.

37. திருவினையாக்கும் - செல்வத்தை அதிகரிக்கச் செய்யும், முயற்றின்மை - முயற்சியற்றிருத்தல், இன்மை - இல்லாமை (தரித்திரம்), புகுத்திவிடும் - சேர்த்துவிடும்.

39. முகம் நக - முகமலர்ச்சியடைய, அகம் நக - உள்ளன்புண்டாக.

40. யாக்கை - உடல், அற்றது போற்றி - ஜீரணமானபின்.

41. இழுக்கார் - வழுவாமல் நடப்பார்.

42. பெருக்கத்து - செல்வச் சிறப்புள்ள போது, சுருக்கத்து - செல்வம் குறைந்த போது.

43. மேலிருந்தும் - மேலான நிலையிலிருந்தும், மேலல்லார் - குணமில்லாதவர், மேலல்லர் - மேன்மக்கள் ஆகமாட்டார், கீழல்லார் - மேன்மக்கள்.

44. சான்றோர் - பெரியோர்.

45. வாழ்வார் - உரிமை பெற்றவர், தொழுதுண்டு - பிறரிடம் தொண்டு செய்து சாப்பிட்டு, பின் செல்பவர் - கட்டளைப் படி பின் நடப்பவர்.

# அகராதி

அ

அகம் - மனம்
அகற்ற - நீக்க
அகன்ற - பரந்த
அசரீரி - ஆகாயவாணி ; உருவமில்லாதது
அணிகலன் - ஆபரணம்
அணுகி - நெருங்கி
அமர்ந்து - இருந்து
அமரர்கள் - வானவர்கள்
அமைச்சர் - மந்திரியார்
அர்ப்பணம் - சமர்ப்பித்தல்
அவா - மிகுந்த விருப்பம்
அவைக்களம் - சபா மண்டபம்
அளித்து - ஈந்து ; கொடுத்து
அறிஞர் - புலவர் ; அறிவுடையவர்

ஆ

ஆசிரமம் - பன்ன சாலை
ஆடம்பரம் - இடம்பம்
ஆணை - உத்தரவு
ஆவல் - ஆசை
ஆற்றல் - வல்லமை

இ

இச்சித்து - விரும்பி
இசைந்து - உடன்பட்டு
இடர் - துன்பம்
இடையறு - இடை விடாத
இடையூறு - இன்னல்
இயக்கம் - கூட்டம்
இயலாது - முடியாது
இயைந்தது - முடிந்தது
இராயபாரி - இராசதூதர்
இல்லம் - வீடு
இலக்கியம் - இலக்கணம் அமைந்த நூல்
இன்னருள் - இனிய கருணை
இன்னல் - துன்பம்

ஈ

ஈகை - கொடை
ஈந்தார் - கொடுத்தார்

உ

உத்தமர் - சான்றோர் ; நல்லவர்
உலையா - அழியாத
உறைந்தது - தோய்ந்தது ; வசித்தது
உறைவிடம் - வசிக்குமிடம்

ஊ

ஊண் - உணவு
ஊன் - தசை

எ

எக்கரிட்டு - இடுமணலிட்டு ; மணல் மேடிட்டு

ஐ

ஐயம் - சந்தேகம்

ஒ

ஒப்பாரி - அழுகைப் பாட்டு
ஒப்புயர்வு - ஈடும் எடுப்பும்
ஒருங்கிருந்து - ஒன்றுகூடியிருந்து
ஒழுக்கம் - நன்னடத்தை

க

கண்கூடு - பிரத்தியட்சம் ; கண்ணால் காணப்படுவது
கணம் - கூட்டம்
கணை - அம்பு
கதை - சரிதை ; போரில் உபயோகிக்கும் ஓர் ஆயுதம்
கபடம் - வஞ்சகம்
கருணை - கிருபை
கருத்து - எண்ணம்
களவாடு - திருடு

கா

காளே - வீரன்

கொ

கொட்டில் - கொட்டகை
கொடுமை - துன்பம்
கொய்து - பறித்து

ச

சத்துரு - பகைவன்
சம்பவம் - நிகழ்ச்சி
சான்று - மேற்கோள் ; சாட்சி

சி

சிகிச்சை - நோய்க்குப்பரிகாரம்
சிப்பம் - பொட்டணம்
சிரேட்டர் - மேலோர்
சினம் - கோபம்

சீ

சீற்றம் - கடுஞ்சினம்

சூ

சூழ்ச்சி - சதியாலோசனை

செ

செம்மல் - பெருமையிற் சிறந் [தோன்
செய்தி - சமாசாரம்
செய்யுள் - பாட்டு
செயற்படுத்து - வேலையில் ஈடு படுத்து ; உருவாக்கு

த

தகர்த்தது - உடைத்தது
தடாகம் - குளம்
தலம் - இடம்
தலை சிறந்த - மிகச்சிறந்த
தனயர் - பிள்ளைகள்

தா

தாயகம் - பிறப்பிடம்

தி

தியாகம் - தன்னலமற்ற கொடை அல்லது செயல்
தியானம் - இடைவிடாமல் நினைத் [தல்
திரள் - கூட்டம்
திறம் - வல்லமை

து

துயில் நீத்து - தூக்கம் கலேந்து
துறை - நீர் நிலையில் கப்பல் தங்கு கின்ற இடம்
துன்புறுத்து - கொடுமை செய்

தூ

தூண்டப்பெற்று - கிளரப்பட்டு ; ஊக்கப்பட்டு
தூதவர் - இராயபாரி

தே

தேக்கம் - நீர்ப்பரப்பு

தொ

தொண்டாற்றி - பணி செய்து

தோ

தோணி - ஓடம்

ந

நஞ்சு - விடம்
நட்பு - சிநேகம்
நன்கொடை - பரிசு

நா

நாட்டம் - பார்வை

நி

நிமித்தம் - பொருட்டு ; சகுனம்
நிறுவினர் - ஸ்தாபித்தார்

நீ

நீர்ப்பெருக்கு - வெள்ளம்

நே

நேர்மை - செம்மை

நை

நையப்புடைத்தார் - நன்றாக அடித்தார்

ப

படலம் - நூற்பகுதி ; ஒன்றன் பரப்பு

படைக்கலம் - ஆயுதம்

படைகள் - சேனைகள்

பண்பு - குணம்

பணி - தொண்டு

பணித்தார் - கட்டளையிட்டார்

பணியாற்றி - தொண்டாற்றி

பயின்று - கற்று ; பழகி

பார்த்த - விசாலமான

பரப்பு - விஸ்தீரணம்

பி

பிரதானி - முதன்மையானவன்

பிளிறின - முழங்கின ; கூச்சல் இட்டன

பீ

பீலி - மயில் தோகை

பு

புதல்வர் - புத்திரர்

புல்லர் - கீழ்மக்கள்

புலர்ந்த - விடிந்த

புழுதி - தூசு

பை

பைசாசம் - பிசாசு

போ

பொதி - மூட்டை

பொலிவு - அழகு

போ

போர் தொடுக்க - சண்டை ஆரம்பிக்க

ம

மகிழ்ச்சி - சந்தோஷம் ; இன்பம்

மகிழ்ந்தன - இன்புற்றன

மலிந்து - மிகுந்து

மனப்பாங்கு - மனத்தன்மை

மா

மாட்சி - மகிமை ; பெருமை

மாட்சிமை - மேன்மை

மாற்றான் - பகைவன்

மு

முதுமொழி - பழமொழி

யா

யாத்திரிகர் - பிரயாணி

வ

வயப்பட்ட - வசியமான ; அகப்பட்ட

வழக்கறிஞர் - வக்கீல்

வள்ளல்-வரையாது கொடுப்பவன்

வா

வாய்ப்பு - தருணம்

வாய்மை - உண்மை

வி

விடுதி - தனியிடம்

விண்ணப்பம் - மனு

வியப்பு - ஆச்சரியம்

விலங்கு - மிருகம்

வெ

வெகுண்டு - கோபித்து



# உமா வாசகம்

## ஏழாம் புத்தகம்—பொதுப் பகுதி

[இரண்டாம் பாரத்துக்கு உரியது.]

Form II

1951ஆ ஜூன்மீ வெளியிடப்பட்ட புதிய பாடத்திட்டத்தின்படி
திருத்தி அமைக்கப்பெற்றது.




த. சே. உமாபதி, M.A., L.T.,
தலைமையாசிரியர்,
ஸி. அப்துல் ஹக்கீம் இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளி, சென்னை.






உமாதேவன் கம்பெனி
16, செம்புதாஸ் தெரு, சென்னை—1

 1951 [விலை ரூ. 1




# முகவுரை

உமா வாசகம் என்னும் பெயருடன் வெளிப்போதரும் நூல் வரிசையில் இஃது ஏழாம் புத்தகம். 1951-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தையொட்டி இது திருத்தி அமைக்கப்பெற்றுள்ளது.

சிறுவர் சிறுமியரின் மனோநிலையையும், அவர்தம் தமிழறிவின் எல்லையையும் மனத்திற்கொண்டு இஃது இயற்றப் பெற்றுள்ளது. இதன்கண் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடமும் பாடத்-திட்டத்தின் நோக்கமாகிய மொழிப்பயிற்சியை அடிப்படையாகக் கொண்டு இயன்றிருத்தல் குறிப்பிடத் தக்கது. ஒவ்வொரு பாடத்-தின் இறுதியிலும் தரப்பட்டுள்ள பயிற்சியே இதற்குச் சான்றா-கும். அன்றியும், மொழி வளர்ச்சிக்குரிய புதிய சொற்களும், சொற்றொடர்களும் ஒவ்வொரு பாடத்திலும் ஏற்ற அளவில் இடம் பெற்றுள்ளன.

மாணவர் மாணவிகட்கு அகராதி உபயோகிக்கும் பழக்கம் உண்டாதற்பொருட்டு ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற்களைக் குறித்து, அவற்றுக்குப் புத்தகத்தின் இறுதி-யில் தரப்பட்டுள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதும்-படி அமைக்கப்பெற்றுள்ள பயிற்சி குறிப்பிடத்தக்கதாம். செய்-யுட்பகுதிக்குக் குறிப்புரைகள் தரப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் இதனைப் படித்துப் பய-னுறுதற்கு ஆவன செய்யுமாறு ஆசிரிய அறிஞர்களை வேண்டு-கிறோம்.

சென்னை,
9-11-51.

பதிப்பாளர்

# உள்ளுறை

## உரை நடைப் பகுதி



## செய்யுட்பகுதி

# உமா வாசகம்

## (ஏழாம் புத்தகம்)

## 1. நாட்டுக்குழைத்த நற்குடும்பம்

1. நமது நாடு இன்று சுதந்தர நாடாய் விளங்குகிறது. இச்சுதந்தரத்தை அடைய போர் புரிந்தவர் பலர். அவரனைவரும் தந்நலமற்ற தியாகிகள்; உடல், பொருள், உயிர் அனைத்தையும் நாட்டுக்காக உதவியவர்கள்; அறப்போர் புரிந்த அரும்பெரு வீரர்கள்; அவர்களுள் ஒருவர்தாம் இன்று நம் நாட்டு முதல் அமைச்சராயுள்ள **பண்டித ஜவாஹர்லால் நேஹ்ரு**. அவர் தந்தையார், தாயார், மனைவியார், தங்கையர் முதலிய அவர் குடும்பத்தவர் அனைவரும் தமது தாய் நாட்டின் விடுதலை யொன்றையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவர். பெருந்தனம் படைத்த அவர்கள், இன்ப வாழ்க்கையை எள்ளி, நாட்டின் நலனுக்காகத் துன்ப வாழ்க்கையைத் துணிவுடன் மேற்கொண்டவர்கள்!

2. இந்தியாவின் மணிமுடி என வழங்கும் **காஷ்மீர நாடு** காண்பவருடைய கண்களையும் கருத்தையும் களிப்புறச் செய்யும் எழில் மிக்கது. அந்நாட்டில் இரு நூற்றாண்டுகளுக்கு முன், ஒரு பிராமணர் வாழ்ந்திருந்தார். **ராஜ்கால்** என்பது அவர் பெயர்; அவர் வடமொழி, பாரசீகம் ஆகிய இரு மொழிகளிலும் வல்லவராயிருந்தார். ஆதலால், அவர் **பண்டித ராஜ்கால்** என்று வழங்கப்பட்டார். அவரது புலமையில் ஈடுபட்ட, டில்லியை ஆண்டுவந்த முஸ்லிம் பேரரசர் ஒருவர் அவரை டில்லியில் குடியேற்றினர்; ஒரு மாளிகையையும், ஒரு ஜாகிரையும் அவருக்கு நன்கொடையாக வழங்கி, அவரை ஆதரித்தார். அம்மாளிகை ஒரு கால்வாயின் கரையிலிருந்தது. கால்வாய் என்னும் சொல் இந்தி மொழியில் **நஹர்** எனப்படும்.

நஹொர்க் கரையில் வாழ்ந்த ராஜ்கால், **நேஹ்ரு** என்று டில்லி மக்களால் வழங்கப் பெற்ருர். இதனுல், அவர் கால்வழியில் தோன்றிய அனைவர்க்கும் '**பண்டிதர், நேஹ்ரு**' என்னும் பட்டங்கள் வழங்கலாயின.

3. பண்டித ராஜ்காலின் பெயரர்க்கு மூவர் மைந்தர் இருந்தனர். அவருள் மூன்ருமவரான **மோதிலால் நேஹ்ரு** என்பவரே நம் முதலமைச்சரின் தந்தையாராவர். அவர் சிறந்த வழக்கறிஞர். அலகாபாது உயர் நீதிமன்றத்தில் அவர் பெற்ற புகழ் அவருக்கு அளவற்ற செல்வத்தை ஈட்டித் தந்தது. மோதிலால் நெஹ்ரு, **சொரூப ராணியார்** என்ற அம்மையாரை மணந்துகொண்டார். அவர்கட்கு 1889-ஆம் ஆண்டு நம் மாபெருந்தலைவர் மைந்தராய் உதித்தனர். பின்னர் **விஜய லக்ஷ்மி, கிருஷ்ணு** என்னும் இரு புதல்வியரும் பிறந்தனர்.

4. செல்வ மைந்தராகிய ஜவாஹர் பிற சிறுர்களைப் போலத் திண்ணைப் பள்ளியிலோ, தொடக்கப் பள்ளியிலோ கல்வி கற்கவில்லை; வீட்டிலேயே, வெவ்வேறு பாடத்துக்கு வெவ்வேறு ஆசிரியர் அமர்த்தப்பட்டு, அவருக்குக் கல்வி கற்பிக்கப்பட்டது. பின்னர், அவர் இங்கிலாந்துக்குச் சென்று கல்வி பயின்று, இறுதியில் '**பாரிஸ்தர்**' பரீட்சையில் தேறிச் சட்ட நிபுணராய் இந்தியாவுக்குத் திரும்பினுர்.

5. அவர் இங்கிலாந்தில் இருந்தபோது **விபின சந்திர பாலர், லாலா லஜபதி ராய், கோகலே** முதலிய தியாகிகளின் சொற்பொழிவுகளைக் கேட்டார். அவை, இளமை தொட்டு அவர் இருதயத்தில் புதையுண்டிருந்த நாட்டுப்பற்றென்னும் வித்தை முளையுற்று, இலை விட்டு எழச் செய்தன. ஆதலால், அவர் இந்தியாவுக்கு வந்தவுடனே **காங்கிரஸ் மகா சபையிற்** சேர்ந்து, நாட்டுக்குத் தொண்டாற்ற முற்பட்டார். அவர், 1916-ஆம் ஆண்டு **இலட்சுமணபுரியில்** கூடிய காங்கிரஸ் கூட்டத்தில் உத்தமர் காந்தியாரின் தொடர்பைப் பெற்ருர். அன்று முதல் காந்தத்தால் இழுக்கப்படும் இரும்பு போலக் காந்தியடிகளின் ஒப்பற்ற இலட்சியங்களில் ஈடுபட்டு, அவருடைய அரசியல் மாணவராய்த் திகழலானுர்.

6. அதே ஆண்டில் ஜவாஹர் **கமலா நேஷ்ரு** என்னும் அம்மையாரை மணம் புரிந்துகொண்டார். அவ்வம்மையார், எல்லாவற்ருனும் கணவர்க்கு இனியர்; குண நலன்கள் நிரம்பியவர்; ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும் வல்லவர்; தியாகத்தில் தீவிரமானவர்; அஞ்சா நெஞ்சம் படைத்தவர். ஈடுமெடுப்புமற்ற இத்தம்பதிகட்குப் பிறந்த புதல்வியரே **இந்திரா நேஷ்ரு** என்பவர்.

7. இனி நமது நாட்டு முதலமைச்சரின் குடும்பத்தவர் ஒவ்வொருவரும் நாட்டுக்குப் புரிந்த நற்ருெண்டுகளைப்பற்றிக் கவனிப்போம்: ஜவாஹர் இங்கிலாந்திற்படித்துக்கொண்டிருந்த போது, இந்தியாவில் அரசியல் துறையில் கொந்தளிப்பு மிகுதியாய் இருந்தது. திலகர் போன்ற தீவிரவாதிகள் சிறையிலடைக்கப்பட்டார்கள். அப்போதுதான் நாட்டுப்பற்று மோதிலாலைப் பற்றியது. முதலில் அவர் மிதவாதியாகவே இருந்தார்.

8. 1921-ஆம் ஆண்டு **வேல்ஸ் இளவரசர்** இந்தியாவுக்கு வந்தார். அவரை வரவேற்கலாகாது என்று காங்கிரஸ் மகா சபை முடிவு செய்தது. அதன் பயனுக, மற்றத் தலைவர்களுடன் மோதிலாலும் சிறையிலிடப்பட்டார். இதனுல், அவர் நோய்வாய்ப்பட்டார். அந்நிலையில் அவர் உப்புப் போர் தொடங்கச் சென்ற காந்தியடிகளைக் கண்டு, தமது விலைமதிப்பற்ற **ஆனந்த பவனம்** என்னும் மாளிகையைச் '**சுயராஜ்ய பவனம்**' எனப் பெயரிட்டு, நாட்டுக்கு நன்கொடையாக வழங்குவதாகத் தெரிவித்து, உப்புப் போரில் ஈடுபட்டார். அதனுற்சிறைப்பட, அவரது நோய் மிகுதியாயிற்று. 1931-ஆம் ஆண்டு அவர் தம்மை காண வந்த காங்கிரஸ் தலைவர்களை நோக்கி, "நான் விரைவிற் மாய்வேன். நீங்கள் சுதந்தர இந்தியாவைக் கண்டு களிப்பீர்களாக!" என்று கூறினுர். என்னே அவர் நாட்டுப்பற்று!

9. நம் மாபெருந்தலைவரான ஜவாஹர்லால் அவர்கள், 1916-ஆம் ஆண்டு காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்தார் என்று கூறினேம். அதுமுதல் அவர் தம் நாட்டு விடுதலையை

விரும்பித் தீவிரமாகத் தொண்டாற்றத் தொடங்கினர். அதனால் அவர் அடைந்த பயன், பல முறை சிறை சென்றதேயாம். அவர் 1921-ஆம் ஆண்டு வேல்ஸ் இளவரசர் வரவை எதிர்த்தது காரணமாக, மூன்று திங்கள் சிறையிலிருந்தார்; பின்னர் வெளிநாட்டுத்துணி மறியலில் ஈடுபட்டு, இருபது திங்கள் சிறைப்பட்டார்; பின்னர் சைமன் குழுவினர் வரவை எதிர்த்துப் போலீஸாரால் தடியடிப்பட்டார்; மீண்டும் உப்புப் போரிலிறங்கி, ஆறு மாதச் சிறை வாழ்க்கையை அனுபவித்தார்; இங்ஙனம் மற்றும் பல முறை பல ஆண்டுகளைச் சிறையில் கழித்தார். நாட்டுரிமைப் போரில் தந்தையார், தாயார், மனைவியார் ஆகிய அனைவரையும், தமது பெருஞ் செல்வத்தையும் நாட்டுக்குத் தியாகம் செய்ததன்றித் தம்மையே தாய் நாட்டுக்கு அர்ப்பணம் செய்த அரிய உத்தமர் அவரையன்றி எவர் உளர்?

10. இனி, அவர்தம் மனைவியாரின் நாட்டுத்தொண்டைப் பற்றிக் கவனிப்போம்: கமலா நெஹ்ருவைப் போன்ற உயர் குணம் வாய்ந்த பெண்டிர் உலகத்தில் ஒரு சிலரே தோன்றுவர். அவர் ஜவாஹரை மணந்த நாள் முதல் காங்கிரஸ் மகா சபையின் உறுப்பினராய்த் திகழ்ந்து, தம் வாழ்நாள் முழுவதையும் நாட்டுப்பணிக்கே நல்கினர். அவர் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஜவாஹரின் தங்கையாரான கிருஷ்ணாவுடன் ஆண் உடையுடுத்து, தொண்டர் படையிற் பயிற்சி பெற்று, நாட்டுக்குத் தம் கடமையைச் செய்தனர்; தம் கணவர் சிறைப்பட்ட பிறகு தாமும் வரி கொடா இயக்கப் பிரசாரத்தால் சிறைப்பட்டார். பின்னர் அவர் நோயுற்ற போது, தம் கணவர் தம்பொருட்டு அரசியலரங்கினின்று விலக எண்ணியுள்ளார் என்ற தவறான செய்தியைக் கேள்விப்பட்டார்; உடனே தம் கணவரின் கைகளைப் பற்றிக் கொண்டு, தம் பொருட்டு நாட்டுப் பணியை நழுவ விட வேண்டா என்று வேண்டிக்கொண்டார். அவ்வம்மையாரின் நாட்டுப்பற்றை என்னென்று கூறுவது!

11. சொரூப ராணியாரும் நாட்டுப்பற்றில் தம் குடும்பத்தைச் சேர்ந்த எவர்க்கும் இளைத்தவரல்லர். அவர் நாட்டுரி-

மைக்காகப் போராடிய தம் கணவருக்கு உடனிருந்து உதவி புரிந்த உத்தமியாராவர். ஒரு சமயம் அலகாபாதில் நடை-பெற்ற காங்கிரஸ் ஊர்வலத்தை அவர் தலைமை தாங்கி நடத்திப் போலீஸாரால் புடைக்கப்பெற்ருர். பெறுதற்கரிய கணவரும், ஆருயிரன்ன மைந்தரும், கண்கள் போன்ற பெண் மக்களும், கருத்திற்கிசைந்த மருகியரும் அடுத்தடுத்துச் சிறையிலடைக்கப்பட்டபோதும் அவர் அதுகுறித்துச் சிறிதும் மனங்கலங்கித் தமது நாட்டுப்பற்றை நழுவவிடவில்லை. அவர் தம் அரும்பெருங்குணத்தை அளவிட்டுக் கூறுவது எங்ஙனம் இயலும் !

12. தாம் விரும்பியிருந்தால் அழகு மிக்க தமது ஆனந்த பவனத்தில் அளவற்ற செல்வத்தோடு அரசிளங்குமரரைப் போல ஆனந்த வாழ்க்கை நடத்தியிருக்கலாம் நம் நாட்டு முதல் அமைச்சர். அதை அவர் விரும்பவில்லை ; இன்பத்தைத் துறந்தார் ; துன்பத்தை மேற்கொண்டார் ; ஒரு முறையன்று ; ஒன்பது முறை சிறைக்குச் சென்ருர் : தந்நலமற்ற தந்தை-யாரை இழந்தார் ; அன்பு நிறைந்த அன்னையாரைப் பிரிந்-தார் ; மனத்துக்குகந்த மனைவியாரை இழந்த காலத்தும் கலங்கா நெஞ்சத்தோடு நாட்டுக்கு நற்பணியாற்றி, விடுதலை கண்டார்.

13. இத்தகைய தந்நலமற்ற உத்தமர்தாம், இன்று நம் நாட்டு முதல் அமைச்சராயிருந்து, நாட்டை நல்வழிப்படுத்த முயன்று வருகின்ருர். அவர்தம் தங்கையாரான **விஜய லட்சுமியம்மையார்**, உரிமை இந்தியாவின் ஒப்பற்ற அரசியல் தூதராய், அயல் நாடுகளில் தங்கித் தம் நாட்டுக்கு ஏற்றம் தேடி வருகின்ருர்.

14. இங்ஙனம் நாட்டின் நலத்தை நாடியுழைத்த நற்-குடும்பத்தார் அனைவர்க்கும் நாம் என்றும் கடமைப்பட்ட-வராய் இருத்தலன்றி, அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி நாட்டு நலத்தைக் கருதி உலையாது உழைத்தலும் வேண்டும்.

பயற்சி :

I. விடை எழுதுக :

அ. ஜவாஹர் குடும்பத்தவரை 'நாட்டுக்குழைத்த நல்லார்' என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?

ஆ. 'நேஹ்ரூ' என்னும் பட்டம் வழங்கக் காரணம் யாது?

இ. ஜவாஹரின் தாய் தந்தையர் யாவர் ? அவர்களின் உயர்குணங்கள் யாவை ?

ஈ. கமலா நெஹ்ரூ செய்த தியாகங்கள் யாவை ?

உ. 'மோதிலால் நெஹ்ரூ தம்முடைய உடல், பொருள், உயிர் மூன்றையும் நாட்டுக்களித்தார்,' என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?

ஊ. ஜவாஹரின் தங்கைமார் யாவர் ? அவர்கள் நாட்டுக்குப் புரிந்த தொண்டுகள் யாவை ?

எ. ஜவாஹரின் சிறப்பியல்புகள் யாவை ?

ஏ. அவர் நாட்டு விடுதலைக்காக அடைந்த துன்பங்கள் யாவை ?

II. எதிர்ப் பதங்கள் எழுதுக :

சுதந்தர நாடு, தந்நலம், அறப்போர், பேரரசர், சிறந்த, இறுதி, இளமை, தீவிரவாதி, உயர்குணம், நற்பணி.

III. வாக்கியங்களில் அமைக்க :

தந்நலமற்ற, குறிக்கோள், எழில், புலமை, நன்கொடை, கால்வழி, தியாகம், சொற்பொழிவு, நாட்டுப்பற்று, ஒப்பற்ற, இலட்சியம், அஞ்சா நெஞ்சம், குழு, அர்ப்பணம், பிரசாரம்.

IV. புத்தகத்தின் இறுதியில் உள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

தந்நலம், அமைச்சர், குறிக்கோள், புலமை, வழக்கறிஞர், மகவு, சிறார், தொடக்கப்பள்ளி, இறுதி, சொற்பொழிவு.



## 2. மாட்டுக்கும் வாடகை; அதன் நிழலுக்கும் வாடகை

1. அவிவேக பூரணகுரு என்பவர் ஓர் ஆசாரியர். அவருக்கு மட்டி, மடயன், பேதை, மிலேச்சன், மூடன் என்ற ஐந்து சீடர்கள் இருந்தார்கள். அவர்களுக்குக் குருவினிடம் அளவற்ற அன்பும் மரியாதையுமுண்டு. குரு ஏவிய கட்டளைகளை அவர்கள் சிரமேற்றாங்கிச் செய்து முடிப்பார்கள்.

2. ஒரு நாள் குருவும் சீடர்களும் தொலையிலிருந்த ஓர் ஊருக்குப் பிரயாணம் செய்ய அவசியம் ஏற்பட்டது. அவ்வளவு தூரம் தங்கள் குரு நடந்து செல்ல இயலாதென்பதை அறிந்த சீடர்கள், அவர் ஏறிச் செல்வதற்கு ஒரு மோழை மாட்டை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு வந்தார்கள். அதற்கு நாளொன்றுக்கு மூன்று பணம் வாடகை கொடுக்க அவர்கள் இசைந்தார்கள். மாட்டுக்குரியவனும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

3. மடத்தில் கவனிக்க வேண்டிய அனைத்தையும் கவனித்துவிட்டு அவர்கள் புறப்படுவதற்குள், வெயில் கடுமை-

யாகக் காயத் தொடங்கிவிட்டது. அது வேனிற்காலமாத-லால், வழி செல்லச் செல்லக் கொள்ளிகொண்டு சுடுவது போல வெயிலெறிக்கத் தொடங்கியது. அவர்கள் சென்ற வழியோ, உண்ண நீரும் ஒதுங்க நிழலுமற்ற வெறு வெளி-யாகும். அந்த நிலையில் தொண்டு கிழவரான அவிவேகபூரண குரு வெயிலின் வெப்பத்தைத் தாங்க முடியாமல், பசுங்-கீரைத்தண்டு போலத் துவண்டு மாட்டின்மீது சாய்ந்து-விட்டார்.

4. அருகில் சென்றுகொண்டிருந்த சீடர்கள் அவரை விழாமற்றாங்கி, அவரது இளைப்பையாற்றுவதற்கு எங்கும் நிழலின்மையால், அவர் ஏறிச் சென்ற மாட்டின் நிழலில் அவரை இருக்கச் செய்து, தங்கள் மேலாடைகளால் விசிறி, அவரது களைப்பைப் போக்க முயன்றார்கள்; களைப்புச் சிறிது தெளிந்தவுடனே மீண்டும் அவரை அம்மாட்டின்மீது அமரச் செய்து, தொடர்ந்து பிரயாணம் செய்து, மாலையில் ஓர் ஊரை அடைந்தார்கள். அங்கிருந்ததொரு சத்திரத்தின் திண்ணையில் குருவை இருக்கச் செய்துவிட்டுச் சீடர்கள் மாட்டுக்காரனுக்குச் சேரவேண்டிய வாடகையாகிய மூன்று பணத்தைக் கொடுத்தார்கள். மாட்டுக்காரன் அதை வாங்க மறுத்துவிட்டான்.

5. அவர்கள், தாங்கள் பேசியபடியே வாடகை கொடுத்-தும், மாட்டுக்காரன் மறுத்ததற்குக் காரணம் யாதெனக் கேட்டார்கள். அவன், "ஐயன்மீர், எனது மாட்டை வாகன-மாக உபயோகித்ததற்குச் சேரவேண்டியது மூன்று பணமே-யானாலும், இடைவழியில் அதைக் குடையாக உபயோகித்த-தற்கு வாடகை கொடுக்க வேண்டாவோ?" என்றான். அது காரணமாக மாட்டுக்காரனுக்கும் சீடர்களுக்கும் பேச்சுமுற்றிச் சச்சரவு தொடங்கியது.

6. அதைக் கண்டு பலர் அங்குக் கூடினர். அவர்களுள் நியாயக்காரனொருவன் அவர்களை அணுகி, சச்சரவை நிறுத்-தினான்; பிறகு அவர்களுடைய சச்சரவுக்குக் காரணத்தைக் கேட்டறிந்து, "நீங்கள் இவ்வாறு சச்சரவிடுவது முறை-

யன்று; என் தீர்ப்புக்குக் கட்டுப்படுவதாயின், யான் ஒரு சிறிதும் பாரபட்சமின்றி உங்கள் சச்சரவைத் தீர்த்து வைக்கிறேன். என்ன சொல்கின்றீர்கள்?'' என்று கேட்டான். அதற்கு அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். உடனே அவன் பின் வருமாறு கூறத் தொடங்கினன்:

7. ''நான் சில நாட்களுக்குமுன் நெடுந்தொலையிலுள்ள பட்டணமொன்றுக்குப் பிரயாணம் செய்தேன். நடுவழியில் இருட்டிவிட்டபடியால், ஓர் ஊரிலிருந்த பெரியதொரு விடுதியில் தங்கினேன். அங்குத் தங்குவதற்கு விடுதிக்காரருக்குச் சேரவேண்டிய கட்டணத்தைத் தர நான் இசைந்தேன். அங்குத் தங்கியவர்களுக்கு உணவும் விலைக்குக் கிடைத்தது.

8. ''விடுதிக்காரர் என்னை அணுகி, 'உமக்கு உண்ணுவதற்கு ஏதேனும் வேண்டுமா?' என்று கேட்டார். நான், 'கட்டுச்சோறு கொண்டு வந்திருக்கிறேன். ஆதலால், எனக்கொன்றும் வேண்டா,' என்று பகர்ந்தேன். சிறிது நேரங்கழித்து அவ்விடுதிக்காரர் மற்ற பிரயாணிகளுக்காக மாமிசம் வறுக்கத் தொடங்கினர். அந்த மாமிசத்தின் மணம் என் மனத்தைக் கவர்ந்தபடியால், என் கட்டுச்சோற்றைக் கொண்டு போய் இறைச்சியைப் பக்குவப்படுத்திக்கொண்டிருந்த அடுப்பின் அருகில் அமர்ந்து, அந்நறுமணத்தை மோந்துகொண்டே அதைச் சாப்பிட்டேன். அந்த இடத்தை விட்டு எழுந்தவுடனே, விடுதிக்காரர் என் கையைப் பற்றிக்கொண்டு, கறியின் மணத்தை மோந்ததற்குப் பணம் கேட்டார். நான், 'தரமாட்டேன்,' என்றேன். அவர் விடவில்லை. அதனல், விவாதம் முற்றியது.

9. ''இருவரும் அவ்வூர் நீதிபதியிடம் சென்று எமது வழக்கைத் தெரிவித்தோம். அவர் கூறிய தீர்ப்பைக் கேளுங்கள்: 'கறி தின்றால் அதற்குப் பணம் தரவேண்டும். கறியின் மணம் மோந்தால், அதற்குப் பணத்தின் மணம் தந்தால் போதும். அதுவே நியாயம்,' என்று கூறினர்; உடனே என்னிடமிருந்து ஒரு ரூபாயை வாங்கி, அதை விடுதிக்காரர்

மூக்கின் அருகில் வைத்து, மோக்கச் சொல்லி அனுப்பிவிட்டார். இந்த வழக்கும் அத்தன்மையதே. மாட்டின்மீது ஏறி வந்ததற்கு வாடகையைச் செலுத்த வேண்டுவது பணம்; மாட்டின் நிழலில் தங்கியதற்கு வாடகையாகப் பணத்தின் நிழலைக் காட்டவேண்டும். இவ்வளவுதான்!''

10. அது கேட்ட மாட்டுக்காரன் நல்லறிவு பெற்றுத் தனக்குச் சேரவேண்டிய மூன்று பணத்தைப் பெற்றுக்கொண்டு போனான்.

### பயிற்சி:

I. விடை எழுதுக:

அ. சீடர்கள் மாட்டை ஏன் வாடகைக்கு அமர்த்தினார்கள்?

ஆ. குருவும் சீடரும் பிரயாணம் செய்த நாளும் வழியும் எத்தகையவை?

இ. சீடர்கள் குருவை எதன் நிழலில் இருக்கச் செய்தார்கள்? ஏன்?

ஈ. மாட்டுக்காரன் ஏன் வாடகையை வாங்க மறுத்துவிட்டான்?

உ. சீடர்களுக்கும் மாட்டுக்காரனுக்கும் நீதி வழங்க முற்பட்டவன் யார்?

ஊ. அவன் கூறிய கதை யாது?

எ. அவன் வழங்கிய தீர்ப்பு என்ன?

II. 1. இக்கதையைக் குருவே சொல்வது போல எழுதுக.

2. இக்கதையை மாட்டுக்காரன் கூறுவதுபோல எழுதுக.

III. எதிர்ப் பதங்கள் எழுதுக:

வெப்பம், மறுத்தான், முடித்தான், நன்மதி, அளவற்ற, இசைந்தன, கிழவன்.

IV. கீழ் வரும் வாக்கியங்களைச் சிறு வாக்கியங்களாக எழுதுக:

1. அவ்வளவு தூரம் தங்கள் குரு நடந்து செல்ல இயலாதென அறிந்த சீடர்கள், அவர் ஏறிச் செல்வதற்கு ஒரு மோழை மாட்டை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு வந்தார்கள்.

2. அருகில் சென்றுகொண்டிருந்த சீடர்கள், அவரை விழாமற்றாங்கி, அவரது இளைப்பையாற்றுதற்கு எங்கும் நிழலின்மையால், அவர் ஏறிச் சென்ற மாட்டின் நிழலில் அவரை இருக்கச்செய்து, தங்கள் மேலாடைகளால் விசிறி, அவரது களைப்பைப் போக்க முயன்றார்கள்.

V. பொருள் எழுதுக:

மோழை மாடு, வேனில், தொண்டு கிழவர், அமரச்செய்து, வாகனம், அணுகி, பாரபட்சம், விடுதி.

# 3. சிந்தாமணியின் சிறப்பு

1. நம் தமிழ்மொழியில் வழங்கும் நூல்கள் பல. ஐயந்திரிபறக் கற்ற தமிழ்ப் புலவர்களால் பெரிதும் போற்றப்படுவன, அவற்றுள் சிலவே. அச்சிலவற்றுள்ளும் **பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு** என்னும் சங்க நூல்களும், சங்க காலத்தையடுத்துத் தோன்றிய **ஐம்பெருங்காப்பியங்கள்** என வழங்கும் **சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி** என்பனவும் முதன்மையானவை. இப்பாடத்தில் சிந்தாமணியின் சிறப்பைப் பற்றிப் படிப்போம்:

2. சிந்தாமணியின் சிறப்பு முழுவதையும் ஆராய்ந்தறிதல் எளிதன்று. இந்நூலுக்கு இப்பெயர் வழங்குதற்கு அறிஞர்கள் பல காரணங்கள் கூறுவர்: 'இந்நூலின் கதாநாயகனை **சீவகன்** என்பவனை அவன் அன்னையான **விசயை**, '**சிந்தாமணியே**' என்று பாராட்டினபடியால், சிந்தாமணி என்னும் சொல் முதலில் அவனுக்குப் பெயராய், பின்னர் அவன் சரித்திரமாகிய நூலுக்காயிற்று.' என்பர் சிலர். 'இந்நூலின் இறுதியிலுள்ள ஒரு செய்யுளில் இதற்குச்

சிந்தாமணி என்னும் பெயர் வழங்கப்பெற்றிருக்கிறது. அதனால் இதற்கு இப்பெயர் வந்தது,' என்பர் சிலர். 'இந்நூலின்கண் மூன்றிடங்களில் சிந்தாமணி என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. ஆதலின் இந்நூலுக்கு இப்பெயர் வழங்குவதாயிற்று,' என்பர் மற்றுஞ்சிலர். 'சிந்தாமணி என்பது தேவேந்திரனுக்குரியதோர் இரத்தினம். அது, தன்னை வைத்திருப்பவர் நினைத்தவற்றையெல்லாம் நல்கும் தன்மையது. அதுபோலப் புலவர் சிந்தித்தவற்றையெல்லாம் தரத்தக்க பெருமையுடைய நூலாதலின், இதற்குச் சிந்தாமணி என்னும் பெயர் வழங்குவதாயிற்று,' என்பர் வேறு சிலர்.

3. தமிழ் மொழியில் சிந்தாமணி என்னும் பெயருடைய நூல்கள் பல உண்டு. வைத்திய சிந்தாமணி, சோதிட சிந்தாமணி, வேதாந்த சிந்தாமணி என்பன அவற்றுள் சில. இவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே இது **'சீவக சிந்தாமணி'** என்று வழங்கப்படுகிறது. இந்நூலுக்கு **'மண நூல்'** என்னும் ஒரு பெயரும் உண்டு. இந்நூல் பதின்மூன்று பிரிவுகளை உடையது. இதன் ஒவ்வொரு பிரிவும் **'இலம்பகம்'** எனப்படும். இதிற்கூறப்பட்ட பதின்மூன்று இலம்பகங்களில் எட்டு, சீவகன், **காந்தருவதத்தையார்** முதலிய மகளிர் எண்மரைத் தனித்தனி மணம்செய்துகொண்டசெய்திகளைக் கூறுகின்றன. இங்ஙனம் நூல் முழுவதும் மணங்களே கூறப்படுதலின், இதற்கு மண நூல் என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

4. நாம் இதுவரையில் சிந்தாமணியின் பெயரைப்பற்றி ஆராய்ந்தோம்; இனி அதன் சிறப்புக்குரிய காரணங்களை ஆராய்வோம்: ஐம்பெருங்காவியங்களுள் காலத்தால் முற்பட்டவை **சிலப்பதிகாரமும் மணிமேகலையும்**. ஆனால் அக்காவியங்களின் பெயர்களை எழுதும்பொழுதும் சொல்லும்பொழுதும் சிந்தாமணியே முதலிடம் பெறுகின்றது. இதனால், இதன் பெருமை நன்கு விளங்குகின்றதன்றோ?

5. செந்தமிழ் மொழியிற் சிறந்து விளங்கும் பழைய இலக்கிய இலக்கண நூல்கள் பலவற்றிற்கு உரை எழுதிய

உரையாசிரியர்கள், தங்கள் உரையில் இந்நூலினின்றும் பல செய்யுட்களை மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். சங்க இலக்கியங்களின் தமிழ் நடைபோன்று இந்நூலின் தமிழ் நடை மிகச் சிறந்து விளங்குகின்றது. அன்றியும், இதன்கண் எல்லா வகையான வருணனைகளும் இடம் பெற்றுள்ளன. ஆதலால், பிற்காலத்தில் காவியங்கள் இயற்றிய பெரும்புலவர்கள் இவ்வருணனைகளை நன்கு பயன்படுத்திக்கொண்டார்கள். எடுத்துக் காட்டாகக் **கம்பராமாயணத்**தைக் கூறலாம். கம்பர் தமது இராமாயணத்தை அரங்கேற்றியபோது சில செய்யுட்களில் சிந்தாமணித் தொடர்கள் இருக்கக் கண்ட புலவர் ஒருவர், "இவை சிந்தாமணித் தொடர்களாய் இருக்கின்றனவே!" என்றாராம். அப்போது கம்பர், "ஆம்; சிந்தாமணியினின்றும் ஓர் அகப்பை முகந்துகொண்டேன்," என்று விடை கூறினாராம். இதனாலும், சிந்தாமணியின் பெருமை நமக்கு விளங்குகிறதல்லவா?

6. **சேக்கிழார்** என்னும் புலவர் காலத்திலிருந்த சோழ மன்னன் சைவன். ஆனால், அவன் சமண காவியமாகிய சிந்தாமணியைப் பெரிதும் விரும்பிப் படித்து வந்தான் என்னும் செய்தியும் சிந்தாமணியின் பெருமையை விளக்கும் சான்றுகளுள் ஒன்றாம். தமிழ் மொழியில் சிந்தாமணி என்னும் பெயரையுடைய நூல்கள் பல இருப்பினும், சிந்தாமணி என்னும் சொல் சீவக சிந்தாமணியொன்றையே குறிப்பதை நாம் அறிவோம். இதனாலும் இந்நூலின் பெருமை இனிது விளங்குகின்றது.

7. சீவக சிந்தாமணியை இயற்றியவர் **திருத்தக்க தேவர்** என்பவர். அவர் சமணர்; சோழர் குடியிற் பிறந்த அரச முனிவர். அவர் இயற்றிய பாடல்கள் 2700. ஆனால், இப்பொழுது சிந்தாமணியில் 445 பாடல்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. அவை பிற்காலத்தவரால் இடை இடையே புகுத்தப்பட்டவை. சிந்தாமணியில் **திருக்குறள், புறநானூறு** போன்ற அரிய நூல்களின் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் சிறந்த உவமைகளுக்குக் களஞ்சியமாய் விளங்குகிறது. எந்தச் சமயக் காப்பியமாயினும் சரி, நமக்கு வேண்டுவனவெல்லாம் கவியின் அழகும், மனித வாழ்க்கையைச்

செம்மைப்படுத்தக்கூடிய சீரிய கருத்துக்களேயாகும். அவை இந்நூலின்கண் பரக்கக் காணப்படுகின்றன. ஆதலின், தமிழரனைவரும் இதனை நன்கு கற்று நற்பயனடைதல் வேண்டும்.

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. சங்க நூல்கள் எவை?

ஆ. ஐம்பெருங்காப்பியங்கள் எவை?

இ. சிந்தாமணியின் பெயர்க் காரணங்களைக் கூறுக.

ஈ. இதைச் 'சீவக சிந்தாமணி' என்று குறித்தற்குரிய காரணம் யாது?

உ. சிந்தாமணிக்கு 'மணநூல்' என்னும் பெயர் வழங்கக் காரணம் என்ன?

ஊ. சிந்தாமணியின் பெருமைக்குரிய காரணங்கள் யாவை?

எ. சிந்தாமணியை இயற்றியவர் யார்?

II. வாக்கியங்களில் அமைக்க :

ஐயந்திரிபற, ஆராய்ந்து, எளிதன்று, நல்கும், நிகழ்ச்சி, இலக்கியம்.

III. எதிர்ச்சொற்கள் எழுதுக :

பல, போற்று, சிறப்பு, வேறுபடுத்து, முற்பட்டவை, விடை, பெருமை.

IV. இரண்டிரண்டாகத் தரப்பட்டுள்ள வாக்கியங்களை இணைத்து ஒவ்வொரு வாக்கியமாக எழுதுக :

1. நம் தமிழ் மொழியில் வழங்கும் நூல்கள் மிகப்பல. புலவர்களால் போற்றப்படுவன அவற்றுள் சில.

2. இந்நூலில் மூன்றிடங்களில் 'சிந்தாமணி' என்னும் சொல் வந்துள்ளது.
ஆதலால், இதற்குச் 'சிந்தாமணி' என்னும் பெயர் வந்தது.

V. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

வரலாறு, நல்கும், நிகழ்ச்சி, நாமகள், மணமகள், பூமகள், இலக்கியம், காவியம், வருணனை, எடுத்துக்காட்டு, சான்று, உவமை, சமயம், சீரிய.

# 4. ரேடியோ அல்லது ஒலி பரப்பி

1. விஞ்ஞானக் கலை உன்னத நிலையை அடைந்து வரும் இக்காலத்தில் பல புதுமைகள் வெளிப்போந்துள்ளன. அவற்றுள் சிறந்ததும், மிக்க பயனுள்ளதும் ஒலி பரப்பி. பல்லாயிர மைல் தொலையில் உள்ளவர் பேசுவதையும், பாடுவதையும், அண்மையிலிருந்து பேசப்படுவது போலவும் பாடப்படுவது போலவும் செய்வது இக்கருவியே. இஃது எங்ஙனம் இயலும் என்பதை ஆராய்வோம் :



2. நீர் நிலையொன்றில் ஒரு கல்லை எறிந்தால் நாம் காண்பது யாது? அந்நீரில் கல் விழுந்த இடத்திலிருந்து அலைகள் தோன்றி, எல்லாப் பக்கங்களிலும் செல்கின்றன; இவ்வலைகளைத் தாங்கி நிற்பது யாது? அந்நீர் நிலையின் நீர்ப் பரப்பேயன்றோ ?



3. மின்சார சக்தியினால் கம்பியின் மூலம் செய்திகள் அனுப்புவதைப்பற்றி நாம் அறிவோம். ஆனால், கம்பியில்லாமலே மின்சார சக்தியால் ஓரிடத்தினின்று பிறிதோரிடத்திற்குச் செய்தியனுப்ப இயலுமா என்பதை ஆராயப் புகுந்தார், **மார்க்கோனி** என்னும் ஒரு விஞ்ஞானியார். அவர் இத்தாலி நாட்டில், '**பொலோனு**' என்னுமிடத்தில், 1874-ஆம் ஆண்டில்

பிறந்தவர். **குக்லில்மோ மார்க்கோனி** என்பது அவரது முழுப் பெயர்.

4. மார்க்கோனி தம் நுண்ணிய அறிவின் திறத்தாலும், தமக்கு முன்னர் ஆராய்ச்சி நடத்திய சில விஞ்ஞானிகள் கண்டு வெளியிட்ட உண்மைகளின் ஆதரவாலும், நம்மைச் சூழ்ந்துள்ள வானவெளியில் மிக நுண்ணிய அணுத்திரள்களாலாகிய ஒரு பொருள் இருக்கிறது என்பதை நிச்சயித்தார். அதற்கு '**ஈதர்**' என்பது பெயர். முன்னர்க் கூறப்பட்டபடி, நீர்ப்பரப்பின் மீது நீர் அலைகள் விரைவது போல இந்த ஈதர் என்னும் பொருளின் மூலம் **மின் அலைகள்** பிரவக்கூடும் என்பதை அவர் கண்டறிந்தார்,

5. அது முதல் மார்க்கோனி மின் அலைகளின் மூலம் கம்பியில்லாமலே செய்திகளையனுப்ப இயலும் என்னும் துணிவோடு மேலும் பல ஆராய்ச்சிகளை நடத்தி வந்தார். அவற்றின் பயனாக, அவர் மின் அலைகளைத் தம் விருப்பம் போல் இயக்குவதற்கும், அவை தொலையிலுள்ள மின்சாரக் கருவியில் தாக்குவதற்குமான வழிகளைக் கண்டறிந்தார்; இறுதியில் 1896-ஆம் ஆண்டு கம்பியின்றிச் செய்தியனுப்பக் கூடிய கருவிகளைக் கண்டறிந்தார்.

6. தொடக்கத்தில் அண்மையிலுள்ள இடங்களுக்கு மட்டுமே இம்முறைப்படி செய்தியனுப்ப முடிந்தது. எனினும் மார்க்கோனி தமது இடையறு முயற்சியால் நெடுந்தொலையிலுள்ள இடங்களுக்கும் செய்திகளையனுப்பி வெற்றி பெற்றார். அன்றியும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அனுப்பப்படும் செய்திகளைப் பிறர் அறியாமல் தடுப்பதற்கான முறையையும் ஆராய்ந்தறிந்தார்.

7. இம்முறைப்படி, மின் அலைகளின் வேகமும் அசைவும் பல்வேறு அளவுகளாக மாற்றி அனுப்பப்படும். இம்முறைக்கு ஆங்கிலத்தில் '**டியூனிங்**' என்பது பெயர். செய்தி அனுப்பும் கருவி, இந்த அளவுக்கு ஏற்றவாறே அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் **செய்தி வாங்கியாகிய** '**ரிஸீவர்**' என்னும் கருவி, வேண்டும் போது, வேண்டும் அளவுக்கு ஏற்றவாறு

மாற்றிக்கொள்ளக் கூடியதாய் அமைக்கப் பெற்றிருக்கும் ஆகவே, ஓரிடத்திலிருந்து அனுப்பப்படும் செய்தி வெளிப்படும் மின் அலைகளின் வேகத்தையும், அசைவின் அளவையும் முன்னரே அறிந்தவர் மட்டுமே அவற்றுக்கேற்பச் 'செய்தி வாங்கி'களைத் திருப்பி வைத்துச் செய்தியைப் பெறலாம். பிற இடங்களுக்கு அச்செய்தி எட்டாது.

8. மார்க்கோனி இதைக் கண்டறிந்ததோடு அமையாமல், தம் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தி, **'ரேடியோ'** என்னும் **ஒலி பரப்பி**யை உருப்பெறச் செய்தார். இதன் உதவியால் குற்றொலி நெட்டொலிகளின் வடிவில் அனுப்பப்பட்டு வரும் கம்பியில்லாத் தந்திச் செய்திக்குப் பதில், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் பேச்சொலியும், பாட்டொலியும் அனுப்புவது சாத்தியமாயிற்று. இஃது எங்ஙனம் இயலும் என்பதைக் கவனிப்போம் :

9. ஒருவர் பேசினாலும், அன்றிப் பாடினாலும், அப்பேச்சிலோ அல்லது பாட்டிலோ உள்ள பல வகையான ஒலிகளை **மின்-காந்த**த்தால் (எலெக்ட்ரோ மாக்னெட்டு) ஆகிய ஒரு கருவி, மின் அலைகளாக மாற்றி, வானில் செலுத்துகின்றது. அந்த அலைகள், வானிலுள்ள ஈதரின் மூலம் பல திசைகளிலும் பரவுகின்றன. அலைகளை ஏற்றுக்கொள்வதற்கெனத் தயாரிக்கப்பட்டுள்ள 'ரிஸீவர்' என்னும் ஒலி வாங்கி, அந்த அலைகளை எளிதில் ஏற்று, **'லௌட் ஸ்பீக்கர்'** என்னும் **ஒலி பெருக்கி**யிற் செலுத்துகிறது. அப்போது அந்த அலைகள் பழைய ஒலியின் வடிவாக மாறிப் பேச்சாகவோ, பாட்டாகவோ தெளிவுபட வெளிப்படுகின்றன. இக்கருவிகள் அனைத்தும் சேர்ந்ததே **'ரேடியோ'** எனப்படுவது.

10. இத்தகைய ரேடியோவினால் இக்காலத்தில் நாம் எய்தும் பயன்களைக் கணக்கிட்டுக் கூற முடியாது. இதன் உதவியால், எண்ணற்ற உயிர்களும், கணக்கற்ற கப்பல்களும் அபாயத்தினின்றுங் காக்கப்படுகின்றன. பல்லாயிர மைல் தூரத்தில் பேசப்படும் பேச்சும், பாடப்படும் பாட்டும் நமது வீட்டிலேயே பேசப்படுவது போலவும், பாடப்படுவது போல-

வும் நமக்குக் கேட்கின்றன. இது விஞ்ஞானக் கலை நமக்களித்துள்ள நல்வரமன்றோ!

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. 'மார்க்கோனி' என்பவர் யார்? அவர் மேற்கொண்ட ஆராய்ச்சி யாது?

ஆ. 'ஈதர்' என்பது யாது?

இ. 'டியூனிங்' என்பது என்ன?

ஈ. ரேடியோவில் அடங்கியுள்ள கருவிகள் யாவை? ஒவ்வொரு கருவியாலும் ஏற்படும் பயன் யாது?

உ. ரேடியோவால் மக்கள் சமூகத்துக்கு ஏற்படும் நன்மைகள் யாவை?

II. சொல்லியுள்ளபடி செய்க :

1. விஞ்ஞானக் கலை உன்னத நிலை அடைந்துள்ள இக்காலத்தில் பல புதுமைகள் வெளிவந்துள்ளன. (தடித்த எழுத்திலுள்ள தொடர்களுக்குப் பதில், பொருள் வேறுபடாமல் ஏற்ற தொடர்களைச் சேர்த்தெழுதுக.)

2. அவர் இத்தாலி நாட்டில் பிறந்தார். ('பிறந்தார்' என்னும் சொல்லுக்குப் பதில் 'பிறப்பிடம்' என்னும் சொல்லை அமைத்து வாக்கியத்தை எழுதுக.)

III. வாக்கியங்களில் அமைக்க :

கலை, உன்னத நிலை, அண்மை, நீர் நிலை, நுண்ணிய, கருவிகள், புதுமை, இயலும், இயக்கு.

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

பிறிதொரு, விஞ்ஞானி, அணுத்திரள், நுண்ணிய, இயக்க, இடையறு முயற்சி, குற்றொலி, நெட்டொலி.



## 5. புலவர்க்குச் சாமரை விசிய புரவலர்

1. வஞ்சி நகரிலிருந்து சேர நாட்டையாண்ட மன்னர்களுள் பெருஞ்சேரலிரும்பொறை என்பவர் ஒருவர். அவர் தகடூர் என்னும் நகரத்தை ஆண்டு வந்த ஒப்பற்ற வீரரான அதியமான் நெடிமானஞ்சியைப் போரில் வென்ருர்: தகடூரை அழித்தார்; அக்காரணத்தால், சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்னும் விருதுப் பெயரையும் பெற்ருர். அவர் அறநெறி வழுவாதவர்; கொடையிற்சிறந்தவர். புலவர்களை ஆதரித்த புரவலர்; செந்தமிழ் போற்றிய சீரிய மன்னர்.

2. இரும்பொறையின் புகழ் எங்கும் பரவியது. ஆதலால், பழுத்த மரங்களைத் தேடிச் செல்லும் பறவைகளைப்போலப் புலவர் பலர் அவரை நாடிச் சென்று, பாக்கள் பாடிப் பரிசு பெற்றுச் செல்வது வழக்கமாயிற்று. அங்ஙனம் இரும்பொறையை நாடிச் சென்ற புலவர்களுள் மோசி கீரனர் என்பவர்

ஒருவர். அவர் பாண்டி நாட்டைச் சேர்ந்தவர். அவர் சிறந்த அறிவுரைகள் நிறைந்த பாக்களை இயற்றி, மன்னரை மகிழ்விப்பது வழக்கம். ''உலகில் மக்கள் உயிர் வாழ்வதற்கு நெல்லும் நீரும் இன்றியமையாதவை. ஆனால், உண்மையில், மக்களுக்கு நெல்லும் உயிரன்று ; நீரும் உயிரன்று ; அவற்றைக் குடிகள் பெற்று மகிழுமாறு செங்கோல் செலுத்தும் அரசனே உயிராவன்,'' என்னும் கருத்தடங்கிய செய்யுள் மோசி கீரனார் இயற்றிய செய்யுட்களுள் ஒன்று.

3. இத்தகைய சிறந்த கருத்துக்களமைந்த செய்யுட்களை இயற்றிய புலவரின் நுண்ணறிவைக் கண்டு வியந்த இரும்பொறை, அவரிடம் நட்புரிமை பூண்டார். ஆதலால், புலவர் அடிக்கடி அரசர் அவைக்குச் சென்று, அரிய அறிவுரைகளைக் கூறி, அரசரை அகமகிழச் செய்வது வழக்கமாயிற்று.

4. ஒரு நாள் புலவர் நெடுந்தொலையிலிருந்து காவலரைக் காண வந்தார். அப்போது அரசர் அவையில் இல்லை. அரசர் வருகைக்காகக் காத்திருந்த புலவர், நெடுந்தூரம் நடந்து வந்த களைப்பால், அங்கிருந்த ஓர் அழகிய கட்டிலின்மீது ஏறிப்படுத்தார். களைப்புற்றிருந்த அவர் அக்கட்டிலின் தன்மையைச் சிறிதும் ஆய்ந்தாரில்லை. படுத்தவர் சிறிது நேரத்திற்குள் நித்திரையிலாழ்ந்தார்.

5. புலவர் ஏறிப் படுத்த கட்டில் சாதாரணமானதன்று. அஃது அரசருடைய வீரமுரசம் வைக்கப்படும் முரசு கட்டில். வீரமுரசம் என்பது, அரசர்களின் மதிப்புக்கும் வணக்கத்துக்கும் உரியது. அதனைக் குறித்த நாட்களில் நீர்த்துறைக்குக் கொண்டு சென்று நீராட்டுவர். பின்னர் உழிஞைத் தளிரும் மயில் தோகையும் சேர்த்துத் தொடுத்த மாலையை அதற்குச் சூட்டுவர். பிறகு இரத்தமும் கள்ளும் கலந்த சோற்றுருண்டையை அதற்குப் படைப்பர். இறுதியாக அதனை அரண்மனையில் அழகிய வெண்மெத்தையிட்ட கட்டிலில் வைத்து வணங்குவர். இவ்வணக்கத்துக்கு அரசரும் உடனிருப்பர்.

6. ஆதலால், முரசு கட்டில் அரசருடைய அரியணைக்கு நிகரான பெருமையுடையது. அரசரையன்றி அரியணையில் ஏறத் துணியும் ஒருவனுக்கு என்ன தண்டனை விதிக்கப்படுமோ, அதே தண்டனை முரசு கட்டிலில் ஏறுகின்றவனுக்கும் விதிக்கப்படும். இவையனைத்தையும் மோசிகீரனார் அறிந்தவரே. ஆயினும், அவர் தம் களைப்பு மேலீட்டால், தாம் ஏறிப் படுத்தது முரசு கட்டில் என்பதைக் கவனிக்கவில்லை. அவர் வந்த பொழுது முரசம் நீர்த்துறைக்குக் கொண்டு போகப்பட்டிருந்தபடியால், கட்டில் காலியாய் இருந்தது.

7. நீர்த்துறையினின்று முரசம் கொண்டு வரப்பட்டது. பிரதானிகள் சூழ அரசரும் அதனுடன் வந்தார். கட்டிலை அணுகியபோது, அதன்மீது யாரோ ஒருவர் உறங்குவதைக் காவலர் கண்டார். அவர்க்குச் சினம் மூண்டது. கண்கள் கனல் வீசின. அவர் வாளை உருவிக் கையிற்பிடித்துக் கட்டிலின் அருகிற்சென்றார். உடனிருந்தோர் திகைத்து நின்றனர். புலவர் உடல் இரு துண்டாகி இருக்கவேண்டும். ஆனால், நல்வினைப் பயனாக அது நிகழவில்லை. கட்டிலிற் படுத்திருந்தவரை வெட்டுதற்குக் கையைத் தூக்கிய புரவலர், புலவர் முகத்தைக் கண்டுவிட்டார். அவரை அறியாமலே அவர் கையினின்று வாள் நழுவியது. அடுத்த கணத்தில் ஆங்கிருந்த கவரியொன்று காவலர் கையிற்காட்சியளித்தது. புரவலர், புலவர் உடல் குளிரச் சாமரை வீசி நின்றதைக் கண்ட அனைவரும் திகைப்பு நீங்கி வியப்பில் ஆழ்ந்தனர்.

8. தம்மை மறந்து தூங்கிக்கொண்டிருந்த மோசிகீரனார், சிறிது நேரங்கழித்துக் கண் விழித்தார்; அருகில் அரசர் நின்று கவரி வீசுவதையும், அண்மையில் வீர முரசு இருப்பதையும், அதைச் சூழப் பிரதானிகள் நிற்பதையும் கண்டார்; திடுக்கிட்டெழுந்தார். தாம் செய்த தவற்றை உணர்ந்தார். அத்தவற்றுக்குத் தம்மை கொல்லாமல் மன்னித்ததுமன்றி, மன்னர் தம் மலர்க் கரத்தால சாமரை வீசி நின்ற நிலையைக்

கண்டபோது உள்ளம் உருகி, ஒன்றும் பேசாமல், திகைத்து நின்ருர்.

9. புலவரது நிலையை உணர்ந்த மன்னர், அவரை அன்புடன் தழுவிக்கொண்டு, ''அன்பரே, அஞ்ச வேண்டா! நெடுந்தூரம் நடந்தமையால் களைத்தீர் போலும்! ஏன் எழுந்துவிட்டீர்? இன்னும் சற்று நேரம் உறங்கலாமே!'' என்று ஆதரவு பெருகக் கூறினர்.

10. அதுகேட்ட புலவர், ''மன்னர் ஏறே, யான் இது முரசு கட்டில் என்பதை அறியாது இதில் ஏறி உறங்கினேன்! இத்தகைய மன்னிக்க முடியாத குற்றம் செய்த என்னை நுமது வாளால் இரு கூருக்கியிருக்க வேண்டும்! அங்ஙனம் செய்யாமைக்கு நமது தமிழறிவன்ருே காரணமாயிற்று? அன்றியும், எனக்குச் சாமரை வீசி நின்றீர்! இப்பணியைத் தமிழுக்கன்ருே புரிந்து புகழ் எய்தினீர்! உலக முழுவதும் பரவத் தக்க இப்புகழ், மேல் உலகத்திலும் உமக்குச் சிறப்பை அளித்தல் நிச்சயம்!'' என்று வாழ்த்தினர்.

11. இரும்பொறையின் இனிய செயலை என்னென்று புகழ்வது! அவரது தமிழ்ப் பற்றல்லவா புலவரது மன்னிக்-கத் தகாத குற்றத்தையும் மன்னிக்கச் செய்தது! தாம் மன்னர் என்பதை மறந்து, ஓர் எளியவனைப் போலக் கையில் கவரி கொண்டு வீசச் செய்தது எது? தண்டமிழ் மொழியின்பால் அவருக்கிருந்த அளவற்ற ஆர்வமன்ருே!

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சேர நாட்டை ஆண்டவர் யார்?

ஆ. அவர் யாரைப் போரில் வென்ருர்?

இ. அவருக்கு வழங்கிய விருதுப் பெயர் யாது?

ஈ. மோசி கீரனர் என்பவர் யார்?

உ. அவர் இழைத்த குற்றம் யாது?

ஊ. முரசு கட்டில் என்பது என்ன?

எ. மோசி கீரனுர் செய்த தவற்றுக்கு அரசர் அவரை என்ன செய்தார்? ஏன் அவ்வாறு செய்தார்?

II. வாக்கியங்களில் அமைக்க:

சாமரை, ஒப்பற்ற, வழுவாத, அறிவுரை, நுண்ணறிவு, நட்புரிமை, அணுகி, திகைப்பு.

III. சொல்லியுள்ளபடி செய்க:

1. வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை ஆண்ட மன்னர்களுள் பெருஞ்சேரலிரும்பொறை என்பவர் ஒருவர். (இரண்டு வாக்கியங்களாக எழுதுக.)

2. ஒப்பற்ற வீரரான அவர் தகடூரைத் தகர்த்தார். (தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதில் பொருள் மாறுபடாமல் வேறு சொற்களை அமைக்க.)

3. மோசி கீரனுர் ஒரு புலவர். அவர் பாண்டி நாட்டைச் சேர்ந்தவர். அவர் இரும்பொறையை நாடிச் சென்றுர். (இம்மூன்று வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாக எழுதுக.)

IV. எதிர்ச்சொற்கள் எழுதுக:

அழித்தார், வழுவாதவர், சிறந்தவர், போற்று, நட்பு, சோர்வு.

V. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

விருதுப் பெயர், வழுவாதவர், சாமரை, நுண்ணறிவு, அகம் மகிழ, ஆய்ந்தாரில்லை, உழிஞை, தொடுத்த, கவரி.

# 6. நமது நாட்டுச் செல்வம்

1. நமது நாடு பயிர்த்தொழில் நாடு. நம் நாட்டு மக்களுள் நூற்றுக்கு எண்பத்தொன்பது பேர் கிராமங்களில் பயிர்த்தொழில் புரிபவர். இவர்களுடைய தொழிலுக்கு மாடுகள் இன்றியமையாதவை. உழுதொழில் புரிபவர், ஏர் உழுவதற்கும், பரம்பு அடிப்பதற்கும், நீர் இறைப்பதற்கும், எருவடிப்பதற்கும், வண்டி இழுப்பதற்கும் மாடுகளையே உபயோகிக்கின்றனர். வேறெந்த நாட்டிலும் மாடுகளை இத்தனை வேலைகட்குப் பயன்படுத்துவதில்லை. ஆகவே, நமது நாட்டு வாழ்க்கையில் மாடுகள் எத்துணை முக்கியமான பங்கு கொள்கின்றன என்பது புலப்படுகின்றதல்லவா? இதனாலேதான் 'செல்வம்' எனப் பொருள்படும் 'மாடு' என்னும் பெயரை அவற்றுக்கு வழங்குகிறோம்.

2. மாடுகளை வளர்ப்பதில் பிற நாடுகட்கும் நம் நாட்டுக்கும் ஒரு வேறுபாடு உண்டு: பிற நாடுகளில் விவசாயத்துக்காக மாடுகள் வளர்க்கப்படுவதில்லை. அவை பாலுக்காகவும், இறைச்சிக்காகவுமே வளர்க்கப்படுகின்றன. நமது நாட்டில் பசுக்களும் எருமைகளும் பாலுக்காகவே வளர்க்கப்படுகின்றன. என்றாலும், எருதுகளும் எருமைக்கடாக்களும் விவசாய வேலைகளுக்காகவே வளர்க்கப்படுகின்றன; பிற நாடுகளிற்போல அவை இறைச்சிக்காக வளர்க்கப்படவில்லை.

3. அங்ஙனமாயின், 'நமது நாட்டு விவசாயத்துக்குப் போதிய அளவில் மாடுகளின் தொகை இருக்கிறதா?' என்னும் வினா எழுகின்றது. கீழ் நாடுகளில் மிகப் பெரிதாகிய சீனாவோடு ஒப்பிட்டால், நமது நாட்டிலுள்ள மாடுகளின் தொகை அதிகமென்பது கணக்கிடப்பட்டுள்ளது. அமெரிக்கா, கனடா, டென்மார்க்கு முதலிய மேலை நாடுகளுடன் ஒப்பிட்டால், அத்தொகை சற்றுக் குறைவாகவே இருக்கிறது.

4. நம் நாட்டில் மாடுகளின் தொகை அதிகமேயொழிய, அவை எவ்வகையிலும் மேலை நாட்டு மாடுகளுடன் ஒப்பிடத் தக்கவையல்ல; மேய்ச்சல் வசதி இன்மையால் மெலிந்து, எலும்புந்தோலுமாய்க் காட்சியளிப்பவை. அவற்றுள் பல கிழப்பருவமுற்று, வலிவு குன்றி, வேலைக்குப் பயனற்றவையாயிருப்பவை. அன்றியும், நமது நாட்டுப் பசுக்களும் எருமைகளும் தரும் பாலின் அளவைப் பிறநாட்டு





மாடுகள் தரும் பாலின் அளவோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நம் நாட்டில் மாடுகள் அதிகமிருந்தும் பயனில்லை என்பது புலப்படும். ஓர் ஆண்டில் ஹாலந்து நாட்டுப் பசு ஒன்று ஏறத்தாழ ஒரு லட்சம் பவுண்டு நிறையுள்ள பாலைத் தருகிறதாம். ஸ்விட்ஸர்லாந்து நாட்டுப் பசு எழுபதாயிரம் பவுண்டு பால் தருகிறதாம். ஆனால், நமது நாட்டில் சென்னை மாகாணத்து உயர்தரச் சாதி **ஒங்கோல்** பசு எண்ணாயிரம் பவுண்டு பால் தருகிறதென்றால், நம் நாட்டு மாடுகளின் உண்மை நிலையை அறிய வேறு சான்று தேவையில்லை.

5. இந்நிலைக்குக் காரணம் யாது? நம் நாட்டு மாடுகளுள் பெரும்பாலன ஏழைக் குடியானவர்கட்கு உரியவை. இக்குடியானவர்கட்குப் போதிய உணவுப் பொருள்களைப் பயிரிட்டுக்கொள்ளுவதற்கு வேண்டிய நிலமில்லை. இந்நிலையில் மாட்டுக்கு வேண்டிய புல்லைப் பயிரிடுவதற்கு நிலம் ஏது? அன்றியும், தங்களுக்கு இன்றியமையாத உணவுப் பொருள்களை வாங்கிக்கொள்ளப் பொருளற்ற இவர்கள், மாட்டுக்கு

வேண்டிய பிண்ணுக்கு, பருத்திக்கொட்டை, தவிடு முதலியவற்றை வாங்கப் பொருளுக்கு என்ன செய்வார்கள் ?

6. ஆயினும், சில பணக்காரர்கள் சிறந்த சாதி எருதுகளையும், உயர்ந்த சாதிக் கறவைப் பசுக்களையும், எருமைகளையும் வளர்க்கிருர்கள். இவற்ருல் அப்பணக்காரர்களுக்கு நன்மையேயன்றி, நாட்டுக்கு என்ன நன்மை தோன்றக்கூடும்? நாட்டுக்கு நன்மை ஏற்படவேண்டுமாளுல், ஏழை விவசாயிகள் எல்லாரும் உயர்ந்த சாதி மாடுகளை வளர்க்க வேண்டும். அவற்றிற்குப் போதிய மேய்ச்சல் நிலங்கள் வேண்டும். இந்த வாய்ப்புக்களை அளிக்க அரசியலார் முன் வரவேண்டும். ஒவ்வொரு கிராமத்துக்கும் சிறந்த காளை மாடுகள் கிடைக்கும்படி அரசியலார் செய்ய வேண்டும். அன்றியும், பிற நாட்டு மக்கள் மாடுகளை வளர்க்கும் முறைகளைப் பற்றியும், அவற்ருல் அம்மக்கள் அடையும் நன்மைகளைப் பற்றியும் அறியாத நமது நாட்டு விவசாயிகட்கு அவற்றை அரசியலார் பிரசாரங்களின் மூலம் அறிவிக்க வேண்டும். மேலும், நமது நாட்டினின்றும் உயர்ந்த சாதி மாடுகள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதைத் தடுக்க வேண்டும். மாடுகளை மாமிசத்துக்காகவும், தோலுக்காகவும் கொல்லும் வழக்கத்தைச் சட்டத்தின் மூலம் தடை செய்ய வேண்டுவது எல்லாவற்றினும் முதன்மையானது.

7. மாடுகளால் ஏற்படக்கூடிய நன்மைகளை அடைகின்றவர் விவசாயிகள் மட்டுமல்லர். மாடுகளினின்று கிடைக்கும் பால் எல்லா உணவுப்பொருள்களைக் காட்டிலும் சிறந்தது. ஆதலால், அது நாட்டு மக்கள் அனைவர்க்கும் அவசியமானது ; குறிப்பாக இளைஞர்க்கு இன்றியமையாதது. ஆனல், நமது நாட்டில் தனவந்தர் வீட்டுக் குழந்தைகட்கும், இளைஞர்க்கு மட்டுமே இது கிடைக்கிறது. ஏழைகள் வீட்டுக் குழந்தைகட்கு இது கிடைப்பதே இல்லை. இக்குறையை நீக்குவதும் அரசியலார் கடமையேயாம்.

8. 'அரசியலார் என்ன செய்யக்கூடும் ?' என்று பலர் கருதலாம். பொதுவாக கிராமங்களிற்காட்டிலும் பட்ட-

ணங்களில் மக்கள் தொகை வெகு அதிகம். ஆனல், பட்டணங்களிலேதான் கறவை மாடுகள் மிகச் சொற்பம். கிராமங்களில் மாடுகள் அதிகமிருப்பதால், அங்கு வசிப்பவர்க்குப் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலியவற்றில் ஒன்ருே பலவோ கிடைப்பது எளிது. இது பட்டணங்களில் வசிப்பவர்க்கு வெகு அரிது.

9. பட்டணங்களிற் பால் குறைந்த விலைக்குக் கிடைப்பதில்லை. நம் நாட்டுப் பட்டணங்களில் தண்ணீர் கலந்த பாலுக்கு நாம் கொடுக்கும் விலை **ஆஸ்திரேலியாவிலும் அமெரிக்காவிலும்** கலப்பற்ற பாலுக்குக் கொடுக்கப்படும் விலையைக் காட்டிலும் அதிகம் என்று சொல்லப்படுகிறது. அன்றியும் சுகாதார முறையில் பால் கறக்கப்படுவதில்லை. பால் கறக்கப்படும் பாத்திரங்களும் சுத்தமாக வைக்கப்படுவதில்லை. கொழுமையான உணவுப் பொருள்கள் மாடுகளுக்குக் கிடைப்பதில்லை. ஆதலால், பாலும் சத்துக் குறைந்ததாகவும் உருசியற்றதாகவும் இருக்கிறது. இக்குறைகளை அகற்ற அரசியலார் முற்படவேண்டும். கூட்டுறவு முறையிலோ, பெருத்த மூலதனம் ஏற்படுத்தியோ, உயர்ந்த சாதி மாடுகளை வாங்கி, அவற்றை நல்ல முறையில் போஷித்துச் சுகாதார முறைப்படி பாலைக் கறந்து, கலப்பற்றதாகவும், கூடுமான வரையிற் குறைந்த விலைக்குக் கிடைக்கும்படியும் நகர சபையினரும் அரசியலாரும் செய்ய முற்படவேண்டும்.

10. வடவிந்தியாவிற் பல பட்டணங்களில் மாட்டுப் பண்ணைகள் சிறந்த முறையில் நடைபெற்று வருகின்றன. அவற்றுள் **நாகபுரி**யில் விவசாய இலாகாவின் ஆதரவிலும் பார்வையிலும் நடைபெறும் பண்ணை மிகச் சிறந்ததென்று கூறப்படுகிறது. அங்குள்ள கூட்டுறவு மாட்டுப்பண்ணையில் கறவை மாடுகள் வைத்திருப்பவர் அங்கத்தினராயுள்ளனர். அவர்கள் தங்கள் மாடுகள் எல்லாவற்றையும் பண்ணைத் தொழுவங்களிற் கட்டுகிருர்கள். கறவை மாடொன்றுக்கு ஆறு ரூபாயும், கறக்காத மாடொன்றுக்கு மூன்று ரூபாயும் மாதந்தோறும் செலுத்துகிருர்கள். அத்தொகையிலிருந்து கொழுமையான உணவுப் பொருள்கள் மொத்தமாக வாங்கப்-

படுகின்றன. மாடுகள் நல்ல முறையில் போஷிக்கப்படுகின்றன. விவசாய இலாகா உத்தியோகஸ்தர் முன்னிலையில் பால் கறக்கப்பட்டு, விற்கப்படுகிறது. இத்தகைய முறையில் நம் நாட்டிலுள்ள பட்டணங்கள் எல்லாவற்றிலும் கூட்டுப் பண்ணைகள் அமைக்கப்பட்டு, ஏழை மக்களின் பொருளாதார நிலையும் முன்னேறினலன்றி, பொது மக்களின் ஆரோக்கியம் விருத்தியடையாதென்பது திண்ணம்.

## பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. மாடுகள் நமக்கு எவ்வாறு பயன்படுகின்றன ?

ஆ மாடுகளை நம் நாட்டவர் வளர்ப்பதேன் ? அயல் நாட்டவர் வளர்ப்பதேன் ?

இ. நமது நாட்டு மாடுகளின் நிலை யாது ?

ஈ. நம் நாட்டு மாடுகளின் கீழ்நிலைக்குக் காரணம் யாது ?

உ. நம் நாட்டு மாடுகளின் நிலையை உயர்த்த என்னென்ன செய்தல் வேண்டும் ?

ஊ. பட்டணங்களில் நல்ல பால் கிடைக்க என்ன ஏற்பாட்டைச் செய்யவேண்டும் ?

II. கீழே தரப்பட்டுள்ள தலைப்புக்களைக்கொண்டு ஒரு சிறு கட்டுரை வரைக.

1. நம் நாட்டு மாடுகளின் நிலை; 2. அதற்குக் காரணங்கள் ;

3. அந்நிலையை எப்படி உயர்த்துவது ?

III. வாக்கியங்களில் அமைக்க :

இன்றியமையாதது, புலப்படுகிறது, வழங்குகிறோம், போதிய அளவு, மெலிந்து, சான்று, உரியவை.

IV. சொல்லியுள்ளபடி செய்க:

1. பிற நாடுகளில் மாடுகள் விவசாயத்துக்காக வளர்க்கப்படுவதில்லை. அவை பாலுக்காகவும், இறைச்சிக்காகவுமே வளர்க்கப்படுகின்றன. (ஒரே வாக்கியமாக எழுதுக.)

2. இவற்றால் பணக்காரர்கட்கு நன்மையேயன்றி, நாட்டுக்கு என்ன நன்மை? (கேள்விக்குறி நீக்கப்படவேண்டுமானால் வாக்கியம் எப்படி அமையவேண்டும்?)

3. பால் எல்லா உணவுப் பொருள்களைக்காட்டிலும் சிறந்தது. ('பாலைப் போல' என்னும் தொடரைக்கொண்டு வாக்கியத்தைத் தொடங்குக.)

V. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக:

பரம்படித்தல், எத்துணை முக்கியம், இறைச்சி, போதிய திறையுள்ள, சான்று, பிரசாரம், கருதலாம், கறவை, மூலதனம், போஷித்து, தொழுவம், ஆரோக்கியம்,

# 7. சிவனுடன் வாதிட்ட செந்தமிழ்ப் புலவர்

1. மதுரையம்பதியைத் தலைநகராகக் கொண்டு பாண்டி நாட்டையாண்ட மன்னர்கள் தமிழ்ச் சங்கங்கள் நிறுவியும், தமிழ்ப் புலவர்களை ஆதரித்தும் தமிழன்னைக்குத் தொண்டாற்றினார்கள். அங்ஙனந் தோற்றுவிக்கப்பட்ட சங்கங்களுள் மூன்றாவதாகிய **கடைச்சங்கத்தைத்** தலைமை தாங்கி நடத்திய புகழ், **நக்கீரனார்** என்ற பெரும்புலவருக்குரியது. அவர் இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழிலும் வல்லுநர்; இலக்கிய இலக்கணங்களை ஐயந்திரிபறக் கற்றவர். அவர் காலத்தில் மதுரையை ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர் **வங்கிய சூடாமணி** என்பவர்.

2. அம்மன்னர் ஒரு நாள் மாலை நேரத்தில் கோப்பெருந்தேவியாருடன் நிலாமுற்றத்திலமர்ந்து உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது பாண்டி மாதேவியார், தம் கூந்தலை ஆற்றிக்கொண்டிருந்தமையால், அதினின்றெழுந்த நறுமணம், அரசர் மனதில் ஐயமொன்றை எழுப்பியது. அம்மணம் அவ்வம்மையார் கூந்தலின் இயற்கை மணமா, அன்றிச் செயற்கை மணமா என்பதே அவ்வையமாகும்.

3. மன்னர் பெருமான் உடனே நூறு பொற்காசுகளை ஒரு கிழியிலிட்டு முடித்து, அதைத் தமிழ்ச்சங்க மண்டபத்தில் தூக்கினார்; தம் ஐயத்தை அகற்றத் தக்க அரிய பாட்டினை யாத்துக் கொண்டுவருபவர் அக்கிழியைப் பெறலாம் என்று பட்டணமுழுவதும் பறை சாற்றி அறிவிக்கச் செய்தார். அதனைச் செவியுற்ற புலவர் பலர், தத்தம் மனத்துக்கிசைந்தவாறு பாடல்களைச் செய்து கொண்டுவந்து பாண்டிய மன்னர்க்குப் பாடிக் காட்டினர். அவையனைத்தும் அரசர் ஐயத்தை அகற்றாமையின், புலவர் வறிதகன்றனர்.

4. அக்காலத்தில் மதுரை சோமசுந்தரப் பெருமான் ஆலயத்தில் அர்ச்சகராயிருந்த **தருமி** என்ற ஏழை அந்தணர்,

அப்பொற்கிழியைப் பெற்றுத் திருமணம் செய்துகொள்ள ஆசையுற்றார்; இறைவர் திருமுன்னர் நின்று தம் விருப்பத்தை விண்ணப்பித்துக்கொண்டார். அன்பர் எண்ணியவற்றை அருள் புரியும் அப்பெருமானார், அந்தணர் வேண்டுகோட்கு மனம் இரங்கி, '**கொங்குதேர் வாழ்க்கை**' என்னும் தொடக்கத்தினையுடைய ஒரு பாட்டு வரையப்பெற்ற ஓர் ஓலையைத் தமது பீடத்தின் முன் இட்டருளினார்.

5. அவ்வோலையைக் கண்ட தருமி பெருமகிழ்ச்சியோடு அதை எடுத்துக்கொண்டு விரைந்து சென்று வேந்தர் முன் அப்பாட்டைப் பாடினார். அது கேட்ட அரசர், உவகையுற்று 'அந்தணரே, அருந்தமிழ் சங்கத்தை அடைந்து, அரிய இச்செய்யுளை அங்குள்ள புலவர்க்குக் காட்டிப் பொற்கிழியைப் பெற்றுச் செல்லும்,' என்று கூறினார்.

6. அது கேட்ட மறையவர், மட்டிலா மகிழ்ச்சியுடன் மன்னரவையை விட்டகன்று, சங்க மண்டபத்தை அடைந்தார்; அரசர் ஆணைப்படி அங்கு வீற்றிருந்த புலவர் முன் தாம் கொண்டு சென்ற செய்யுளைப் பாடினார்; பின்னர் அங்கிருந்த பொற்கிழியை அறுத்தற்பொருட்டு அதை அணுகினார். அவ்வளவில் ஆண்டு அமர்ந்திருந்த அருந்தமிழ்ப் புலவர் நக்கீரனார், "அந்தணரே, பொற்கிழியைத் தொடாதீர். நும் பாட்டுக் குற்றமுடையது," என்றார். அது கேட்ட தருமியின் மனம் புழுங்கியது. அவர் அங்கிருந்தகன்று, கோயிலிற்புகுந்தார்; இறைவர் திருமுன்னர் நின்று நடந்தவற்றைக் கூறி முறையிட்டார்.

7. உடனே ஆலவாய் அண்ணலார், மானிடவடிவெய்தி, ஒரு புலவர் போலச் சங்கத்தை அடைந்து, ஆங்கு வீற்றிருந்த புலவர்களைப் பார்த்து, "ஐயன்மீர், குற்றமற்ற இக்கவிக்குக் குற்றம் கூறினவர் உம்முள் யாவர்?" என்றார். அப்போது நக்கீரர், "புலவரே, உம் கவிக்குக் குற்றம் கூறியவன் நானே," என்று தருக்குடன் புகன்றார். "நல்லது! நீர் இக்கவியிற்கண்ட குற்றம் யாதோ?" என்றனர் சிவபெருமான்.

8. "நல்லார் குழற்கு நாற்றம் செயற்கையாலன்றி இயற்கையாலுண்டோ? ஆகவே, இல்லது கூறலால், இது குற்றம்," என்றார் புலவர் தலைவர். அது கேட்ட கடவுட்-புலவர், "மண்ணுலகத்துப் பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் இன்றெனினும், விண்ணுலகில் வாழும் அரம்பையர் கூந்தலுக்கேனும் இயற்கை மணம் உண்டன்றோ?" என்றார். "அதுவும் அற்றே," என்றார் நக்கீரனார். உடனே சோமசுந்-தரப்பெருமான், "உம்மால் வணங்கப்பெறும் உமாதேவியின் கூந்தல் எத்தன்மையது?" என்றார். வினை வயத்தால், நக்கீரர், "அதுவும் அற்றே," என்றார்.

9. மதியிழந்து மனந்தடுமாறும் மக்களைத் தண்டித்து நல்வழிப்படுத்த வேண்டுவது பெற்றோர் கடமையன்றோ!



அதை மனத்துட்கொண்ட இறைவர், நக்கீரரை 'நான்' என்னும் பிணி நன்கு பற்றிக்கொண்டிருந்தமையால், அதனை அகற்ற எண்ணினார்; நக்கீரருக்குத் தாம் இன்னார் என்-பதைத் தெரிவித்தற்பொருட்டு நெற்றிக் கண்ணையும் சடை முடியையும் காட்டினார். ஆயினும், மாற்றுதற்கரிய மருட்சி-

யுற்றிருந்த நக்கீரர், இறைவரை நோக்கி, "நீர் நெற்றியில் மட்டுமன்றி, உடலெல்லாம் கண்கள் தோன்றக்காட்டினாலும், யான் தோற்பேன் அல்லேன்! நீர் சாற்றிய செய்யுள் குற்றமுடையதே! நும் சடை கொண்டு என்னை வெருட்டல் வேண்டா!" என்று தருக்குடன் கூறினர்.

10. அது கேட்ட இறைவர், "கற்றும் அறிவில்லாக் கயவனே, மூவுலகமும் போற்றும் உமாதேவியின் கூந்தலைப் பழித்த நீ குட்டநோய் கொண்டு அலைவாயாக!" என்று சினந்து கூறினர். அப்போதுதான் நக்கீரரைப் பற்றியிருந்த 'நான்' என்னும் பிணி விலகிற்று. உடனே அவர் இறைவர் தாள்களில் விழுந்து, "எந்தையீர், கருணையங்கடலே, அறிவின்றி இழைத்த தவற்றை மறந்து, அடியேனை மன்னித்து, தேவரீரது சாபப்பிணி கெடுமாறு அருள்புரிய வேண்டும்," என்று வணங்கினர். பத்தி வலையிற்படுகின்ற பரம்பொருளான சோமசுந்தரக்கடவுள், நக்கீரரின் வேண்டுகோளுக்கு மனமிரங்கி, "நக்கீர, நீ சென்று கயிலையைக் காணின், இக்கொடுநோய் நீங்கும்," என்றருளி மறைந்தார்.

### பயிற்சி:

**I. விடை எழுதுக:**

அ. நக்கீரர் யார்? அவர் காலத்தில் மதுரையை ஆண்ட மன்னர் யார்?

ஆ. பாண்டிய மன்னர் மனத்தில் எழுந்த ஐயம் யாது?

இ. அதனைப் போக்கிக்கொள்ள அவர் செய்தது யாது?

ஈ. தருமி என்பவர் யார்? அவர் பொற்கிழியைப் பெற என்ன செய்தார்?

உ. தருமி பொற்கிழியைப் பெறாமல் திரும்பியதேன்?

ஊ. தருமி முறையிட்டதைக் கேட்ட ஆலவாய் அண்ணல் என்ன செய்தார்?

எ. நக்கீரர் இறைவர் பாட்டிற்கண்ட குற்றம் யாது?

ஏ. நக்கீரரை 'நான்' என்னும் பிணி பற்றியிருந்ததென்பது எவ்வாறு அறியப்படுகிறது?

ஐ. அப்பிணி அவரை விட்டு எப்போது அகன்றது?

II. வாக்கியங்களில் அமைக்க :

நிறுவி, தலைமை தாங்கி, உரையாடிக்கொண்டு, உவகை, மனமிரங்கி, அணுகினர்.

III. எதிர்ப்பதங்கள் எழுதுக :

நறுமணம், இயற்கை, அகன்று, மண்ணுலகம்.

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :

நிறுவி, தொண்டாற்றி, ஐயந்திரிபற, வல்லுநர், நிலா-முற்றம், கிழி, யாத்து, வறிது, உவகையுற்று, மட்டிலா, அண்ணலார், நல்லார், விண்ணுலகு, அரம்பையர், அற்றே, மருட்சி, தருக்கு, கயவன், பரம்பொருள்.

# 8. கலைக்கோவில்

1. பண்டைக் காலத்தில் நமது நாடு எல்லாக் கலை-களிலும் சிறப்புற்று விளங்கியது. அவற்றுள் **ஓவியக்கலை, சிற்பக்கலை, நாட்டியக்கலை,** ஆகிய மூன்றும், நவநாகரிகத்தில் நனியோங்கியுள்ள பிற நாட்டவராலும் பெரிதும் புகழக்கூடிய நிலையில் இக்காலத்திலும் உள்ளன. அயல் நாட்டினின்று நம் நாட்டுக்கு வரும் கலையுணர்ச்சியுள்ள எந்த யாத்திரிகரும் **தாஜ்மஹால், ஹம்பி, அஜந்தா, எல்லோரா, மாமல்லபுரம்** முதலிய கலைக்கோவில்களைக் கண்ணுரக் கண்டு, மனமார மகிழ்ந்து, வாயார வாழ்த்தாமற் போவதில்லை. இத்தகைய கலைக்-கோயில்களுள் ஒன்றான **அஜந்தா**வைப் பற்றி இப்பாடத்திற் படிப்போம் :

2. அஜந்தா என்னுமிடம் ஹைதராபாது இராச்சியத்-தில் இருக்கிறது. அதற்குச் செல்லவேண்டுமானால், பம்-பாயினின்று டில்லிக்குச் செல்லும் புகை வண்டி மார்க்கத்தில் உள்ள **ஜல்கான்** என்னும் புகைவண்டி நிலையத்தினின்று 37 மைல் தூரம் மோட்டார் பஸ்ஸில் போகவேண்டும்.

3. அஜந்தாவில் பிறைச்சந்திரனை யொத்த வடிவமுள்ள மலையிற்குடையப்பட்ட அற்புதமான குகைகள் இருக்கின்றன. இம்மலையோரமாக **வகோரா** என்னும் ஆறு ஓடுகிறது. மலை-யின்மீது ஏறிக் குகைகளை அடையுப் படிக்கட்டுகள் அமைக்-கப்பட்டுள்ளன. அஜந்தா குகைகளிற்காணப்படும் ஓவியங்-களும் சிற்பங்களும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்-பட்டவை. ஆனால், இத்தகைய கலைக்கோவிலொன்று இந்தியாவிலிருக்கிறதென்பது, உலகத்திற்கே 1819-ஆம் ஆண்டிலேதான் தெரிய வந்தது. இதைப்பற்றிக் கி. பி.7-ஆம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த சீன யாத்திரிகர் குறிப்பிட்-டுள்ளார். ஆயினும், இதைப்பற்றி யாரும் சிந்தித்ததாகவே தெரியவில்லை.

4. இக்குகைகளைக் கண்டு பிடித்த பெருமை நமது சென்னை மாகாணத்துக்கே உரியது. சென்னையைச் சார்ந்த

ஓர் ஆங்கிலப் படையினர், காண்டேஷ் மலைப்பிரதேசத்தில் இராணுவப்பயிற்சி செய்துகொண்டிருந்தபோது மலைகளுக்கிடையில் புதர்களால் மறைவுண்டு கிடந்த இக்குகைகளைத் தற்செயலாகக் கண்டனர். இவர்கள் அரசியலாருக்கு இச்செய்தியை அறிவித்த பிறகு, அவர்கள் இதில் நோக்கம் கொண்டு ஆய்ந்து, 1829-ஆம் ஆண்டில் இங்குள்ள ஓவியங்களைப்பற்றிய செய்திகளை வெளியிட்டார்கள். சில ஆண்டுகட்குப் பின்னர், **ஸர் ஜேம்ஸ் பெர்கூஸன்** என்பவர் கலை நுட்பங்களுக்கேற்ப இங்குள்ள சிற்பங்களையும், ஓவியங்களையும் ஆராய்ந்து, ஓர் அரிய நூலை வெளியிட்டார். அதன் பின்னர், இங்குள்ள ஓவியங்களின் நகல்கள் எடுக்கப்பட்டு இலண்டன் மாநகரத்தில் ஒரு காட்சிச்சாலையில் வைக்கப்பட்டன.

5. இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன் இம்மலையில் வாழ்ந்து வந்த பௌத்த துறவிகள் சில கோவில்களையும், விடுதிகளையும் இம்மலையிற்குடைந்துள்ளார்கள். கோவிலுக்குச் **சைத்தியம்** என்றும், விடுதிக்கு **விஹாரம்** என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இவற்றைப் பலர் பல ஆண்டுகள் முயன்றுஉருவாக்கியிருக்கவேண்டும். அஜந்தாவில் முப்பத்திரண்டு குகைகள் உள்ளன. அவற்றுள் ஐந்துதாம் கோவில்கள்; அமைப்பில் விஹாரங்களுக்கும் சைத்தியங்களுக்கும் வேறுபாடுகள் உண்டு. ஒவ்வொரு சைத்தியத்தின் முன்னும் ஒரு மண்டபம் இருக்கிறது. அம்மண்டபம் சிற்ப வேலைப்பாடு மிக்க நான்கு தூண்களின்மீது மாடிபோலக் கல்லைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ளது. அந்த மாடிக்கு மேல் பிறைச்சந்திரன் போன்றமைந்த சாளரம் இருக்கிறது. சைத்தியத்தின் அகத்தும் புறத்தும் பௌத்த சம்பந்தமான தேவதைகளின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

6. சைத்தியத்தின் உட்புகுந்து பார்த்தால் நீளமான கூடமொன்று காட்சியளிக்கிறது. அதன் கோடியின் இடையில் புத்தரின் பல்லோ, சாம்பலோ அடங்கியுள்ள மேடை, பத்தர்கள் சுற்றி வருவதற்குரிய வசதியோடு உயர்ந்து காணப்படுகிறது. இக்கூடத்திற்கு இருமருங்கிலுமுள்ள சுவர்களுக்கு இடையில் வனப்பு மிக்க சிற்பங்கள் அமைக்-

கப்பெற்ற கம்பங்கள் நிற்கின்றன. இத்தகைய சைத்தியங்களுள் மிகப் பெரியது தொண்ணூற்றைந்து அடி நீளமிருக்கிறது.

7. விஹாரம் என்னும் விடுதி ஏறத்தாழச் சதுர வடிவமானது. அதன் மூன்று பக்கங்களிலும் அறைகள் உள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றிலும் தலை வைத்துப் படுக்கக் கல்லால் செதுக்கப்பட்ட தலையணை காட்சியளிக்கிறது. அந்த அறைகளினுள்ளே காற்றும் வெளிச்சமும் புகுதற்காகச் சாளரம் போன்ற துவாரங்கள் குடையப்பட்டுள்ளன.

8. இனி ஓவியங்களைப்பற்றிக் கவனிப்போம்: அவை எல்லாம் விஹாரங்களிலேயே காணப்படுகின்றன. அவை பொருத்தமான வண்ணங்கள் தீட்டப்பட்டுப் பேரெழிலோடு விளங்குகின்றன. ஆனால், அவை இருட்டிலும், முகட்டிலும் அமைந்துள்ளன. இருளால் சூழப்பெற்றுள்ள அவற்றைக் கண்டு களிக்க, அரசியலார் அதிக ஒளியுள்ள 'ஆர்க் லைட்டு' என்னும் ஒரு வகை விளக்கை ஒவ்வொரு குகையிலும் அமைத்துள்ளனர். அதன் துணைக் கொண்டு பார்த்தால், மூலை முடுக்கில் உள்ள ஓவியத்தையும் நன்கு காண இயலும். ஆனால், அந்த விளக்கை உபயோகிக்க விரும்புபவர் ஐந்து ரூபாய் கட்டணம் செலுத்த வேண்டும்.

9. இரண்டாயிரமாண்டுகட்கு முன் நம் நாட்டு மக்கள் எங்ஙனம் வாழ்ந்தார்கள் என்பதை அவ்வோவியங்கள் நன்கு விளக்குகின்றன. அவற்றுள் பல புத்தரின் பூர்வப் பிறவியைப் பற்றிய கதைகளை விளக்க அமைந்தவை; மற்றவை, அக்கால வாழ்க்கையைச் சித்தரிப்பவை. அரசர்கள், அரசிகள், சீமான்கள், சீமாட்டிகள், தாதிகள், நடிகர்கள், பாணர்கள், பணியாட்கள், விலங்குகள், பறவைகள், தாவரங்கள் முதலிய பல வகை வாழ்க்கை வருணனைகளை அங்குக் காணலாம். அவையனைத்தும் புத்தத் துறவிகளால் தீட்டப் பெற்றவை. அவர்கள் மாந்தரின் அங்கலட்சணங்களை நன்கு அறிந்தவர்கள் என்பதை அச்சித்திரங்களே விளக்குகின்றன.

10. இரண்டாயிரமாண்டுகட்கு முன் தீட்டப்பெற்ற வண்ணங்கள் இன்றும் புத்தம் புதியவை போலக் காட்சி அளிக்கின்றன. அந்த வண்ணங்களை அவர்கள் எப்பொருள் களினின்றும் செய்தார்கள், எம்முறையில் தயாரித்தார்கள் என்பன இக்காலத்து ஓவியர்கட்கும், இரசாயன நிபுணர்கட்கும், அறிய முடியாத இரகசியங்களாய் இருக்கின்றன.

11. அங்கு வரையப் பெற்றுள்ள பெண்களின் உருவங்கள் வியப்புக்குரியவைகளாயுள்ளன. எத்தனை விதமான தலை-



யலங்காரம்! எத்தனை வகையான மலர் சூட்டல்! எத்தனை வகையான தலை ஆபரணங்கள்! எத்தனை வகையான காதணிகள்! இவற்றையெல்லாம் காண்பார்க்கு இக்காலப் பெண்களின் அலங்காரங்களெல்லாம், இரண்டாயிரமாண்டுகட்கு முன்னரே நம் நாட்டில் வாழ்ந்து வந்த பெண்மணிகளின் சோடனைகளோடு ஒப்புக்கூறவும், உறை போடவும் காணு என்பது புலனுகும்.

12. ஓவியக்கலையின் உன்னத நிலையை அஜந்தாவிலே-தான் காண முடியும் என்பது ஓவிய நிபுணர்களின் ஒரே முக-மான முடிவு. ஆனால், அவற்றை தீட்டியவர் யாவர் என்பதை இன்றளவும் எவரும் அறிய முடியவில்லை. காரணம், அவற்-றைத் தீட்டியவர்கள் தங்கள் பெயர்களை அங்குப் பொறித்து வையாமையே. புகழைப் புறக்கணித்த அவர்களுடைய உத்தமத் தியாகத்தை என்னென்று புகழ்வது!

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. 'அஜந்தா' என்பது எங்குளது? அதற்குப் போகும் வழி யாது?

ஆ. அஜந்தாவில் காணப்படுவன யாவை?

இ. 'சைத்தியம்' என்பது என்ன?

ஈ. 'விஹாரம்' என்பது என்ன?

உ. இங்குள்ள ஓவியங்களால் நாம் அறிவது யாது?

II. சொல்லியுள்ளபடி செய்க :

1. விஹாரம், சைத்தியம்—(இவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றியும் பத்து வரிகளுக்கு மிகாமல் ஒரு குறிப்பு எழுதுக.)

2. இக்குகைகளைக் கண்டுபிடித்த பெருமை சென்னை மாகாணத்துக்கே உரியது. ('சென்னை மாகாணம்' என்று வாக்கியத்தைத் தொடங்குக.)

3. இம்மலையில் வாழ்ந்த பௌத்த துறவிகள் சில கோவில்-களையும், விடுதிகளையும் இம்மலையில் குடைந்துள்ளனர். (வாக்கியத்தைச் 'சில கோவில்களும் விடுதிகளும்' என்பதைக்கொண்டு தொடங்கி எழுதுக.)

III. வாக்கியங்களில் அமைக்க :

சிறப்புற்று, கண்ணார, மனமார, வாயார, பயிற்சி, வனப்பு மிக்க, ஏறத்தாழ, எழில்.

# 9. புலவர் பெருமிதம்

1. நமது தாய்மொழியாம் தமிழ் மொழியில் வழங்கும் நூல்களுள் மிக்க தொன்மை வாய்ந்தவை சங்க இலக்கியங்களாம். அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்பவை. அவற்றை இயற்றிய புலவர் அனைவரும் ஒரே காலத்தவரல்லர்; ஒரே நாட்டினரல்லர்; ஒரே குலத்தவருமல்லர்; ஒரே இனத்தவருமல்லர்; அவர்களுள் ஆடவர் பலர்; பெண்டிர் சிலர். அவரனைவரும் அக்காலத்தில் பேரரசர்களையும் சிற்றரசர்களையும் நாடிச்சென்று, தத்தம் புலமை தோன்றத் தமிழ்ப் பாக்கள் இயற்றி, அவர்களை மகிழ்விப்பர். தமிழ் மொழியின் ஆக்கம் கருதிய அப்புரவலர்கள் தங்களை நாடி வந்த புலவர்கள் மகிழும்படி அவர்களுக்கு பரிசில்களை வழங்கி அனுப்புவார்கள்.

2. இங்ஙனம் வாழ்ந்த புலவர் பெருமக்களுள் பெரும்பான்மையோர் வறுமையுற்று வாடினர் என்று கூறவேண்டுவதின்று. எனினும், அப்புலவர்களின் பண்புகள் நன்கறிந்து போற்றத்தக்கவை. அப்புலவர்கள் வறுமைக்கடலில் ஆழ்ந்து வாட்டமுற்றார்களெனினும், பரிசுக்காகத் தங்கள் புலமையை விற்றார்களில்லை. அவர்கள் தன்மதிப்பு மிக்கவர்கள். **'மதியாதார் வாசல் மிதித்தொருகாற்சென்று மிதியாமை கோடி பெறும்'** என்னும் நல்லுரைக்கிணங்கத் தம்மை மதியாதவர் மன்னரேயாயினும், அவரைப் பொருட்படுத்தமாட்டார்கள்; அவர்கள் அரண்மனைக்குள் அடியெடுத்தும் வைக்கமாட்டார்கள்; அது மட்டுமன்றி, ஒருவன் பேரரசனாயினும், அவன் நீதி நெறியினின்று விலகுவானாயின், அவனை அணுகி அஞ்சாது அறிவுரை கூறும் ஆற்றல் உடையவர்கள். இத்தகைய புலவர் நலன்களுக்கு எடுத்துக்காட்டாக இரண்டு நிகழ்ச்சிகளை நினைவுகூர்வது நலம்:

3. **பெருஞ்சித்திரனார்** என்பவர் ஏறத்தாழ இரண்டாயிரமாண்டுகட்கு முன்பு வாழ்ந்த ஒரு பெரும்புலவர். அவர் வறுமையின் கொடுமைக்கு இலக்காயினர். ஆதலால், தமி-

மின் இனிமையையும் புலவரின் பெருமையையும் நன்குணர்ந்த புரவலர்பாற் சென்று பரிசில் பெறக் கருதினர்.

4. அக்காலத்தில் **அதியமான்** என்ற ஒரு குறுநில மன்னன் இருந்தான். அவன் வரையாது கொடுக்கும் வள்ளல் என்பதைப் புலவர் கேள்வியுற்ருர். அவன் **தகடூரில்** ஆட்சி புரிந்து வந்தான். சேலம் ஜில்லாவிலுள்ள தருமபுரியை அடுத்த **அதமன்கோட்டை** என இக்காலத்தில் வழங்கும் பகுதியே அக்காலத்தில் தகடூர் என வழங்கி வந்தது. பெருஞ்சித்திரனர் காடுகளையும் நாடுகளையுங் கடந்து, தகடூரை அடைந்தார்; தம் வரவை அதியமானுக்கு அறிவித்தார்.

5. அதியமான் தமிழ் நாட்டு வள்ளல்களுள் ஒருவன். புலவர் பெருமக்களை நன்கு வரவேற்று ஆதரித்துப் பரிசில் வழங்கும் பண்புடையவன். ஆனல், பெருஞ்சித்திரனர் அவனைக் காணச் சென்ற போது, அவன் ஏதோ அரசியற்காரியத்தில் அதிகம் ஈடுபட்டிருந்தான். ஆதலால், புலவரை நேரிற்காண அவனல் இயலவில்லை; ஆயினும் தன்னை நாடி வந்த புலவரை நெடுநாள் காத்திருக்கும்படி செய்தல் தகாதென்றும், அவரை வாளா அனுப்புதல் தன் கொடைத்திறத்துக்கு இழிவென்றுங் கருதினன். ஆதலால், பொன்னும் மணியும் புலவர் களிக்கும்படி ஏவலாளர் மூலம் அனுப்பி வைத்தான்.

6. அவற்றைக் கண்டார் புலவர். வறுமையால் வாடி நின்ற அவர் உள்ளத்தில் உவகை எழவில்லை. அதற்கு மாருக, வெறுப்புத் தோன்றியது. அவர் ஏவலாளரை நோக்கி, "என் புலமையின் அளவை உங்கள் அரசன் எவ்வாறு கண்டறிந்தான்? என்னைக் காணமலே எனக்கு அனுப்பப்பட்டுள்ள பொருளைப் பெற்றுக்கொள்ள நான் யாசகன? என் கல்வியின் ஆற்றலையும், புலமையின் திறத்தையும் நேரிற் கண்டறிந்து எனக்கு அளிக்கப்படும் பரிசில் தினையளவாயினும், அதனைப் பனையளவாகக் கொள்ளுவேன்!" என்று கூறி, அவ்விடம் விட்டு அகன்ருர். இதனல், பெருஞ்சித்திரனருடைய உள்ளத்தின் உயர்வு தோன்றுகின்றதன்ருே!

7. **வெள்ளைக்குடி** என்பது சோழவள நாட்டைச் சேர்ந்த ஓர் ஊர். அங்கு **நாகனர்** என்ற ஒரு தமிழ்ப்புலவர் வாழ்ந்தார். அவர் வேளாண் மரபினர். அவர் கல்வி கேள்விகளில் வல்லுநராயினும், செல்வர்பால் சென்று பாட்டிசைத்துப் பரிசில் பெற விரும்பினரில்லை; அவர் உத்தமமான உழு-தொழிலை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார்.

8. அவர் காலத்தில் சோழவள நாட்டைக் **கிள்ளி வளவன்** என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் கல்வி நிறைந்தவன்; கவி பாடும் திறம் படைத்தவன். அவன் தன் தோள் வலி-யால் பல சிற்றரசர்களை வென்று, பெரும் புகழுடன் விளங்கி வந்தான். அவனுடைய வெற்றிகளால் அவனுடைய நிதிச்-சாலை நிரம்பியிருந்தது. எனவே, அவன் **கோவூர் கிழார்** போன்ற பெரும்புலவர்களைத் தன் அவையில் இருக்கச் செய்து, அவர்-களோடு அளவளாவிக் காலங்கழிப்பதையே வழக்கமாகக் கொண்டான்.

9. இந்நிலையில் அவன் நாட்டுக்கு உயிர்நாடிகள் போன்ற வாணிகம், உழவு முதலியன வளம் பெருவதற்குரிய எத்தகைய முயற்சியிலும் ஈடுபட்டானில்லை. ஆதலால், அத்தொழில்கள் நாளடைவில் குன்றத் தொடங்கின. அது கண்ட புலவர் மனம் புழுங்கினர்; அரசனைக் கண்டு, தக்க அறிவுரைகளைப் புகட்ட விரும்பினர்; அதற்குத் தக்க வாய்ப்பைத் தாமே உண்டாக்கிக் கொள்ளவும் விரும்பினர்; ஆகவே, தம்முடைய நிலங்கட்குச் செலுத்தவேண்டிய வரிப்பணத்தைச் செலுத்தாமல் நிறுத்திவிட்டார். ஆதலால், அதிகாரிகள் அவரை அரசன்முன் கொண்டுபோய் நிறுத்தி-னர்கள். அவரைக் கண்டபோதே அரசன் அவர் சிறந்த அறிஞர் என்பதையும், அவர் வரிப்பணத்தைச் செலுத்தத் தவறியதற்கு தக்க காரணம் இருக்க வேண்டுமென்பதையும் யூகித்தான்.

10. அரசன் புலவரை நோக்கி, "நீர் வரிப்பணம் செலுத்தாமைக்கு ஏதேனும் காரணம் உண்டோ?" என்று வினவினன். உடனே புலவர், "மூவேந்தருள்ளும் முதன்மை

பெற்று விளங்கும் சோழர் பெருமானே, உமது நாடு காவிரி பாயப்பெற்றது; ஆதலால், வளம் நிறைந்தது; என்றும் விளைவு குன்றாதது; ஆயினும், குடிமக்கள் தங்கள் குறைகளை எடுத்துக்கூற வாய்ப்பளித்து, அவற்றை நீக்க வேண்டுவது உமது கடமையன்றோ? நீர் உம்முடைய பகையரசர்களை வெற்றிகொள்வது எதன் வலிமையால்? உழுது பயிரிடப்படும் நிலங்களின் விளைச்சலாலன்றோ? ஆகவே, உழவருடைய குறைகளைப் போக்கி அவர்களைப் பாதுகாப்பது உமது முதற்கடமையாகும்,'' என்று அச்சம் சிறிதுமின்றி அரசனுக்கு அறிவு புகட்டினார். அரசனும், அவர் உள்ளத்தில் தோன்றிய உண்மையை உறுதியுடன் கூறிய அவருடைய குணநலனுக்காக அவ்வரைப் புகழ்ந்து உபசரித்து அனுப்பினான்.

## பயிற்சி:

I. விடை எழுதுக:

அ. 'சங்க இலக்கியங்கள்' என்பவை யாவை?

ஆ. 'பெருஞ்சித்திரனார்' என்பவர் யார்?

இ. 'அதியமான்' என்பவன் யார்? அவன் குணநலன்கள் யாவை?

ஈ. பெருஞ்சித்திரனாரின் உள்ளத்தின் உயர்வு எதனால் அறியப்படுகிறது?

உ. 'நாகனார்' என்பவர் யார்? அவர் எங்கு வாழ்ந்தார்? அவர் அரசனைக் காண என்ன உபாயம் செய்தார்?

ஊ. அவர் கிள்ளிவளவனுக்கு எடுத்துக் கூறிய நல்லுரைகள் யாவை?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக:

ஆக்கம், ஆழ்ந்த, அணுகி, இழிவு, வெறுப்பு, உத்தமன், நிறைந்தது, வெற்றி.

III. வாக்கியங்களில் அமைக்க :

தொன்மை, ஆக்கம், அறிவுரை, ஆற்றல், கருதினர், வள்ளல், பண்பு, ஏவலாளர்.

IV. கீழே தரப்பட்டுள்ள தலைப்புக்களின் துணையால் சிறியதோரு கட்டுரை வரைக :

1. பெருஞ்சித்திரனாரின் வறுமை
2. அதியமான் கொடைத்திறம்
3. பெருஞ்சித்திரனாரின் பெருமிதம்

V. அகராதியைப் பார்த்துப் போருள் எழுதுக :

பெருமிதம், ஆக்கம், பண்பு, ஆற்றல், எடுத்துக்காட்டு, உவகை, யாசகன், நிதிச்சாலை, அளவளாவி, வாய்ப்பு.

# 10. எங்கள் இன்பச் செலவு - I

(ஒரு கடிதம்)

சென்னை,
5—7—49

அன்பு நிறைந்த சரவணபவா,

இவண் அனைவரும் நலம். அவண் உள்ளார் நலம் அறிய விரும்புகிறேன். உன் விருப்பத்திற்கிணங்க, கடந்த கோடை விடுமுறைத் தொடக்கத்தில் எங்கள் பள்ளி மாண-வர்கள் செய்த உல்லாசப் பிரயாணத்தைக் கீழே விவரிக்-கின்றேன்.

ஏப்பிரல் மாதத் தொடக்கத்தில் எங்கள் தலைமை ஆசிரிய-ரிடமிருந்து எங்களுக்கு ஓர் அறிக்கை அனுப்பப்பட்டது; அதில் ஏப்பிரல் மாதம் இருபதாந்தேதி, சென்னைக்குத் தெற்-கில் உள்ள **திருப்போரூர், மாமல்லபுரம், திருக்கழுக்குன்றம்** ஆகிய மூன்றிடங்களுக்கும் இன்பச் செலவுக்கு ஏற்பாடு செய்யப்-பட்டுள்ளதென்பதும், அதிற்கலந்துகொள்ள விரும்புகிறவர் பதினேழாந்தேதிக்கு முன்னரே ஐந்து ரூபாய் கட்டணம் செலுத்த வேண்டுமென்பதும் குறிக்கப்பட்டிருந்தன. அச்-செய்தியைக் கேட்டவுடனே எங்களுக்குண்டான இன்பத்-திற்கு எல்லையில்லை.

ஏப்பிரல் மாதம் 20-ஆம் தேதி மாலை நான்கு மணிக்கு நாங்கள் எங்கள் பள்ளியிற்கூடினோம். மாணவர் நூற்றுப்-பதின்மரும் பத்துக் குழுக்களாகப் பிரிக்கப்பட்டோம். ஒவ்-வொரு குழுவுக்கும் ஒவ்வொரு தலைவனும், துணைத்தலைவனும் நியமிக்கப்பட்டனர். அவர்களுடைய ஆணைக்குட்பட்டு மற்-றவர் நடக்கவேண்டும் என்பது தலைமையாசிரியரின் கண்டிப்-பான உத்தரவு. எங்களோடு தலைமையாசிரியருள்ளிட்ட பன்னிரண்டு ஆசிரியர்களும் புறப்பட்டார்கள். அவர்களுள் இருவர் இரண்டு குதிரை வண்டிகளில் அன்றைய இரவுக்கு வேண்டும் உணவு வகைகளையும், தின்பண்டங்களையும், மற்றை நாட்களுக்கு வேண்டும் உணவுப் பொருள்களையும்

ஏற்றிக்கொண்டு முன்னமே புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள். நாங்கள், சென்னை உயர்நீதி மன்றத்தின் முன் மின்சார வண்டியிலேறி மயிலை சென்றிறங்கினோம்.

நாங்கள் அங்கிருந்து புறப்பட்டு அரை பர்லாங்குத் தூரத்தில் உள்ள **பக்கிங்காம் கால்வாய்ப்** படகுத்துறையை அடைந்தோம். பக்கிங்காம் கால்வாய் சென்னைக்குத் தெற்கில் கிழக்குக் கடற்கரையோரமாக அறுபது மைல் தூரமும், வடக்கே இருநூறு மைல் தூரமும் செல்கின்றது. நாங்கள் படகுத்துறையை அடைந்தவுடனே அங்கு எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்த மூன்று சிறு படகுகளில் ஏறி அமர்ந்தோம். படகுகள் புறப்பட்டன. நாங்கள் ஒருவரோடொருவர் எங்கள் மனவெழுச்சி காரணமாகப் பேசியது, சந்தை இரைச்சல் போல ஒலித்தது. ஆனால், சிறிது நேரத்தில் இரைச்சல் குறையத் தொடங்கி, இன்னிசை எழத்தொடங்கியது.

எங்களுள் சிலர் நன்கு பாடத் தெரிந்தவர்; ஹார்மோனியமும் மிருதங்கமும் வாசிக்கத் தெரிந்தவருமிருந்தனர். அவ்விசைக் கருவிகளையுங் கூடக் கொண்டு வந்திருந்தோம். அவை மட்டுமன்றி, கிராமபோனையும் இசைத் தட்டுக்களையுங்கூட நாங்கள் மறக்கவில்லை. படகுகள் ஆமை வேகத்தில் நகர்ந்தன. மாலைச் சூரியன் மறைவதற்குள் அவை சென்னை நகரத்தின் எல்லையைக் கடந்துவிட்டன. கதிரொளி மறைந்து நிலவொளி தோன்றத் தொடங்கியது. எங்களுட் சிலர் தலைவர்களின் ஆணை பெற்றுப் படகின் மேல் தட்டிற்சென்று அமர்ந்தனர். கால்வாயின் இரு புறங்களிலும் மரங்களும், புதர்களும், வயல்களும் காணப்பட்டன; ஊரென்பதே காணப்படவில்லை. தொலையில் மினுக்கு மினுக்கென்று விளக்கொளிகள் தென்பட்டன. அவற்றால் அங்கெல்லாம் கிராமங்கள் உண்டென்பதைப் படகோட்டிகளின் வாயிலாக அறிந்தோம்.

இரவு மணி எட்டாயிற்று; படகுகள் நிறுத்தப்பட்டன. நிறுத்தப்பட்ட இடம் வெண்மணல் நிறைந்து, கடற்கரை

போலக் காட்சியளித்தது. நிலவு பால் போல ஒளி பரப்பிக்-கொண்டிருந்தது. படகுகளிலிருந்த **பெட்ரோமாக்ஸ்** விளக்கு-களும் வைக்கப்பட்டன. நாங்கள் அனைவரும் படகுகளினின்று இழிந்து, மணலில் இரண்டு வரிசைகளாய் அமர்ந்தோம். ஒவ்வொருவருக்கும் ஓர் இலையில் எலுமிச்சஞ்சாற்றுச் சோறும், மிளகுப் பொங்கலும், இரண்டு வடைகளும் அளிக்கப்பட்டன. அவற்றை உண்ட பிறகு, படகிலேயே அடுப்பு மூட்டித் தயா-ரிக்கப்பட்ட தேநீர்ப்பானத்தை அருந்தினோம். மீண்டும் எல்-லாரும் படகில் ஏறிக்கொண்டோம். காற்று எதிர்த்திசையி-னின்று வீசியபடியால், படகுகள் பாய்விரித்துச் செல்லவில்லை. முன்புறம் கயிறுகட்டி ஓர் ஆள் இழுக்கவும், பின்புறத்தில் ஒரு நீண்ட கழியை இணைத்து ஓர் ஆள் தள்ளவும் படகு ஆமை செல்வது போல மெல்ல நகர்ந்தது. நாங்கள் பாடிக்-கொண்டும், உரையாடிக்கொண்டும் மகிழ்ச்சியாய்க் காலம் கழித்துப் பிறகு தூங்கிவிட்டோம்.

பொழுது புலர்ந்த பொழுது எங்கள் படகுகள் திருப்-போரூர்த் துறையில் நிற்கக் கண்டோம். துறைக்கும், முருகன் திருத்தலமாகிய திருப்போரூருக்கும் ஒரு மைல் தூரம் இருக்கும். நாங்கள் அதை நோக்கிப் புறப்பட்டோம். வழி-யிலேயே காலைக்கடன்களை முடித்துக்கொண்டோம்; திருக்-குளத்தில் குளித்தோம்; கோவிலுக்குச் சென்று ஆண்டவனை வணங்கினோம். பிறகு குன்றின்மீதுள்ள கோவிலுக்குச் சென்றோம்; அங்கிருந்து சுற்றுப் புறங்களைக் கண்டு களித்-தோம். எங்கள் தரைநூல் ஆசிரியர், அக்குன்றின் உச்சி-யில் எங்களை நிற்கச் செய்து, சுற்றுப் புறங்களைக் காட்டிக் கழிவெளி, வயல்வெளி, ஏரிகளின் அமைப்பு முதலிய தரை-நூல் சம்பந்தமானவற்றை விளக்கினார். பிறகு நாங்கள் குன்றை விட்டு இறங்கிப் படகை நோக்கி நடந்தோம். வழியில் எங்கள் தமிழாசிரியர் திருப்போரூரின் வரலாற்றை விளக்கினார். அங்கு ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்குமுன் **சிதம்பர சுவாமிகள்** என்ற ஒரு துறவியார் வந்து தங்கினாராம். அவர் கனவில் ஆண்டவர் தோன்றித் தமது இருப்பிடத்-தைக் கூறிவிட்டு மறைந்தாராம். மறுநாட்காலையில் சிதம்-

பர சுவாமிகள், ஊரில் இருந்தவர்களை அழைத்து, ஆண்டவர் இருப்பிடத்தைக் கண்டறிதல் வேண்டும் என்று கூறினாராம். அக்காலத்தில் அங்குப் பனைமரங்கள் அதிகமாய் இருந்தனவாம். ஊரில் இருந்த மக்களும், அவற்றைப் பயன்படுத்திப் பிழைத்த கிராமணி குலத்தவராம். அவர்கள் முனிவரின் சொற்படி அவரால் காட்டப்பட்ட இடத்தை அகழ்ந்து பார்த்துப் பூமியில் முருகப்பிரானுடைய உருவச்சிலை இருக்கக் கண்டு, அதை எடுத்துச் சிறு கோவில் அமைத்து அதில் எழுந்தருளச் செய்தார்களாம். பின்னர்ச் சிதம்பர சுவாமிகளின் முயற்சியால் கோவில் பெரிதாக அமைக்கப்பட்டுச் சிறந்த நிலையை அடைந்ததென்று ஆசிரியர் கூறினர்.

சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகர்மீது பல அரிய நூல்கள் இயற்றியுள்ளார் என்றும், அவை ஒன்றுகத் தொகுக்கப்பெற்றுத் **திருப்போரூர்ச் சந்நிதி முறை** என்னும் நூலாய்த் திகழ்கின்றன என்றும் ஆசிரியர் கூறினர். இதற்குள்ளாக நாங்கள் படகை அடைந்தோம். அங்குக் காப்பியும் உப்புமாவும் எங்களுக்கு நல்வரவு கூறின.

**பயிற்சி:**

I. விடை எழுதுக:

அ. மாணவரும் ஆசிரியரும் சென்னையில் எங்குச் சென்று படகேறினர்கள்?

ஆ. படகு செல்லும் கால்வாயின் பெயர் யாது? அது சென்னைக்குத் தெற்கிலும், வடக்கிலும் எவ்வளவு தூரம் செல்கிறது?

இ. மாணவர்களும் ஆசிரியர்களும் திருப்போரூரில் கண்டவை யாவை?

ஈ. திருப்போரூரின் வரலாற்றைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.

உ. சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகர் மீது இயற்றிய நூலின் பெயர் என்ன?

II. சொல்லியுள்ளபடி செய்க :

1. எங்கள் தலைமை ஆசிரியரால் எங்களுக்கு ஓர் அறிக்கை அனுப்பப்பட்டது. (செயப்பாட்டு வினையைச் செய்வினை ஆக்குக.)

2. ஊர் என்பதை நாங்கள் காணவில்லை. (செய்வினையைச் செயப்பாட்டு வினையாக்குக.)

3. வழியிலேயே காலைக்கடன்களை முடித்துக்கொண்டோம்; குளத்தில் குளித்தோம்; கோவிலுக்குச் சென்றோம்; ஆண்டவரை வணங்கினோம்; பிறகு குன்றின்மீதுள்ள கோவிலுக்குச் சென்றோம். (இவற்றை ஒரே வாக்கியமாக எழுதுக.)

III. வாக்கியங்களில் அமைக்க :

உல்லாசப் பிரயாணம், விவரிக்கிறேன், இன்பம், குழுக்கள், படகுத்துறை, அருந்து.

# 11. எங்கள் இன்பச் செலவு - II

காலை 8 மணி இருக்கும். படகுகள் மாமல்லபுரத்தை நோக்கிப் புறப்பட்டன. படகிலேயே மடைத்தொழில் தொடங்கப்பட்டது. பகல் பன்னிரண்டு மணிக்கு மாமல்லபுரத்துப் படகுத்துறையை அடைந்தோம். அதற்குள் உணவு தயாராகிவிட்டது. கால்வாயோரத்தில் சில பூவரச மரங்களின் கீழ் இருந்து, உணவை உண்டோம். பிற்பகல் இரண்டு மணிக்கு ஊரையடைந்து, நாங்கள் கொண்டுசென்ற பொருள்களை ஒரு சத்திரத்தில் வைத்துவிட்டுக் கடற்கரை அருகிலுள்ள கோவிலுக்குச் சென்றோம். அக்கோவிலின் கிழக்குப் பகுதியில் பின்னமடைந்த ஒரு பெரிய இலிங்கமும், மேற்குப் பகுதியில் பள்ளிகொண்ட விஷ்ணுவின் சிலையும் இருக்கின்றன. அக்கோவிலின் கோபுரமும் சிற்பங்களும் பல்லவர் சிற்ப முறையிலேயே அமைந்துள்ளன. அங்குள்ள ஒரு குரங்கின் உருவம் வியக்கத்தக்கது.



மறுநாட்காலையில் ஊருக்குள் இருக்கும் சிற்பங்களைப் பார்த்தோம். அவற்றுள் அருச்சுனன் தவம் முக்கியமானது.

அக்காட்சி செதுக்கப்பட்டுள்ள பாறை இரண்டு பாகங்களை உடையது. மேற்குப் பகுதியிலேதான் தவம் செய்யும் அருச்சுனனைக் காண்கிறோம். தவம் எத்துணை கடுமையானது என்பதை அச்சிற்பம் வெளிப்படுத்துகிறது. அகோர தவத்தின் பயனாக அருச்சுனனது உடல் மெலிந்து, விலா எலும்புகளெல்லாம் நன்கு தெரிகின்றன. அருச்சுனனுடைய கடுந்தவத்துக்கிரங்கிச் சிவபெருமான் **பாசுபதம்** என்னும் பாணத்துடனும், சிவகணங்களுடனும் காட்சியளிக்கிறார்.

அடுத்தபடி மனத்தைக் கொள்ளை கொள்ளும் சிற்பக் காட்சிகள் **மகிஷ மண்டபத்தில்** உள்ளன. அம்மண்டபத்தில்



ஒரு சுவரில் **மகிஷாசுர மர்த்தனியின்** போர்க்கோலமும், அதன் எதிர்ப்புறச் சுவரில் பாம்பணையிற் பள்ளி கொண்டுள்ள திருமாலின் திருக்கோலமும் காட்சியளிக்கின்றன. மகிஷாசுர மர்த்தனியின் சிலை உலகிலேயே சிறந்த சிற்பங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. அச்சிற்பம் உயிருள்ளது போலக் காணப்படுகிறது. அம்மையின் போர்க்கோலத்தையும், அதற்குரிய **பாவத்தையும்,** அழகுபடச் செதுக்கியுள்ளார் சிற்பி. அம்பி-

கையின் முகத்தில் சினத்தைக் காண்கிறோம். ஆனந்த நித்திரை புரியும் ஐயன் முகத்தில் சாந்தம் ததும்புகிறது.

மகிஷ மண்டபத்தை அடுத்து மற்றொரு மண்டபம் இருக்கிறது. அதற்கு **வராக மண்டபம்** என்பது பெயர். அதில் திருமால் வராக அவதாரம் எடுத்துப் பூதேவியை மீட்டு வந்த காட்சியும், அவர் திரிவிக்கிரம அவதாரமெடுத்து உலகை ஓரடியால் அளந்த காட்சியும் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தவிர, அம்மண்டபத்தில் பல சிலைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று, **சிம்ம விஷ்ணு** என்னும் பல்லவ மன்னன் உருவமென்றும், மற்றொன்று, முதலாவது **மகேந்திர வர்மர்** உருவமென்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அவ்விருவரும் பல்லவ குலத்தைச் சேர்ந்த மன்னர்கள் என்பதை நீ அறிவாய் அல்லவா ? இத்தகைய சிற்பங்கள் அங்கு மேலும் பல உண்டு. அவற்றையெல்லாம் பார்த்து முடிவதற்குள் மணி பன்னிரண்டாயிற்று. வெயில் மிகக் கடுமையாய் இருந்தது. அங்குக் கிடைத்த வெள்ளரிக்காய்கள் அத்தனையும் நாங்களே வாங்கித் தின்று, தாகத்தைத் தணித்துக்கொண்டு, எங்கள் விடுதியை அடைந்தோம்.

விடுதியின் அருகில் உள்ள ஒரு குளத்தில் அனைவரும் குளித்தோம் ; பிறகு வடை பாயசத்துடன் உணவு உட்கொண்டோம் ; சிறிது நேரம் களைப்பாறினோம் ; மீண்டும் மூன்று மணிக்குப் புறப்பட்டோம் ; ஊருக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்தில் உள்ள கற்பாறைகளில் குடைந்தெடுக்கப் பெற்ற இரதங்களைக் காணச் சென்றோம். அவை **பாண்டவ ரதங்கள்** என்று பாமரர்களால் வழங்கப்படுகின்றன. ஆதலால், ஒவ்வொரு தேருக்கும் பாண்டவர்களுள் ஒருவர் பெயர் வழங்கப்பட்டுள்ளது. அவை முற்றிலும் செதுக்கி முடிக்கப்படவில்லை. அவற்றுள் மிகுந்த வேலைப்பாடுள்ளது தருமர் ரதம். அதன் உச்சியில் புராண சம்பந்தமான சிற்பங்கள் உள்ளன. அதன் தென்புறத்தில் உள்ள ஒரு சிலை **நரசிம்ம வர்ம பல்லவருடையது** என்று கூறப்படுகிறது. அந்த ரதங்கள் தொடங்கப் பெற்ற பிறகு ஒரு நூற்றாண்டு வரையில் பல்லவ மன்னர்களின் ஆட்சி நிலைபெற்றிருந்தும், அந்த ரதங்கள் முற்றிலும் பூர்த்தி-

யடையவில்லை; அவை போன்ற வேறு பல ரதங்களும் முற்றுப் பெறவில்லை. இதற்குக் காரணம் யாதென்பது நிச்சயிக்கப்படவில்லை. அந்த ரதங்களின் அருகில் ஒரே கல்லால் செதுக்கப்பட்ட ஒரு யானையின் உருவம் உள்ளது. அதை தூரத்திலிருந்து பார்த்தால், உயிர் உள்ள யானை என்றே எவரும் ஏமாறுவர். அவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு எங்கள் விடுதிக்கு வர மாலை ஐந்து மணியாகிவிட்டது. வந்தவுடனே பஜ்ஜியும் தேநீரும் உட்கொண்டோம். அதற்குள் திருக்கழுக்குன்றத்துக்கு எங்களை கொண்டு செல்ல வேண்டிய மோட்டார் பஸ்கள் வந்துவிட்டன.

சமையற்காரர் உட்பட நாங்கள் நூற்றிருபது பேருக்கு மேலிருந்தோம். மூன்று மோட்டார்களுக்குச் சொல்லி இருந்தும், இரண்டே வந்தன. அம்மோட்டார் ஓட்டிகள் மிக நல்லவர்கள். அவர்கள் எங்கள் அத்தனை பேரையும் எங்கள் மூட்டை முடிச்சுகளுடன் மூச்சுத் திணறும்படி இரண்டு வண்டிகளிலும் அடைத்துக்கொண்டு புறப்பட்டார்கள். ஒரு மணி நேரத்துக்குள்ளேயே திருக்கழுக்குன்றத்தை அடைந்து விட்டோம். அங்கு மலையடிவாரத்தில் உள்ள மிகப் பெரிய சத்திரம் நாங்கள் தங்க அமர்த்தப்பட்டிருந்தது. அதன்முன் எங்கள் மோட்டார்கள் வந்து நின்ற போதுதான் ஆண்டவருடைய அருளின் திறம் இன்னதென்று நாங்கள் அறிந்து அவரை மனமார நினைத்து, வாயார வாழ்த்தினோம். அவர் அருள் இல்லாவிடில் அறுபது ஆட்களையும் அவர்களுடைய மூட்டைகளையும் ஏற்றிக்கொண்டு பழுதுபடாமல் அவ்வண்டிகள் வந்து சேர்ந்திருக்க முடியுமா? மோட்டாரை விட்டிறங்கியபோது நாங்கள் அனைவரும் களைப்புற்றிருந்தபடியால் எங்கள் விடுதியின் திண்ணைகளிற் படுத்துவிட்டோம். அப்போது மணி ஏழுதான். படுத்தவர்களுள் பலர் அயர்ந்து உறங்கி விட்டனர். இரவு 9 மணிக்குள் எப்படித்தான் சமையல் முடிந்ததோ! எங்களை எழுப்பிச் சோறு படைத்தார்கள். உருளைக்கிழங்கு வறுவலும் மிளகு ரசமும் அயர்ந்திருந்த எங்களுக்கு ஆனந்தத்தை ஊட்டின. முன்னரே தூங்கிவிட்டபடியால், சாப்பிட்ட பின் தூக்கம் வரவில்லை. பாட்டுக் கச்சேரி

தொடங்கிற்று ! இனிமையாகப் பாடக்கூடிய சிலர் எங்களுள் இருந்தபடியால், அவ்வூரார் பாட்டுக் கேட்கத் திரண்டு வந்து-விட்டனர். சத்திரத்தின் எதிரில் தெருவில் அமைதியாய் அமர்ந்து பாட்டைக் கேட்டு இன்பத்தில் திளைத்தனர். பாட்டுக் கச்சேரி முடிந்து, நாங்கள் படுப்பதற்குப் பன்-னிரண்டு மணிக்கு மேலாயிற்று.

நாங்கள் அதிகாலையில் எழுந்தோம். ஊர்ப்புறத்தே சென்று காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, அங்குள்ள சங்கு தீர்த்தம் என்னும் குளத்திற்குக் குளிக்கச் சென்றோம்.



அக்குளம் மிகப் பெரியது. அதன் நான்கு புறங்களில் கற்படி-கள் உள்ளன ; நடுவில் அழகிய மண்டபம் காட்சியளிக்கிறது; அக்குளத்தில் பன்னிரண்டு ஆண்டுக்கொரு முறை பேராரவாரத்தோடு சங்கு பிறக்குமாம்! அதனால் அதற்குச் சங்கு தீர்த்தம் என்னும் பெயர் வழங்குகிறது. ஆசிரியர்களும் குழுத்-தலைவர்களும் அதிக விழிப்புடன் இருந்து எங்களைக் குளிக்கச் செய்து கரையேற்றினார்கள். காலை எட்டு மணிக்குப் பொங்-கலும் காப்பியும் அளிக்கப்பட்டன. ஒரு மணி நேரம் எங்கள் விருப்பம் போல ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் சத்திரத்தை

அடைய வேண்டுமென உத்தரவு பிறந்தது. அங்ஙனமே சுற்றிவிட்டு வந்தோம்.

சரியாக ஒன்பதரை மணிக்கு மலையேறத் தொடங்கினோம். படிகள் நன்கு அமைக்கப்பட்டுள்ளன. ஆயினும், சிற்சில இடங்களில் மலை செங்குத்தாயிருப்பதால், ஏறுவது எளிதாய் இல்லை. அப்போது எங்கட்கு இமயமலை ஏற்றத்தில் ஈடுபட்டவர்கள் எத்துணை துன்பத்துக்குட்பட்டிருப்பார்கள் என்னும் எண்ணம் உதித்தது. பத்தரை மணிக்கெல்லாம் உச்சியை அடைந்தோம். அதன் கிழக்குப் பகுதியில் சற்று தூரத்தில் ஒரு பாறை இருக்கிறது. சரியாக பதினொரு மணிக்கு



ஒரு பண்டாரம், ஒரு தட்டில் இரண்டுருண்டைச் சர்க்கரைப் பொங்கலையும், இரண்டு கிண்ணங்களில் நெய்யையும் எடுத்துக்கொண்டு சென்று, பாறையின்மீது நீரைத் தெளித்து அங்கு அமர்ந்தார். சிறிது நேரத்திற்குள் இரண்டு கழுகுகள் அப்பாறையின்மீது வந்து உட்கார்ந்தன. பண்டாரம் தட்டிலிருந்த பொருள்களை அவற்றின் முன் வைத்தார். அவை அமைதியாய் உண்டுவிட்டுச் சென்றன. மிச்சமிருந்ததை

பண்டாரம் கொண்டுவந்து விற்கத் தொடங்கினர். எங்களுள் யாரும் அதை வாங்கவில்லை. ஆனால், அங்கு அப்பட்சி தரிசனத்துக்காக வந்திருந்த மற்றவர் அப்பிரசாதத்தை மேல் விழுந்து வாங்கிக் கொண்டனர்.

பிறகு எங்கள் தமிழாசிரியர் திருக்கழுக்குன்றத்தின் மகிமையைப்பற்றிக் கூறினர்; அது **தேவாரம்** பெற்ற ஸ்தலம் என விளக்கினர். அந்தக் கழுகுகள் சாபமுற்ற இரண்டு முனிவர்கள் என்றும் கூறினர். அதன் பின்னர், தரை-நூலாசிரியர் அம்மலையின் உச்சியிலின்று சுற்றுப் புறங்களைக் காட்டி ஏரிகளின் தோற்றம் முதலியவற்றை விளக்கினர். பின்னர் மலையின்மீதுள்ள **வேதகிரீசர்** ஆலயம் என்னும் சிவாலயம் சென்று, இறை வணக்கம் செய்துவிட்டு இறங்கினோம்.

பகல் ஒரு மணிக்கெல்லாம் உணவை முடித்தோம். இரண்டு மணிக்கு மூன்று மோட்டார் பஸ்கள் எங்களை ஏற்றிக்கொண்டு வந்து செங்கற்பட்டில் இறக்கின. அங்கிருந்து புகை வண்டியேறி, மாலை ஆறு மணிக்குச் சென்னையை அடைந்தோம். இந்த உல்லாசப் பிரயாணம் எங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. படகு, மோட்டார், புகை வண்டி ஆகிய மூன்று வகை வாகனங்களிற் சென்று சரித்திரப் பிரசித்திபெற்றதும், சிற்பக்கலையின் பிறப்பிடமாயுள்ளதுமான ஓரிடத்தையும், ஒரு முருகன் கோவில், ஒரு சிவன் கோவில் ஆகிய இரண்டு மலைக்கோவில்களையும், இடையிற் பல சிற்றூர்களையும் காணும் வாய்ப்பினை அளித்த அந்த இன்பச் செலவு, மாணவர்களும் ஆசிரியர்களும் கட்டுப்பாடின்றி அன்புடன் பழகுவதற்கு அரியதொரு சந்தர்ப்பத்தையும் அளித்தது.

இந்த ஆண்டில் வரலாற்றுப் புகழ் பெற்ற **ஹம்பி**க்குச் செல்ல முடிவு செய்துள்ளோம். அங்குச் சென்ற பின் அதனையும் விவரிப்பேன்.

அன்புள்ள
கந்தசாமி

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. மாமல்லபுரம் கடற்கரைக் கோவிலின் சிறப்பு யாது ?

ஆ. ஊருக்குள் இருக்கும் சிற்பங்களுள் முக்கியமானவை எவை ? அவற்றைப் பற்றிய சிறப்புக்கள் யாவை ?

இ. 'பாண்டவ ரதங்கள்' என்பவை யாவை ? அவற்றுள் சிறந்தது எது ?

ஈ. மாமல்லபுரத்தில் காணப்படும் பல்லவ மன்னர்களின் உருவச் சிலைகள் எவை ?

உ. திருக்கழுக்குன்றம் செல்பவர் காணக் கூடியவை யாவை ?

ஊ. உல்லாசப் பிரயாணத்தால் ஏற்படும் நன்மைகள் யாவை?

II. கீழே தரப்பட்டுள்ள குறிப்புக்களைக் கொண்டு சிறியதொரு கட்டுரை வரைக :

1. திருப்போரூரில் கண்ட காட்சி
2. மாமல்லபுரத்துச் சிற்பங்கள்
3. திருக்கழுக்குன்றத்துப் பட்சி தரிசனம்

III. எதிர்ப்பதங்கள் எழுதுக :

தொடங்கு, அவசியம், மெலிந்து, சண்டை, அழகுபட, வெயில்.

IV. வாக்கியங்களில் அமைக்க :

மோட்டார் ஓட்டி, அமர்த்தப்பட்டது, தொடங்கிற்று.

## 12. ஒரு விநோதப் பாட்டு

1. ‘ தமிழ்ப் புலவர் ’ என்னும் தொடருக்கு ‘ வறுமை ’ என்பது பொருள் என்றார் ஒருவர், வேடிக்கையாக! ஆராய்ந்து பார்த்தால், அது உண்மை என்றே புலப்படுகிறது. பண்டு முதல் இன்றளவும் தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளைப் படித்தால், அவர்கள் எல்லோரையுமே வறுமை என்னும் பிணி வாட்டி வந்துள்ளது என்பது வெள்ளிடை மலையாகும். ஏதோ இங்குமங்குமாகக் **கம்பர், ஒட்டக்கூத்தர்** என்பவரைப் போலச் சில தமிழ்ப் புலவர்கள் கல்விச் செல்வத்தோடு பொருட் செல்வமும் பெற்றிருந்தார்களெனில், அதை விதி விலக்காகவே கொள்ள வேண்டும்.

2. இங்ஙனம் வறுமையில் உழன்ற புலவர்களுள் ஒருவர், **இராமசந்திரக் கவிராயர்** என்பவர். அவர் தமிழில் வல்லுநர்; எத்தகைய பொருளையும் எளிதில் அமைத்து இனியபாடல்களை இயற்ற வல்லவர்; பேச்சுத் திறமை நிரம்பப் படைத்தவர். அவர் பேச்சுக்கள் நகைச்சுவை மிக்கவையாய் இருக்கும். அவர் இயற்றிய பாட்டுக்களுட்சிலவும் அங்ஙனமே இருக்கக் காணலாம்.

3. ஒரு நாள் மாலை நேரத்தில் புலவர் நெடுந்தொலையிலிருந்தோர் ஊருக்குப் போய்த் திரும்பித் தம்மூருக்கு வந்துகொண்டிருந்தார். அப்போது புலவருடைய நண்பரும், அவர் ஊரைச் சேர்ந்தவருமாகிய ஒருவர் அவரை இடைவழியிற் கண்டார். புலவர் நெடுந்தூரம் நடந்து வந்துகொண்டிருந்தபடியால், மிகவும் களைப்புற்றிருந்தார். மனச்சோர்வு காரணமாக அவருடைய முகமும் சோர்வுற்றிருந்தது. அது கண்ட நண்பர், ‘ அண்ணா, வணக்கம்! ’ என்றார்.

**புலவர் :** வணக்கம்!

**நண்பர் .** அண்ணா, நெடுந்தூரம் போய் வருகின்றாற்போலத் தோற்றுகிறது! யாராவது பிரபுவைக் காணச் சென்றிருந்திரோ?

**புல :** ஆம்.

நண் : அங்ஙனமாயின், பரிசில் ஏதுமின்றி வருகின்றீரே ! ஏன் ?

புல : ஏனா ! சொல்கிறேன் ; கேள் : நான் பரிசில் கேட்கச் சென்றவன் ஓர் உலுத்தன். முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனாக, இப்பிறப்பில் அவன் திரண்ட செல்வத்தைப் பெற்றுள்ளான். அதனைப் பிறர்க்குக் கொடுத்து உதவாமலும், தானும் அதனால் இன்புறாமலும், அதைப் பூதம் காப்பது போலக் காத்துக்கொண்டிருக்கிறான். அத்தகைய உலோ-பியை வாயார வாழ்த்தினேன் ! எழுத்தே அறியாத அவனைக் ' கல்விக் களஞ்சியமே,' என்றேன் ; மாடு-களுக்கு மேய்ச்சலிடமாயுள்ள காட்டையும் விடாமல் திருத்தித் தன் நிலத்தின் அளவைப் பெருக்கிக்கொள்-ளும் அவனை, ' நாடாளும் நல்ல அரசனே,' என்று புகழ்ந்தேன் ; நற்குணம் ஒன்றேனும் இல்லாத அவனை, ' உயர் குணங்களின் உறைவிடமே,' என்-றுரைத்தேன் ; அண்டையூரிற் சண்டை நடந்தால் அடுப்பறையில் மறைந்துகொள்ளும் கோழையாகிய அவனைப் ' போரில் புலி போன்றவனே,' எனப் புகன்றேன். சுருங்கித் திரைந்த அவன் தோள்களை, ' மற்போருக்குரிய புயங்கள் ' எனப் புனைந்துரைத்-தேன் ; ஒருவருக்கும் ஒரு காசும் நன்கொடையாகக் கொடுத்தறியாத கைகளையுடைய அவனை, ' வரை-யாது வழங்கும் வள்ளலே,' என்று கூறினேன். இவையனைத்தையும் அவன் இன்முகத்தோடு கேட்டுக்கொண்டிருந்தான். எனது வாழ்த்துரை முடிந்தது. அவ்வளவுதான் ! அவன் முகத்தைப் பார்க்க வேண்டுமே !

நண் : முகம் என்னாயிற்று !

புல : என்னாயிற்றா ! நூறு கோணலாகச் சுளித்துக்-கொண்டது ! புருவம் நெற்றியிலேற, கண்கள் சிவப்-பச் சினங்கொண்டெழுந்தான். உடனே யான் துணுக்குற்றுச் சற்றுச் சேய்மையிற் சென்றேன்.

நண் : பிறகு என்னுயிற்று ?

புல : என்னுயிற்ரு ? இடியிடித்தாற்போலக் கனன்று பேசத் தொடங்கினுன். அதைக் கேட்டு நானே ஆச்சரியமுற்றேன். ஒன்றுக்கும் பற்ருத ஒருவனைப் பலபடப் புகழ்ந்து பரிசில் பெறத்தக்க ஆற்றல் மிக்க புலவனுகிய யானும் வாய்திறந்து மறு-வார்த்தை கூறவொட்டாமல் மடக்கிய அவன் பேச்-சுத் திறத்தை என்னென்று கூறுவது !

நண் : ஒன்றுக்கும் உதவாத அவன் அப்படிப் பிரமாத-மாகப் பேசியதுதான் யாதோ ? கூறுங்கள் ; கேட்-போம்.

புல : கூறுகிறேன் ; கேள் ; " புலவரே, நீர் என்னைப் பித்-தன் என்று நினைத்தீர் போலும் ! நீர் என்னைப்பற்றி ஏதேதோ பிதற்றினீரே ! அவற்றில் ஒன்றேனும் உண்மையா என்று சிறிது சிந்தித்துப் பாரும் ! இல்லாத செய்திகளையெல்லாம் அடுக்கியடுக்கி நீர் என்னைப்பற்றிக் கூறினுல், அவற்றைக் கேட்டு ஆனந்தமடையும் மடமை என்னிடம் இல்லை. நான் எப்பொழுதும் உண்மையை மதிப்பேனேயன்றிப் பொய்யை மதிப்பதில்லை. என்னைப்பற்றி இல்லாதன-வாகிய எத்தனையோ செய்திகளை நீர் எடுத்துரைத்தீர். ஆதலால், உமக்கு ஒன்றும் இல்லை. போம்," என்று கூறினுன். யானும் அத்தகைய அறிவற்ற உலோபி-யைப் பாடியது குற்றந்தான் என்பதை உணர்ந்து கொண்டேன்.

நண் : அண்ணு, நன்று, நன்று ! இந்த நிகழ்ச்சி உலகத்தவர் அறிய வேண்டுவதொன்று. ஆதலின், இதனையே பொருளாக அமைத்து, ஒரு செய்யுளை இயற்றினுல், உங்கள் மனமும் ஆறுதலடையும் ; உலோபிகளைப் பாடக்கூடாதென்பதற்கு அஃதோர் எடுத்துக்காட்-டாகவும் இருக்கும்.

புல: நீ கூறுவது முற்றிலும் உண்மையே. உனது விருப்பப்படியே ஒரு செய்யுள் கூறுகிறேன் ; கேள் :

**கல்லாத ஒருவனைநான் கற்றாய் என்றேன் ;**
**காடெறியும் மறவனைநா டாள்வாய் என்றேன் ;**
**பொல்லாத ஒருவனைநான் நல்லாய் என்றேன் ;**
**போர்முகத்தை யறியானைப் புலியேறு என்றேன் ;**
**மல்லாரும் புயமென்றேன் சூம்பல் தோளை ;**
**வழங்காத கையனையான் வள்ளல் என்றேன் ;**
**இல்லாது சொன்னேனுக்(கு) 'இல்லை' என்றான் ;**
**யானுமென்றன் குற்றத்தால் ஏகின் றேனே !**

நண் : அண்ணா, இப்பாட்டு எவ்வளவு அழகாயிருக்கிறது ! எவ்வளவு இனிமையாயிருக்கிறது ! பாட்டென்றால் இதுவன்றோ பாட்டு ! இத்தகைய நும் பாடலைக் கேட்டு நுமக்குப் பரிசில் வழங்காது அனுப்பினவன் மனிதரோடு வைத்து எண்ணத் தக்கவனல்லன். வாரும் ; போவோம்.

பயிற்சி :

I. விடை எழுதுக :

அ. இராமசந்திரக் கவிராயரைப் பற்றி நீ அறிந்தவை யாவை ?

ஆ. அவர் ஏன் பரிசில் பெறாமல் திரும்பினார் ?

இ. அவர் கூறிய பாட்டின் கருத்தைச் சுருக்கமாக எழுதுக.

II. எதிர்ப்பதங்கள் எழுதுக :

எளிது, நிரம்ப, சோர்வு, உலுத்தன், காடு, நற்குணம், கோழை.

III. வாக்கியங்களில் அமைக்க :

புலப்படுகிறது, வெள்ளிடைமலை, விதி விலக்கு, உழன்ற, உலுத்தன், உறைவிடம்.

IV. நீ இத்தகைய விநோதப் பாட்டு ஏதேனும் படித்திருக்கிறாயா ? படித்திருந்தால், ஒரு பாட்டை எழுதுக.

# 13. பஞ்சதந்திரம் - சந்தி விக்கிரகம்*



1. மலையாளக் கரையை அடுத்த மரங்கள் செறிந்த காடொன்றில் பல யானைகள் இன்புற்று வாழ்ந்திருந்தன. அவற்றின் அரசுக்கு '**சதுரதந்தன்**' என்பது பெயர். ஒரு ஆண்டில் மழை வளம் குன்றியபடியால், அக்காட்டிலிருந்த நீர்நிலைகளெல்லாம் வறண்டன. ஆதலால் யானைகள் நீரின்றித் தவிக்கலாயின. அது கண்ட யானையரசு, தன்னுடைய ஒற்ற யானைகளை எல்லாத் திசைகளிலும் சென்று நீர்நிலைகள் இருக்குமிடத்தைக் கண்டறிந்து வரும்படி அனுப்பியது.

2. அவ்யானைகள் சென்று, வெகுதூரத்தில் இருந்த **சந்திரசரசு** என்னும் பெயருடைய தடாகத்தைக் கண்டு வந்து, தங்கள் அரசுக்குத் தெரிவித்தன. உடனே யானைகளெல்லாம் அங்குச் சென்றன. ஏற்கெனவே அத்தடாகத்தின் அருகில்

---

* "மெத்தவும் பகைத்துள்ளாரை விரும்பி நட்பாக்கிய பின்னர்ச் சத்துரு நாசம் பண்ணல் சந்தி விக்கிரகம்."

வசித்து வந்த **சிலீமுகன்** என்னும் முயலரசு, யானைகளின் வருகையைக் கண்டு அஞ்சித் தனது மந்திரியாகிய **விசயன்** என்னும் முயலை அழைத்து, 'மதி மிக்க மந்திரியாரே, நாம் இதுகாறும் இச்சுனையின் அருகில் இனிது வாழ்ந்திருந்தோம்! இப்போது, இத்தும்பிகள் இங்கு வந்து சேர்ந்தபடியால், நாம் இனி இங்கிருத்தல் தகாது. இந்த அடவியை விட்டு அகல்வோமெனின், நீர் கிடைக்கக்கூடிய இடம் எதுவுமில்லை. ஆதலால், நாம் இங்கேயே தங்கியிருக்கவும், இங்கு வந்து குடியேறிய வேழங்கள் வனத்தைவிட்டு வெளியேறவும் தக்க சூழ்ச்சியைக் கண்டு கூறவேண்டுவது உமது கடமையாகும்,' என்று கூறிற்று.

3. முயலரசு கூறியதைக் கேட்ட விசயன், "அரசே, இந்த யானைகளை இங்கிருந்து விரட்டுவது அரிய செயலன்று. அடியேனுக்கு ஆணையிட்டால், அரை நொடியில் இவ்வாரணங்களை இங்கிருந்து வெளியேற்றுகிறேன், பாரும்," என்று பகர்ந்தது. அது கேட்ட சிலீமுகன் மனம் மகிழ்ந்து, "அறிவிற்சிறந்த அமைச்சரே, அங்ஙனமே நீர் சென்று அவ்வரிய காரியத்தை முடித்துவிட்டு வாரும்," என்று கூறி விசயனை அனுப்பியது.

4. வேந்தரால் ஏவப்பட்ட விசயன், விரைவாய்ச் சென்று சந்திரசரசின் அருகிலிருந்த ஒரு குன்றின்மீது ஏறி, யானைகளின் வரவை எதிர்நோக்கியிருந்தது. யானைகள், சதுரதந்தன் முன்னும், மற்றவை பின்னுமாகத் தானிருந்த குன்றின் அருகே வந்தவுடனே, விசயன் யானையரசை நோக்கி, 'ஐயா, கசராசரே, நீர் நலமோ?' என்று வினவியது. அது கேட்ட களிற்றரசு வியப்புற்று, 'நீர் யார்?' எனக் கேட்டது.

5. 'ஐயா, யான் சந்திரரால் ஏவப் பெற்ற தூதன். என் பெயர் விசயன். சந்திரர் தம் பெயரால் இத்தடாகத்தை உண்டாக்கியுள்ளார்; தாமும், தம் தேவிமாரும், இராக்காலங்களில் இங்கு வந்து இதில் விளையாடிச் செல்வது வழக்கம். பகற்காலங்களில் என்னை இதற்குக் காவலனாக அமர்த்தியுள்ளார். இச்சுனையில் தேவர்களும் இறங்குதல் கூடாது. நீரும் உம் இனத்தவரும் இச்சுனையில் இறங்கியது கண்டு, சின-

முற்று உங்களை உடனே இவ்விடத்தினின்று அகற்றுமாறு, அவர் என்னை ஏவினர்,' என்று முயலமைச்சுக் கூறியது.

6. அது கேட்ட யானையரசு, நடுக்கமுற்று, 'ஐயா, தூதரே, உம் அரசரை எமக்குக் காட்டும். யாங்கள் அறியாமையாற் செய்த இக்குற்றத்துக்கு அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, நாங்கள் உடனே சென்று விடுகிறோம்,' என்றது. தன் கருத்து வெற்றியடையுமெனக் கருதிய விசயன், 'நல்லது! இன்றிரவு உமக்கு அவரைக் காட்டுவேன்,' என்று கூறிற்று; அங்ஙனமே, அன்றிரவு சந்திரனுடைய சாயையும், உடுக்களின் சாயைகளையும் தடாகத்திற் காட்டி, 'இதோ! எங்கள் மன்னரும் தேவியரும் சுனையில் குளிப்பதைப் பாரும்,' என்று முயலமைச்சு யானையரசுக்குக் கூறி நின்றது. அக்காட்சியைக் கண்ணுற்ற களிறு, முயல் கூறியது முற்றிலும் உண்மையெனக்கொண்டு, மதியின் சாயைக்கு மண்டியிட்டு வணக்கம் செய்து, 'ஐயனே, அடியேங்கள் அறியாமற் செய்த பிழையைப் பொறுத்து மன்னித்தருள வேண்டும்!'' என்று கூறி எழுந்து, அக்கானகத்தை விட்டுத் தன் பரிவாரங்களோடு அகன்றது.

7. விசயனது மதி வன்மையைப் புகழ்ந்து முயல்கள் அங்கு மகிழ்வுற்றிருந்தன. இக்கதையால் '**புத்திமானே பலவான்**,' என்னும் முதுமொழியின் உண்மை நன்கு புலப்படுகின்றதன்றோ!

**பயிற்சி:**

I. விடை எழுதுக:

அ. சதுரதந்தனும் அதன் இனமும் ஏன் வேறு காட்டுக்குச் சென்றன?

ஆ. அங்கு வசித்த சிலீமுகன், யானைகளை ஏன் அங்கிருந்து விரட்ட விரும்பியது?

இ. யானைகளைக் காட்டினின்று துரத்த விசயன் செய்த தந்திரம் யாது?

II. கீழே தரப்பட்டுள்ள குறிப்புக்களின் உதவியால் ஒரு சிறு கட்டுரை வரைக :

1. காட்டில் மழையின்மை 2. யானைகள் சந்திரசரசை அடைதல் 3. விசயனது தந்திரம்.

III. சொல்லியுள்ளபடி செய்க :

1. மரங்கள் செறிந்த காடு ஒன்றில் பல யானைகள் இன்புற்று வாழ்ந்திருந்தன. (வாக்கியத்தின் முதற்சொல்லும் இறுதிச் சொல்லும் தவிர மற்ற சொற்களுக்குப் பதில் பொருள் மாறாதபடி வேறு சொற்களை அமைக்க.)

2. யானை அரசு தூதர்களை அனுப்பியது. நீர் நிலைகளைத் தேடச் சென்ற யானைகள் சதுரதந்தனுக்குச் சந்திர சரசைப்பற்றி அறிவித்தன. (இவ்வாக்கியங்களில் உள்ள செய்வினைகளை செயப்பாட்டு வினைகளாக மாற்றுக.)

3. அக்காட்சியைக் கண்ட களிறு, முயல் கூறியது முற்றிலும் உண்மையெனக் கொண்டு, மதியின் சாயைக்கு மண்டியிட்டு வணக்கம் செய்துவிட்டு, அக்கானகத்தை விட்டு அகன்றது. (இந்த வாக்கியத்தை நான்கு சிறு வாக்கியங்களாக எழுதுக.)

IV. வாக்கியங்களில் அமைக்க :

செறிந்த, இன்புற்று, ஒற்றர்கள், அடவி, சூழ்ச்சி, கடமை, வியப்பு.

V. இப்பாடத்தில் யானை, காடு என்னும் பொருள்களில் வந்துள்ள சொற்களை எடுத்தெழுதுக.

VI. அகராதி பார்த்து பொருள் எழுதுக :

நீர்நிலை, மதி, தும்பி, வேழங்கள், சூழ்ச்சி, வாரணங்கள், களிறு, அகற்று, சாயை, உடுக்கள்.

# 14. தென்முனை கண்ட தீரர்

1. நில உருண்டையின் வட, தென்முனைகளை ஆராய்ந்து அறியப் பலர் முயன்றனர். **ரோவால்ட் அமண்செ‌ன்** என்பவர் அவர்களுள் ஒருவர். அவர் **நார்வே** நாட்டினர். அவர் சிறந்த மாலுமி; அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; உலையா ஊக்கமுள்ளவர்; எத்தகைய இடுக்கண் நேரிடினும் அதனை எள்ளி குறுநகை கொள்ளும் வழக்கமுடையவர்; அவர் வட, தென் முனைகளைக் கண்டு ஆராய விரும்பினார். அன்றியும், ஐரோப்பாவிலிருந்து வடமேற்குத் திசையிற்சென்று, ஆசியாவை அடைய வேண்டுமென்பதும் அவரது பேராவல்.



2. அமண்சென் முதலிற் சில கலங்களிற் பணியாற்றி அனுபவமும் புகழும் பெற்றார்; ஆதலால் தென்முனையை ஆராய்வதற்குப் புறப்பட்ட **பெல்ஜிகல்** என்ற கப்பலில் தலைவராய் நியமிக்கப் பெற்றார். அவர் தீரம் மிக்க தம்முடைய துணைவர்களுடன் கலத்தைச் செலுத்திக்கொண்டு **தென் விக்டோரியாலந்தை** அடைந்த போது, அக்கலம் உறைபனியிற்சிக்குண்டது. மாலுமிகளுள் சிலரைக் **கடல் நோய்** பற்றியது. சிலர் தம் மனநிலையிழந்து, பயத்தால் பீடிக்கப்பட்டனர். ஆனால், அமண்சென் நம்பிக்கை இழக்கவில்லை. நெடுநாட்கள் சேகரித்து வைக்கப்பட்ட உணவைக் கைவிட்டுப் புதிதாய் தயாரித்த உணவை உண்டால் கடல் நோய் தீரும் என்பதை அவர் அறிவார். ஆதலால், அளவற்ற துன்பங்களுக்கிடையே, அவர் தம் கலத்தை விட்டுத் தொலையிற்சென்று, பறவைகளையும் மீன்களையும் பற்றிக்கொண்டு வந்து, அவற்றை சமைக்கச் செய்து, நோயுற்றவர்கட்கு அளித்து வந்தார். அதனால் மாலுமிகள் நோய் நீங்கப்

பெற்றார்கள். பின்னர், பனிப்படலம் கரைந்து, கலத்தைச் செலுத்தக்கூடிய நிலை தோன்றிய போது, அமண்சென் தம் நாடு திரும்பினார்.

3. சின்னாட்களுக்குப் பிறகு, தீரம் மிக்க அறுவரைத் தமக்குத் துணையாகக் கொண்டு, அமண்சென் ஒரு மீன்-கலத்திலேறி, வடமுனை நோக்கிப் புறப்பட்டார்; தம் கலத்தை மெல்ல மெல்லச் செலுத்திப் **பீல் சௌண்டு** என்னுமிடத்தை அடைந்தார். அதற்கப்பால், அவர்களுக்கு முன் வேறெவரும் சென்றதில்லையாதலால், வழிப்படத்தின் உதவியின்றி, தட்டித்-தடுமாறிக் கலத்தைச் செலுத்திக்கொண்டு, வழிப்படமொன்-றையும் தயாரித்துக்கொண்டே சென்றார் அமண்சென். ஒரு நாள் கடும்புயல் வீசத் தொடங்கியது. கலம் கட்டுக்கு மீறிச் செல்லலாயிற்று. பேரலையொன்றால் தாக்கப்பட்டுக் கலத்தின் துடுப்பு அதன் அச்சை விட்டு அகன்றது. கலமும் ஒரு பாறையை அணுகியது. அரைக்கணத்தில் தங்கள் ஆயுள் முடிந்துவிடும் என்று எண்ணினார்கள், அமண்செனும் அவர் நண்பர்களும்.

4. ஆனால் ஆண்டவரது அருள் திறத்தை என்-னென்று புகழ்வது! மற்றொரு பெருந்திரை மறு கணத்தில், வழி தப்பிப் பாறையில் மோதவிருந்த கலத்தை அதன் வழியிற்சேர்த்தது; மற்றுமொரு பேரலை, அச்சை விட்-டகன்ற துடுப்பை மீண்டும் தன்னிலையடையச் செய்தது. அனைவரும் அகம் மிக மகிழ்ந்து, ஆண்டவரைத் துதித்தனர். அமண்சென் மிகுந்த விழிப்புடன் கலத்தை மெல்லச் செலுத்தி, இக்காலத்தில் '**வில்லியம் அரசர் தீவு**' என வழங்கும் தீவை அடைந்தார். கலம் ஏற்றதோர் இடத்தில் நிறுத்தப்பட்டது. அமண்செனும் நண்பர்களும் தீவிற்சென்று, தங்குமிடங்களை அமைத்தார்கள். அப்போதே அங்குக் குளிர் காலம் தொடங்கி விட்டபடியால், அவர்கள் அங்கேயே தங்க நேரிட்டது. அமண்சென் அங்கோர் ஆய்கூடத்தை ஏற்படுத்தினார். அதற்கு வேண்டிய '**மாக்னெட்டிக்கு நீடில்**' என்று கூறப்படும் **இழுதிறன் ஊசி**களையும், அவற்றை அமைத்தற்கான சலவைக் கற்களையும்,

வெப்ப தட்பங்கள் அவற்றைத் தாக்காமல் மூடுவதற்கான செப்பாணிகள் அறைந்து ஆக்கப்பெற்ற பெட்டிகளையும் அமண்சென் தம்முடன் கொண்டு சென்றிருந்தார்.

5. அமண்சென் சில உண்மைகளைத் தம் ஆராய்ச்சியால் அறிந்தார். நில உருண்டையின் வடமுனையில் இழுதிறன் உள்ளது என்பது நாம் அறிந்துள்ள உண்மை. ஆதலாற்றான் இழுதிறன் ஊசி எப்போதும் தென் வடலாகவே நிற்கிறது. ஆனால், இந்த ஊசி குறிக்கும் வடதிசையானது வடமுனை வான்மீன் உள்ள திசைக்குச் சற்று மேற்கிலோ அல்லது கிழக்கிலோ உள்ளது. இவ்வூசி, சில தருணங்களில் முன் காட்டிய திசையைக் குறிக்காமல் சிறிது மாறுபடுவதும் உண்டு. ஆதலால், இழுதிறமுள்ள இடம் வடமுனையில் இடம் மாறி வருகின்றது போலும் என அவர் அறிந்தார்.

6. இங்ஙனம் அமண்சென் தம் ஆராய்ச்சியை நடத்திக்கொண்டு பல மாதங்கள் அத்தீவிலேயே தங்கியிருந்தார். அக்காலத்தில் அவர்கள் சுற்றுப்புற இடங்களுக்குச் சென்று, துருவக் கரடிகளையும், கலைமான்களையும் வேட்டையாடிக் கொண்டு வருவார்கள். ஒரு நாள் அவர்கள் எதிர்பாராமற்சில மக்களைக் கண்டார்கள். அம்மக்களே அப்பனிப் பிரதேசத்தில் வாழும் **எஸ்கிமோக்கள்**. அவர்கள் வாழ்க்கையைப் பற்றி நீ நன்கு அறிவாயன்றோ ?

7. கோடை காலம் தொடங்கியவுடனே, அமண்செனும் நண்பர்களும் மேலும் வடக்கு நோக்கிச் சென்றார்கள். செல்லும்போது அவர்கள் திமிங்கில வேட்டையாடுபவரின் கலங்களைக் கண்டார்கள். அப்போதுதான், வட அமெரிக்காவின் வடக்கில் உள்ள **அலாஸ்கா**வுக்கு வடக்கே தாங்கள் வந்திருந்ததை அமண்சென் அறிந்து, ஆனந்தம் அடைந்தார். அவர் சென்ற வழியே அவர் கண்டறிய ஆவல் கொண்டிருந்த வடமேற்கு வழியாய் அமைந்தது.

8. ஆசியாவுக்கு வடமேற்கு வழி கண்ட அமண்சென், அகமகிழ்ச்சியுற்றுத் தம் நாட்டுக்குத் திரும்பினார். நார்வே

நாட்டினர் அவர் அடைந்த வெற்றியைத் தம்முடையதாகவே கருதி மகிழ்வுற்றனர்.

9. சில மாதங்களுக்குப் பிறகு, அமண்சென் நில உருண்டையின் தென்முனையைச் சூழ்ந்துள்ள **அண்டார்ட்டிகாவை** ஆராய முற்பட்டார். அவர் 1910-ஆம் ஆண்டில் தென்முனை நோக்கிப் புறப்பட்டார். அப்போது **ஸ்காட்டு** என்னும் ஆங்கிலேயரும் அண்டார்ட்டிகாவை ஆராய முனைந்திருந்தார் என்பதை அறிந்த அமண்சென், அவருக்குத் தம் முயற்சியைப் பற்றி ஒரு கடிதம் எழுதிவிட்டுத் தம் பயணத்தை மேற்கொண்டார். 1911-ஆம் ஆண்டில் நில உருண்டையின் தென்முனையில் அடி வைக்கும் பேறு, அமண்செனுக்குக் கிட்டியது. அவருக்கு முன் செல்ல விரும்பிய ஸ்காட்டு, எதிர்பாராத இடையூறுகளால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அமண்சென் தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றிபெற்றுத் தாய் நாடு திரும்பியபோது, அவர் புகழ் உலக முழுவதும் பரவியது.

10. தாய் நாடு திரும்பிய அமண்சென், சின்னாட்களில் வானூர்தியிற்சென்று வட முனைப் பகுதிகளை ஆராய்ந்து விட்டுத் திரும்பினார். ஆகவே, நிலவுருண்டையின் வட தென் முனைகளைக் கண்டதன்றி, ஆசியாவுக்கு வடமேற்கு வழியையும் கண்ட அமண்சென், உலக பெருமக்கள் வரலாற்றில் இடம் பெற்றுத் திகழ்கின்றார்.

பயிற்சி:

**I. விடை எழுதுக:**

அ. அமண்சென் என்பவர் யார்? அவரது ஆவல் யாது?

ஆ. அவர் செய்த முதற்பிரயாணம் எது?

இ. தென் விக்டோரியாலந்தில் தம்முடைய மாலுமிகளுக்கு உண்டான கடல் நோயை அவர் எவ்வாறு நீக்கினர்?

ஈ. வடமுனை நோக்கிச் சென்றபோது அமண்சனுக்கு ஏற்பட்ட இன்னல்கள் யாவை?

உ. அமண்சனும் அவர் நண்பர்களும் வில்லியம் அரசர் தீவில் என்ன ஆராய்ச்சி நடத்தினார்கள்?

ஊ. வடமுனையை ஆராயச் சென்ற அமண்சென், எம்மார்க்கத்தை, எப்படிக் கண்டறிந்தார்?

எ. அமண்சென் கண்டறிந்த பிற இடங்கள் யாவை?

II. கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொன்றையும் பற்றிக் குறிப்பெழுதுக:

1. அமண்சென்னின் வடமுனை ஆராய்ச்சி
2. அவரது தென்முனை ஆராய்ச்சி
3. இழுதிறன் பற்றிய அவரது ஆராய்ச்சி

III. வாக்கியங்களில் அமைக்க:

அஞ்சா நெஞ்சம், உலையா ஊக்கம், ஆவல், மனநிலை, பனிப்படலம்.

IV. சொல்லியுள்ளபடி செய்க:

1. ரோவால்ட் அமண்சென் அவர்களுள் ஒருவர்.
அவர் நார்வே நாட்டினர்.
அவர் சிறந்த மாலுமி.
அவர் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்.
அவர் உலையா ஊக்கம் உள்ளவர்.

(இவற்றை ஒரே வாக்கியமாக எழுதுக.)

2. அவர் 'பெல்ஜிகல்' என்னும் கப்பலின் தலைவராக்கப்பட்டார். (செயப்பாட்டு வினையைச் செய்வினையாக மாற்றி வாக்கியத்தை அமைக்க.)

3. அவர் மனநிலை இழந்து தடுமாற்றமுற்றார். (தடித்த எழுத்தில் உள்ள தொடருக்குப் பதில் வேறு தொடர் எழுதுக.)

V. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

உலையா, ஊக்கம், இடுக்கண், குறுநகை, கலம், பனிப்படலம், அருள், திறாறு, ஆய்கூடம், இழுதிறன், உடுக்கள், வடமுனை, வடமீன்.

# 15. சண்டை நல்லதா, — — சமாதானம் நல்லதா?

1. பண்டைக் காலத்தில் வட இந்தியாவிற் பல ஆரிய அரசுகள் தோன்றின என்பது வரலாற்று நூல் கூறும் உண்மை. அவற்றுள் குரு குலத்து ஆரியரால் நிறுவப்பெற்ற அரசு குரு நாடு என்னும் பெயர் பெற்றது. **அத்தினபுரத்தைத்** தலைநகராகக் கொண்டு குரு நாட்டை மாட்சியுற ஆட்சிபுரிந்த மன்னர்களுள் **திருதராட்டிரன்**, **பாண்டு** என்பவர்கள் பிரசித்தி பெற்றவர்கள். அவர்களுள் முன்னவன் அண்ணன்; பின்னவன் தம்பி. முன்னவனுக்குத் **துரியோதனன்** முதலிய நூற்றுவர் மைந்தர் பிறந்தனர். அவர்கள் **கௌரவர்கள்** என்று வழங்கப் பெற்றார்கள். பாண்டுவுக்குத் **தருமன்**, **பீமன்**, **அருச்சுனன்**, **நகுலன்**, **சகாதேவன்** என்னும் ஐவர் புதல்வர் தோன்றினர். அவர்கள் **பாண்டவர்** என்று வழங்கப்பட்டார்கள்.

2. அவர்கள் நூற்றைவர்க்கும் போர்க் கல்வியைக் கற்பித்து வந்தார், **துரோணசாரியார்** என்ற வில்லாசிரியர். துரியோதனனால் பெரிதும் விரும்பப் பெற்றவனான **கர்ணன்** என்பவனும் அவர்களுடன் இருந்து வித்தைப் பயின்று வந்தான்.

3. ஒரு நாள் அருச்சுனன் உள்ளத்தில் "சண்டை நல்லதா, சமாதானம் நல்லதா?" என்ற ஐயம் எழுந்தது. அவன் உடனே அருகில் இருந்த கர்ணனை நோக்கி, "கர்ண, சண்டை நல்லதா, சமாதானம் நல்லதா?" என்று கேட்டான். அது கேட்ட கர்ணன், அருச்சுனனிடம் பகை கொண்டிருந்தவனாதலால், அவனை இகழ்தற்கேற்ற வாய்ப்புத் தனக்குக் கிடைத்ததென மகிழ்ந்து, "அருச்சுன, சமாதானந்தான் நல்லது," என்று விடை கூறினான். அருச்சுனன், "காரணம் யாது?" என்று வினவினான். "காரணம் கூறுகிறேன்; கேள்:

---

குறிப்பு: இது திரு சி. சுப்பிரமணிய பாரதியாரின் கட்டுரை யொன்றைத் தழுவி எழுதப்பட்டது.

சண்டை நேர்ந்தால், நான் உன்னை நன்கு புடைப்பேன். அதனால் உனக்குத் துன்பம் நேரிடும். நானோ, உயிர்கள்பால் அருள் மிக்கவன். ஆதலால், உன் துன்பத்தைக் கண்டு என் மனமும் துன்பப்படும்,'' என்று கூறினான் கர்ணன். அது கேட்டு சீற்றமடைந்த கிரீடி, "அடே கர்ணா, நம் இருவரைக் குறித்ததன்று நான் கேட்ட கேள்வி. பொதுவாக உலகத்துக்கு எது நல்லது என்று கேட்டேன்,'' என்றான். கர்ணன், "அருச்சுனா, எனக்கு உலக விவகாரங்களில் அத்துணை ஆர்வம் இல்லை,'' என்று கூறிவிட்டு, அவண் விட்டகன்றான்.

4. பிறகு அருச்சுனன், தன் ஐயத்தை நீக்கிக்கொள்ளக் கருதித் துரோணரிடம் சென்று, அவரை வணங்கித் தன் சந்தேகத்தைத் தெரிவித்தான். துரோணர், "சண்டைதான் மிகவும் நல்லது. ஏன் எனில், சண்டையிற் வெற்றி பெற்றால், பொன், பொருள், நாடு, புகழ் முதலிய அனைத்தும் கிடைக்கும். சமாதானத்தில் இவையனைத்தும் கிடைப்பது சந்தேகம்,'' என்று விடையிறுத்தார்.

5. ஆசிரியரின் கூற்று அருச்சுனனுக்குச் சரியென்று தோன்றவில்லை. ஆதலால், அவன் தன் பாட்டனாரான பீஷ்மரிடம் சென்று, தன் ஐயத்தை விளக்குமாறு கேட்டான். அது கேட்ட பீஷ்மர் சிறிது திகைத்தார். பிறகு தனஞ்சயனைப் பார்த்து, "அருச்சுனா, சண்டையை மேற்கொண்டாலும் சமாதானத்தை மேற்கொண்டாலும் தருமமே வெற்றி அடையும். மாந்தரனைவரும் ஆண்டவர் மக்கள். ஆண்டவரோ, அன்பு வடிவானவர். அவர் அருளை அடைவதற்கு அன்புடைமையே சிறந்த வழி; அன்புடைமைக்குச் சண்டை முரணானது; சமாதானமே அன்பின் அறிகுறி. ஆதலால, அருச்சுனா, சமாதானமே சாலச் சிறந்தது,'' என்று கூறி முடித்தார்.

6. சில நாட்களுக்குப் பிறகு, **வேத வியாசர்** என்ற முனிவர் அத்தினபுரத்திற்கு வந்தார். காண்டீபன் அவரை வணங்கி, "பெரியீர், சண்டை நல்லதா, சமாதானம் நல்லதா?''

என்று கேட்டான். "தருணத்துக்குத் தக்கபடி மேற்கொண்டால், இரண்டும் நல்லனவே," என்று வியாச முனிவர் பதிலளித்தார்.

7. பல ஆண்டுகட்குப் பின், பாண்டவர் பன்னிரண்டாண்டு காட்டில் தங்கியும் ஓராண்டு கரந்துறைந்தும் மீண்ட போது, அவர்கள் தங்கள் நாட்டைப் பெறுவதற்கான வழிகளை ஆராயக் கண்ணபிரானுரின் துணையை நாடினுர்கள். அப்போது அருச்சுனன் அவரை நோக்கி, "ஐயனே, சண்டை நல்லதா, சமாதானம் நல்லதா?" என்று கேட்டான்.

8. உடனே கண்ணபிரானுர், "அப்பா அருச்சுனு, காலமறிந்து மேற்கொள்ளப்படின், இரண்டும் நல்லனவே. ஆனுல், இப்போதைக்குச் சமாதானமே நல்லது. ஆதலாலே தான் யான் சமாதானம் பேசுவதற்குத் துரியோதனன் பக்கல் போகிறேன்," என்று கூறி, அருச்சுனன் கொண்டிருந்த அரிய ஐயத்தை அகற்றினுர்.

பயிற்சி :

I. விடை எழுதுக:

அ. கௌரவர் யாவர்? பாண்டவர் யாவர்?

ஆ. கர்ணன் யார்?

இ. அருச்சுனன் உள்ளத்தில் தோன்றிய ஐயம் யாது?

ஈ. அந்த ஐயத்துக்குக் கர்ணன் கூறிய விடை யாது?

உ. அருச்சுனன் சந்தேகத்துக்குத் துரோணர் கூறிய விடை யாது?

ஊ. பீஷ்மர் அருச்சுனனுக்குக் கூறியது யாது?

எ. வேத வியாசர் கூறியது யாது?

ஏ. அருச்சுனன் சந்தேகத்துக்குக் கண்ணபிரானுர் கூறிய மறுமொழி யாது?

ஐ. 'சமாதானம்' என்னும் பொருள் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

ஒ. 'சண்டை நல்லதா, சமாதானம் நல்லதா?' என்னும் வினவுக்கு உனது விடை யாது?

II. வாக்கியத்தில் அமைக்க:

நிறுவப் பெற்றது, உள்ளம், வாய்ப்பு, அருள், புடைத்-தான், முரணானது, சால.

III. எதிர்ப்பதங்கள் எழுதுக:

பண்டைக்காலம், முன்னவன், பகை, துன்பம், முரண், நல்லன, மேற்கொண்டால்.

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

வரலாற்று நூல், பிரசித்தி பெற்றவர், உள்ளம், இகழ்-வதற்கு, வாய்ப்பு, அருள், விடையிறுத்தார், கூற்று, முரண், மேற்கொண்டால், அகற்றினர்.

# 16. இளவரசர் துறவு

## (நாடகக் காட்சி)

| | |
|---|---|
| களம் : | வஞ்சிமாநகரத்தில் சேர மன்னன் கோலு-மண்டபம் |
| காலம் : | முற்பகல் |
| பாத்திரங்கள் : | இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், அவன் மூத்த மகன் செங்குட்டுவன், இளைய மைந்தர் இளங்கோ, மந்திரிகள், பிரதானிகள், சோதிடர் |

[இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் சேர மன்னன் சிங்காதனத்தில் அமர்ந்திருக்கிறான். அவன் வலப் பக்கம் செங்குட்டுவனும் இடப் பக்கம் இளங்கோவும் பீடங்களில் இருக்கின்றார்கள். மந்திரிகளும், பிரதானிகளும் தங்கள் பீடங்களில் இருக்கின்றார்கள்.]

**இமயவரம்பன் :** *அறிவு சான்ற அமைச்சர்களே, வெற்றி மிக்க வீரர்களே, சின்னாட்களாக எம் சிந்தையிற் சில எண்ணங்கள் தோன்றி எம்மை இன்புறச் செய்கின்றன. அவற்றைக் கூறப் பெரிதும் விழைகின்றோம்.*

**அமைச்சர் :** *அவை யாவையோ? வெளியிட்டால் யாங்களும் கேட்டு இன்புறுவோமன்றோ?*

**இமயவரம்பன் :** *அங்ஙனமே கூறுவோம்: ஆண்டவன் அருள் வலியாலும், அமைச்சரின் அறிவுத்திறனாலும், படைத்-தலைவரின் தோள் பலத்தாலும் யாம் அரியணையில் அமர்ந்த நாள் தொடங்கி இதுகாறும் எமக்கு வெற்றி-மேல் வெற்றி கிடைத்து வருகின்றன; கடம்ப அரசர்-களைக் கண்ணிமைப் போதில் போரிற் புறங்கண்டோம்; தமிழ் நாடு முழுவதும் அடிப்படுத்தி ஆட்சி பூண்டோம்; வடநாட்டின்கண்ணும் எமது புகழைப் பரப்பினோம்;*

இமயத்தில் எமது விற்கொடியைப் பொறித்தோம்; போர்களில் வெற்றியையும், புகழின் எல்லையையும் கண்டு களித்தோம். இனி யாம் எய்தி மகிழத் தக்கது, இவ்வுலகத்தின்கண் யாதொன்றுமில்லை; ஆதலின், அந்தமில் இன்பத்தை அடைய முயல்வதே எமது குறிக்கோளாயிற்று. இதனை உங்கட்குக் கூறி, மேல் ஆக-வேண்டுவதைப்பற்றி ஆலோசிப்பதே எமது கருத்து.

**ஓர் அமைச்சர்:** மன்னர் மன்னரே, நுமது கூற்றுச் சாலச் சிறந்ததே! அருள், வலி, ஆண்மை, கல்வி என்னுங் குண நலன்களோடு திகழும் நும் மூத்த மைந்தர் செங்குட்டு-வர்க்கு இளவரசுப் பட்டம் ஈந்த நாள் முதல், பொன் மலர் நாற்றமும் பெற்றுற்போல, நமது நாடு எல்லாத் துறைகளிலும் மேன்மேலும் முன்னேறி வருகின்றது. அன்றியும், கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவைகளிற் சிறந்து விளங்கும் நும் இளைய மைந்தர் இளங்கோ, 'பெருநம்பி' என்னும் பதவியை வகிக்கத் தொடங்கிய நாள் முதல் அவரே அமைச்சர் குழுவிற்குத் தலைமை தாங்கி அரசியற்காரியங்கள் அனைத்தையும் ஆழ்ந்த அனு பவமுள்ள எங்களைக் காட்டிலும் இங்கிதமாகக் கவனித்து வருகின்றார். ஆதலின், அரசர்க்கரசே, நம் நாட்டு அரசியலைப்பற்றி எட்டுணையும் உமக்குக் கவலை வேண்டுவதின்று. எனினும், அரசியல் தேரை மேலும் சில ஆண்டுகள் நீரே செலுத்துவதை நும்முடைய புதல்-வர்களும், நாங்களும் விரும்புகிறோம்.

[வாயிற்காவலன் வந்து அரசனை வணங்குகிறான்.]

**இமயவரம்பன்:** காவலோய், ஏதேனும் விசேஷம் உண்டோ?

**காவலன்:** மன்னர்க்கு மன்னரே, வணக்கம்! சோழ நாட்டி-லின்றும் ஒரு சோதிடர் வந்துள்ளார்; தேவரீரைக் காண விரும்புகிறார்.

**இமயவரம்பன்:** நல்லது; வரட்டும்.

[காவலன் போகின்றான். சோதிடர் அரசன் முன் வருகின்றார்.]

**சோதிடர் :** திக்கெல்லாம் புகழும் சேர மகிபரே, நுமக்கு மங்களமுண்டாகட்டும்!

**இமயவரம்பன் :** ஐயா, வாரும்: (ஒரு பீடத்தைக் காட்டி) இதில் இரும். நீவிர் சோதிடம் வல்லவர் என்பதை வாயிற்காவலனால் அறிந்தோம். உண்மைதானே ?

**சோதிடர் :** சேரர் பெருமானே, ஆம். நான் ஒரு சோதிடனே; கோட்சாரம் எதுவும் குறிக்காமலேயே, ஒருவருடைய உடல் அமைப்பைக்கண்டு அவருடைய எதிர்கால நிகழ்ச்சிகளைக் கூறவல்லேன்.

**இமயவரம்பன் :** அப்படியா! இது யாம் கேட்டறியாத விந்தை. நன்று! நன்று! நாம் இந்த அரச பாரத்தை இன்னும் எத்தனை நாள் சுமந்திருக்கவேண்டும் என்பதை உம்மால் கூறமுடியுமா ?

**சோதிடர் :**—வானவர் குலத்து மகிபரே, அங்ஙனமே கூறுகின்றேன். (சிறிது தாமதிக்கிறார்.)

**இமயவரம்பன் :** சோதிடரே, என்ன யோசிக்கின்றீர் ? உண்மையைக் கூறத் தயங்குவானேன் ? சாஸ்திர விஷயத்தில் எதற்கும் அஞ்சவேண்டுவதின்று. உண்மையை மறைக்காமல் வெளியிடும். மனக் கலக்கம் எட்டுணையும் வேண்டா.

**சோதிடர் :** மன்னர்பிரானாகிய உம்முடைய உறுப்பிலக்கணத்தை நுணுகி நோக்குங்கால், இறைவன் இன்னருளைப் பெறுதற்கு நீங்கள் நெடுங்காலம் காத்திருக்க வேண்டுவதில்லை.

**இமயவரம்பன் :** சோதிடரே, இதனைக் கூறுதற்கா இவ்வளவு அச்சம்! இச்செய்தியை யான் இன்புடன் வரவேற்கிறேன். நீர் வருமுன் இதுபற்றியே நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். இஃது இருக்கட்டும். (மூத்த மைந்தனைச் சுட்டி) இதோ அமர்ந்திருக்கும் இவன் எம் மூத்த மைந்தன்.

செங்குட்டுவன் என்பது இவன் பெயர். (இளைய மைந்தரைச் சுட்டி) இதோ இருக்கும் இவன் எம் இரண்டாம் புதல்வன். இளங்கோ என்பது இவன் பெயர். இவர்களைப்பற்றி நீர் என்ன கூறுகின்றீர்?

**சோதிடர்:** (அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்த பின்) சேர நாட்டதிபரே, இந்த இருவருள் அந்தமில் இன்பம் அளிக்கவல்ல அரசை அடையப் போகிறவர் மூத்தவரல்லர்; இளையவரே.

[**மன்னன் வியப்படைகின்றான்; அவையிலுள்ள அனைவரும் ஆச்சரியமுறுகின்றனர். செங்குட்டுவன் முகத்திற்கோபக்குறி தோன்றுகிறது. மன்னனையும், சோதிடரையும், இளங்கோவையும் மாறி மாறிப் பார்க்கின்றான். இவற்றைக் கவனித்த இளங்கோ தமது பீடத்தினின்று எழுந்து நிற்கின்றார்.**]

**இளங்கோ:** சோதிடரே, நீர் உமது கலையில் வல்லுநராய் இருக்கலாம். ஆயினும், காலத்தையும், நாட்டுப் பழக்க வழக்கங்களையும் துணைக்கொண்டு உண்மையை ஆராய்ந்து கூறவேண்டும். மூத்தவன் இருக்க இளையவன் அரியணையில் அமர்வது இந்நாட்டு வழக்கமன்று. முன்னோருடைய நெறியினின்று விலகுவது சேரநாட்டில் எஞ்ஞான்றுமில்லை. தருமத்துக்கு மிஞ்சிய சாஸ்திரம் ஏது? உமது சோதிடம் பொய்த்தது என்பதை அறிய நீர் பலநாள் காத்திருக்க வேண்டா. சில நிமிடங்களுக்குள் கண் கூடாகக் காண்பீர். உமது கூற்று என் தந்தையாருக்கு மனக் கலக்கத்தையும், என் தமையனாருக்குச் சினத்தையும், சபையார்க்கு அச்சத்தையும் விளைவித்துள்ளது. அவற்றை இதோ ஒருநொடியிற் போக்குவேன்! என் உறுதி மொழியை எல்லாருங் கேளுங்கள்; எல்லாம் வல்ல இறைவன்மீது ஆணை! தரும தேவதை இதற்குச் சாட்சி! என் தந்தையார் இதனைக்கேட்டு ஆறுதல் அடையட்டும்; என் தமையனார் அகம் மகிழட்டும். அவையோர் கேட்டு என்னை ஆசிர்வதிக்கட்டும். நான் இன்றே-இப்பொழுதே - துறவு பூண்கின்றேன்! இது வரையில் இவ்வரண்மனை எனது இருப்பிடமாய் இருந்தது. இனிக்

குணவாயிலில் உள்ள [கோவிலே எனது இருப்பிடமா-யிருக்கும். இஃது உறுதி! முக்காலும் உறுதி! சோதி-



டரே, நீர் கூறியது உண்மை. இதுவரையில் யான் யுவ-ராஜனாய் இருந்தேன்; இனித் தவராஜனாவேன். உங்கள் அனைவர்க்கும் என் வணக்கம்! இதோ செல்கின்றேன். [சபையை விட்டு வெளியே போகின்றார்.]

[திரை]

பயிற்சி:

I. இக்காட்சியில் அடங்கிய கதையை உரை நடையில் எழுதுக.

II. இப்புத்தகத்தில் 13-ஆம் பாடத்தில் உள்ள கதையை நாடகக் காட்சியாக எழுதுக.

III. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

சான்ற, விழைகின்றேன், அரியணை, புறங்கண்டோம், பொறித்தோம், அந்தமில் இன்பம், குறிக்கோள், பெரு-நம்பி, எட்டுணை, மங்களம், கோட்சாரம், மகிபர், உறுப்-பிலக்கணம், என்ஞான்றும்.

## 17. தலையாலங்கானத்துப் போர்

1. தஞ்சை ஜில்லாவில் உள்ள **திருவாரூர்** என்னும் சிவ-தலத்துக்கு அண்மையில் மற்றொரு சிவதலம் இருக்கிறது. **தலை-யாலங்காடு** என்பது அதற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர். அஃது ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் **தலையா-லங்கானம்** என வழங்கப்பட்டு வந்தது. அங்கு **நெடுஞ்செழியன்** என்ற பாண்டிய மன்னன், சேர, சோழ மன்னர்களையும், அவர்களுக்குத் துணையாய் வந்த ஐவர் சிற்றரசரையும் போரில் வென்று புகழை நிறுவினான். அப்போர் பண்டைக் காலத்-தில் தமிழ் நாட்டில் நடைபெற்ற மிகப் பெரிய போர்களுள் ஒன்றாகக் கருதப்படுவது. அதன் வரலாற்றை அறிய நீ விரும்புகிறாய் அல்லவா ?

2. நம் தமிழ் நாடு வடக்கில் **நெடியோன் குன்றம்** என வழங்கும் **திருப்பதி மலை**யையும், தெற்கில் **குமரி முனை**யையும், கிழக்கிலும் மேற்கிலும் கடல்களையும் எல்லைகளாகக் கொண்-டிருந்தது என்பதை நீ அறிவாய். இதனைப் பாரதியாரவர்கள்,

**' நீலத்தி ரைக்கட லோரத்திலே — நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை — வட
மாலவன் குன்றம் இவற்றிடையே — புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு,''**

என்று எழிலுறக் கூறியுள்ளார். இதன்கண் பண்டைக் காலத்-தில் மூன்று பேரரசுகளும், சில சிற்றரசுகளும் விளங்கின. பேரரசுகள் மூன்றும் சேர, சோழ, பாண்டியர் என்ற மும்முடி வேந்தர்களின் ஆட்சியிலிருந்தன. சிற்றரசுகளை ஆண்டவர்-களுள் சிலர், இப்பேரரசர்கட்கு அடங்கியும், மற்றையோர் சுதந்தரமாகவும் வாழ்ந்து வந்தனர். இம்மும்முடி வேந்தர் அடிக்கடி தம்முள் மாறுபட்டுப் போர் புரிந்த நிகழ்ச்சிகள் பல, சங்க இலக்கியங்களிலும், தமிழ் நாட்டு வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளன. தலையாலங்கானத்துப் போர் அவற்-றுள் ஒன்றாம்.

3. தம் குண நலன்களாலும், போர்த்திறத்தாலும் புகழைப் பரப்பிய பாண்டிய மன்னருள் **நெடுஞ்செழியன்** என்பான் ஒருவன். அவன் ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் **மதுரையம்பதியைத்** தலைநகராய்க் கொண்டு பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். இளைஞனாயிருந்தபோதே அரியணையிலமரும் வாய்ப்பு அவனுக்குக் கிட்டியது. ஆயினும், அவ்விளம்பருவத்திலேயே அளப்பரிய ஆட்சித் திறம் படைத்திருந்த அவன் சீரிய முறையில் செங்கோல் நடத்தி வந்தான். குடிகளின் நன்மையும் முன்னேற்றமுமே அவனுடைய குறிக்கோள். பயிர்த்தொழிலும், கைத்தொழிலும், வாணிகமும் அவன் ஆட்சியில் நலமுற்றுத் திகழ்ந்தன. அன்றியும், செழியர்பிரான் செந்தமிழ்ப் பாக்கள் இயற்றவல்ல பெரும்புலவனாய் விளங்கினான். தமிழ்ப் புலவர்களையும், கூத்தர், பாணர், விறலியர் முதலிய பரிசிலர்களையும் இன்முகத்துடன் வரவேற்று, அவர்கள் அகமகிழப் பரிசில்கள் வழங்கும் பான்மையும் அவனிடமிருந்தது. இக்காரணங்களால் அவனுடைய புகழ் தமிழ் நாடெங்கும் பரவியது. அது கண்டு அழுக்காறுற்ற மற்றப் பேரரசர்களும் சிற்றரசர்களும் அவனுடன் பொருது, அவனைப் புறங்காட்டச் செய்து, அவனது புகழை மங்கச் செய்ய விரும்பினார்கள்.

4. இத்தகைய புன்றொழில் புரிய முற்பட்டவன் **யானைக் கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை** என்பான். அவன் சேர நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி புரிந்து வந்தான். அவன் பெரும்படை ஒன்றைத் திரட்டிச் சென்று பாண்டி நாட்டைத் தாக்கினான். ஆயினும், மனவலியும், தோள்வலியும் மிக்க பாண்டிய மன்னன், அவனை எளிதிற் புறங்கண்டான். அதனால், அவன் புகழ் மேலும் ஓங்கியது. அது, சேர சோழர்களின் பொறாமைக் கனலில் நெய் சொரிந்ததுபோல ஆயிற்று.

5. சோழனும், சேரனும் நெடுஞ்செழியனை எவ்வாற்றானும் அழிக்கவேண்டும் என்னும் முடிவுக்கு வந்தனர்; தத்தம் படைகளைத் திரட்டினர். அவர்களுக்கு உதவியாக **எழினி, எருமையூரன், இளங்கோவேண்மான், திதியன், பொருநன்** ஆகிய

ஐவர் சிற்றரசரும் தத்தம் படையோடு கிளம்பினர். எழுவர் படைகளும் ஒன்று திரண்டு பாண்டி நாட்டை நோக்கிச் சென்றன. பெருங்கடல் பொங்கி எழுந்ததுபோல முழங்கிக்-கொண்டு சென்ற அக்கூட்டுப் படையில் இடம்பெற்றிருந்த எண்ணற்ற தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும், கணக்கற்ற காலாட்களையுங் கண்டார் அனைவரும் அச்சமுற்-றனர். 'இத்துணைப் பெரும்படையை எங்ஙனம் எதிர்த்து நிற்பான் நெடுஞ்செழியன்!' என்றனர் பலர். 'அங்ஙனம் கூறுவது கூடாது. பாண்டியன் படைப் பலம் மிக்கவன்; இளைஞனயினும், ஏறு போலப் போர் புரிய வல்லவன்; இதற்குமுன் எத்தனையோ போர்களில் அவன் ஆற்றலை நாம் கண்டுள்ளோம். இப்போரிலும் அவன் வெற்றி பெற்றால் அதில் வியப்பொன்றுமில்லை,' என்றனர் சிலர்.

6. இங்ஙனம் இருவர் பேரரசரும் ஐவர் சிற்றரசரும் தன்மீது போருக்கெழுந்த செய்தியை ஒற்றர் வாயிலாயறிந்த நெடுஞ்செழியனுக்கு சினம் மூண்டது. அவன் தன் படைத் தலைவரை விளித்து, "நம்முடைய நால்வகைப் படைகளை இன்றே திரட்டுங்கள். பகைவர் எம்மைப் பால்மணம் மாறுப் பாலன் என்றும், எமக்குப் போர்ப் பயிற்சி சிறிதும் இல்லை-யென்றும், தங்கள் பெரும்படையினை இமைப்போதுகூட எதிர்த்து நிற்கும் ஆற்றல் எம்படைக்கு இல்லையென்றும், பலவாருக இகழ்ந்து கூறியதாக நம் ஒற்றர் மூலம் அறிந்தோம். பால் மணம் மாறுப் பாலன் பாண்டியன் நெடுஞ்செழியனின் படைப் பயிற்சியை அம்முது பெருவீரர்கள் கண்டு களிக்கட்-டும்! எம்மை வலுவில் வம்புக்கிழுத்துப் போர்புரிய வரும அப்பகைவர்களை யாம் தோல்வியுறச் செய்யாவிடில் எம்மைக் 'குடிகளை வருத்திய கொடுங்கோல் மன்னன்' என்று உலகம் இகழட்டும்! **மாங்குடி மருதனுர்** போன்ற பெரும்புலவர்கள் எம்மைப் பாடாமற் போகட்டும்!" என்று வஞ்சினங் கூறினுன்.

7. அரசனது ஆணைப்படி அன்றே படை திரட்டப் பட்டது. மறுநாட் காலையில் பாண்டி நாட்டுச் சேனை மதுரை-யம்பதிக்குப் புறத்தே நின்று பகைவர் சேனைக்கு நல்வரவு

கூறியது. இரு பெரும்படைகளும் கடலோடு கடல் மோதுவது போலக் கடும்போர் புரிந்தன. தேரைத் தேர் கிட்டியது. யானையோடு யானை முட்டியது. குதிரையைக் குதிரை தாக்கியது. வீரர் வீரரை எதிர்த்தனர். இதனால் எழுந்த தூசுப்படலம் வானளாவி மேகமெனத் திகழ்ந்தது. இரு படைகளிலும் முரசங்கள் ஆர்ப்பரித்தன. சங்க நாதம் எழுந்தது. மேகங்கள் முழங்குவது போலப் பேரொலி பிறந்தது; வாளியோடு வாளியும், ஈட்டியோடு ஈட்டியும், வாளோடு வாளும் தாக்கியும், தடுத்தும், ஈர்த்தும், கோர்த்தும் நின்ற நிலை, மேக முழக்கத்தோடு மின்னலும் மின்னுவதுபோலத் தோன்றியது.

8. பாண்டி நாட்டுச் சேனையின் பல முனைகளிலும் நெடுஞ்செழியன் தோன்றித் தன் வீரர்களை ஊக்கிக்கொண்டே இருந்தமையால், அவ்வீரர்கள் சிறிதும் சோர்வின்றிப் போர் புரிந்தார்கள். போர் மேலும் மேலும் கடுமையுற்றபோது, எழுவர் படை சோர்வடையத் தொடங்கியதுமன்றி, வீரர் தொகையும் சுருங்கத் தொடங்கியது. அதனைக் கண்ணுற்ற பாண்டி நாட்டு வீரர்கள் வெற்றியின் வாயிலைக் கிட்டிவிட்டதை உணர்ந்தார்கள்; மேலும் உக்கிரமாகப் போர் புரிந்தார்கள். அவர்கள் தாக்குதலை எதிர்த்து நிற்க மாட்டாமல், எழுவர் படையும் எடுத்தன ஓட்டம்! ஆனால், செழியர்பிரான் அவர்களை விட்டானில்லை. அவர்களைத் துரத்திச் சென்று **தலையாலங்கானத்**தில் முற்றிலும் முறியடித்து, வெற்றி பூண்டான். அன்று முதல் அவனுக்குத் **தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்** என்னும் விருதுப் பெயர் வழங்குவதாயிற்று. அழுக்காற்றால் அவனை எதிர்த்த அரசர் எழுவரும் அவமானமுற்று அகன்றனர்.

**பயிற்சி :**

**I. விடை எழுதுக :**

அ. தலையாலங்கானம் எங்குள்ளது? அது எதனாற் பிரசித்தி பெற்றது?

ஆ. நெடுஞ்செழியன் புகழ் தமிழ் நாடெங்கும் பரவக் காரணம் யாது?

இ. பாண்டியன்மீது சேரனும் சோழனும் கொண்டிருந்த பொறாமை அதிகரிக்கக் காரணம் யாது?

ஈ. தலையாலங்கானத்திற் போர் புரிந்தவர் யாவர்? அப்போரின் முடிவு யாது?

II. சொல்லியுள்ளபடி செய்க:

(கோடிட்ட இடங்களை அடுக்குச் சொற்களால் நிரப்புக.)

1. தேர்கள்——— வென்று சென்றன.

2. குதிரைகள்——— வென்று ஓடின.

3. வாள்கள்——— வென்று மின்னின.

(வாக்கியத்தைச் செயப்பாட்டு வினை அமைத்து எழுதுக.)

4. நெடுஞ்செழியன் பாண்டிநாட்டை ஆண்டுவந்தான்.

(இத்தொடர்களைப் பிரித்தெழுதுக.)

5. எழிலுற, பேரரசு, நலமுற்று, நாடெங்கும், சிற்றரசர்.

III. வாக்கியங்களில் அமைக்க:

மாறுபட்டு, நிகழ்ச்சி, சிறிய முறை, திகழ்ந்தது, இன்முகம், புறங்கண்டான், ஆற்றல்.

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:

அண்மை, நிறுவினன், எழிலுற, மாறுபட்டு, சிறிய, அழுக்காறுற்ற, பொருது, புன்தொழில், ஏறு, ஒற்றர், வஞ்சினம்.

# 18. நிதி நிலையங்கள்

1. '**பொருளிலார்க்கு இன்பமில்லை,**' என்பது நாம் அறிந்த உண்மை. ஆதலால், பொருள் ஈட்டும் முயற்சியை மேற்கொள்ளாதவர் எவருமிலர். அம்முயற்சியில் வெற்றி பெறுதவரும் இலர்; ஆனால், தாம் ஈட்டும் பொருள் குடும்பச் செலவுக்கே போதாமல் துன்புறுவர் பலர். குடும்பத்துக்குப் போதுமான பொருள் ஈட்டுபவர் சிலர். தம் தேவைக்கு அதிகமாக ஈட்டுபவர் வெகு சிலரே. இவர்களே பொருளைச் சேமித்து வைக்கும் வாய்ப்புள்ளவர். தாம் சேமிக்கும் பொருளை வீட்டில் வைத்து, அதற்குக் காவல் புரிவது துன்பமேயன்றி நன்மை பயவாது. '**புண்ணிய வசத்தினுல் செல்வமது வரவேண்டும்,**' என்னும் முன்னோர் வாக்கிற்கிணங்கச் சிலர் முற்பிறப்பின் புண்ணியத்தால் தம் மூதாதையர்மூலம் ஏராளமான பொருளைப் பெறுவதும் உண்டு. அவர்கள் அப்பொருளை எங்கு வைத்து காப்பது? அன்றியும், அப்பொருள் வீட்டில் இருந்தால், அதனுல் வருமானமேதும் வாராதன்றோ? வருமானத்தைக் கருதி வட்டிக்குப் பணம் கொடுத்தால், சில சமயங்களில் முதலுக்கே மோசம் ஏற்படுவதும் உண்டு. ஆனால், பணக்காரர்கள் அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு மோசம் போகாமல், தங்கள் பணத்தைக் குறைந்த வட்டிக்கு வாய்மையும், நேர்மையும் பொறுப்பும், செல்வமும் படைத்த சிலரால் நிறுவப்பட்டிருக்கும் பாதுகாப்பான இடத்தில் **வைப்பு** வைக்கின்றார்கள். இங்ஙனம் பல செல்வந்தர்கள் பாதுகாப்பைக் கருதிக் குறைந்த வட்டிக்குக் கொடுக்கும் பணத்தை, அதனை ஏற்றுக்கொள்பவர், தேவைப்படுபவர்களுக்குத் தக்க பொறுப்பின்மீது கடனாகக் கொடுப்பர். இங்ஙனம் குறைந்த வட்டிக்குப் பணத்தைப் பெற்று, அதைவிடச் சிறிது அதிக வட்டிக்குப் பணத்தைக் கொடுக்கும் நிலையங்களே **நிதி நிலையங்க**ளாம். இவை ஆங்கிலத்தில் **பாங்குகள்** எனப்படும்.

2. இத்தகைய நிதி நிலையங்கள் எங்ஙனம் நடைபெறுகின்றன என்பதைப்பற்றிக் கவனிப்போம்: வாய்மையும்,

நேர்மையும், பொறுப்பும் வாய்ந்த செல்வந்தர் சிலர் தமது முதற்பணத்தோடு, பாதுகாப்புக்காகப் பணக்காரர்கள் வட்டிக்குத் தரும் பணத்தையும் சேர்த்து, மூல தனமாக வைத்து, நிதி நிலையங்களை நிறுவுகின்றார்கள் என்றோம். இவர்களே, அவற்றின் **நிர்வாகிகள்**[1] ஆவார்கள். ஆனால், இவர்கள் அனைவரும் இருந்து நிதி நிலையத்தை நடத்துவதில்லை. தங்களுள் மிக்க நேர்மை வாய்ந்த ஒருவரை, நிர்வாகப்பொறுப்பை ஏற்று நிதி நிலையத்தை நடத்த ஏற்படுத்துவர். அவர் **நடைமுறை நிர்வாகி**[2] அல்லது **மானேஜிங் டைரெக்டர்** என்று வழங்கப்படுபவர். அவருக்குக் கீழ்ப் பல அலுவலாளர் இருப்பர்.

3. நிதி நிலையங்களிற் பலவகை உண்டு. **வாணிகத்துறை நிதி நிலையங்கள்**[3], **கூட்டுறவு நிதி நிலையங்கள்**[4], **நாணயமாற்று நிதி நிலையங்கள்**[5] என்பன அவற்றுள் சில. இவற்றுள் நம் நாட்டில் அதிகமாக உள்ளவை வாணிகத்துறை நிதி நிலையங்களே. அவைகளைப்பற்றி மட்டும் படிப்போம்: அவை நம்மவர் நடத்தும் அயல் நாட்டு வாணிகத்துக்கு எவ்விதம் உதவிபுரிகின்றன என்பதை ஓர் உதாரணத்தால் அறியலாம். ஒரு வணிகர் அயல் நாட்டிலிருந்து, ஒரு மோட்டார் ஏழாயிர ரூபாய் வீதம், பத்து மோட்டார் வருவிக்கிறார். அவற்றிற்கு முன் பணமாகத் தம்மிடமிருந்த இருபதாயிரத்தைச் செலுத்திவிடுகிறார். எஞ்சிய ஐம்பதாயிரத்தைத் தாம் கணக்கு வைத்திருக்கும் நிதி நிலையம் செலுத்துமென்று அறிவிக்கிறார். மோட்டார்கள் வந்து சேர்ந்த உடனே அவர் கணக்கு வைத்திருக்கும் நிதி நிலையம் பணத்தைச் செலுத்திவிட்டு, மோட்டார்களை இறக்கிக்கொள்ளும். அவைகளை வருவித்தவர், நிதி நிலையத்தோடு தாம் செய்துகொண்டுள்ள ஏற்பாட்டின்படி, ஒரு குறித்த கால தவணைக்குள் பணத்தைச் செலுத்திவிடுவார். இம்முறையிலே தான் நிதி நிலையங்கள் அயல் நாட்டு வாணிகத்துக்கு உதவிபுரிகின்றன. அன்றியும், வாணிகத்துறை நிதிநிலையங்கள், வீடுகள், நிலங்கள், பொன்னணிகள் முதலிய தக்க பொறுப்புக்களின்மீது குறைந்த வட்டிக்குக் கடன் கொடுப்பதும் உண்டு.

---

1. Directors 2. Managing Director 3. Commercial Banks
4. Co-operative Banks 5. Exchange Banks

4. இனி, நிதி நிலையங்களில் பொருள் வைக்கும் முறையைப்பற்றியும், வாங்கும் முறையைப்பற்றியும் கவனிப்-




போம்: பொதுவாகப் **பொருள் வைப்பு**[1] மூன்று வகைப்படும். அவை **நிரந்தர வைப்பு**[2], **நடப்பு வைப்பு**[3], **சேம வைப்பு**[4] என்பன. ஒருவர் தம் பொருளை ஒரு குறித்த கால அளவுக்குள் திருப்பி வாங்காமல் வைப்பது நிரந்தர வைப்பாகும். இந்தத் தொகைக்குச் சிறிது அதிக வட்டி கிடைக்கும். நடப்பு வைப்பு என்பதும், ஒருவர் தம்மிடமுள்ள பணத்தை வைப்பாக்கித் தமக்கு வேண்டியபோதெல்லாம் அதினின்றும் பொருளைத் **திருப்பிப் பெறல்**[5], பொருள் கிடைத்தபோதெல்லாம் மீண்டும் மீண்டும் வைப்பாக்கல் ஆகிய முறைகளை உடையது. சேம வைப்பென்பது, பெரும்பணக்காரர் அல்லாத சொற்ப வருவாய் உள்ளவர்கள் மிச்சப்படுத்தி வைப்பாக்குவதாகும்.

5. இனி நிதி நிலையங்களில் தமது பொருளை வைப்புச் செய்ய விரும்புபவரும், வைப்பினின்று பொருளைத் திருப்பிப் பெறுபவரும் மேற்கொள்ள வேண்டிய விதிகளைப்பற்றிக்

---

1. Deposit 2. Fixed Deposit 3. Current Deposit 4. Savings Deposit 5. Withdrawal

கவனிப்போம் : நிரந்தர வைப்பாகப் பணம் வைக்க விரும்புபவர், நிதி நிலையத்துக்குச் சென்று, விஷயத்தைக் கூறினால், அவரிடம் ஒரு **வைப்பு நமூனு**[1] கொடுக்கப்படும். அதிற்கோரப்பட்டுள்ள விவரங்களைப் பூர்த்தி செய்து, அதையும் வைப்புக்குரிய தொகையையும் கொடுத்தால், நிதி நிலையத்தார் அவற்றைப் பெற்றுக்கொண்டு, பெற்றுக்கொண்ட தொகையையும், அதற்கு வட்டி விகிதமும், அதைத் திரும்பிப் பெற வேண்டிய காலமும், வைப்பு வைத்தவர் பெயரும் குறிக்கப்பட்ட தாளொன்றைத் தருவர். அதுவே வைப்பு வைக்கப்பெற்ற பொருளுக்குப் பொறுப்பு. ஆதலால், அதை சாக்கிரதையாக வைத்துக்கொள்ள வேண்டும்.

6. நடப்பு வைப்புக்கு மேற்கொள்ள வேண்டிய முறை வேறு. வைப்பு வைக்க விரும்புபவர் நிதி நிலையம் சென்று தம் விருப்பத்தைத் தெரிவித்தால், அவர்களுக்கு விண்ணப்பத்தாள் ஒன்று தரப்படும். அதில் வேண்டப் பெறும் விவரங்களைப் பூர்த்தி செய்து, மாதிரிக் கையெழுத்துக்கள் மூன்றிட்டு, அத்தாளோடு வைப்பு வைக்க விரும்பும் தொகையைச் செலுத்தவேண்டும். அவற்றைப் பெற்றுக்கொண்டு நிதி நிலையத்தார் ஒரு **பாஸ் புக்**[2]கையும், ஒரு **செக் புக்**[3]கையும் தருவார்கள். பாஸ் புக்கில் வைப்பு வைத்தவர் பெயர், விலாசம், வைக்கப்பட்ட தொகை முதலிய விவரங்கள் குறிக்கப்பட்டிருக்கும். செக் புக்கு எதற்கு உபயோகம்? ஒருவர் தம்முடைய வைப்பினின்று பணம் வாபஸ் பெறவேண்டுமானால், செக்குப் புத்தகத்தில் ஒரு தாளில் தேதி, தம் பெயர், வேண்டும் தொகை ஆகியவற்றைக் குறித்துக் கையொப்பமிட்டு, நடப்பு வைப்புக் கணக்கரிடம் கொடுக்கவேண்டும். அவர் அதைப் பெற்றுக்கொண்டு ஏதேனும் ஓர் எண் குறித்த ஒரு பித்தளைப் பில்லையைத் தருவார். அதை வைத்துக்கொண்டு சிறிது நேரம் காத்திருந்தால், பொருளைத் திருப்பித்தரும் கணக்கர் ஒவ்வோர் எண்ணைக் கூறிக் கூப்பிடுவார். தமது எண் குறிப்பிடப்படும் போது, பில்லையைக் கொடுத்தால், பொருள் தரப்படும். ஒருவர் நடப்பு வைப்பிலிருந்து யாருக்காவது பணம் தர

1. Remittance Chalan 2. Pass Book 3. Cheque Book

வேண்டுமானால், செக்குத் தாளில் அவர் பெயரையும், அவருக்குத் தரவேண்டிய தொகையையும் குறித்துத் தம் கையொப்பமிட்டுக் கொடுத்தால், பணம் பெறவேண்டுபவர் அதை நிதி நிலையத்திற் கொடுத்துப் பணத்தைப் பெற்றுக் கொள்வார். சேம வைப்பினின்று பணம் திருப்பிப்பெறும் முறையும் இதுவே. ஆனால், அங்குச் செக்கு இல்லை. '**வாபஸ் நமூனு**[1]'-வில் தேதியும், தொகையும் எழுதிக் கையொப்பமிட்டுத் தர வேண்டும். இம்முறையில் பொருளை வைப்பு வைத்தவர் மட்டுமே பெற முடியும். நிதி நிலையங்களின் மற்றுமுள்ள நடைமுறைகளைப்பற்றி நீங்கள் மேல் வகுப்புக்களில் அறிந்து கொள்ளலாம்.

பயற்சி :

I. விடை எழுதுக :

அ. நிதி நிலையம் என்பது யாது ?

ஆ. நிதி நிலையத்தின் தலைமை அதிகாரி யார் ? அவர் யாரால் ஏற்படுத்தப்படுவார் ?

இ. நிதி நிலையங்கள் எத்தனை வகைப்படும் ?

ஈ. வாணிகத்துறை நிதி நிலையங்கள் எவ்வாறு நடைபெறுகின்றன ?

உ. நிதி நிலையங்களில் பொருள் வைப்பு முறை எத்தனை வகைப்படும் ? ஒவ்வொன்றையும் விவரித்தெழுதுக.

ஊ. நடப்பு வைப்புக்கு மேற்கொள்ள வேண்டிய முறை யாது ?

II. உன் வகுப்பில் சேமிப்பு நிதி நிலையம் இருக்கிறதா ? அது எவ்வாறு நடைபெறுகிறது ? ஏற்கெனவே நிதி நிலையம் இல்லையெனில், ஒன்றைத் தொடங்குக.

---

1. Withdrawal Form

# செய்யுட்பகுதி

## I. கடவுள் வணக்கம்

வழங்குகின் றாய்க்குன் அருளா ரமுதத்தை
வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேனென்
விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந்து
உய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாயடி யேனுன்
அடைக்கலமே. 1

—மாணிக்கவாசகர்

அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா,—நன்புருகி
ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்! 2

—பூதத்தாழ்வார்

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியினை யெய்தவொண் ணாதே. 3

—திருமூலர்

# II. நீதி:

## 1. சதகச் செய்யுள்

### உடன்பிறந்தார் ஒற்றுமை

கூடப் பிறந்தவர்க் கெய்துயர் தமதுதுயர்
கொள்சுகம் தம்சுகமெனக்
கொண்டுதாம் தேடுபொருள் அவர்தேடு பொருளவர்
[கொள்
கோதில்புகழ் தம்புகழெனத்

தேடுற்ற அவர்நிந்தை தம்நிந்தை தம்தவம்
தீதிலவர் தவமாமெனச்
சீவனென் றுடல்வே றிவர்க்கென்ன ஐந்தலைச்
சீறரவ மணிவாய்தொறும்

கூடுற்ற இறையெடுத் தோருடல் நிறைத்திடும்
கொள்கைபோல் பிரிவின்றியே
கூடிவாழ் பவர்தம்மை யேசகோ தரரெனக்
கூறுவது வேதருமமாம்

ஆடிச் சிவந்தசெந் தாமரைப் பாதனே!
அண்ணலெமத ருமைமதவேள்
அனுதினமும் மனதினினை தருசதுர கிரிவளர்
அறப்பளி சுரதேவனே! 1

அறப்பளீசுர சதகம்] [அம்பலவாணக் கவிராயர்

## செல்வச் சிறப்பு

பொருளுள்ள பேர்களுக் கருளுண்டு ; புகழுண்டு ;
புண்யவச மிக்கவுண்டு ;
பூதலத் தவரெலாம் கண்டவுட னேதொழுது
பூபதிகு பேரனென்பார் ;

திருகொன் றிலாதமதி யுண்டு ;திற னுண்டு ; மெய்த்
தேசிகர்தம் அருளுமுண்டு ;
திங்கியற் றினுநன்மை யென்பார்கள் ; பெருமையும்,
திரமொரு வீரமுண்டாம் ;

அருளுண்டு ; பந்துஜன வுறவுண்டு ; நண்பினர்கள்
ஆனுர்க ளுண்டு ; நிதமும்
அவர்முகந் தன்னிலழ குண்டு ; கலை யுண்டு ; நல்
லானந்த பூர்த்தியுண்டு ;

கருணைசெய் தன்பர்கட் கழியாத நிதியுதவு
கற்பக விராசமேவுங்
கங்கைபுனை யீசனே ! மங்கைமகிழ் நேசனே !
கயிலையங் கிரிவாசனே ! 2

கயிலாசநாதர் சதகம்] [சிதம்பரம் பிள்ளை

## சிறுமையாற்பெருமை

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக்கும் ;
திகழ்ச்சிப்பி யுடலிற் சனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலிருக்கும் ;

போற்றியிடு பூச்சியின் வாயினூல் பட்டென்று
பூசைக்கு நேசமாகும் ;
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதஅபி டேகமாகும் ;

சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்குமாம் ;
சாதியி னத்திற் பிறக்கினும் கற்றோர்கள்
சபையின்மேல் வட்டமன்றோ ?

மாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞானமுதலே !
மயிலேறி விளையாடு குகனே ! புல் வயனீடு
மலைமேவு குமரேசனே ! 3

குமரேச சதகம்] [குருபாத தாசர்

## சகோதரர் ஒருமை

தனதுபட் டந்தனைத் தம்பியர்க் கீயெனத்
தந்துமகி ழுந்தமையனும் ;
தமையனுர் வருமளவு மாவிரதமாகவே
தபசுபுரி யுந்தம்பியும் ;

கனசுவைப் பாலீந்த தாய்தனைப்போலவே
கருணைசெய் திடுமதனியும் ;
காணுமுன் றந்தைபோற் றிருவடிகள் பணியுங்
கனிட்டனுடை மனையாட்டியும் ;

தினந்தினம் பரிவாகி அம்மையே யென்றுபேர்
செப்புங் கொழுந்தனுரும்
சேர்ந்துவாழ் கின்றபேர் திரேதா யுகந்தனிற்
தசரதகு மாரர்கூண்டாய் !

வனசமலர் கமழ்கின்ற வாவிசூழ் களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே !
வரதவேங் கட்ராயனே ! 4

## தருமம் தலை காக்கும்

அருமைசெறி பாண்டவர்கள் பங்காளி
செய்கொடுமை யாற்கா டாண்டும்,
உரிமையுடன் தருமர்செய்த நன்றியினுல்
திரும்பவும்வந் துலகை ஆண்டார் ;
பருவரைவில் லாவளைத்த செயங்கொண்டா
ரே ! எவரும் பண்பாய்ச் செய்த
தருமமே தலைகாக்கும் ; அதர்மம்அழித்
திடுமெனவும் சாற்று வாரே. 5

## உழவர் சிறப்பு

உழுதிளையான் குடிமாறர் முளைவாரி
அனம்அன்பர்க் குதவிப் பாரில்
வழுவாத கீர்த்தியுடன் ஒருநாளும்
கேடில்லா வாழ்வு பெற்ருர் ;
மழுவேந்துங் கரதலத்தார் செயங்கொண்டார்
வளநாட்டில் மறைகள் ஓதித்
தொழுவார்எல் லாம்உழுவார் தலைக்கடையில்
என்றுலகம் சொல்லு மாதோ. 6

## தேவர்க்கோப்பாவார்

முன்னெருசோ ழன்புதல்வன் தேர்க்காலில்
ஆன்கன்று முடியக் கண்டே,
பின்னதற்கி டாய்த்தனது பிள்ளையைத்தேர்க்
காலில்இட்டுப் பெருமை சேர்ந்தான் ;
தென்னேம நகரினில்வாழ் சௌந்தரநா
யகிமகிழ்ந்த செயங்கொண் டாரே !
தன்னுயிர்போல் மன்னுயிரை எண்ணுவர்தே
வர்முனிவர் தமக்கொப் பாரே. 7

## 2. இன்னா நாற்பது

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்த லின்னா ;
நெடுநீர் புணையின்றி நீந்துத லின்னா ;
கடுமொழி யாளர் தொடர்பின்னா ; இன்னா
தடுமாறி வாழ்த லுயிர்க்கு. 1

எருதி லுழவர்க்குப் போகிர மின்னா ;
கருவிகள் மாறிப் புறங்கொடுத்த லின்னா ;
திருவுடை யாரைச் செறலின்னா ; இன்னா
பெருவலியார்க் கின்னா செயல். 2

ஆற்ற லிலாதான் பிடித்த படையின்னா ;
நாற்ற மிலாத மலரி னழகின்னா ;
தேற்ற மிலாதான் துணிவின்னா ; ஆங்கின்னா
மாற்ற மறியா னுரை. 3

உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பின்னா ;
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனியின்னா ;
கண்ணி லொருவன் வனப்பின்னா ; ஆங்கின்னா
எண்ணிலான் செய்யுங் கணக்கு. 4

பெரியாரோ டியாத்த தொடர்விடுத லின்னா ;
'அரியவை செய்தும்' எனவுரைத்த லின்னா ;
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னா ; இன்னா
பெரியார்க்குத் தீய செயல். 5

—கபிலர்

## 3. இனியவை நாற்பது

கொல்லாமை முன்இனிது ; கோல்கோடி மாராயம்
செய்யாமை முன்இனிது ; செங்கோல னுகுதல்
எய்துந் திறத்தால் இனிதென்ப ; யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு. 1

கற்றார்முன் கல்வி யுரைத்தல் மிகவினிதே :
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே ;
எட்டுணை யானு மிரவாது தானீதல்
எத்துணையு மாற்ற வினிது. 2

மன்றின் முதுமக்கள் வாழும் பதியினிதே ;
தந்திரத்தின் வாழுந் தவசிகள் மாண்பினிதே ;
எஞ்சா விழுச்சி ரிருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை யினிது. 3

ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே :
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே ;
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது. 4

சலவரைச் சாரா விடுத லினிதே ;
புலவர்தம் வாய்மொழி போற்ற லினிதே ;
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாந்
தகுதியால் வாழ்த லினிது. 5

—பூதஞ்சேந்தனார்

## 4. திரிகடுகம்

ஆசை பிறன்கட் படுதலும் பாசம்
பசிப்ப மடியைக் கொள லுங்—கதித்தொருவன்
கல்லானென் றெள்ளப் படுதலும் இம்மூன்றும்
எல்லார்க்கு மின்னு தன. 1

வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பிலியும்
இல்லது காமுற் றிருப்பானுங்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குற்றிக் கைவருந்து வார். 2

ஆற்றுனை யாற்றென் றலைப்பானு மன்பின்றி
ஏற்றார்க் கியைவ கரப்பானுங்—கூற்றம்
வரவுண்மை சிந்தியா தானுமிம் மூவர்
நிரயத்துச் சென்றுவீழ் வார். 3

வைததனை யின்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். 4

கிளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்று னுழவும்—இளையனுய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும். 5

—நல்லாதனுர்

## III. கதைச் செய்யுள் :

### 1. புத்தரும் தீண்டாமையும்

புண்ணிய மூர்த்தி புத்தமா முனிவன்
உண்மையை உணர்ந்திவ் வுலகினி லென்றும்
அழியா இன்பம் அடையும் அவாவினால்
மன்னர் வாழ்வையும் மறுத்தவ னாகித்
தந்தையை மறந்து தனயனைத் துறந்து
மங்கை யசோதை மதிமுகம் நீத்து
நள்ளிர வதனில் நன்னகர் நீங்கி
உண்ணும் உணவும் உறக்கமு மின்றி
இரவும் பகலும் இடைவிடா தெங்கும்
நடந்து மெலிந்து நலிவுற் றொருநாள்
வேனில் வெயிலில் வெந்தரி கானில்
கைகால் தளர்ந்து கண்களும் மூடி
மூச்சும் அடங்கி முகமும் வெளிறி
உயிரும் உடலும் ஊச லாட
விஞ்சிய மயக்கால் விழுந்துகிடந்தனன். 1

ஆடுகள் மேய்த்துவரும்—ஒருவன்
ஆயர் குலச்சிறுவன்
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின் மீதுகண்டான் ; 2

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி அருகில்நட்டான். 3

'தெய்வ குலத்திவனை—எளியோன்
தீண்டலு மாகாதினிச்
செய்வதும் யா'தெனவே—சிறிது
சிந்தை தயங்கிநின்றான். 4

உள்ளந் தெளிந்துடனே—வெள்ளா
டொன்றை அழைத்துவந்து
வள்ளல் மயக்கொழிய—மடியை
வாயிற் கறந்துவிட்டான். 5

நட்ட தழைகளெல்லாம்—வளர்ந்து
நாற்புற மும்கவிந்து
கட்டிய மாளிகைபோல்—வனத்தில்
காட்சி யளித்ததம்மா. 6

பூவொடு காய்கனியும்—தளிரும்
பொலிந்து நிரம்பியங்கே
மேவு பலமணிகள்—இழைத்த
விதானமும் ஆனதம்மா. 7

ஐயனை இவ்வுலகங்—காணற்
கரியவோர் தெய்வமெனக்
கைகள் தொழுதுநின்றான்—சிறுவன்
கலங்கமில் லாவுளத்தான். 8

நிலத்திற் கிடந்தஐயன்—மெல்ல
நிமிர்ந்து தலைதூக்கிக்
'கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தருவாய்,' என்றான். 9

'ஐயையோ! ஆகா'தென்றான்—சிறுவன்
'ஐயனே! நானுமுனைக்
கையினால் தீண்டவொண்ணா—இடையனோர்
காட்டு மனிதன்,' என்றான். 10

உலகம் புகழ்பெரியான்—இந்த
உரையினைக் கேட்டங்காள்
அலகில் கருணையினால்—சொன்ன
அமுத மொழியிதுவாம்: 11

'இடர்வ ரும்போதும்—உள்ளம்
இரங்கி டும்போதும்
உடன்பி றந்தவர்போல்—மாந்தர்
உறவு கொள்வரப்பா! 12

'ஓடும் உதிரத்தில்—வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவ துண்டோஅப்பா? 13

'எவரு டம்பினிலும்—சிவப்பே
இரத்த நிறமப்பா!
எவர்வி ழிநீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா! 14

'நெற்றியி னில்நீறும்—மார்பில்
நீண்ட பூணூலும்
பெற்றிவ் வுலகுதனில்—எவரும்
பிறந்த துண்டோஅப்பா! 15

'பிறப்பி னாலெவர்க்கும்—உலகில்
பெருமை வாராதப்பா!
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டுமப்பா! 16

'நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார்;
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட வொண்ணாதார்.' 17

நிலத்து யர்ஞானி—இவை
நிகழ்த்தி, 'என்தம்பி!
கலத்தி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தா', என்றான். 18

ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளித்த பாலையுண்டு
தாயி னும்இனியன்—கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 19

—திரு. கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை

## 2. அந்தணனும் வஞ்சகரும்

'அக்கதை தெரியச்சொல்'லென் றறைதலும்அமைச்சன்கூறும்:
"மிக்கதோர் வேள்விக் காக வேதியன் வேற்றார் சென்று
தக்கநல் லாடு கொண்டு தனதுதோள் மீது தாங்கித்
தொக்கவுள் மகிழ்வின் மீண்டு தொல்பதிக் கேகும்போது, 1

"வஞ்சகர் மூவ ரந்த மறையவ னுட்டை வௌவ
நெஞ்சினில் நினைந்தே யந்தநெறியிடை யொருவன் முன்போய்ச்
'செஞ்சுடர்த்தீவளர்க்குஞ் செல்வ! நீ நாயைத்தோள் கொண்(டு)
அஞ்சுத லின்றிச் செல்ல லாகாத'தென்று கூற, 2

"துட்டனை நோக்கி, 'யாகப் பசுவினைச் சுணங்க னென்றாய்!
கெட்டனை யோகண்?' என்று கிளத்தியே மறையோன் செல்ல,
இட்டனே போலி ரண்டா மிழிஞனங் கெய்தி, 'மேலோய்!
விட்டுயிர் போன கன்றை மேற்கொளல் தகா'தென் றோத, 3

"பழுதறு மறையோ னந்தப் படியவன் தனையும் வைது
வழிதனி லேக மூன்றாம் வஞ்சன்வந்து, 'அந்த ணாள!
எழுதரு நூல்க ளெல்லா மிழிந்தசண் டாள மென்னும்
கழுதையைச் சுமந்துசெல்லுங் காரியந் தகுமோ!' என்றான். 4

"நாடியே மறையோன், 'இந்த நரர்கள்வெவ் வேறு கூறக்
கூடிய வுருவெவ் வேறு கொண்டுதோன் றிடுத லாலே
ஆடிராட் சதப்பி றப்போ!' என்னுமை யத்தால் விட்டான்;
நீடிய வஞ்சர் கொண்டார்," எனவுரை நிகழ்த்திற் றன்றே. 5

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்ட தேவர்

# IV. வருணனை :

## 1. பொருநையாறு

[சிந்து]

உதைத்து விசைகொண் டெதிர்த்துக் கடலின்
உதரங் கீறி யதிரும்நீர்
உதய வரைக்கும் பொதிகை வரைக்கும்
ஒத்துப் போம்படி முற்றும்போய்ப்

பதைத்து நெளியும் துதிக்கை மூக்கன்
பண்ணைச் சாளை எண்ணைமீன்
பசலி திருக்கை கசலி கெளுத்தி
பண்ணுக் கும்பழம் பாசின்மீன்

வதைக்கும் மகரங் குதிக்குஞ் சள்ளை
மத்தி யுல்லம் பொத்திமீன்
மடந்தை கடந்தை சம்பான் நொறுக்கி
மலங்கும் பஞ்சலை கருங்கண்ணி

புதைத்து மணலில் ஒதுக்கிக் கடலில்
போக்கி அழகர் கருணைபோல்
பொறுநை யாறு பெருகி வரர
புதுமை பாரும் பள்ளீரே!

—முக்கூடற்பள்ளு

## 2. மலை

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும் ;
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும் ;
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்;
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுக்கும். 1

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும் ;
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண்
டோடும் ;
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பங் தடிக்கும் ;
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும். 2

வேடுவர்கள் திணைவிதைக்கச் சாடுபுனந் தோறும்
விந்தையகில் குங்குமமும் சந்தனமும் நாறும் ;
காடுதொறு மோடிவரை யாடுகுதி பாயும் ;
காகமணு காமலையில் மேகநிரை சாயும். 3

செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்க ளாடும்
திரிகூட மலையெங்கள் செல்வமலை யம்மே ! 4

—திரிகூட ராசப்பக் கவிராயர்

## 3. மின்னல்

மேகத் திரையைப் பிளந்து
விரைகின்ருய் மின்னலே ! — ஒரு
மோகன மின்சாரம் காட்டி
மறைகின்ருய் மின்னலே ! 1

வெளிச்சங் காட்டி இருட்டை
விரட்டுவாய் மின்னலே ! — உடன்
பளிச்சென் றென்கண் பறித்துக்கொண்
டேகுவாய் மின்னலே ! 2

நில்லுநீ நில்லெனக் கெஞ்சிடு
வேனுன்னை மின்னலே ! — இங்கு
நில்லா வுலகியல் வாழ்வெனச்
செல்லுவாய் மின்னலே ! 3

காண வுன்னையென் கண்ணைத்
திறக்கு முன் மின்னலே ! — நீ
நாணிக் கோணி நடித்தெங்குச்
செல்கின்ருய் மின்னலே ! 4

சிற்றிடை துவளச் செங்கால்
வீசுவாய் மின்னலே ! — உன்னைப்
பற்றிக்கொள் வேனென்ருே பயந்து
ஓடினுய் மின்னலே ! 5

தடதட வென்றிடி முரச
மார்த்திட மின்னலே ! — நீ
நடன மாடு நயமென்ன
சொல்லுவேன் மின்னலே ! 6

" மன்னுல கிலேவந் தென்னை
அணை," என்பேன் மின்னலே !— " அடா
என்னைப் போலத்தான் இவ்வுடல்
வாழ் " வென்பாய் மின்னலே ! 7

ஞான வேட்கைகொண் டேயுன்னை
நச்சுவேன் மின்னலே ! — அது
மோனம் என்று மொழியொன்
றெழுதுவாய் மின்னலே ! 8

—ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

## V. பல்சுவை :

### 1. பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி

புள்ளினம் ஆர்த்தன ; ஆர்த்தன முரசம் ;
பொங்கிய தெங்குஞ் சுதந்தர நாதம் ;
வெள்ளிய சங்கம் முழங்கின கேளாய் !
வீதியெ லாமணு குற்றனர் மாதர் ;
தெள்ளிய அந்தணர் வேதமும் நின்றன்
சீர்த்திரு நாமமும் ஓதிநிற் கின்றார் ;
அள்ளிய தெள்ளமு தன்னையெம் அன்னே !
ஆருயி ரே!பள்ளி யெழுந்தரு ளாயே ! 1

—பாரதியார்

### 2. வேண்டுதல்

எங்குநிறை அன்பறிவே! எண்ணுமனம் வேண்டும் ;
எவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும் இனிமைசெயல் வேண்டும்;
பொங்கியற்கை வழிநின்று புவிஇயங்கல் வேண்டும் ;
பொய்சூது பகைசூழ்ச்சி பொருந்தாமை வேண்டும் ;
மங்கையர்கள் உரிமையுடன் வாழ்வுபெறல் வேண்டும் ;
மக்களெலாம் பொதுவென்னும் மதிவளரல் வேண்டும் ;
தங்குயர்வு தாழ்வென்னுந் தளையறுதல் வேண்டும் ;
சமதர்மச் சன்மார்க்கத் தாண்ட வம்வேண் டுவனே. 2

திரு. வி. க.

# VI. தனிப் பாடல்கள் :

## முருகக் கடவுள்

அப்பன் இரந்துண்ணி ; ஆத்தாள் மலைநீலி ;
ஒப்பரிய மாமன் உறிதிருடி ;—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிறன் ; ஆறுமுகத் தானுக்கிங்(கு)
எண்ணும் பெருமை இவை ! 1

—காளமேகப் புலவர்

## புலவர் பெருமை

மன்னவனும் நீயோ ? வளநாடும் உன்னதோ ?
உன்னையறிந் தோதமிழை ஓதினேன் ?—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு ? 2

—கம்பர்

## கல்விக்கு ஓரெல்லையில்லை

கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்(று)
உற்ற கலைமடந்தை யோதுகிறாள்;—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டா புலவீர் !
எறும்புந்தன் கையால்எண் சாண். 3

—ஔவையார்

## மூர்க்கர் நல்வழி பெறுர்

பொல்லாத மூர்க்கருக் கெத்தனை
  தான்புத்தி போதிக்கினும்
நல்லார்க்குண் டான குணம்வரு
  மோ? நடுச் சாமத்திலே
சல்லாப் புடவை குளிர்தாங்கு
  மோ? பெருஞ் சந்தையினில்
செல்லாப் பணம்செல்லு மோ? தில்லை
  வாழுஞ் சிதம்பரனே!

—படிக்காசுத் தம்பிரான்

## VII. திருக்குறள்

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 1

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 2

அறத்தான் வருவதே இன்பம்; மற்றெல்லாம்
புறத்த புகழும் இல. 3

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 4

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. 5

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 6

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 7

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். 8

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 9

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. 10

உலகத்தொடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 11

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே; வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 12

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது. 13

8

கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்னின்று பின்நோக்காச் சொல். 14

நயனில சொல்லினுஞ் சொல்லுக ; சான்ருேர்
பயனில சொல்லாமை நன்று. 15

இலன்என்று தீயவை செய்யற்க ; செய்யின்
இலனுகும் மற்றும் பெயர்த்து. 16

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 17

இன்னுது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு. 18

தோன்றின் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலின் தோன்ருமை நன்று. 19

அருட்செல்வம் செல்வத்துள் செல்வம்; பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. 20

களவினுன் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். 21

தன்னெஞ் சறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 22

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 23

தன்னுயிர்க்கு இன்னுமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னு செயல். 24

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை. 25

தலைப்பட்டார் தீரத் துறந்தார் ; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 26

உறங்குவது போலும் சாக்காடு ; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 27

கண்ணுடையர் என்பவர் கற்றோர் ; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 28

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர். 29

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். 30

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 31

அறிவுடையார் ஆவ தறிவார் ; அறிவிலார்
அஃதறி கல்லா தவர். 32

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு ? 33

அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 34

மனந்தூய்மை செய்வினைத் தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். 35

செய்தக்க அல்ல செயக்கெடும் ; செய்தக்க
செய்யாமை யானும் கெடும். 36

காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். 37

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 38

வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். 39

காக்கை கரவா கரைந்துண்ணும் ; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 40

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் ; செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 41

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்; மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து. 42

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 43

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து. 44

உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து. 45

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 46

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 47

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. 48

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 49

அற்றால் அளவறிந்து உண்க; அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. 50

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 51

தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 52

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல். 53

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 54

ஏரினும் நன்றால் எருஇடுதல்; கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு. 55

# செய்யுட்பகுதி

## குறிப்புரை

### சதகச் செய்யுள் :

செய்யுள்

1 எய்துதுயர் - அடையும் துன்பம் ; கோதுஇல் - குற்றமற்ற ; நிந்தை - தூஷணை ; சீறரவம் - சீறுகின்ற பாம்பு ; மதவேள் - பாட்டுடைத் தலைவர் ; சதுரகிரி - சேலம் ஜில்லாவில் உள்ள ஒரு சிவஸ்தலம் ; அறப்பளீசுரன் என்பது அத்தலத்தில் எழுந்தருளி யுள்ள சிவபெருமானுடைய பெயர்.

2. அருள் - ஆண்டவனது அருள் ; புகழ் - கீர்த்தி ; பூதலத்தவர் - உலகத்தவர் ; திருகு - குற்றம் ; தேசிகர் - குரு ; ஆனந்த பூர்த்தி - மகிழ்ச்சி நிறைவு ; அழியாத நிதி - அழியாச் செல்வமாகிய மோட்சம்.

3. கமல மலர் - தாமரை மலர் ; திகழ் - விளங்குகின்ற ; பூச்சி - (இங்குப்) பட்டுப் புழு ; புனித - தூய ; அபிடேகம் - அபிடேகப் பொருள் ; அதாவது, தலைமுழுக்குக்குரிய பொருள் ; புலால் - மாமிசம் ; கோரோசனை, சவாது, புழுகு - நறுமணப் பொருள் கள் ; ஈனம் - தாழ்வு ; மாற்றிச் சாத்தினை விபூதியால் குளிர வைத்த - திருநீற்றைத் தடவி வெம்மையால் துன்புற்ற கூன்பாண் டியனுடைய உடலைக் குளிரும்படி செய்த ; மெய்ஞ்ஞான முதல் - உயர்ஞானத் தலைவரான ஞானசம்பந்தர் ; புல்வயல் - புதுக் கோட்டையில் உள்ள முருகன் தலம்.

4. ஈ யென - 'கொடு' என்று சொல்ல ; தந்து மகிழும் தமையன் - கொடுத்துச் சந்தோஷிக்கும் அண்ணன் ; அதாவது, இராமன் ; தபசு புரியுந் தம்பி - பரதன் ; கருணை செய் மதனி - சீதை ; வனச மலர் - தாமரை மலர் ; வாவி - குளம்.

5. செறி - நிறைந்த ; நன்றி - நற்செயல் ; பருவரை - பெரிய மலை ; பண்பாய் - நல்ல வகையாய் ; சாற்றுவார் - கூறுவார்.

6. இளையான்குடி மாறர் - அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் ; முளை - நெல்முளை ; பார் - பூமி ; வழுவாத - குற்றமற்ற ;

கோடில்லா வாழ்வு - முடிவில்லா வாழ்வு ; அதாவது, மோட்சம் ; மழு - சிவபெருமான் கையில் விளங்கும் அக்கினி ; கரதலம் - கையாகிய இடம் ; மறை - வேதம்.

7. சோழன் - இங்கு, மனுநீதிகண்ட சோழன் ; அச்சோழன் புதல்வன் - வீதிவிடங்கன் ; ஆன்கன்று - பசுங்கன்று ; முடியக் கண்டு - இறக்கக் கண்டு ; மன்னுயிர் - பிற உயிர்.

## இன்னா நாற்பது

செய்யுள்

1. மற மன்னர் - கொடிய அரசர் ; இன்னா - கொடியது ; புணை - தெப்பம் ; கடுமொழி - வன்மொழி ; தொடர்பு - சேர்க்கை.

2. கருவிகள் - ஆயுதங்கள் ; புறம் கொடுத்தல் - தோல்வியடைதல் ; திருவுடையார் - செல்வர் ; செறல் - பகைத்தல்.

3. ஆற்றல் - தோள்வலி ; படை - ஆயுதம் ; நாற்றம் - நறுமணம் ; தேற்றம் - தெளிவு ; மாற்றல் - சொல்.

4. பொருள் வைப்பு - பொருளைச் சேமித்து வைத்தல் ; நண்ணா - விரும்பி யடையாத ; புணர்ச்சி - நட்பு ; நனி - அதிகம் ; வனப்பு - அழகு ; எண்ணிலான் - எண்ணறிவு இல்லாதவன்.

5. யாத்த - கட்டுப்பட்ட ; பரியார் - பரிவில்லாதவர்.

## இனியவை நாற்பது

செய்யுள்

1. கோல் கோடி - செங்கோல் வளைந்து ; மாராயம் - வேந்தன் செய் சிறப்பு, நற்செய்தி ; எய்தும் திறத்தால் - அடையும் வகையால் ; யார் மாட்டும் - எவரிடத்தும்.

2. மிக்கார் - (நற்குண நற்செய்கைகளில்) தன்னைவிடச் சிறந்தவர் ; மாண - பெருமை பொருந்த ; எட்டுணையானும் - எவ்வகையாலும் ; இரவாது - பிச்சை யெடாமல் ; ஆற்ற - மிகுதியாக.

3. மன்று - சபை ; தந்திரம் - கல்வி ; மாண்பு - பெருமை ; எஞ்சா - குறையாத ; விழுச்சீர் - மிகுந்த பெருமை ; இரு முது மக்கள் - தாய் தந்தையர்.

4. ஆற்றுந்துணை - முடிந்த வரையில்; பாற்பட்டார் - (நம்மிடம்) அன்புள்ளவர்; பய மொழி - பயன் தரத்தக்க நற்புத்தி; வலவைகள் - இழிமக்கள்; கோடல் - கொள்ளுதல்.

5. சலவர் - பகைவர்; சாரா விடுதல் - சேராதிருத்தல்; மலர்தலை - அகன்ற இடம்; ஞாலம் - உலகம்; மன்னுயிர் - பொருந்திய மக்கள்.

## திரிகடுகம்

செய்யுள்

1. பாசம் - ஆசை; மடி - சோம்பல்; கதித்து - கோபித்து; எள்ளப்படுதல் - இகழப்படுதல்; இன்னாதன - துன்பத்தைத் தருவன.

2. நோன்பிலி - இழிமகன்; காமுற்று - ஆசைகொண்டு.

3. ஆற்றுனை - செய்யும் வலியற்றவனை; அலைப்பான் - துன்புறுத்துகிறவன்; இயைவ - தன்னிடமுள்ள பொருள்; கரப்பான் - ஒளிப்பவன்; கூற்றம் - இயமன்; நரயம் - நரகம்.

4. கைப்பு - கசப்பு; கட்டி - வெல்லக்கட்டி.

5. கிளைஞர் - சுற்றத்தார்; பைங்கூழ் - பசுமையான பயிர்.

## புத்தரும் தீண்டாமையும்

செய்யுள்

1. அழியா இன்பம் - மோட்சம்; அவா - ஆசை; மன்னர் வாழ்வு - அரச பதவி; மறுத்தவனாகி - வெறுத்து; தனயன் - மகன்; யசோதை - புத்தரின் மனைவி; மதிமுகம் - சந்திரன் போன்ற முகம்; நீத்து - துறந்து; நள்ளிரவு - நடுஇரவு; நலிவுற்று - துன்புற்று; வேனில் - கோடை; கான் - காடு; வெளிறி - வெளுப்படைந்து; விஞ்சிய - மிகுந்த; மயக்கால் - மயக்கத்தால்.

2. ஆயர்குலம் - இடையர்குலம்.

3. வையகம் - உலகம்; மாதவம் - பெரிய தவம்.

4. தெய்வகுலம் - உயர்குலம்; சிந்தை - மனம்; தயங்கி - தடுமாறி.

5. உள்ளம் - மனம்; வள்ளல் - அளவின்றி கொடுப்பவன்; மடி - பால்மடி.

6. கவிந்து - படர்ந்து; மாளிகை - வீடு.

7. பொலிந்து - விளங்கி; மணிகள் - நவரத்தினங்கள்; விதானம் - விமானம்.

8. களங்கமில்லா - மாசற்ற, கபடற்ற; உளத்தான் - மனத்தை யுடையவன்.

9. கலம் - மண்பாத்திரம்.

10. தீண்டவொண்ணுத - தொடத்தகாத.

11. உரை - சொல்; அருகில் கருணை - குறைவற்ற கருணை; அமுத மொழி - அமுதம் போன்ற நன்மொழி.

12. இடர் - துன்பம்; உள்ளம் இரங்கிடும் - மன இரக்கம் கொள்ளும்.

13. உதிரம் - இரத்தம்.

14. உவர்ப்பு - உப்புச்சுவை.

15. நீறு - விபூதி.

17. மேற்குலம் - உயர்ந்தசாதி, தின்மை - தீமை; அண்டி - நெருங்கி.

18. நிகழ்த்தி - கூறி.

## அந்தணனும் வஞ்சகரும்

செய்யுள்

1. அறைதல் - சொல்லுதல்; அமைச்சன் - மந்திரி; வேள்வி - யாகம்; வேதியன் - பிராமணன்; தொக்க - நிறைந்த; உள் மகிழ்வு - மனமகிழ்ச்சி; தொல்பதி - பழமையான ஊர்.

2. மறையவன் - பிராமணன்; வெளவ - கவர; நெறியிடை - வழியில்; செஞ்சுடர்த்தி - சிவந்த நெருப்பினை மூட்டிச் செய்யும் யாகம்.

3. யாகப்பசு - யாகத்தில் அவிசாகப் பலியிடும் பிராணி; சுணங்கன் - நாய்; கிளத்தி - கூறி; இட்டனேபோல் - நன்

பன் போல: இழிஞன் - வஞ்சகன்; அங்கெய்தி - அங் கடைந்து.

4. பழுதறு - குற்றமற்ற; வைது - வசை கூறி; அந்தணனை - பிராமணனே; எழுதரு நூல் - வேதம்; சண்டாளம் - பாதகம்.

5. நரர்கள் - மனிதர்கள்; ஐயம் - சந்தேகம்; உரை நிகழ்த்திற்று - கூறியது.

## பொருநையாறு

உதைத்து - தாக்கி; விசைகொண்டு - வேகமுற்று; உதரம் கீறி - வயிற்றைக் கிழித்து; உதைய வரை - (சூரியன்) உதிக்கும் மலை; பொதிகை வரை - பொதியமலை; துதிக்கை மூக்கன், பண்ணைச்சாளை, பசலி, திருக்கை, கசலி, கெளுத்தி மகரம், சன்னை, மத்தி, உல்லம், பொத்தி, மடந்தை, கடந்தை, சம்பான், பஞ்சலை, கருங்கண்ணி என்பன மீன்களின் பெயர்கள்; அழகர் - அழகர் மலையில் வீற்றிருக்கும் விஷ்ணுவின் பெயர்; பொருநை - தாம்பிரபரணி நதி; பள்ளீரே - உழவர்களே.

## மலை

செய்யுள்

1. மந்தி - பெண் குரங்கு; தேனருவி - திருக்குற்றாலமலையிற் பாயும் ஓர் அருவின் பெயர்; திரை - அலை; வான் - ஆகாயம்; செங் கதிரோன் - சிவந்த கிரணங்களை உடைய சூரியன்; பரிக்கால் - குதிரையின் கால்கள்; தேர்க்கால் - தேர்ச்சக்கரம்.

2. முழங்கு திரை - சப்திக்கும் அலைகள்; புனல் - நீர்; கழங்கு - அம்மனைக்காய்; முற்றம் - வீட்டின் முன்புறம்; சிற்றில் - சிறு வீடு; தேமா - இனிமையுள்ள மாம்பழம்; வானுலகு - தேவலோகம்.

3. சாடு - கொத்துகின்ற; புனம் - வயல்; நாறும் - நாற்றம் வீசும்; வரையாடு - மலையோடு; மேக நிரை - மேகங்களின் வரிசை.

4. சொல்லினங்கள் - இடியின் கூட்டம்; முழுவு - மத்தளம்; திரிகூட மலை - திருக்குற்றால மலை.

## மின்னல்

செய்யுள்

1. திரை - திரைத் துணி; மோகனம் - அழகு.

2. விரட்டுவாய் - துரத்துவாய்; கண் பறித்து - கண்ணைப் பிடுங்கி.

3. உலகியல் - உலகின் தன்மை.

4. நாணி - வெட்கி; நடித்து - நடனமாடி.

5. சிற்றிடை - மெல்லிய இடுப்பு; துவள - வளைந்து வருந்த; செங்கால் - சிவந்த கோடு; வீசுவாய் - தோற்றுவிப்பாய்.

6. முரசு - முரச வாத்தியம்; ஆர்த்திட - ஒலிக்க.

7. மன்னுலகு - நிலைபெற்ற உலகம்; அணை - சேர்.

8. வேட்கை - ஆசை; நச்சுவேன் - விரும்புவேன்; மோனம் - மௌனம், அதாவது சொல்லக் கூடாதது.

## பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி

புள்ளினம் - பறவைக் கூட்டம்; ஆர்த்தன - ஒலி யெழுப்புகின்றன; நாதம் - இசையொலி; வெள்ளிய சங்கம் - வெண்மையான சங்கு; அணுகுற்றனர் - நிறைந்தனர்; சீர் - சிறப்பு.

## வேண்டுதல்

எஞ்ஞான்றும் - எப்பொழுதும்; பொங்கு - அதிகரிக்கின்ற; புவி - உலகம்; இயங்க - நடைபெற; சூழ்ச்சி - வஞ்சனை; மதி - புத்தி; தளை - கட்டுப்பாடு; தாண்டவம் - நடனம்.

## தனிப்பாடல்கள்

1. இரந்துண்ணி - பிச்சையெடுத்து உண்பவன்; மலைநீலி - மலை வாழ் குறத்தி.

3. கலை மடந்தை - சரசுவதி; ஓதுகிறாள் - கல்வி கற்கின்றாள்.

4. நடுச்சாமம் - நடு இரவு; சல்லாப் புடவை - மிக மெல்லிய புடவை; தில்லை - சிதம்பரம்.

## திருக்குறள்

1. இலான் - இல்லாதவனாகிய கடவுள், அடிசேர்ந்தார்க்கு - திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்கு, யாண்டும் - எவ்விடத்திலும், இடும்பை - துன்பம்.

2. நிறைமொழி - பயன்படும் சொற்கள், மறை - வேதம்.

3. புறத்த - துன்பம் தருபவை.

4. இல்வாழ்க்கை - குடும்ப வாழ்க்கை, அஃதும் - துறவு வாழ்க்கையும், பழிப்பது இல்லாயின் - குறை சொல்லும்படி இல்லாமல் இருந்தால்.

6. அன்பகத்தில்லா - உள்ளன்பில்லாத, வன்பாற்கண் - மரங்கள் அதிகம் வளராத பாலை நிலத்தில், வற்றல் - உலர்ந்த, தளிர்த்தற்று - தளிர் விடுவதற்குச் சமம்.

7. செல்விருந்து - சற்று முன் வந்த ஒரு விருந்தாளியை, ஓம்பி - உபசரித்து, வானத்தவர் - விண்ணுலகத்தவர்.

8. சிறுமையுள் நீங்கிய - அற்பத்தனத்திலிருந்து நீங்கிய, மறுமையும் இம்மையும் - மறு பிறவியிலும் இப்பிறவியிலும்.

9. காலத்தினல் - தக்க (ஆபத்துக்) காலத்தில், ஞாலம் - உலகம், மாணப்பெரிது - மிகப்பெரிது.

10. உள்ளாறும் - உள்ளேயே (தேகத்தினுள்) ஆறிவிடும், வடு - காயம்.

11. ஒட்ட - நெருங்க, ஒழுகல் - பழகுதல்.

12. ஒறுத்தார் - தீங்கு செய்பவரை தண்டிப்பவர், ஒன்ருக - ஒரு பொருளாக, வையார் - மதிக்கமாட்டார்கள், வைப்பர் - மதிப்பார்கள்.

13. அழுக்காறு - பொருமை, சாலும் - போதும், ஒன்னர் - பகைவர், வழுக்கியும் - தீங்கு செய்யத்தவறினும், கேடீன்பது - கேடு விளைவிப்பது.

14. கண் நின்று - எதிரில் நின்று, கண்ணறச் சொல்லினும் - பார்க்காததுபோலக் கடுமையாகக் கண்டித்தாலும், முன்னின்று - எதிரில் நின்று, பின்நோக்கா - பிறகு நடப்பதை யோசியாத.

15. நயனில - நியாயமல்லாதவற்றை, சான்றோர் - பெரியோர்.

16. இலன் என்று - கையில் பொருள் இல்லாதவன் என்று, பெயர்த்தும் - மீண்டும்.

17. தாளாற்றி - பெருமுயற்சிசெய்து, வேளாண்மை - உதவி.

18. இன்னாது - துன்பம் தருவது, இரக்கப்படுதல் - யாசிக்கப்படுதல், இரந்தவர் - யாசித்தவர், இன்முகம் - மகிழ்ந்த முகம்.

19. தோன்றின் - உலகில் பிறந்தால்.

20. அருட்செல்வம் - அருள் நிறைந்த தன்மை, பூரியார் - கீழ்மக்கள்.

21. ஆக்கம் - செல்வம், அளவிறந்து - அளவில்லாமல்.

22. பொய்யற்க - மறைத்துப் பேசாமல் இருக்கக் கடவன், சுடும் - உறுத்தும்.

23. நிலத்தறைந்தான் - கோபத்தில் நிலத்தை ஓங்கி அறைந்தவன், கை பிழையாதற்று - கையானது தப்பாமற் காயமடைந்ததை யொக்கும்.

24. இன்னாமை - தீமை விளைவிப்பவை, என்கொலோ - எக்காரணத்தாலோ, மன்னுயிர்க்கு - பிற உயிர்களுக்கு.

26. தலைப்பட்டார் - உயர்வடைந்தார், தீரத்துறந்தார் - முற்றும் துறந்தவர்.

27. சாக்காடு - இறப்பு.

29. உடையார் - செல்வமுள்ளவர், ஏக்கற்றும் - தாழ்ந்து நின்றும், கடையரே - இழிவானவரே.

30. நனி - மிக.

31. எனைத்தானும் - எவ்வளவு சிறிதாயினும், ஆன்ற - சிறந்த.

32. ஆவது - பின் நடக்கப்போவது, அறிகல்லாதார் - முன் தெரிந்து நடக்க முடியாதவர்.

33. இறைக்கு - அரசனுக்கு.

34. பேணி - போற்றி, தமராக - உறவினராக.

35. துவா வரும் - பற்றி வரும்.

36. செய்தக்க அல்ல - செய்யத் தகாதவற்றை.

37. காலம் கருதி - தகுந்த காலத்தை எதிர் பார்த்து, கலங்காது - தளராது.

38. மிகை நாடி - மிகுதியாகக் காணப்படுபவற்றை ஆராய்ந்து, கொளல் - தீர்மானிக்க.

39. வினைக்குரிமை நாடிய பின்றை - ஒரு தொழிலை நடத்தத் தகுதி உள்ளவனு என்பதை ஆராய்ந்த பின்.

40. கரவா - மறைக்காமல், கரைந்து - கூவி அழைத்து, அன்ன நீரார்க்கே - அப்படிப்பட்ட தன்மையுடையவர்களுக்கே.

41. செய்யாது இகழ்ந்தார்க்கு - செய்யத்தவறியவர்களுக்கு, எழுமையும் - ஏழு பிறவிகளிலும்.

42. உள்ளுவது - எண்ணுவது, தள்ளினும் - நிறைவேறுவிடினும், தள்ளாமை நீர்த்து - நிறைவேறியது போல்வது.

43. தெய்வத்தான் - ஊழ்வினை காரணமாக, மெய் - உடல், கூலி - பயன்.

44. பிறிதோர் - வேறொரு, இன்மை - இல்லாமையை.

45. உருவு - உருவம், எள்ளாமை - இகழாமை, உருள் - உருண்டு செல்லும்.

46. பளிங்கு - கண்ணடி, கடுத்தது - மிகுந்துள்ளது.

47. செல - (மனத்தில்) பதியுமாறு.

48. எள்ளுவர் - இகழுவர்.

49. உடுக்கை - உடுத்துள்ள ஆடை, இடுக்கண் - துன்பம், களைவது - போக்குவது.

50. அற்றால் - (முன் உண்ட) உணவு செரித்தால், நெடிது உய்க்குமாறு - நீண்ட காலம் வாழும் வழியாகும்.

51. அடுக்கிய கோடி - குவிந்த செல்வம், குடிப்பிறந்தார் - உயர்குடியில் பிறந்தார், குன்றுவ - இழிவானவற்றை.

52. இழிந்த - உதிர்ந்த, அனையர் - போன்றவர்.

53. ஆற்றுவார் - செய்துமுடிப்பார், ஆற்றின் - உரிய நன்னெறியில்.

54. குடிசெய்வல் - என் குடியை உயர்த்துவேன், ஒருவற்கு - ஒருவனுக்கு, மடிதற்று - ஆடையை இறுகக்கட்டி, முந்துறும் - முன் வந்து நிற்கும்.

55. ஏரினும் - ஏரைக்கொண்டு உழுவதைவிட, கட்ட பின் - களை எடுத்த பின், நீரினும் - தண்ணீர் பாய்ச்சுவதைவிட, காப்பு - காவல் செய்வது.

# அகராதி

அ - ஆ

அகம் மகிழ - மனம் சந்தோஷிக்க
அகற்றினர் - நீக்கினர்
அகற்று - நீக்கு
அணுகி - நெருங்கி
அணுத்திரள் - நுண்ணிய பொருள்களின் கூட்டம்
அண்ணலார் - பெருமையில் சிறந்தவர்
அண்மை - சமீபம்
அந்தமில் இன்பம் - முடிவில்லா சுகம்
அமரச் செய்து - உட்காரச்செய்து
அமைச்சர் - மந்திரிகள்
அரம்பையர் - தெய்வப் பெண்கள்
அரியணை - சிம்மாசனம்
அருள் - கருணை
அழுக்காறுற்று - பொறாமை கொண்டு
அளவளாவி - சம்பாஷித்து
அற்றே - அத்தன்மையதே
ஆக்கம் - உண்டுபண்ணுதல்
ஆய்கூடம் - ஆராய்ச்சிச்சாலை
ஆய்ந்தாரில்லை - யோசித்தாரில்லை
ஆரோக்கியம் - தேகசுகம்
ஆற்றல் - வன்மை; திறமை

இ

இகழ்வதற்கு - பரிகசிப்பதற்கு
இடுக்கண் - துன்பம்
இடையறு முயற்சி - நீங்காத ஊக்கம்
இயக்கம் - இயங்குகை
இலக்கியம் - இலக்கணம் அமைந்த நூல்
இழுதிறன் - இழுக்கும் சத்தி
இறுதி - முடிவு
இறைச்சி - மாமிசம்

உ

உடுக்கள் - விண் மீன்கள்
உலையா ஊக்கம் - இடையறு முயற்சி
உவகை - சந்தோஷம்
உவகையுற்று - மகிழ்ச்சியுற்று
உவமை - ஒப்பு
உழிஞை - கொற்றான் என்னும் ஒரு வகைச்செடி
உள்ளம் - மனம்
உறுப்பிலக்கணம் - உடலின் அவயவங்களின் இலட்சணம்

எ - ஏ

எஞ்ஞான்றும் - எப்போதும்
எடுத்துக்காட்டு - உதாரணம்
எட்டுணை - எவ்வளவு
எத்துணை முக்கியம் - எவ்வளவு அவசியம்
எழிலுற - அழகு பொருந்த
ஏறு - காளை

ஐ - ஒ

ஐயந்திரிபுற - சந்தேகமும் மயக்கமும் நீங்கும்படி
ஒற்றர் - தூதுவர்

க

கயவன் - கீழ்மகன்
கருதலாம் - எண்ணலாம்
கவரி - சாமரை
களிறு - ஆண் யானை
கறவை - பாற்பசு

கா - கி

காவியம் - காப்பியம்
கிழி - பணமுடிச்சு

கு - கூ

குறிக்கோள் - உயர்ந்த இலட்சியம்
குறுநகை - புன்சிரிப்பு
கூற்று - இயமன்
குற்றொலி - குறுகிய ஓசை

ச - சா

சமயம் - தருணம்
சாமரை - கவரி
சாயை - நிழல்

சான்ற - நிறைந்த
சான்று - உதாரணம்

சி - சீ

சிறூர் - சிறுவர்
சீரிய - மிகச்சிறந்த

சு - சொ

சூழ்ச்சி - சதியாலோசனை
சொற்பொழிவு - பெரும் பேச்சு; பிரசங்கம்

த - தி

தந்நலம் - சுயநலம்
தருக்கு - கர்வம்
திணறு - மூச்சுத்திணறுதல்

து - தொ

தூம்பி - யானை
தொடக்கப்பள்ளி - ஆரம்பப் பள்ளி
தொண்டாற்றி - கடனாற்றி; பணி செய்து
தொண்டு கிழவர் - மிக்க வயோதிகர்
தொழுவம் - கொட்டகை

ந - நா

நல்குவம் - கொடுப்போம்
நல்லார் - மேல் மக்கள்
நாமகள் - சரசுவதி

நி - நீ

நிகழ்ச்சி - சம்பவம்
நிநிச்சாலை - பொக்கிஷ இடம்
நிலாமுற்றம் - மொட்டை மாடி
நிறுவி - ஸ்தாபித்து
நிறுவினர் - ஸ்தாபித்தார்
நிறையுள்ள - மாட்சிமையுள்ள

ப - பா

பண்பு - குணம்
பாம்படித்தல் - சமப்படுத்தல்
பாம்பொருள் - மேலான வஸ்து (கடவுள்)

பனிப்படலம் - பனித்தொகுதி
பாரபட்சம் - ஓரவஞ்சனை

மு - மூ

முரண் - மாறுபட்ட
மூலதனம் - முதல் பணம்

மே - மோ

மேற்கொண்டால் - கைக்கொண்டால்
மோழைமாடு - மொட்டை மாடு

யா - வ

யாசகன் - இரந்து உண்பவன்
யாத்து - இயற்றி
வஞ்சினம் - சபதம்
வடமீன் - துருவ நட்சத்திரம் (அருந்ததி)
வடமுனை-வடகோடி ; வட துருவம்
வரலாறு - சரித்திரம்
வரலாற்று நூல் - சரித்திரம்
வருணனை - புனைந்துரை
வல்லுநர் - வன்மை மிக்கவர்
வழக்கறிஞர் - வக்கீல்
வழுவாதவர் - தவறாதவர்
வறிது - வெறுவிதானது ; ஏழ்மையுடையது

வா - வி

வாகனம் - ஊர்தி
வாய்ப்பு - தருணம்
வாரணங்கள் - யானைகள்
விஞ்ஞானி - பௌதிக சாஸ்திரம் வல்லவன்
விடையிறுத்தார்-பதில் அளித்தார்
விடுதி - தங்கும் இடம்
விண்ணுலகு - வானுலகு
விருதப்பெயர் - வெற்றிப்பெயர்
விழைகின்றேன் - விரும்புகின்றேன்

வே

வேழங்கள் - யானைகள்
வேனில் - வேனல் ; கோடை



# உமா வாசகம்

## எட்டாம் புத்தகம்—பொதுப் பகுதி

[மூன்றும் பாரத்துக்கு உரியது.]

Form III

1951ஆ ஜூன்மீ வெளியிடப்பட்ட புதிய பாடத்திட்டத்தின்படி
திருத்தி அமைக்கப்பெற்றது.




த. சே. உமாபதி, M.A., L.T.,
தலைமையாசிரியர்,
ஸி. அப்துல் ஹக்கீம் இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளி, சென்னை.






உமாதேவன் கம்பெனி
16, செம்புதாஸ் தெரு, சென்னை—1
1951

 [விலை ரு. 1-2-0

First Edition : 1950
Reprinted : 1951.
Revised Edition : November, 1951.



# முகவுரை

உமா வாசகம் என்னும் பெயருடன் வெளிப்போதரும் நூல் வரிசையில் இஃது எட்டாம் புத்தகம். 1951-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தையொட்டி இது திருத்தி அமைக்கப்பெற்றுள்ளது.

சிறுவர் சிறுமியரின் மனோநிலையையும், அவர்தம் தமிழறிவின் எல்லையையும் மனத்திற்கொண்டு இஃது இயற்றப் பெற்றுள்ளது. இதன்கண் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடமும் பாடத்திட்டத்தின் நோக்கமாகிய மொழிப்பயிற்சியை அடிப்படையாகக் கொண்டு இயன்றிருத்தல் குறிப்பிடத் தக்கது. ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் தரப்பட்டுள்ள பயிற்சியே இதற்குச் சான்றாகும். அன்றியும், மொழி வளர்ச்சிக்குரிய புதிய சொற்களும், சொற்றொடர்களும் ஒவ்வொரு பாடத்திலும் ஏற்ற அளவில் இடம் பெற்றுள்ளன.

மாணவர் மாணவிகட்கு அகராதி உபயோகிக்கும் பழக்கம் உண்டாதற்பொருட்டு ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற்களைக் குறித்து, அவற்றுக்குப் புத்தகத்தின் இறுதியில் தரப்பட்டுள்ள அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதும்படி அமைக்கப்பெற்றுள்ள பயிற்சி குறிப்பிடத்தக்கதாம். செய்யுட்பகுதிக்குக் குறிப்புரைகள் தரப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் இதனைப் படித்துப் பயனுறுதற்கு ஆவன செய்யுமாறு ஆசிரிய அறிஞர்களை வேண்டுகிறோம்.



சென்னை,
9-11-51.

பதிப்பாளர்

THE JUPITER PRESS LTD., MADRAS—1.

# உள்ளுறை

## உரை நடைப் பகுதி



## செய்யுட்பகுதி

# உமா வாசகம்

(எட்டாம் புத்தகம்)

## 1. நமது குடியாட்சித் தலைவர்

1. நமது நாடு 1947-ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், 15-ஆம் நாள் நள்ளிரவில் அயலார் ஆட்சியினின்று விடுதலை அடைந்தது. அது 1950-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 26-ஆம் நாள் முதல் குடியரசு நாடாய்த் திகழ்ந்து வருகின்றது. அன்று பழைய அரசியல் அமைப்புக் கைவிடப்பட்டுப் புதிய அரசியல் திட்டம் நடைமுறைக்கு வந்தது. ஆதலால், டாக்டர் இராசேந்திரப் பிரசாது அவர்கள், ஜனநாயக ஆட்சி முறைப்படி, நம் நாட்டு 'ஜனாதிபதி'யாய் அன்று பதவி ஏற்றார். இப்பதவி ஈடும் எடுப்புமற்றது. முப்பது கோடிக்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய மாபெருநாட்டின் தலைமைப் பதவி எத்துணைப் பெருமை வாய்ந்தது என்பதனை எடுத்துக் கூற வேண்டுவதின்று. இத்தகைய ஒப்பற்ற பதவி அவரைத் தேடி வந்தடைந்தமைக்கு உரிய காரணங்களை இராசேந்திரரின் வாழ்க்கை வரலாற்றினின்றும் கண்டறிவதே இப்பாடத்தின் நோக்கமாகும் :

2. காவிரியொத்த கங்கையாறு பாயும் வாய்ப்பினை உடையது பிகார் மாகாணம். மகதப் பேரரசுக்குத் தாயகமாய் விளங்கிய இம்மாகாணத்தில் 'விஹாரங்கள்' எனப் பெயரிய பல பௌத்தாலயங்களும் பௌத்த மடங்களும் இருந்தமையால், இது பிகார் (விஹார்) என்னும் பெயர் பெற்றது. பீகார் மாகாணத்தின் வடபாகத்தில் உள்ள சாரன் என்னும் ஜில்லாவில், புகழ்மிக்க நிலக்கிழார் மகாதேவ சகாயருக்கு 1884-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், மூன்றும் நாள், ஐந்தாம் புதல்வராய் இராசேந்திரர் பிறந்தார்.

3. தமது ஒன்பதாம் ஆண்டில் பள்ளிக்கு அனுப்பப்பட்ட இவர், எல்லா வகுப்புக்களிலும் முதல்வராய் விளங்கியதோடன்றி, 1902-ஆம் ஆண்டில் கல்கத்தாப் பல்கலைக் கழக நுழைவுத் தேர்விலும் முதலிடம் பெற்றுர் எனின், இவர்தம் நுண்ணறிவினை எடுத்துக்காட்ட வேறென்ன சான்று வேண்டும்? நுழைவுத் தேர்வில் இவர் பெற்ற வெற்றியைப் பாராட்டி எழுதிய 'இந்துஸ்தான் ரேவ்யூ' என்னும் திங்கள் வெளியீடு, 'பம்பாய் மாகாணத்தவரான சந்தாவிர்க்கர், இலாகூர்க் காங்கிரஸ் மகா சபையில் தலைமை தாங்கியிருந்த போது நீதிபதி பதவி கிடைக்கப்பெற்றதுபோல, வாலிபரான இராசேந்திரரும் அரும்பெரும்பதவிகளை வகிப்பர் என்பது நிச்சயம்,' என்று கூறியது. அந்தச் சோதிடம் முற்றிலும் உண்மை என்பதை இராசேந்திரர் வரலாற்றின் மூலம் நாம் அறிகின்றோம்.

4. இராசேந்திரர் கல்கத்தாப் பிரஸிடென்ஸிக் கல்லூரியில் சேர்ந்து, எப். ஏ., பி. ஏ. தேர்வுகளிலும் முதல்வராகவே தேறினர்; 1907ல் எம். ஏ. தேர்விலும், 1910ல் சட்டத் தேர்விலும் வெற்றி கண்டார். எம். ஏ., பி. எல். என்னும் பட்டங்களுடன் இவர்தம் கல்லூரிப் படிப்பு முடிவெய்தியது. ஆயினும், இவர் அதனோடு அமையாது, அறிவு வளர்ச்சியில் ஆர்வம் கொண்டு, மாணவர் சங்கங்களைத் தோற்றுவிப்பதும், வாதங்கள் நிகழ்த்தக் கூட்டங்கள் கூட்டுவதும், அவற்றில் பங்கெடுத்துக்கொள்வதும், பிறரைப் பங்கு கொள்ளச் செய்வதும் தமது பொழுது போக்காகக் கொண்டார்.

5. இராசேந்திரர் தொடக்கத்தில் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் நீதிவாதத் தொழிலை மேற்கொண்டார். அக்காலத்தில் நாட்டுப்பற்றின் உறைவிடமாய் விளங்கிய கோபால கிருஷ்ண கோகலே என்பார், தாம் தோற்றுவித்த இந்திய ஊழியர் சங்கத்திற்சேர்ந்து நாட்டுக்கு நற்பணியாற்றுமாறு இராசேந்திரருக்கு வேண்டுகோள் விடுத்தார். இளைஞர் இராசேந்திரரும் அதற்கு இணங்கினர். ஆயினும், இவர் தம் தந்தையாருக்குப் பிறகு தமது முன்னேற்றத்திற் கண்ணுங்கருத்துமாயிருந்த தம் தமையனரான மகேந்திரப் பிரசாது அவர்களுக்கு ஒரு கடிதம்

எழுதி, இந்திய ஊழியர் சங்கத்திற்சேர்ந்து தாய் நாட்டுக்குப் பணியாற்றத் தமக்கு உத்தரவளிக்க வேண்டினர். தமக்குப் பிறகு தமது குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக் கடமைப் பட்டவர் இராசேந்திரரே என்று கருதிய மகேந்திரர், தம் தம்பி யார் விருப்பத்திற்கு இணங்க மறுத்துவிட்டார். இது சம்பந்த மாக இவ்விருவரும் ஒருவருக்கொருவர் எழுதிய கடிதங்களைப் படித்தாற்ருன் இராசேந்திரரின் ஒழுக்க மேன்மையும், நன்றியுடைமையும் ஆகிய சீரிய பண்புகளை நாம் அறிந்து இன்புறக்கூடும்.

6. இராசேந்திரர் கல்கத்தாவில் நீதி வாதத் தொழில் புரிந்துகொண்டே எம். எல். தேர்வுக்குச் சென்று, அதிலும் முதலிடம் பெற்ருர். 1916ல், தமது பிறப்பிடமாகிய பீகார் மாகாணத்தில், உயர்நீதி மன்றம் புதிதாக நிறுவப்பட்டபோது, இராசேந்திரர் அங்குச் சென்று தம் தொழிலை நடத்தத் தொடங் கினர்; தம் தொழிலில் வெகு விரைவில் பெரும்புகழுக்கு உரியவரானர். புகழ் வளர்ச்சியோடு வருவாய் வளர்ச்சியும் போட்டியிடத் தொடங்கியது. இவர் தம் தொழிலைத் தொடர்ந்து நடத்தியிருப்பின், செல்வம் மலை போலக் குவிந்திருக்கும். ஆனல், தமக்கென வாழாப் பிறர்க்குரியாள-ராகிய இவர்தம் நாட்டுப்பற்று மிக்க நன்மனத்தில், ஆறிடும் மேடும் மடுவும் போலாம் செல்வத்தைப்பற்றிய எண்ணம் எட்டுணையும் இடம் பெறவில்லை. ஆகலின், 1919ல் காந்தியடி களின் சத்தியாக்கிரக இயக்கம் தோன்றிய போது, இவர் தம் தொழிலை உதறிவிட்டு, ஒத்துழையா இயக்கத்தில் ஈடுபட்டார்.

7. ஒத்துழையா இயக்கத்தின் பலனகப் பீகாரில் தேசீயப் பல்கலைக் கழகம் தோன்றியது. மாகாணத்தின் எல்லாப் பகுதிகளினின்றும் மாணவர் வந்து குழுமித் தேசிய முறையில் போதனையும் பயிற்சியும் பெற்றனர். அப்பல்கலைக் கழகத்தின் துணைத் தலைவர் (வைஸ் சான்ஸலர்) பதவி இராசேந்திரருக்கே கிடைத்தது. ஆயினும், 1930ல் சுதந்தரப் போர் வலுத்தபோது ஆங்கில அரசினர் அப்பல்கலைக் கழகத்தை மூடிவிட்டனர்.

8. பால பத்தனை துருவனுக்கும், காவியகர்த்தாவான வான்மீகருக்கும், ஜனக மன்னருக்கும் இருப்பிடமாய் இருந்த

தென்று அறிஞர் கூறும் சண்பக ஆரணியம் என்பது, இக்காலத்தில் சம்பரான் ஜில்லா என வழங்கப்படுகிறது. அந்த ஜில்லாவில் வாழ்ந்த உழவுத் தொழிலாளருக்கு ஆங்கில அரசினரால் இழைக்கப்பட்ட அநீதிகுறித்து ஆராய்வதற்குக் காந்தியடிகள் சென்ற போதுதான் இராசேந்திரர் அடிகளாரோடு பல நாட்கள் இருந்து, அவருடைய அரிய பண்புகளைக் கண்டு, அவற்றில் ஈடுபட்டு, அவருடைய அணுக்கத் தொண்டராய் மாறினர்.

9. பாபு இராசேந்திரர் நீதிவாதத் தொழிலைக் கைவிட்ட போது பெரிய வழக்கொன்று அரைகுறையாயிருந்தது. அந்த வழக்கு 1928ல் இங்கிலாந்தில் 'பிரிவி கௌன்சில்' முன்னர் விசாரணைக்கு வந்தது. அதற்காக அங்குச் சென்ற இராசேந்திரர் ஐரோப்பிய நாடுகளிற் சுற்றுப்பிரயாணம் செய்த போது சிறந்த ஞானியராய் விளங்கிய ரோமேன் ரோலந்தைக் கண்டு உரையாடும் வாய்ப்பினைப் பெற்றார்; பிறகு சர்வதேச இளைஞர் மகாநாட்டின் அழைப்பிற்கிணங்கி, அங்குச் சென்றிருந்தார்; பின்னர் வியன்னு நகரில் உலகில் போரே நடைபெறக்கூடாது என்னும் கொள்கையை வற்புறுத்துவதற்காகத் தோற்றுவிக்கப்பட்ட சர்வதேச மகாநாட்டுக்குச் சென்று, அங்கு அஹிம்ஸையின் பெருமையையும் அன்பின் சிறப்பினையும் வற்புறுத்திச் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினர். ஆனல், குருதியாற்றில் குளிப்பதையே கொள்கையாகக் கொண்டிருந்த சிலர், இவர்மீது சினங்கொண்டு, இவரை நையப்புடைத்தனர். இவர் உடல் குணம் அடைய ஆறு வாரங்களாயினவெனில், அக்கொடியவர் இவருக்கிழைத்த துன்பத்தின் அளவை நாம் ஒருவாறு ஊகிக்கலாமன்றோ?

10. இராசேந்திரர் இங்கிலாந்து முதலிய அயல்நாடுகளிற் பிரயாணம் செய்த போது, மேனுட்டு உடைகளை முற்றிலும் புறக்கணித்து, இந்திய உடையையே அணிந்துகொண்டார். அதுகுறித்து இவரை இழித்தும், பரிகசித்தும் பேசியவர் பலர் உண்டு. ஆனல், இவர் அதனை எட்டுணையும் பொருட்படுத்தாமல், தம்மைப் பரிகசித்தவர்கட்குக் கதரின் உற்பத்தி, பெருமை, நோக்கம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழி-

வாற்றி, அவர்கள் சிறுமையையும், தமது பெருமையையும் விளக்கி வந்தார்.

11. காந்தியடிகள் 1930-ஆம் ஆண்டில் உப்புச் சத்தியாக்கிரகம் தொடங்கிய போது இராசேந்திரர் அதிற்கலந்து கொண்டதற்காகச் சிறைப்பட்டு, விடுதலை பெற்றார்; ஆயினும், மீண்டும் 1932ல் ஒரு முறையும், 1933ல் மற்றொரு முறையும் சிறை வைக்கப்பட்டார். ஆனால், மறு ஆண்டின் தொடக்கத்தில் பீகாரில் இயற்கை அன்னை சீறி எழுந்தது போலத் தோன்றிய பூகம்பம் காரணமாக இவர் விடுதலை செய்யப் பெற்றார். அப்பூகம்பத்தால் அல்லலுற்ற அனைவர்க்கும் இவர் ஆற்றிய அரும்பணி, அளவிட்டுக் கூறற்பாலதன்று. பூகம்ப நிவாரண நிதிக்குத் தாம் காசநோயால் உடல்நலம் அற்றிருந்த காலத்தில் ஒன்பது திங்களில் முப்பது லட்சம் ரூபாய் சேர்த்தாரென்பதிலிருந்தே இவருடைய அருந்தொண்டினை ஓரளவு நாம அறிதல் கூடும்.

12. இராசேந்திரர் 1934-ஆம் ஆண்டில் பம்பாய் நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்து நிகழ்த்திய தலைமை உரை, இந்திய மக்களாற் பெரிதும் புகழப்பட்டது. 1935-ஆம் ஆண்டில் ஆக்கப்பட்ட இந்திய அரசியல் சட்டப்படி, 1937ல் இந்திய மாகாணங்களில் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. அப்போது பீகார் மாகாணத்தின் மந்திரி சபையை அமைக்கவும், முதலமைச்சராயிருக்கவும் இராசேந்திரரை அம்மாகாண மக்கள் வேண்டினார்கள். ஆனால், இவர் பதவியில் பற்றுடையவரல்லராகலின், அதனை ஏற்க மறுத்துவிட்டார். இங்ஙனம் முதலமைச்சர் பதவியை உதறித் தள்ளிய உத்தமரை என்னென்று புகழ்வது!

13. இராசேந்திரரின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா, 1944ல் இவர் சிறையிலிருந்த போது கொண்டாடப்பட்டது. அப்போது ஒரு கூட்டத்தில், "டாக்டர் இராசேந்திரரே இந்தியாவின் முதல் கனவான்; அவரே மூத்த கனவான்," எனறு கூறிச் சக்கரவர்த்தி இராசகோபாலாசாரியார் இவருக்குப் புகழ் மாலை சூட்டியுள்ளார் எனின், இவர் பெருமைக்கு வேறு

என்ன சான்று வேண்டும்? "என்னுடைய துணைவர்களுள் சிறந்த ஒருவர் பாபு இராசேந்திரர்," என்று காந்தியடிகளே இவர்தம் உயரிய பண்புக்கு நற்சாட்சி பகர்ந்துள்ளார்.

14. இந்தியா சுதந்தரம் அடைவதற்கு முன் இந்திய இடைக்கால அரசியலை ஏற்று நடத்திய பேரறிஞர்களுள் ஒருவர் இராசேந்திரர். இவர் உணவு மந்திரியாராய் இருந்து நாட்டைப்பற்றியிருந்த பஞ்சப்பேயை விரட்டுவதற்காக மேற்கொண்ட முறைகளை அறியாதவர் இலர். அன்றியும், அரசியல் நிர்ணய சபையின் தலைமைப் பதவியும் இவருக்கே அளிக்கப்பட்டதன்றி, நமது நாடு குடியரசாய்த் திகழத் தொடங்கிய அன்று இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதியாய் விளங்கும் பெருமையும் இவருக்கே உரியதாயிற்று.

15. இராசேந்திரரின் சீரிய பண்புகள் அனைத்தையும் கூறி விளக்கல் இயலாத செயல். இவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஒருவர், "பொது வாழ்க்கையில் வாதப் பிரதிவாதங்கள் அடிக்கடி நிகழும்; வாதப் பிரதிவாதங்களில் சிலர் சூடு கொள்வர்; கோபம் காட்டுவர்; மரியாதையும் தவறுவர். பாபு இராசேந்திரர் அங்ஙனம் செய்யார். அவர் மிக்க நிதான புருஷர்; மரியாதையிற்சிறிதும் தவறாதவர்; எதிரியின் வாதத்தைப் பொறுமையுடன் கேட்பவர்; கேட்டறிந்த பின்பு கண்ணியமாகப் பதில் அளிப்பவர். படபடப்போ, சிடுசிடுப்போ அவரிடம் தலை காட்டாது." என்று கூறுகின்றார்.

16. காந்தியடிகளை உலகம் மகாத்துமா என வழுத்தியது; மாளவியாவைத் 'தருமாத்துமா' எனப் புகழ்ந்தது; இராசேந்திரரைச் 'சாந்தாத்துமா' என வழங்கி வருகிறது.

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே!"

"அன்பர்பணி செய்யஎன்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே!"

என்னும் திருவாக்குக்களுக்கு இலக்காய் விளங்குகின்றவர்

இன்றைய இந்திய ஜனாதிபதி என்று கூறுவது மிகையாகாது. இவர் தலைமையில் நம் நாடு மேலும் பெருமையும் முன்னேற்றமுமடைவது திண்ணமாகும்.

வாழ்க நம் குடியாட்சித் தலைவர்!

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. 'பீகார்' என்னும் பெயர்க் காரணம் யாது ?
2. இராசேந்திரரின் கல்விப் பருவத்தை 10 வாக்கியங்களில் எழுதுக.
3. தம்மைக் கோபால கிருஷ்ண கோகலே இந்திய ஊழியர் சங்கத்தில் சேர அழைத்த போது இராசேந்திரர் செய்தது யாது ? இவர் தமையனுக்குக் கடிதம் எழுதியது எதைக் காட்டுகிறது ?
4. இராசேந்திரரைத் 'தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்' என்பது எப்படிப் பொருந்தும் ? விவரிக்க.
5. ஐரோப்பா நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தின்போது இராசேந்திரர் அடைந்த இன்னல்கள் யாவை ? அவற்றிற்குக் காரணம் யாது ?
6. இராசேந்திரரின் அரசியல் வாழ்க்கையைக் குறித்து ஒரு பக்கத்திற்கு மிகாமல் கட்டுரை வரைக.
7. இராசேந்திரரிடம் காணப்படும் அருங்குணங்களைக் கூறுக.

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

முடிவு, வளர்ச்சி, ஆர்வம், தோற்றுவி, ஒத்துழையா, சுதந்தரம், அணுக்கம், அநீதி, ஈடுபட்டு, அரைகுறையாக, வாய்ப்பு, அவிம்சை, வைய

III. வாக்கியங்களில் அமைக்க :—

கூறிப்போக்து, முடிவெய்தியது, பங்குகொள்ளச்செய், பொழுது போக்கு, துணைத்தலைவர், காரியகர்த்தா, அணுக்கத் தொண்டர், அரைகுறையாக, வைய

IV. சொல்லியுள்ளபடி செய்க :—

1. டாக்டர் இராசேந்திரப் பிரசாது அவர்கள் ஜனநாயக ஆட்சி முறைப்படி நம் நாட்டு ஜனாதிபதியாய்ப் பதவி ஏற்றார். (செயப்பாட்டுவினை வாக்கியமாக மாற்றுக.)

2. தேசியப் பல்கலைக் கழகத்தின் துணைத் தலைவர் பதவி இராசேந்திரருக்குக் கொடுக்கப்பட்டது. (செய்வினை வாக்கியமாக மாற்றுக.)

3. பீகார் மாகாணத்தின் வடபாகத்தில் உள்ள 'சாரன்' என்னும் ஜில்லாவில் புகழ் மிக்க நிலக்கிழார் மகாதேவ சகாயருக்கு 1884-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், மூன்றாம் நாள், ஐந்தாம் புதல்வராய் இராசேந்திரர் பிறந்தார். (நான்கு தனி வாக்கியங்களாக எழுதுக.)

V. அகராதி பார்த்துப் பொருள் கூறுக :—

நிலக்கிழார், போந்து, உறைவிடம், வருவாய், காவியம், அரிய, அணுக்கம், உறை, குருதி, நைய, புடைத்தனர், இழித்து, வழுத்து, குடி கொள்.

## 2. ஔவையார் அருந்திறன்

1. சங்க காலத்துப் புலவர்களைப்பற்றியோ, பிற்காலத்துப் புலவர்களைப்பற்றியோ, தக்க சான்றுகளுடன் கூடிய வரலாற்றுக் குறிப்புக்கள் நம் நாட்டில் இல்லை. வரலாற்றுக் குறிப்புக்களைக் குறித்து வைக்கும் வழக்கம் நம்மவர்களுக்கு இல்லாமையே இக்குறைபாட்டுக்குக் காரணமாகும். எனினும், சங்க காலத்துப் புலவர் சிலருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள், சங்க காலச் செய்யுட்களில் விரவிக்கிடக்கின்றன. அவ்வகைச் சான்றினைக் கொண்டு, புலவர் சிலருடைய வாழ்க்கைக் குறிப்புக்களை ஓரளவு நாம் அறிய முடிகிறது. இவ்வாறே புலவர்களைக் குறித்துச் செவி வழிச் செய்தியாகக் கூறப்படும் சில கதைகளும் நம் நாட்டில் வழங்கப்பட்டு வருகின்றன. அவை படிக்கச் சுவை பயப்பனவாயும், புலவர்களின் ஆழ்ந்த அறிவையும் நெஞ்சுரத்தையும் விளக்குவனவாயும் காணப்படுகின்றன. அவற்றுள் இரண்டொரு குறிப்புக்களை ஈங்கு அறிவோம்:

2. ஔவையார் மிகச் சிறந்த புலமைபெற்ற பெண்மணியார் ஆவர். இவரது இயற்பெயர் இன்னதென்பதை அறியக் கூடவில்லை. இவர், பிறர்க்கு அறிவுரைகளை இனிய முறையில் எடுத்துரைத்து வந்தமை காரணமாக, '**தாயார்**' என்னும் பொருள்பட, மக்கள் இவரை ஔவையார் என வழங்கியிருத்தல் வேண்டும். இவர் பாணர் மரபைச் சேர்ந்தவர்; '**பாணர்**' என்பவர் இசை வாணர். பாண் மரபைச்சேர்ந்த பாட்டில் வல்ல ஆடவர் '**பாணர்**' என்றும், பாட்டில் வல்ல பெண்டிர் '**பாடினியர்**' என்றும், ஆடலும் பாடலும் வல்ல பெண்டிர் '**விறலியர்**' என்றும் வழங்கப்பட்டனர். இம்மரபைச்சேர்ந்த ஔவையார் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியைக் கொங்கு நாட்டைச்சேர்ந்த தகடூரில் **அதியமான் நெடுமான் அஞ்சியோடு** கழித்தார். இவர் மிகச் சிறந்த புலவராதலின், முடியுடை மூவேந்தராலும் பாராட்டப்பட்டார்.

3. ஔவையார் ஒரு முறை பாண்டியன் அவைக்குச் சென்றபோது, அவைப்புலவர் அனைவரும் முகவாட்டத்துடன்

தம் எதிரில் வரக் கண்டார். ஔவையாரைக் கண்ட அப்புலவர்களின் முகங்கள் மேலும் வாட்டமடைந்தன. இதைக்கண்ட ஔவையார், அவர்களுடைய முகவாட்டத்துக்குக் காரணம் யாதெனக் கேட்டார். புலவர்கள், "நாளை மாலைக்குள் நான்கு கோடிக் கவிகள் பாடி வரவேண்டுமென்பது பாண்டியரின் கட்டளை. மனித முயற்சியால் ஆகாத இச்செயலை எவ்வாறு நிறைவேற்றுவதென்பதறியாத நாங்கள், வருந்தாமல் என் செய்வோம்? பாண்டியரின் கட்டளையை நிறைவேற்றுமலிருப்பது புலவர் உலகின் பெருமைக்கு இழுக்கு அன்றோ? அதனை எண்ணியே வருந்துகின்றோம்," என்று கூறினார்கள்.

4. இதைக் கேட்ட ஔவையார், "புலவர் பெருமக்களே, நீங்கள் வருந்தாதீர்கள்; நாளை நான் பாண்டியரின் அவையில் அதனை நிறைவேற்றிவிடுகின்றேன். நீவிர் அச்சமொழிந்து மகிழ்ச்சியுடன் செல்லுங்கள்," என்று கூறி அகன்றார்.

5. புலவர் அனைவரும், ஔவையார் கூறியதை நம்ப மாட்டாமல், 'நாளை அர்சவையில் என்ன நிகழுமோ!' என்னும் அச்சம் கொண்டவராய்த் தத்தம் இல்லம் ஏகினர்.

6. மறுநாள் அவை கூடியதும், பாண்டியன் புலவர்களை விளித்துக் கவிதையைப்பற்றிக் கேட்டான். அவ்வமயம் அவையில் நுழைந்த ஔவைப் பெருமாட்டியார் மன்னனை நோக்கி, "வேந்தரே, இதோ புலவர்கள் சார்பில் நான் பாடுகின்றேன்; கேளும்," என்று கூறி,

**"மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று**
**மிதியாமை கோடி பெறும்.**

**"உண்ணீர்உண் ணீரென்று உபசரியார் தம்மனையில்**
**உண்ணாமை கோடி பெறும்.**

**"கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு**
**கூடுதல் கோடி பெறும்.**

**"கோடானு கோடி கொடுப்பினும் தன்னுடைநாக்**
**கோடாமை கோடி பெறும்."**

என்று பாடி முடித்தார். இந்த நான்கு கோடிக் கவிகளைக்

கேட்ட புலவர்கள், மகிழ்ச்சிப் பெருக்கடைந்து, ஔவை-யாரைப் பாராட்டினர்கள். பாண்டியன் ஔவையாரின் திற-னறிந்து பெருவியப்புக்கொண்டு, அவரை நன்கு பேணிப் பரிசில்கள் அளித்து மகிழ்வித்தான்.

7. ஔவையார் ஒரு சமயம் சோழ மன்னனைக் காணச் சென்றிருந்த போது, இவருடைய ஆற்றலை அறியாத புலவர் ஒருவர், "அம்மையீர், வள்ளுவர் 1330 குறட்பாக்களில் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனையும் விளக்கிவிட்டார். இத்தகைய ஆற்றல் பெரும்புலமைச்செல்வியர் எனப் பாராட்-டப்பெறும் உமக்கு உண்டோ?" என்று கேட்டார். அப்புலவ-ருடைய உள்ளக்கருத்தினை உணர்ந்த ஔவையார், "வள்ளுவ-னர் வெளிப்படையாகக் கூறாது விட்ட வீடு பேற்றினையும் வெளிப்படையாக விளக்கி, அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கனையும் ஒரே கவிதையில் அமைத்துப் பாடலாமே! புலவரே, அஃது உம்மால் ஆகாதோ? அங்ஙனமாயின், கேளும்; பாடுகின்றேன்," என்று கூறி,

"ஈதல்அறம் ; தீவினைவிட் டீட்டல்பொருள் ; எஞ்ஞான்றும்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே இன்பம் ; பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."

என்னும் செய்யுளைப் பாடினர். புலவர் வெட்கி, ஔவை யாரை வணங்கிப் போற்றினர்.

8. ஔவையார் ஒரு சமயம் பாண்டிய மரபைச்சேர்ந்த குறுநில மன்னன் ஒருவனுடைய திருமணத்துக்குச் சென்றார். திருமணம் முடிந்த பின்னர் விருந்து நடந்தது. திருமணங் காணப் பெருங்கூட்டம்வந்திருந்தபடியால், விருந்து மண்டபத்-திற்குள் புக இயலாதபடி நெருக்கம் மிகுந்திருந்தது. விரை-வில் விருந்தருந்திவிட்டுத் திரும்ப விரும்பிய ஔவையார், விருந்து மண்டபத்திற்புக முயன்ற போது, கூட்டத்தினரால் நெருக்குண்டு, தளர்ந்து, வருந்தி, ஓரிடத்தில் அமர்ந்து விட்டார்.

9. கூட்டத்தினர் ஓரளவு கலைந்து சென்ற பிறகு ஔவை யார் பேசாமல் ஓரிடத்தில் அமர்ந்திருக்கக் கண்ட ஒருவர், "நீவிர் சோறுண்டீரோ?" என்று கேட்ட போது,

"வண்டமிழைத் தேர்ந்த வழுதி திருமணத்து
உண்ட பெருக்கம் உரைக்கக்கேள் :—அண்டி
நெருக்குண்டேன் ; தள்ளுண்டேன் ; நீள்பசியி னாலே
சுருக்குண்டேன் ; சோறுண்டி லேன்."

என்னும் செய்யுளைக் கூறி, தாம் கூட்டத்தில் நெருக்குண்டு பட்ட துன்பத்தையும் பசித்துக்கிடந்ததையும் ஔவையார் நயம்பட எடுத்துக் காட்டினார்.

10. ஔவையார் அதியமான் என்பவனுக்காகத் தொண்டைமான் என்பவனிடம் தூது சென்ற வரலாறும், காரி என்னும் வள்ளலிடம் அதியமானின் ஆற்றலை விரித்துரைத்த வரலாறும், இன்ன பிறவும் சங்கச் செய்யுட்களிற் காணக்கிடத்தல் போலவே, ஔவையாரைப்பற்றி வழங்கும் செவிவழிச் செய்திகள் மிகப் பலவாம். அவற்றை நீங்கள் மேல் வகுப்புக்களிற் படித்தறியலாம்.

## பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. பழங்காலப் புலவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நாம் அறிவதெங்ஙனம்?
2. 'ஔவையார்' என்னும் பெயருக்குக் காரணம் யாது?
3. ஔவையாரின் குடிப்பெருமை குறித்து நாம் அறிவது யாது?
4. ஔவையார் புலவர்களின் வாட்டத்தை எவ்வாறு தீர்த்தார்?
5. ஔவையார் பாடிய 'நான்கு கோடிக் கவிகள்' எவை?
6. ஔவையார் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கனையும் அமைத்துப் பாடிய ஒரே பாட்டு எது?
7. திருமண விருந்து குறித்து ஔவையார் தம் நிலைமையை எங்ஙனம் விளக்கினார்?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

*தக்க, பெருமை, அச்சம், அறம், வெளிப்படை, குறுநிலம்*

III. வாக்கியங்களில் அமைக்க :—

*குறைபாடு, விரவி, செவிவழிச்செய்தி, சுவை பயப்பன, நெஞ்சுரம், முகவாட்டம்*

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

*சான்று, நிகழ்ச்சி, விரவி, செவிவழிச்செய்தி, பாணர், விறலியர், முற்றம், கோடாமை, எஞ்ஞான்றும், வீடு, வழுதி*




# 3. பல்லவர் காலத்து ஓவியங்கள்

1. ஓவியம், சிற்பம், இசை, நடனம் ஆகிய நுண்கலைகளே ஒரு நாட்டின் நாகரிகத்தை நிர்ணயிக்கும் அளவுகோல்களாம். இக்கலைகளிற் பண்டு முதல் சிறப்புற்று விளங்கிய நாடுகள் சிலவே. அவற்றுள் நமது நாடும் ஒன்று. இந்தியா நெடுங் காலமாகவே நுண்கலைகளில் தலைசிறந்த நாடு என்பதற்கு நமது நாட்டின் பல பாகங்களிலும் காணக் கிடக்கும் பண்டைய ஓவியங்களும், சிற்பங்களும், புதை பொருள் ஆராய்ச்சிப் பொருள்களும் சான்று பகர்கின்றன. இவற்றுள் இன்றளவும் காண்பவர் மனத்தைக் கவரும் வண்ணம் தோற்றமளிக்கும் சித்தன்ன வாசல் ஓவியங்களைப்பற்றிக் கவனிப்போம்:

2. 'சித்தன்னவாசல்' என்னும் இடம் புதுக்கோட்டை-யில் உள்ளது. திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கே ஏறத்தாழ இருபது கல் தொலைவில், நாரத்தாமலைப் புகைவண்டி நிலையத்தின் அருகில் இஃது அமைந்திருக்கிறது. இங்குள்ள குடைவரைக் கோவில், ஒரு சிறிய மலைமீது, ஓவியக்கலையின் உறைவிடமாய் அமைந்துள்ளது. இக்கோவில் மிகச் சாதாரண முறையில்

முன் மண்டபமும் அதன் பின்னே சதுர வடிவில் உள்ள ஓர் உள்ளறையும் கொண்டதாய் மலையில் குடையப்பட்டிருக்கிறது. இவற்றுள் முன் மண்டபத்தின் தூண்களும், கூரையுமே ஓவியங்களுக்கு உறைவிடமாய் விளங்குகின்றன.

3. முன் மண்டபத்தில் கூரை முழுவதையும் ஒரே ஓவியம் அணி செய்கின்றது. அழகு பெற அமைக்கப்பெற்ற ஒரு கமல வாவியின் தோற்றத்தை உடையது அது. அவ்வாவியில் கமல மலர்களும் இலைகளும் காணப்படுகின்றன. மலர்கட்கும் இலைகட்கும் இடையில் யானைகளும் எருமைகளும அன்னங்களும் மீன்களும் காட்சி அளிக்கின்றன. ஒரு புறம் சமணர் இருவர் கமல மலர்களைக் கைகளில் வைத்திருப்பது போலத் தீட்டப்பட்டுள்ளது. மற்றொரு சமணர், வலக்கையால் மலர் பறிப்பது போலவும் இடக்கையில் மலர்க்கூடை வைத்திருப்பது போலவும் ஓர் உருவம் வரையப்பட்டிருக்கிறது. ஓவியத்திற் காணப்படும் குளத்து நீரும், அந்நீரில் உள்ள கமல மலர்களும் இலைகளும் இயற்கையாய் உள்ள தாமரைக்குளம் போலவே காணப்படுவது அந்த ஓவியங்களின் சிறப்பை விளக்குவதாயிருக்கிறது.

4. அந்த மண்டபத்தின் முன்புறத்தைத் தாங்கும் நான்கு தூண்களுள் பின் புறம் உள்ள இரண்டும் பாதி அளவே தூணாய்த் தெரிகின்றன; மறு பாதிகள் பாறையுடன் ஒட்டியிருக்கின்றன. நடுவில் தனித்து நிற்கும் இரண்டு தூண்களிலும் அழகு மிகுந்த நடன மாதர் இருவருடைய உருவங்கள் வரையப்பட்டுள்ளன. இவ்விரணடு ஓவியங்களும் உயிருள்ள பெண்டிர் நடனமாடுவதைப்போலவே காட்சி அளிக்கின்றன. இவ்விரண்டு ஓவியங்களுள் இடப்புறத் தூணின்மீதுள்ள ஓவியம், சிறிது பழுதுபட்டிருக்கிறது; வலப்புறத் தூணின மீதுள்ள ஓவியம், பழுதுபடாமல், முழுவதும் நல்ல நிலையில் காணப்படுகிறது. வலப்புறத் தூணின் உட்புறத்தில் அரசன் ஒருவனது தலையும், அவன் கோப்பெருந்தேவியினது தலையும் வரையப்பட்டிருக்கின்றன.

5. இந்த ஓவியங்கள் பல்லவர் காலத்தவை என்றே கருதப்படுகின்றன. பல்லவ மரபினர் கி. பி. 300 முதல் 900

வரை தமிழ் நாட்டின் பெரும்பகுதியை ஆண்டு வந்தனர். அவர்களே முதன்முதலாகத் தமிழகத்தில் கற்கோவில்களைக் கட்டினார்கள்; குன்றுகள் பாறைகளைக் குடைந்தும், கற்பாறைகளை உடைத்து ஒன்றன்மீதொன்றாக அடுக்கியும் கோவில்களை அமைத்தார்கள்; கற்களிலும் பெரும்பாறைகளிலும் புராணப் படிவங்களைச் செதுக்கினார்கள்; அழகிய ஓவியங்களை அக் கோவில்களில் தீட்டுவித்தார்கள்; அவர்களால் வரைவிக்கப் பட்ட ஓவியங்களின் அழிந்து போன அடையாளங்கள் பல கோவில்களில் காணப்படுகின்றனவெனினும், சித்தன்னவாசல் குடைவரைக் கோவில் ஓவியங்கள், பல்லவர்களின் ஓவியச் சிறப்பினை விளக்க இன்றும் அழியாச் சான்றாயமைந்துள்ளன.

6. சித்தன்ன வாசல் குடைவரைக் கோவில் ஓவியங்களி-லிருந்து கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பொதுவாகத் தமிழகப் பெண்மணிகள் அணிந்த அணி வகைகளையும், சிறப்பாக விறலியர் அணிந்த அணி வகைகளையும், கூந்தல் அலங்காரங்களையும், மேலாடை அணியும் முறையினையும், அக்கால நடனக்கலை விவரங்களையும், ஓவியக்கலை இயற்றும் கை வன்மையையும், என்றுமழியா உரத்துடன் கூடிய நிறங்கூட்டும் திறமையையும் நாம் நன்கறிய முடிகின்றது.

7. இந்த ஓவியங்களுள் வலப்புறத் தூணின்மீது காணப் படும் நாட்டியப் பெண்ணின் ஓவியம், சிறப்பித்துக் கூறத் தகுவதாகும். இதில் நாட்டியப் பெண்ணின் முடி அலங்காரம் மிகச் சிறந்து காணப்படுகிறது. கூந்தல், நடுவிலே வகு எடுக்-கப்பட்டு, உச்சியிலே முடியப்பட்டுள்ளது. கூந்தல் முடிப்பில் சில வகை அணிகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. பல நிற மலர்க்கொத்துக்கள், கொழுந்து இலைகள், கமல இதழ்கள் முதலியவை செருகப்பட்டு, அக்கூந்தல் ஒப்பனை செய்யப்பட்-டிருப்பது கண் கொள்ளாக் காட்சியாய் இருக்கிறது. காதில் அணிந்துள்ள காதணிகள், குண்டலங்களைப் போன்றிராமல், வளையங்களில் கல் வைத்திழைக்கப்பட்டது போலத் தோற்ற-மளிக்கின்றன. கழுத்தில் பல வகையான நகைகள் காணப்படு-கின்றன. அக்கழுத்தணிகள் சிறந்த வேலைப்பாட்டுடன் அழகு

பெற்றிருக்கின்றன. கைகளில் வளைகளும் கடகங்களும், வலக் கையின் கட்டை விரலிலும் சுண்டுவிரலிலும் மோதிரங்களும் காணப்படுகின்றன. கைக் கடகங்கள் மிக அழகான வேலைப் பாடுடையவைகளாய் மிளிர்கின்றன.

8. இந்நாட்டியப் பெண் ஓவியம் இரண்டு மேலாடை-களுடன் கூடியதாய் விளங்குகிறது. ஒரு மேலாடை, இடை-யில் மேலாகக் கட்டப்பட்டிருக்கிறது; மற்றொன்று, தோளைச் சுற்றிப் பின் புறமாக விடப்பட்டிருக்கிறது. உடுத்தும் ஆடை-யில் ஏற்படும் சுருக்கங்களும், பெண்கள் மேலாடையைப் பல மடிப்புக்களாக வைத்துக் கட்டுவதால் ஏற்படும் மடிப்புக்-களும், மிகத் தெளிவாகவும் இயற்கையாகவும் தீட்டப்பட்-டிருத்தல், ஓவியத்தின் எழிலைப் பெருக்குவதுடன், அக்கால ஓவியர்களின் கைத்திறனையும் மெய்ப்பிக்க வல்லதாயிருக்கிறது.

9. இடப்புறத் தூணில் காணப்படும் நடனப் பெண்ணின் ஓவியம் சிறிது பழுதுற்றிருந்த போதிலும், வலப்புறத் தூணி-லிருப்பதைவிட வனப்புடையதாய்க் காணப்படுகிறது. இதிற்-காணப்படும் பெண்ணோவியத்தின் கூந்தல் ஒப்பனை, முன்னை-யதைக்காட்டினும் சிறிது வேறுபாடுடையதாயிருக்கிறது. அணி வகைகள் மட்டும் ஒரே வகையாய் இருக்கின்றன.

10. வலப்புறத் தூணின் உட்புறத்தில் காணப்படும் அரசன் அரசி ஓவியங்களிற் காணப்படும் அணி வகைகள் நடனப் பெண்களின் அணிகளினின்று வேறுபாடுடையவை களாயிருக்கின்றன. அரசனது கழுத்தில் மணி மாலைகளும், காதுகளில் குண்டலங்களும், தலையில் இரத்தினக் கற்கள் பதித்த முடியும் காணப்படுகின்றன. அரச மாதேவியின் முகத்தில் பெருந்தன்மையும் பெருமிதத் தோற்றமும் மிளிர்-கின்றன. இந்த அரசன் மாமல்லபுரத்தைத் துறைமுகப் பட்டினமாகவும் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகவும் கொண்டு ஆட்சி புரிந்த மகேந்திரவர்மனுடைய சாயலாய் இருப்பதால், சித்தன்னவாசல் குடைவரைக் கோவிலை அமைத்தவன் இவ்-வரசனேயாதல் வேண்டுமென்றும், கி. பி. ஏழாம் நூற்றாண்-டின் முற்பகுதியில் இவன் வாழ்ந்தவனுதலால், அக்காலத்தி-

லேயே இக்கோவில் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்றும் அறிஞர் கருதுகின்றனர்.

*11.* பொதுவாக, சித்தன்னவாசல் குடைவரைக் கோவிலிற்காணப்படும் பெண்ணோவியங்களில் மூக்கணி காணப்படவில்லை. அரசமாதேவி ஓவியத்திலும் மூக்கணி இல்லை. எனவே, பல்லவர் காலத்துப் பெண்மணிகள் மூக்கணி அணிவதை அறியார் என்றும், அக்காலத்தில் பெண்கள் மூக்கணி அணிதல் வழக்கத்தில் இல்லையென்றும் கருதலாம்.

*12.* பொதுவாக இக்கோவில் ஓவியங்கள் அனைத்தும் கற்பாறைகள்மீது வரையப்பட்டு, ஆயிரம் ஆண்டுகட்கு மேலாகியும், அவை இன்றளவும் வனப்பழியாதிருப்பதொன்றே தமிழ் நாட்டவரின் ஓவியக்கலைக் கை வன்மையை விளக்கப் போதிய சான்றாகும். கட்புலனுக்கெட்டும் பொருள்களையும், கவிதைகளில் பொதிந்துள்ள உணர்வுக்கெட்டும் பொருள்களையும், கண்ணையும் கருத்தையும் ஒருங்கே ஈர்க்க வல்ல அரிய ஓவியங்களாகத் தீட்டும் ஓவியக்கலையில் இத்துணைச் சிறப்படைந்திருந்த நம் நாட்டு நாகரிகமும் தனிப் பண்பும் மீண்டும் நம்மிடையே ஏற்படுமாறு நாம் தொண்டாற்றுவோமாக.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. 'நாகரிக நாடுகள்' என்பதற்குச் சான்றுகள் எவை?
2. பண்டை நாகரிக நாடுகள் எவை?
3. 'சித்தன்னவாசல்' என்பது பற்றி நீ யாது அறிவாய்?
4. முன் மண்டபக் கூரையில் என்ன ஓவியம் காணப்படுகிறது?
5. தூண்களில் உள்ள ஓவியங்கள் யாவை?
6. இந்த ஓவியங்கள் எவர் ஆட்சிக் காலத்தவை?
7. சித்தன்னவாசல் கோவிலை அமைத்தவர் யார்? எக் காலத்தில்?
8. இந்த ஓவியங்களினின்று நாம் அறிபவை யாவை?

9. தமிழ் நாட்டின் சிறப்பை இந்த ஓவியங்கள் எவ்வாறு விளக்குகின்றன?
10. நம் கடமை யாது?

II. எதிர்ப்பதங்கள் எழுதுக:—

நாகரிகம், அழகு, அழியா, தெளிவாக, இயற்கையாக, வேறுபாடு, பெருந்தன்மை, அறிஞர்கள், வன்மை

III. வாக்கியங்களில் அமைக்க:—

பண்பட்ட, நெடுங்காலமாகவே, நுண்கலை, அகழ்ந்தெடுத்தல், மனத்தைக் கவரும், பழுதுபட்டு, ஒன்றன்மீதொன்றாக, ஓவியப்பண்பு, அழியாச்சான்று, கை வன்மை, என்றுமழியா உரம், கண் கொள்ளாக் காட்சி, மெய்ப்பிக்க வல்லது, வேறுபாடுடையது, கட்புலன், வனப் பழியா திருத்தல், கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும், தனிப் பண்பு

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:—

நுண்கலை, அகழ்தல், சான்று, அணி, கமலவாவி, கோப்பெருந் தேவி, உரம், ஒப்பனை, மிளிர்தல், எழில், வனப்பு, பெருமிதம், கட் புலன், ஈர்க்க

# 4. சிலப்பதிகாரமும் மணிமேகலையும்

1. கடைச் சங்க நூல்களெனப் போற்றப்படுபவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு எனப்படும் முப்பத்தாறு நூல்களேயாகும். கடைச்சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய ஐம்பெருங்காப்பியங்களுள் சிலப்பதிகாரமும் மணி மேகலையும் தலையாயவை; தொடர்புடையவை; ஒரே காலத்து, ஓரவைப் புலவர் பெருமக்கள் இருவரால் இயற்றப்பட்டவை; ஒரே வரலாற்றின் பகுதிகளை விவரிப்பவை. இவற்றுள் சிலப்-பதிகாரத்தால் விவரிக்கப்படும் வரலாற்றின் பிற்பகுதியே மணி மேகலையால் விவரிக்கப்படுகிறது.

2. சிலப்பதிகாரம் மூன்று பெரும்பிரிவுகளாகவும் முப்-பது சிறு பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. பெரும்பிரிவு காண்டம் எனவும், சிறு பிரிவு காதை எனவும் வழங்கப்படுகின்-றன. பெரும்பிரிவுகள் முறையே, புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்பன. 'புகார்' என்பது, சோழ நாட்டுத் தலைநகர்; 'மதுரை' என்பது, பாண்டி நாட்டுத் தலை நகர்; 'வஞ்சி' என்பது, சேரநாட்டுத் தலைநகர். சிலப்பதிகாரக் கதைத் தலைவியாகிய கண்ணகி, புகாரிற்பிறந்து வளர்ந்தவள். அவள் தன் கணவனுகிய கோவலனுடன் மதுரையை அடையும் வரை நடந்த நிகழ்ச்சிகளைப் புகார்க் காண்டம் விளக்குகின்றது. கண்ணகி மதுரையை அடைந்ததுமுதல் அதை அழித்துவிட்டுச் சேரநாடு நோக்கிப் புறப்பட்ட வரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மதுரைக் காண்டம் அறிவிக்கின்றது. அவள் சேரநாட்டை அடைந்து வேங்கைமர நிழலில் நின்றது முதல் பத்தினி விழாவையுள்ளிட்ட நிகழ்ச்சிகளை விளக்குவது வஞ்சிக்காண்டம்.

3. புகார்க் காண்டம் பத்துக் காதைகளாகவும், மதுரைக் காண்டம் பன்னிரண்டு காதைகளாகவும், வஞ்சிக் காண்டம் எட்டுக் காதைகளாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. புகார்க் காண்டத்தின் இறுதியில் சோழமன்னன் பெருமையும், மது-ரைக் காண்டத்தின் இறுதியில் பாண்டியன் சிறப்பும், வஞ்சிக் காண்டத்தின் இறுதியில் சேரன் புகழும் குறிக்கப்பட்டுள்ளன.

4. சிலப்பதிகாரம், இயல், இசை, நாடகம் ஆகிய மூவகைத் தமிழையும், ஒன்பான் சுவைகளையும் கொண்ட அரிய நூல். இதனாலும், இந்நூலிற் கூறப்படும் கண்ணகி வரலாறு படிப்பவர்க்கு இன்பம் பயக்கத்தக்க முறையில் அமைந்துள்ளமையாலும் இதனை 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' என்று வியந்து கூறுகின்றார் கவிஞர் பாரதியார்.

5 சிலப்பதிகார வரலாறு: கண்ணகியும் கோவலனும் மனைவியும் கணவனுமாவர்; இருவரும் சோழநாட்டைச் சேர்ந்தவர். இருவரும் தனியே மனையறம் நடத்தி வருங்கால், அரங்க மேடையில் நடனத்தை அரங்கேற்றம் செய்த மாதவியின்பால் காதல் கொண்ட கோவலன், கண்ணகியை விட்டுப்பிரிந்து, மாதவியின் இல்லம் அடைகிறான். அவன் அங்கு நெடுங்காலம் மாதவியுடன் வாழ்கிறான்; தங்களுக்குப் பிறந்த பெண் குழந்தைக்கு மணிமேகலை எனப் பெயரிடுகின்றான்; பின்னர் ஒருநாள் இந்திர விழாவில் மாதவியுடன் பிணக்குக் கொள்கின்றான்; அவளை விட்டுப் பிரிகின்றான்; கண்ணகியை அடைகின்றான்; தன் வறுமையைக் களையப் பொருளீட்ட, கண்ணகியின் காற் சிலம்பை விற்று முதற்பொருள் திரட்ட எண்ணிக் கண்ணகியை அழைத்துக்கொண்டு மதுரையை அடைகின்றான்; மதுரையில் பொற்கொல்லன் சூதினால் கள்வன் எனக் கருதப்பட்டு, அரசன் ஆணைப்படி கொல்லப்படுகின்றான். இச்செய்தியறிந்த கண்ணகி அரசனை நேரிற்கண்டு, அரசன் நீதியில் தவறியதைச் சான்றுடன் மெய்ப்பிக்க, தான் நீதிதவறியதை அறிந்த பாண்டியன், உயிர்விடுகிறான்; கணவன் உயிர் நீத்ததறிந்த கோப்பெருந்தேவியும் உடன் உயிர் விடுகிறாள். பின்னர்க் கண்ணகி மதுரையை எரியுண்ணச் செய்து, சேரநாடு புகுந்து, ஒரு மலைமீது ஏறி வேங்கை மர நிழலில் நின்ற போது, வானத்திலிருந்து அங்கு விமானம் ஒன்று வருகிறது. அதில் கோவலன் வீற்றிருக்கிறான். அவனுடன் கண்ணகி விண்ணுலகம் செல்கிறாள்.

6. இந்த வரலாற்றைக் குன்றக் குறவர் சேரமன்னனிடம் கூறினர். சேரன், கண்ணகிக்குக் கோவில் எடுக்க விழைந்தான். பத்தினிக்குப் படிவம் சமைக்க, இமயத்திலிருந்து கல்கொணர

முடிவு செய்யப்பட்டது. தமிழர்கள் வீரத்தைப் பழித்துரைத்த கனக, விசயர்களை வென்று, அவர்கள் தலைமீது கல்லைவைத்துக் கொணர்ந்து, பத்தினிக்குப் படிவம் சமைக்கப்பட்டது. இவ்வரலாற்றைச் சேரமன்னன் செங்குட்டுவன் தம்பியாராகிய இளங்கோவடிகள் ஒரு நூலாகப் பாடினர். சிலம்பு காரணமாக எழுந்த கதையைக் கூறும் இந்நூல் 'சிலப்பதிகாரம்' என வழங்கப் பெற்றது.

7. மணிமேகலை வரலாறு: கோவலன் இறந்த செய்தியறிந்த மாதவியும் மணிமேகலையும் பௌத்தப் பள்ளியிற் புகுந்தனர். மணிமேகலை அறவண அடிகளிடம் அறவுரை பெற்றாள். ஒரு நாள் மணிமேகலை உவவனம் சென்றிருந்தபோது, உதயகுமரன் என்னும் அரசகுமாரன் அவளைப் பின் தொடர, அவனுக்கு அஞ்சி அவள் பளிக்கறையிற்புகுந்தாள்; பின்னர் இரவைச் சக்கரவாளக் கோட்டத்திற்கழித்து, மணிமேகலா தெய்வத்தின் உதவியால் மணிபல்லவத் தீவு சென்றாள்; அங்கு 'அமுதசுரபி' என்னும் எடுக்கவெடுக்கக் குறையாத அன்னப் பாத்திரம் பெற்று, காஞ்சி, புகார் நகரங்களில் வறிஞர் பசிப்பிணியைப் போக்கி, பத்தினிக்கோட்டம் சென்று, பத்தினியைவணங்கி, ஆசி பெற்றாள்; பல சமயவாதிகளைக் கண்டு, அவரவர் சமய உண்மைகளை அறிந்து, இறுதியில் தவம் கிடந்து துறக்கம் அடைந்தாள்.

8. மணிமேகலையின் இந்த வரலாற்றை விரித்துரைப்பதே மணிமேகலை என்னும் அரிய காவியம். இந்நூல் முப்பது காதைகளைக் கொண்டது. இதனைச் சேரன் செங்குட்டுவனுடைய அவைப்புலவராகிய சீத்தலைச் சாத்தனர் என்பார் இயற்றினர். சீத்தலைச் சாத்தனர், கோவல கண்ணகியர் வரலாற்றைக் காவியமாகப் பாடுமாறு இளங்கோவடிகளை வேண்ட, இளங்கோவடிகள், மணிமேகலை வரலாற்றைக் காவியமாகப் பாடச் சீத்தலைச் சாத்தனர் இசைவாராயின், தாம் கோவல கண்ணகியர் வரலாற்றைப் பாடுவதாகக் கூறினர். அவ்வாறே இரு பெரும்புலவர்களும் இவ்விரண்டு வரலாறுகளையும் காவியங்களாகப் பாடினர்கள். வஞ்சிமாநகரத்தில் சேரமன்னன் பேர-

வையில், தமிழ்ப் பெரும்புலவர் கூடினர். அப்புலவர் கூட்டத்திற்குச் சீத்தலைச் சாத்தனார் தலைமை தாங்கினார். அக்கூட்டத்தில், இளங்கோவடிகள் தாம் பாடிய கோவல கண்ணகியர் வரலாறாகிய சிலப்பதிகாரம் என்னும் அரிய நூலைப் படித்து, ஆங்காங்குப் பொருள் விளக்கி, அரங்கேற்றம் செய்தார். அந் நூலின் சொல்வளம், பொருள் வளங்களைக் கண்ட புலவர்கள் பெருமகிழ்வெய்திப் பாராட்டினார்கள். மறுநாளும் அப்புலவர் பேரவை கூடியது. இரண்டாம் நாள் கூட்டத்திற்கு இளங்கோ அடிகள் தலைமை தாங்கினார். அக்கூட்டத்தில் சீத்தலைச் சாத்தனார் தாம் பாடிய மணிமேகலை என்னும் அரிய நூலைப் படித்துப் பொருள் விளக்கம் செய்து, அரங்கேற்றினார். புலவர்கள் அந்நூலையும் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தார்கள். சேரமன்னன் செங்குட்டுவன், இரு நூல்களையும் மிகச் சிறப்பித்துப் பேசினான்.

9. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் அன்று முதல் '**இரட்டை நூல்கள்**' என்று வழங்கப்பட்டன. இவ்விரு பெரு நூல்களும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை ஆகும். இவ்விரண்டும் அப்பழங்காலத்து நம் தமிழ் நாட்டின் சிறப்பைத் தெளிவாக விளக்குகின்றன. இவ்விரு நூல்களும் அழகிய தமிழ் நடையில் அமைந்து, படிக்கப் படிக்கத் தெவிட்டாத சுவை பயப்பவைகளாயுள்ளன. மேல் வகுப்புக்களுக்குச் சென்ற பின், இந்நூல்களை நீங்கள் படித்து மகிழலாம்.

### பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. 'சங்க நூல்கள்' என்பவை எவை? அவை எத்தனை ?
2. ஐம்பெருங்காப்பியங்களின் காலம் எது ?
3. சிலப்பதிகாரம் எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது? அதனாசிரியர் யார் ?
4. சிலப்பதிகாரத்தின் ஒவ்வொரு காண்டத்திலும் கூறப்படும் நிகழ்ச்சிகள் யாவை?

5. சிலப்பதிகாரத்தில் எவ்வெம்மன்னர் பாராட்டப்பட்டுள்ளனர்?
6. 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' என்று கவிஞர் பாரதியார் கூறியதற்குக் காரணம் யாது?
7. சிலப்பதிகாரத்தில் கூறப்படும் வரலாறு யாது?
8. மணிமேகலையும் சிலப்பதிகாரமும் எத்தகைய தொடர்பு உடையவை?
9. 'மணிமேகலை' என்னும் காவியத்தின் வரலாறு யாது?
10. மணிமேகலையை இயற்றியவர் யார்?
11. இவ்விரு நூல்களும் அரங்கேற்றம் செய்யப்பட்ட வகை யாது?
12. 'இரட்டை நூல்கள்' என்பவை யாவை?

II. வாக்கியங்களில் அமைக்க :—

தலையாயவை, தொடர்புடையவை, வரலாறு, மூவகைத்தமிழ், ஒன்பான் சுவை, பயக்கத்தக்க, நெஞ்சையள்ளும், மணையறம், அரங்கேற்றம், பிணக்குக் கொண்டு, பொருளீட்ட, படிவம், சொல் வளம், பொருள் வளம், படிக்கப்படிக்கத் தெவிட்டாதது, சுவை பயப்பது

III. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

போற்றப்படுபவை, பிணக்கம், அறவுரை, குறையாத, பேரவை, பழங்காலம், தெவிட்டாத, பயப்பவை

IV. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :—

ஒன்பான்சுவை, பயக்கத்தக்க, நெஞ்சையள்ளும், மணையறம், அரங்கேற்றம், இந்திரவிழா, பிணக்கு, கோப்பெருந்தேவி, எரியுண்ண, குறவர், குரவர், விண்ணுலகம், துறக்கம்

V. சிறு வாக்கியங்களாக மாற்றுக :—

இருவரும் மணையறம் நடத்தி வருங்கால், அரங்கமேடையில் நடனத்தை அரங்கேற்றம் செய்த மாதவியின்பால் காதல்கொண்ட கோவலன் கண்ணகியை விட்டுப்பிரிந்து, மாதவியின் இல்லம் அடைகிறான்.

IV. ஒரே வாக்கியமாக்குக :—

பின்னர் ஒரு நாள் கோவலன் இந்திரவிழாவில் மாதவியுடன் பிணக்குக் கொள்கிறான்; அவளை விட்டுப் பிரிகிறான்; கண்ணகியை அடைகிறான்.



# 5. நாவிகர் ஜேம்ஸ் குக்

1. உலகத்திலுள்ள ஐந்து கண்டங்களுள் ஒன்றுமெ ஆஸ்திரேலியா, மாபெருந்தீவு எனபதைத் நீங்கள் அறிவீர்கள். பசிபிக்கு மாக்கடலில் நியூஜீலந்து தீவும் எண்ணற்ற மற்றும் பல தீவுக் கூட்டங்களும் இருக்கின்றன என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

2. இவை எக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டன? இவற்றைக் கண்டு பிடித்தவர் யாவர்? ஆஸ்திரேலியா ஒரு தீவு போன்ற அமைப்புடையதென்பதையும், நியூஜீலந்து ஒரு தீவுதான் என்பதையும் இன்று நாம் எவ்வாறு அறிய முடிகிறது?

3. 1770-ஆம் ஆண்டுவரை பசிபிக்கு மாக்கடலில் உள்ள பல தீவுகளை உலக மக்கள் அறியவில்லை; ஆஸ்திரேலியா, நியூஜீலந்து முதலியவை தனித்தனி தீவுகளே என்பதையும் அறியவில்லை; ஆஸ்திரேலியாவின் தென்பகுதி ஒரே கடல் மயம் என்பதையும் அறியவில்லை.

4. ஆஸ்திரேலியா, நியூஜீலந்து உட்பட அத்தென்கடலில் ஒரு பெரிய நிலப்பரப்பு இருப்பதாக மேனாட்டு மக்கள் அக்காலத்தில் எண்ணியிருந்தார்கள். இந்த ஐயத்தினைப் போக்கிக்

கொள்ள ஐரோப்பியர் பலர் முயன்றனரெனினும், அரிதின் முயன்று வெற்றி கண்டவர் ஆங்கில நாட்டினரேயாவர்.

5. இங்கிலாந்தில் இராயல் கழகம் என்னும் பெயருடன் அறிஞர் கழகம் ஒன்று அக்காலத்தில் இருந்தது. அக்கழகம் உலகப் புதுமைகள், விஞ்ஞானப் புதுமைகள், வானநூல் ஆராய்ச்சி, புதிய இடங்கள் காணுதல் முதலிய துறைகளில் ஈடுபட்டுப் பல அரிய செய்திகளை உலகுக்குணர்த்தி வந்தது. அக்கழகம், தென்கடலில் பெரிய நிலப்பரப்பு இருக்கிறதென்று மேனாட்டினரிடைப் பரவியிருந்த செய்தியின் உண்மையை நேரிற்சென்று கண்டுவிட வேண்டுமென்று முடிவு செய்தது. அதனுடன் கி. பி. 1769-ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 3-ஆம் நாள், நிலத்திற்கும் கதிரவனுக்கும் இடையில் வானத்தில் வெள்ளிக்கோள் ஊர்ந்து செல்லும் என்பதை வானநூலிற் புலமை சான்றிருந்த இராயல் கழகத்தினர் அறிந்திருந்தனர்; வெள்ளிக்கோள் கதிரவனையும் நிலத்தையும் கடந்து செல்லும் நேரத்தைக் கணக்கெடுத்தால், வானநூல் ஆராய்ச்சிக்கு அது பெருந்துணை புரியும் என்றும், கதிரவனுக்கும் நிலத்துக்கும் இடையிலுள்ள தொலைவை அதன் மூலம் கணக்கிட்டுவிட முடியும் என்றும் கருதினர்; அதை இங்கிலாந்திலிருந்து காண, மேகங்கள் சூழ்ந்த தெளிவற்ற வானம் இடந்தாராதாகையால், பசிபிக்கு மாக்கடலில் உள்ள ஏதாவது ஓர் இடத்திலிருந்து, அங்குக் காணப்படும் மேகங்களற்ற தெளிவான வானத்தில் காணும்படி எவரையாவது அங்கு அனுப்பி வைக்க வேண்டு-மென்று முடிவு செய்தனர். அவர்கள் கருத்தை இங்கிலாந்து அரசாங்கமும் ஆதரித்தது.

6. நீண்ட கடற்பயணம் செய்து, பசிபிக்கு மாக்கடலில் உள்ள ஏதேனும் ஒரு தீவில் தங்கி வெள்ளியின் போக்கைக் காணவும், தென்பசிபிக்குமாக்கடலில் நிலப்பரப்பு இருக்கிறதா என்பதை ஆராய்ந்து காணவும் தக்கார் ஒருவரை இராயல் கழகத்தினர் தேடி, இறுதியில், இப்பணியாற்றவல்லவர் நாவிகர் ஜேம்ஸ் குக் என்ற கடற்படை அறிஞரே என்று முடிவு செய்-தனர். அக்கடற்படை அறிஞரும் அதற்கிணங்கினர்.

7. நாவிகர் ஜேம்ஸ் குக், 1728-ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்களில் யார்க்ஷயரைச் சேர்ந்த மார்ட்டன் என்னும் ஊரில் ஏழைக்குடி ஒன்றிற்பிறந்தார்; வறுமையினால், இளமையி-லேயே படிக்க வாய்ப்பற்றுத் தொழிலில் ஈடுபட்டார்; கப்பல் தொழில் செய்துகொண்டே இலக்கியம், கணிதம், வானக்கலை, கடல் அறிவு முதலியவற்றைப் பிழையறப் பயின்றார்; அரசர் கடற்படையில் படிப்படியாக உயர்பதவியடைந்து, பலர் பாராட்டுக்கு உரியவரானார்; பதின்மூன்று வயதுவரை தந்தை-யாருக்கு உதவியாய் உழவுத்தொழிலில் ஈடுபட்டிருந்து, அதன் பின் நான்காண்டுகள் கிராமப்பள்ளியிற்படித்து, பதினேழாம் வயதில் பலசரக்குக் கடையில் பணியாளராய் அமர்ந்து, பத்-தொன்பதாம் வயதில் கப்பல் தொழிலிற் சேர்ந்து, இருபத் தெட்டாண்டுகள் உழைத்த பின் 'காப்டன்' பதவி பெற்று, இறுதி வரை (51-ஆம் வயது வரை) கப்பல் தொழிலிலேயே ஈடுபட்டிருந்தார். இவர் தம் 35-ஆம் வயதில் பாட்ஸ் என்னும் பெண்மணியை மணந்து, ஆறு குழந்தைகளுக்குத் தந்தையா-ரானார். இவர் தம்முடைய மனைவி மக்கள்மாட்டு மட்டற்ற காதல் உடையவர் எனினும், தம் கடமையை ஆற்றுவதி-னின்றும் ஒரு நாளும் பிறழ்ந்திலர்; சொந்த நலன்களைவிடப் பொதுக்கடமையையே பெரிதெனக் கருதினார்.

8. இத்தகைய குணநலன்கள் வாய்ந்த நாவிகர் ஜேம்ஸ் குக், 1768-ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 30-ஆம் நாள், 'எண்டவர்' என்னும் கப்பலில் 84 துணைவர்களுடன் பசிபிக்கு மாக்கடலுக்குப் புறப்பட்டுச் சென்று, டாஹிட்டித் தீவில் தங்கி, இராயல் கழகத்தார் விரும்பிய வான் நிகழ்ச்சியைக் கண்டு, பிழையின்றிக் குறிப்பெடுத்தார். சொசைட்டித் தீவு களைக்கண்டு, அஃது எத்தனை தீவுகள் அடங்கிய கூட்டம் என்பதைக் கணக்கிட்டார்; நியூஜீலந்து, இரு தனித் தீவுகளே என்பதை அறிந்தார்; அது வரை எவரும் காணாதிருந்த ஆஸ்திரேலியாவின் கிழக்குக்கரை நெடுகச் சுமார் 2000 கல் தொலைவுவரை ஆராய்ந்து கண்டுபிடித்தார்; நியூகினி எனப்-படும் ஆஸ்திரேலியாவுடன் இணைந்திராத தனித் தீவென்பதைக் கண்டார்; தென்கடலில் பெருநிலப்பரப்புடைய கண்டம்

எதுவும் இல்லை என்பதைத் தெளிவுபடக் கண்டார்; இன்னும் பல புதிய தீவுகளையும் கண்டார்; இவையனைத்தையும் தெளிவான படங்களாக வரைந்து, ஆங்கில ஆளுகைக்கு உட்படுத்தினர்.

9. இவர் தம்முடைய முதற்பயணத்தில், மடெய்ராத் தீவு, டிவெர்டேத் தீவுகள், ரையோடி ஜனீரோ, டியரா டெல் புவெகோ வழியே தென்னமெரிக்காவைச் சுற்றிக்கொண்டு போக வேண்டியிருந்தது. இவர் சொசைட்டித் தீவுகளின் மக்கள் வாழ்க்கை முறையினை எழுதி வைத்தார்; நியூஜீலந்து, ஆஸ்திரேலியாப் பகுதிகளில் மக்களையுண்ணும் இனத்தவரைக் கண்டார்; அவர்களை அச்சுறுத்தியும் அன்பு காட்டியும் பணிய வைத்தார்; அந்நாடுகளில் பயிரிடுதல், கால் நடைகளை வளர்த்தல் முதலியவற்றைப் பயிற்றுவித்தார். அவ்வந்நாடுகளிலுள்ள தாவரங்கள், பறவைகள், விலங்குகள், தட்ப வெப்ப நிலை முதலியவற்றினைப்பற்றிக் குறிப்பெடுத்தார்; ஆங்காங்குள்ள ஆறுகள், மலைகள் முதலியவற்றைப்பற்றியும் குறிப்பெடுத்தார்; பிறகு ஜாவா வழியாகத் திரும்பி, தென்னாப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு, தம் சுய நாடு போய்ச் சேர்ந்தார்; இடையில் பல வகை இடையூறுகளுக்கு ஆளானார். இவ்வாறாக முதற்கடற்பயணம் இரண்டு ஆண்டு, ஒன்பது திங்கள், பதினன்கு நாட்களில் முடிந்தது.

10. நாவிகர் ஜேம்ஸ் குக், முதற்கடற்பயணத்தில் ஆற்றிய பணிகள் இராயல் கழகத்தினருக்கும் ஆங்கில அரசாங்கத்தினருக்கும் மட்டற்ற மகிழ்ச்சியை விளைத்தன. எனினும், ஜேம்ஸ் குக் போகாத தென்கோடிக் கடலில் ஒரு பெருநிலப்பரப்பு இருக்கவேண்டும் என்பதை அவர்கள் திடமாக நம்பினர்கள்.

11. எனவே, மீண்டும் நாவிகர் ஜேம்ஸ் குக் 1772-ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 13-ஆம் நாள், இரண்டு கப்பல்களில் 193 பேருடன் இரண்டாம் கடற்பிரயாணத்தைத் தொடங்கினர்; இம்முறை தென்னாப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு, நேரே தென்துருவம் சென்றார்; தென்துருவத்தில் 70-ஆம் ரேகாமிசக் கோட்டைக் கடந்து, 27 நாட்கள் வரை சுற்றியும்

அங்குள்ள கடுங்குளிர், வெடிக்கும் பனிமலைகள், உறையும் பனிக்கடல் முதலியவற்றின் கொடுமைகளைச் சகிக்க முடியாமல், நியூஜீலந்துக்குத் திரும்பிச் சென்று, சிறிது காலம் வரை தாம் கண்டிருந்த தீவுகளைச் சுற்றிப்பார்த்துவிட்டு, மீண்டும் தென் துருவம் சென்றார்; முன்னைவிட இன்னும் சற்றுத் தென்புறமாகச் சென்று ஆராய்ந்து, பரந்த நிலப்பரப்பு ஒன்றும் அப்பகுதியில் இல்லை என்பதைத் தெளிவாக உணர்ந்துகொண்டு, பசிபிக்குமாக்கடல் தீவுகளை மற்றுமொரு முறை பார்வையிட்ட பிறகு, தென்னமெரிக்க முனையைச் சுற்றி அட்லாண்டிக்கு மாக்கடலின் தென்பகுதியில் உள்ள சில தீவுக்கூட்டங்களை ஆங்கில ஆளுகைக்குட்படுத்திவிட்டு, தென்னாபிரிக்கா சென்று, அங்கிருந்து நேரே 1775-ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 30-ஆம் நாள், இங்கிலாந்து போய்ச் சேர்ந்தார். இரண்டாங்கடற்பயணம் முடிய மொத்தம் மூன்றாண்டுகளும் பதினேழு நாட்களுமாயின. இந்நெடிய கடற்பயணத்தில் நாவிகர் ஜேம்ஸ் குக் நியூ கலிடோனியா, ஜார்ஜியாத் தீவு, காண்டில் மாஸ் தீவு என்பவைகளையும், மற்றும் பல தீவுக் கூட்டங்களையும் கண்டு, அவற்றை ஆங்கில ஆட்சியில் இணைத்தார்; இக்கடற்பயணத்திற்குப் பிறகு, ஆங்கில அரசியலார் ஜேம்ஸ் குக்குக்குக் 'காப்டன்' பதவியை அளித்துச் சிறப்பித்தனர்.

12. பசிபிக்கு மாக்கடலையும் அட்லாண்டிக்கு மாக்கடலையும் இணைக்கும் வடகடற்பாதை ஒன்றிருத்தல் வேண்டுமென்றும், அதைக் கண்டுபிடித்தல் வேண்டுமென்றும் விரும்பி, ஆங்கில அரசியலார் மீண்டும் நாவிகர் ஜேம்ஸ் குக்கை மூன்றாங் கடற்பயணத்துக்கு ஊக்கினர். அதற்கிணங்கிய நாவிகர் ஜேம்ஸ் குக், 192 பேருடன், 1776-ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 14-ஆம் நாள், மூன்றாங்கடற்பயணத்தைத் தொடங்கினார்; தென்னாப்பிரிக்க முனையைச் சுற்றிக்கொண்டு, நியூஜீலந்துக்கும் மற்றத் தீவுகளுக்கும் சென்று, அவற்றைப் பார்த்துக்கொண்டு, நேரே வடக்கு நோக்கிச் சென்று, ஹவாய்த் தீவுகளைக் கண்டு, அவற்றிற்குச் 'சாண்டுவிச்சுத் தீவுகள்' எனப் பெயரிட்டார்; பின்பு வட அமெரிக்காவின் மேற்குக் கரை முழுவதையும் ஆராய்ந்து, பல இடங்களுக்குப் பெயரிட்டு,

3500 கல் நீளமுள்ள அக்கடற்கரை முழுவதையும் ஆங்கில ஆட்சிக்குட்படுத்தினர்; பேரிங்கு கடலிணைப்பு வழியே வட கடலில் (ஆர்க்டிக்கு) புகுந்து, அஃது உறைபனிக் கடலா யிருக்கக் கண்டு, அதற்கு மேலும் போக முடியாததை அறிந்து, வடகடலின் வழியே அட்லாண்டிக்கு மாக்கடலையும் பசிபிக்கு மாக்கடலையும் இணைக்கும்பாதை இல்லையென்பதை அறிந்து, தெற்கு நோக்கித் திரும்பினர். நாவிகர் ஜேம்ஸ் குக் தெற்கு நோக்கி வந்து, ஹவாய்த் தீவில் தங்கிய போது, அத்தீவின் மக்களால் 1779-ஆம் ஆண்டு, பிப்பிரவரித் திங்கள், 14-ஆம் நாள், கொல்லப்பட்டார். பிறகு, அவர் சென்ற கப்பல்கள் ஆசியக்கரை வழியே ஜாவாத்தீவுக்கு வந்து, அங்கிருந்து நேரே தென்னுபிரிக்கா சென்று, 1780-ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 4-ஆம் நாள், இங்கிலாந்து சென்றன.

13 நாவிகர் ஜேம்ஸ் குக், சற்றேறக்குறையப் பதினொ-ராண்டுகள் வரை, இம்மூன்று கடற்பயணங்களைக் கடலில் செய்து, உலகத்தைச்சுற்றி அறுபதினுயிரங்கல் தொலைவுபயணம் செய்துள்ளார். அவருடைய அருமுயற்சியினல் பசிபிக்கு மாக் கடலிலுள்ள பல தீவுக் கூட்டங்களை உலகத்தார் அறிய முடிந்-தது; ஆஸ்திரேலியா, நியூஜீலந்து முதலியவற்றின் முழு அமைப்பினையும் அறிய முடிந்தது; அந்த அநாகரிக நாடுகள் நாகரிகம் பெற்று இன்று உலகிற்சிறந்த நாடுகளாய் மிளிரவும் முடிந்தது. இளமை முதலே நல்லியல்பும், நல்லொழுக்கமும், விடாமுயற்சியும், உலையா உழைப்பும் உடையவராய் வளர்ந்து வந்து, இத்தகைய அரும்பெரும்பணிகளை வெற்றியுடன் நிறை-வேற்றிய நாவிகர் குக்கின் புகழ், நம்மவர்களை முன்னேற்றத் துறையில் ஈடுபடுத்துமாக!

பயிற்சி:

I. விடை எழுதுக:—

1. இராயல் கழகம் எப்பணிகளை ஆற்றி வந்தது?
2. பசிபிக்கு மாக்கடலுக்கு ஜேம்ஸ் குக் ஏன் சென்றார்?
3. நாவிகர் ஜேம்ஸ் குக்கின் இளமை வரலாறு யாது?
4. முதற்பயணத்தில் ஜேம்ஸ் குக் கண்டவை யாவை?

5. முதற்பயணம் முடிய எவ்வளவு காலமாயிற்று ?
6. நாவிகர் குக் இரண்டாம் பயணம் செய்யக் காரணம் யாது ?
7. இரண்டாங்கடற்பயணத்தின் பலன் யாது ?
8. நாவிகர் குக் மூன்றுங்கடற்பயணம் செய்ய நேர்ந்ததேன் ?
9. மூன்றுங்கடற்பயணத்தின் முடிவு என்ன ?
10. ஜேம்ஸ் குக்கின் கடற்பிரயாணத்தால் உலகம் அடைந்த நன்மை யாது ?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

நிலப்பரப்பு, மேனுடு, ஐயம், புதுமைகள், தொலே, தக்கார், அறிஞர், வறுமை, பரந்த

III. வாக்கியங்களில் அமைக்க :—

எண்ணற்ற, நிலப்பரப்பு, அரிதின்முயன்று, ஈடுபட்டு, தெளிவற்ற, ஐயம்திரிபற, அச்சுறுத்தி, உலேயா உழைப்பு

IV. கீழே தரப்பட்டுள்ள நலேப்புக்களின் துணையால் சிறியதொரு கட்டுரை வரைக :—

1. ஜேம்ஸ் குக் இளமை வரலாறு
2. குக்கின் முதற்கடற்பயணம்-நோக்கமும் பலனும்
3. குக்கின் இரண்டாம், மூன்றும் கடற்பயணங்களினுல் விளேந்த பலன்

V. அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக :—

அரிதின், கோள், ஊர்ந்து, தக்கார், வாய்ப்பு, காதல், பிறழ்வு நிகழ்ச்சி, அச்சுறுத்தி, தட்பம், வெப்பம், ஐயந்திரிபற, ஊக்கினர், கல்வியல்பு

## 6. தமிழுக்குத் தொண்டாற்றிய பிற நாட்டறிஞர்—I

1. பல்வளமும் பல்லறமும் செறிந்தது பழந்தமிழ் நாடாகும். இங்கு வாழ்ந்திருந்த மக்கள், நாகரிகம், சாதி வேறுபாடில்லாச் சமூக ஒற்றுமை, செல்வநிலை என்பனவற்றைப் பெற்றிருந்தார்கள். இவற்றிற்குக் காரணம் கல்வியே என்பதனையும் இவர்கள் நன்குணர்ந்தவர்கள். பண்டைக் காலத்து மூவேந்தர்களும், குறுநில அரசர்களும், பெருநிலக் கிழார்களும் தமிழையும் தமிழ்ப்புலவர்களையும் ஆதரித்து வந்தார்கள். இங்ஙனமாகச் சங்க காலத்தில் தமிழ் நன்கு வளர்ச்சியுற்று வந்தது.

2. பின்னர்ப் பௌத்தரும், சமணரும் தமிழ் நாடு புக்குத் தமிழ்த் தொண்டாற்றத் தலைப்பட்டனர். சமீப காலத்தில் நம் நாட்டவரையன்றி, மேலை நாட்டறிஞர் பலரும் தமிழ் நாடு புக்குத் தமிழ்ப் பணியாற்றியுள்ளனர். இவ்வாறு தொண்டாற்றியவருள் வீரமாமுனிவர், கால்டுவெல் ஐயர், போப்பு ஐயர் ஆகிய மூவரும் தலை சிறந்தவராவர்.



3. இற்றைக்குச் சற்றேறக் குறைய இருநூற்று நாற்பத்தைந்து ஆண்டுகட்கு முன் இத்தாலிய நாட்டில், கிறித்தவ மதத்தைச் சார்ந்த பாதிரியார் ஒருவர் இருந்தார். அவர் பெயர் கான்ஸ்டன்ஷியஸ் பெஸ்கி என்பது. அவரைத் தமிழுலகம் வீரமா முனிவர் என்று வழங்கியது. அவர் இளமையிலேயே தம் தாய் மொழியை நன்கு பயின்று புகழுற்றார். அவர்

மதப்பற்று மிக்கவராய்த் துறவு பூண்டு, தண்ணளிமிக்க நன்னெறியில் நடந்து வந்ததைக் கண்ட இயேசுநாதர் சங்கத்தார், மத போதனை புரிவதற்காக அவரைத் தமிழ் நாட்டுக்கு அனுப்பினர்.

4. தமிழ் நாடு போந்த அவர், தமிழ் மொழியை நன்கு பயின்று, தமிழ்த் தொண்டு புரிவதன்வாயிலாகவே தாம் இயற்ற வந்த சமயத் தொண்டினை வெற்றிகரமாகச் செய்ய இயலுமென்பதை உணர்ந்தார். எனவே, அவர் தமது உலையா ஊக்கத்தால் தமிழ் மொழியில் உள்ள சிறந்த நூல்கள் அனைத்தையும் முறையாகப் பயின்றதோடு, இலக்கண நூல்களையும் ஐயந்திரிபறப் பயின்று, தமிழ்ப் புலவரென்று போற்றப் பெற்றார்: பின்னர்த் தமிழ் மொழியில் நூல்கள் இயற்றத் தொடங்கினர். அங்ஙனம் அவரால் முதலில் வெளியிடப் பெற்ற நூல்களுள் முக்கியமானவை தேம்பாவணி, தொன்னூல் விளக்கம் என்பன.

5. தமிழ் மொழியின்கண் வழங்கும் சொற்களின் பொருள்களைச் செவ்விதின் உணர்ந்துகொள்ளுவதற்கேற்ற அகராதியில்லாமை, பண்டைக் காலத்தில் ஒரு குறையாயிருந்து வந்தது. சொற்பொருளை அறிதற்குரிய நிகண்டு, திவாகரம் முதலிய நூல்கள் செய்யுள் வடிவத்தில் இருந்தன. எனவே, முனிவர் அரிதின் முயன்று, ஓர் அகராதியைத் தொகுத்துச் 'சதுரகராதி' என்னும் பெயருடன் அதை வெளியிட்டார். அன்றியும், சங்க காலம் முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை தமிழில் இயற்றப் பெற்ற நூல்கள் அனைத்தும் செய்யுள் வடிவில் இருந்தனவேயன்றி, உரை நடை நூல்கள் இல்லாக் குறை ஒன்றும் தமிழுக்கிருந்துவந்தது. அவர் அதையும் போக்க விரும்பி, வேதியரொழுக்கம், பரமார்த்தகுரு கதை போன்ற சிறந்த உரைநடை நூல்களை ஆக்கி வெளியிட்டார். 'தமிழ் உரை நடையின் தந்தையார்' அவரே என்று கூறுவது மிகவும் பொருத்தமுடையதே. பிற நாட்டவரும், பிற மதத்தவருமான வீரமாமுனிவர் தமிழுக்குப் புரிந்த தொண்டினை நினைத்து, அவர்க்கு எஞ்ஞான்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டது தமிழகம்.

6. அயர்லாந்து நாட்டில், கிளாடி நதிக் கரையிலுள்ள ஒரு சிற்றூரில், 1814-ஆம் ஆண்டில் பிறந்தார் ராபர்ட் கால்டு வெல் என்பவர். பிறந்த பத்தாம் ஆண்டு, அவர் தம்முடைய தாய் தந்தையருடன் ஸ்காட்லாந்து நாட்டுக்குச் சென்றார். 'விளையும் பயிர் முளையிலே,' என்னும் முதுமொழிக்கிணங்க, அவர் இளமையிலேயே ஆங்கில மொழியை ஐயமறக் கற்றார்; பின்னர் ஓவியத் துறையிற்புக்கு, நேரிய முறையிற்பயின்று, பரிசும் பெற்றார். ஆயினும், அத்துறையிலேயே அரும்பணி புரியும் அவா அவருக்கு இல்லாது போயிற்று. அவர் உள்ளம், எங்கும் நிறைந்த இறைவனது இன்னருட்டிறனையும் ஆற்றலையும் எடுத்தியம்பும் மெய்யுணர்வு நூல்களைக் கற்றுச் சமயத் தொண்டு புரிவதிலேயே சென்றது.

7. அதற்கேற்ப, அவர் தமது இருபதாம் வயதில் 'இலண்டன் கிறிஸ்து சமயத்தொண்டர் கழக'த்தில் ஓர் உறுப்பினராய்ச் சேர்ந்தார்; பின்னர் அக்கழகச் சார்பில் கிளாஸ்கோப் பல்கலைக் கழகந்திற்சேர்ந்து, கிறிஸ்து சமய நூல்களை நன்கு பயின்றார். அஞ்ஞான்று கிரேக்க மொழிப் பேராசிரியர், அவருக்கு மொழி நூல் முறைப்படி கிரேக்க மொழியின் சிறப்புக்களைப் பிற மொழிகளுடன் ஒப்பிட்டுக் காட்டினார். இதுவே அவர் பிற்காலத்தில் திராவிடக் குழு மொழிகளின் ஒப்பிலக்கணத்தை எழுதுவதற்குத் தூண்டுகோலாயிற்று.

8. இங்கிலையில் இலண்டன் கிறிஸ்து சமயத் தொண்டர் கழகத்தவர் அவரைத் தமிழ் நாட்டில் மதப்பணி புரியத்தேர்ந்தனுப்பினர். அவர் 1838ல் சென்னை வந்து சேர்ந்தார். அங்கு அக்காலத்தில் தமிழ்ப் பேரறிஞராய் விளங்கிய துரு என்ற ஆங்கிலேயருடன் மூன்றாண்டுகள் தங்கித் தமிழை நன்கு பயின்றார்; 1841ல் சமயத் துறையில் தேர்ந்து, குருப் பட்டமும் பெற்றார்.

9. பின்னர்க் கால்டுவெல் சென்னையை விட்டு, மதப் பணியாற்றத் தமிழ் வளம் நிறைந்த பாண்டி நாட்டிலுள்ள இடையன் குடியை அடைந்தார். அது திருநெல்வேலியை அடுத்த வெப்பம் மிக்க ஒரு சிறு கிராமமாகும். அவர் அங்குச்

சிறிது காலம் தங்கிய பிறகு நாஞ்சில் நாட்டிலுள்ள நாகர்-கோவிலில் வாழ்ந்து வந்த கிறித்தவப் பாதிரியார் ஒருவரின் அருமை மகளாரான எலிசா என்ற அம்மையாரை மணம் புரிந்துகொண்டார்.

*10.* கால்டுவெல் ஐயர் மதப்பணி புரிந்துகொண்டே தமிழ்ப் பணியும் செய்து வந்தார். இதன் பயனாகத் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம், துளு, குடகு என்னும் திருந்திய மொழிகள் ஆறும், துதம், கோண்டு முதலிய திருந்தா மொழிகள் ஆறுமாகப் பன்னிரண்டு மொழிகளையும் ஒன்றோடொன்றை ஒப்பிட்டு ஆராய்ந்து, ஒப்பிலக்கண நூல் ஒன்றைச் சீரிய முறையில் ஆங்கிலத்தில் எழுதி முடித்தார்; அன்றியும், திருநெல்வேலிச் சரித்திரம், தாமரைத் தடாகம், ஞான ஸ்நானம், நற்கருணை முதலிய வேறு நூல்களையும் இயற்றினர்.

*11.* மொழிநூல் உலகிற்குப் புதுநெறி காட்டிய அம் மூதறிஞர்க்குக் கிளாஸ்கோப் பல்கலைக் கழகத்தார் 'டாக்டர்' பட்டம் வழங்கினர். அவர் 1891ல் ஆண்டவன் திருவடியை அடைந்தார். பிற நாட்டவரான அவர் தமிழ் மொழிக்கும், திராவிடக் குழு மொழிகட்கும் புரிந்த சீரிய தொண்டு நம்மால் என்றும் மறத்தற்கரியதொன்றும்.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. தமிழுக்குத் தொண்டாற்றிய பிற நாட்டறிஞர் யாவர் ?
2. வீரமாமுனிவரது வேறு பெயர் யாது ?
3. வீரமாமுனிவர் இயற்றிய தமிழ் நூல்கள் யாவை? அவர் தொகுத்த அகராதிக்குப் பெயர் என்ன ?
4. 'உரை நடையின் தந்தையார்' என்பது யாருக்குப் பெயர் ?
5. ராபர்ட் கால்டுவெல் ஒப்பிலக்கணம் எழுதக் காரணமாய் இருந்தது எது ?
6. ராபர்ட் கால்டுவெல்லுக்குத் தமிழ் பயிற்றியவர் யார் ?
7. கால்டுவெல் இயற்றிய ஒப்பிலக்கணம் எத்தனை மொழிகளைக் கொண்டது ? அவைகளுட் சிலவற்றைக் கூறுக.
8. அவர் இயற்றிய வேறு நூல்களின் பெயர்களைக் கூறுக.

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

மேலே, இயலும், இயற்ற, பண்டை, செய்யுள், வெப்பம்

III. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—

உலையா ஊக்கம், தொண்டாற்று, நாடு போந்த, செவ்விதின், எஞ்ஞான்றும், ஐயமற, சீரிய முறையில்

IV. சொல்லியுள்ளபடி செய்க :—

1. வீரமாமுனிவரால் முதலில் வெளியிடப்பட்ட நூல்களுள் முக்கியமானவை தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம், தொன்னூல் விளக்கம் என்பன. (செய்வினை வாக்கியமாக மாற்றுக.)

2. அவர் இடையன் குடியில் சிறிது காலம் தங்கிய பிறகு காஞ்சில் நாட்டிலுள்ள நாகர் கோவிலில் வாழ்ந்துவந்த கிறித்தவப் பாதிரியார் ஒருவரின் அருமை மகளாரான எலிசா என்னும் அம்மையாரைத் திருமணம் புரிந்துகொண்டார். (நான்கு தனி வாக்கியங்களாக அமைக்க.)

V. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

குறுநிலம், கிழார், மேலே, துறவு, செவ்விதின், மூதறிஞர், திருவடி, துறை, சமயம்

# 7. தமிழுக்குத் தொண்டாற்றிய பிற நாட்டறிஞர்—II

1. அமெரிக்காவின் அண்மையிலுள்ள பிரின்ஸ் எட்வர்டு என்னும் தீவில், ஜான் போப், கேதரின் யுக்ளோ என்ற இருவருக்கும் 1820-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள், 24-ஆம் நாள் ஜியார்ஜ் யுக்ளோ போப் என்பவர் பிறந்தார். அவருக்கு ஐவர் தம்பியரும், நால்வர் தங்கையரும் இருந்தனர்.

2. போப் தமது ஆறும் வயதில் தம்முடைய முதுகுரவருடன் இங்கிலாந்தை அடைந்தார். அவர் இளமையி-லிருந்தே நன்கு கல்வி கற்று வந்தார்; சிறந்த பேரறிஞராயும் மதப்பற்றுடையவராயும் விளங்கினார். இங்கிலாந்திலுள்ள வெஸ்லியன் சங்கத்தார், அவருடைய நுண்ணறிவின் திறனையும் மதப்பற்றினையும் கண்டு, அவரைச் சமயத்தொண்டு புரியத் தென்னிந்தியாவிற்கு அனுப்ப எண்ணினர். இதனை அறிந்த போப், தென்மொழியையும் வடமொழியையும் நன்கு கற்றுவந்-தார். பின்னர், சங்கத்தார் ஆணைப்படி அவர் மதத்தொண்டு புரிய இங்கிலாந்தைவிட்டுத் தென்னிந்தியாவிற்குப் புறப்பட்டார்.

3. போப் 1839-ஆம் ஆண்டு சென்னை வந்தடைந்தார். அவர் சென்னையிலுள்ள சாந்தோம் என்னும் இடத்தைத் தாம் வாழ்வதற்கேற்ற இடமாகக் கொண்டு, இரண்டாண்டுகள் மதப்பணி புரிந்துகொண்டே தமிழ் மொழியையும், அதன் வழி மொழிகளாகிய மலையாளம், கன்னடம், தெலுங்கு என்பன வற்றையும் கற்று வந்தார். பிறகு அவர் குருப் பட்டம் பெற்று, மதபோதனை புரியச் சாயர்புரத்திற்குச் சென்றார்.

4. சாயர்புரம் என்பது, தூத்துக்குடிக்குப் பத்துக்கல் தொலைவில் உள்ள ஒரு சிற்றூர். போப்பையர் அங்குச் சென்றதும் சிறுவர்க்குரிய பள்ளி ஒன்றை ஏற்படுத்தினார்; அதில் கற்று வந்த மாணவர்களுக்குத் தமிழ், ஆங்கிலம், எபிரேயம், இலத்தீன், கிரேக்கம் என்னும் பல மொழிகளையும் தமது விவிலிய நூலையும் போதித்து வந்தார். இவ்வாறு எட்டாண்டு

கள் இடை விடாது உழைத்து வந்த போது அவருக்கு உடல் நலம் குன்றத் தலைப்பட்டது. உடனே அவர் 1849-ஆம் ஆண்டு இங்கிலாந்து சென்று ஓய்வு பெற்றார்.

5. போப்பையர் 1850-ஆம் ஆண்டு மணம் புரிந்து கொண்டு, தம் மனைவியாரோடு மீண்டும் சென்னையை அடைந்தார். இங்குள்ள நற்செய்திக் கழகத்தார் அவரைத் தஞ்சையில் தொண்டு புரிய அனுப்பினர். அவர் தஞ்சையில் எட்டாண்டுகள் தங்கி, மதத்தொண்டோடு தமிழ்த் தொண்டும் புரியலானார். அவர் காலத்தில் தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கண நூல்களை மக்கள் கற்றுணர்வது மலையைக் கல்லி எலியைப் பிடிப்பது போன்றிருந்தது. இதனை உணர்ந்த ஐயர், அவ்விலக்கண நூல்களை நன்கு கற்றார்; பின்னர், மாணவர்கள் உள்ளத்தில் பசுமரத்தாணிபோலப் பதியும் வண்ணம், வினா விடையாக இரண்டு இலக்கண நூல்களை எழுதி வெளியிட்டார்; இலக்கண நூல்களின் நுட்பங்களை அறிவதற்கேற்ற விரிவான நூல் ஒன்றையும் எழுதினார். 'போப்பையர் உரை நடைப்பகுதி' என்னும் உரைநடை நூலையும் வெளியிட்டார்.

6. கி. பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரையில் தமிழ் நாட்டில் நாட்டு வரலாறுகளை எழுதிப் படிப்பதும், பல நீதி நூல்களிலுள்ள சிறந்த பாடல்களையெல்லாம் திரட்டித் தொகுத்துப் படிப்பதும் ஆகிய வழக்கங்கள் இல்லாதிருந்தன. போப்பையர் இக்குறைபாட்டைக் களைந்தெறிய எண்ணங் கொண்டார்; ஆங்கில மொழியிலுள்ள முறைப்படி நாட்டு வரலாறுகளை எழுதியும் பல நீதி நூல்களிலுள்ள சிறந்த பாக்களைத் தொகுத்துச் செய்யுட்கலம்பகம் என்று பெயரிட்டும் முதன்முதல் வழங்கிய பெருமை ஐயரவர்கட்கே உரியதாகும். இவற்றுடன், ஆங்கிலம்-தமிழ், தமிழ்-ஆங்கிலம் அகராதிகளையும் இவர் நல்ல முறையில் தொகுத்தார்.

7. தஞ்சையிலுள்ள கிறிஸ்தவர்களுக்குள் உயர்வு தாழ்வு என்ற சாதிப் பிரிவு மனப்பான்மையால் சிறு குழப்பம் ஏற்பட்டது. இதனால் மனம் நொந்த புலவர் போப்பையர், மதப்பணி புரிவதை விடுத்து, உதகமண்டலம் சென்றார்; அங்கு

'ஸ்டோன் அவுஸ்' என்னும் இடத்தில் பள்ளி ஒன்றை ஏற்படுத்தி நடத்திக்கொண்டே பொது நூல் நிலையப் பொறுப்பையும் ஏற்றுத் தொண்டாற்றினர் : உதகையிலிருந்தபோதே நமதுநாட்டு வரலாற்றை எழுதப் பல குறிப்புக்களைத் திரட்டினர். தமிழர்களின் தவக்குறைவால் அவை சிதல் வாய்ப்பட்டன.

8. உதகையில் வாழ்ந்த காலத்தில் ஐயரவர்கட்குப் போதிய வசதி இல்லாதிருந்தது. அதற்காக அவர் பெங்களூரிலுள்ள பிஷப்புக் காட்டன் பள்ளியில் தலைவர் பதவியை ஏற்று, 1871 முதல் 1882 வரை மொழித் தொண்டு புரிந்து வந்தார். அப்பொழுது அவருக்கு உடல் நலிவு ஏற்பட்டது. சுமார் 42 ஆண்டுகள் தமிழ் நாட்டிலிருந்து தமிழ்த்தொண்டு புரிந்த போப்பையர், மீண்டும் இங்கிலாந்து சென்றார்.

9. ஆக்ஸ்பர்டு பல்கலைக் கழகத்தார் 1885ல் தமிழும் தெலுங்கும் பயிற்றும் பேராசிரியராகப் போப்பையரை நியமித்தனர் ; பின்னர் அவருடைய ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சம்ஸ்கிருதம், இலத்தீன், எபிரேயம், கிரேக்கம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய பன்மொழிப் புலமையைப் பாராட்டி, அவருக்கு எம். ஏ. பட்டம் அளித்தனர்.

10. போப்பையர் பல்கலைக் கழகத்திலிருந்துகொண்டே திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கத் தொடங்கி, 1886-ஆம் ஆண்டு முடித்தார். அவர் அம்மொழிபெயர்ப்பின் முகவுரையில், 'தாழ்மை, அன்பு, மன்னிப்பு என்னும் இம் மூன்று சிறந்த குணங்களும் கிறிஸ்தவர்களின் குணங்களாகும். இவற்றை நமது மறை நூலில் குறிப்பிடவில்லை. ஆனல், இம் மூன்றும் குறளில் காணப்படுகின்றன,' என்றும், 'வேதம், கோபம், சாட்சி என்ற இம்மூன்று வட சொற்களும் குறளில் காணப்படவில்லை' என்றும் ; 'இவற்றிற்குப் பதிலாக, மறை, வெகுளி, கரி என்னும் சொற்களே உபயோகிக்கப்பட்டிருக்கின்றன' என்றும் ; 'தமிழே தென்னிந்திய மொழிகளுக்குத் தாய்மொழி,' என்றும் குறளின் மாட்சியைத் தெளிவுற எடுத்துக் காட்டியுள்ளார்.

11. அவர் 1893-ஆம் ஆண்டு நாலடியார் என்னும் நீதி நூலின் மொழி பெயர்ப்பையும், 1900-ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், 24-ஆம் நாளாகிய தமது பிறந்த நாளன்று திருவாசகத்தின் மொழி பெயர்ப்பையும் முடித்துத் தமிழருடைய ஒழுக்கத்தினையும் மதக்கோட்பாட்டையும் மேனாட்டாரும் அறிந்து பாராட்டச் செய்தார். இத்தகைய அரும்பெருந்தொண்டுக்காகப் போப்பையருக்கு 1906-ஆம் ஆண்டில் ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது. போப்பையர் இதனுடன் அமையாது, மணிமேகலை மொழிபெயர்ப்பையும், தமிழ் அகராதித் தொகுப்பையும் தொடங்கினார். ஆனால், அவை முற்றுப் பெறுவதற்குள் 1908-ஆம் ஆண்டு, பிப்பிரவரித் திங்கள், 11-ஆம் நாள் அவர் பெரும்பிரிவெய்தினார்.

12. இங்ஙனம் கிறிஸ்தவ சமயத்தைத் தென்னிந்தியாவிற்பரப்ப வந்த பிற நாட்டறிஞர் பலர். அவர்களுள் தலை சிறந்த மூவரின் வாழ்க்கை வரலாறுகளால் அவர்கள் தமிழுக்குப் புத்தம்புதிய முறைகளை வகுத்துக்கொண்டு தம் இறுதி நாள்வரை புரிந்த இனிய தொண்டின் திறத்தை நாம் அறிகின்றோம்; அவர்கட்குத் தமிழுலகம் எத்துணை கடமைப்பட்டுளது என்பதையும் அறிகின்றோம். இவற்றால் தமிழராகிய நாம் பிற மொழியாளர் தமிழின்பால் கொண்டிருந்த அன்பின் அளவை அறிந்து, அதைக்காட்டிலும் நமது தமிழ்ப் பற்று மிக்கு விளங்க வேண்டுமென்னும் பாடத்தை மனத்திற்கொள்வோமாக.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. ஜியார்ஜ் யுக்ளோவின் இளமைப்பருவத்தை 10 வாக்கியங்களில் எழுதுக :—
2. போப்பையர் அவர்கள் எந்நாட்டவர்? அவர் தாய் தந்தையர் பெயர்கள் யாவை?
3. ஐயர் முதல் தடவையாக இந்தியாவுக்கு வந்தபோது எங்கு, எத்தனை ஆண்டுகள் தங்கினார்? பின்பு எங்குச் சென்றார்? அது எங்கே உள்ளது? அங்கு அவர் ஏற்படுத்திய பள்ளியின்

பெயர் என்ன? அங்கு என்னென்ன பாஷைகள் போதிக்கப்பட்டன?

4. ஐயர் அவர்கள் தமிழுக்காக ஆற்றிய தொண்டினைக் குறித்து ஒரு பக்கத்துக்கு மிகாமல் ஒரு கட்டுரை வரைக.

5. அவர் பிஷப்புக் காட்டன் பள்ளித் தலைமைப் பதவியை ஏன் ஏற்றார்?

6. ஐயர் அவர்கள் கற்ற பாஷைகள் எத்தனை? அவைகள் யாவை?

7. திருக்குறளைப்பற்றி ஐயர் கூறியது யாது?

8. தமிழே தென்னிந்திய மொழிகளுக்குத் தாய்மொழி—காரணத்துடன் விளக்குக.

9. ஐயர் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் யாவை?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

பற்று, குறள், தாழ்மை, இடைவிடாது, ஓய்வு, குழப்பம், நலிவு

III. வாக்கியங்களில் அமைந்தெழுதுக :—

தலை சிறந்த, மொழி பெயர்த்து, சமயம், ஆணைப்படி, வாழ்வதற்கேற்ற, இடைவிடாது, கல்வி, பதியும்படி, தொடுத்து, நலிவு

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

திங்கள், கோட்பாடு, அமையாது, பெரும் பிரிவெய்தினர், திறல், மறை, கரி, வெகுளி, குறள், குறவர், சமயம், மணம், கல்வி, மதிநுட்பம், தொகுத்து, இதழ், நலிவு

V. 1. குற்றியலுகரம், முற்றியலுகரம் என்பவை யாவை? ஒவ்வொன்றற்கும் மும்மூன்று உதாரணங்கள் தருக.

2. குற்றியலுகரம் எத்தனை வகைப்படும்? ஒவ்வொன்றற்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

# 8. கலிங்கப் போர்

1. பண்டைக் காலத்தில் சோழ நாட்டை ஆண்ட மன்னர்கள், வெவ்வேறு நகரங்களிற்றங்கி ஆட்சி புரிந்தார்கள். எனவே, உறையூரும், புகாரும், தஞ்சையும், கங்கை கொண்ட சோழ புரமும், திருவாரூரும் வெவ்வேறு காலங்களில் சோழ நாட்டின் தலை நகரங்களாய்த் திகழ்ந்தன. தஞ்சையைக் கோநகரமாகக் கொண்டான் சோழப் பேரரசன் இராசராசன். அவன் மகன் இராசேந்திரன், கங்கை நீரைக் கொணர்ந்து, ஒரு புதிய நகரை அமைத்தான். கங்கை நீரைக் கொணர்ந்த இராசேந்திரனுக்குக் கங்கை கொண்ட சோழன் என்ற பெயர் வழங்கினமையால், அவனால் அமைக்கப் பெற்ற நகரத்துக்குக் கங்கைகொண்ட சோழபுரம் என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

2. இராசேந்திரன் ஈடுமெடுப்புமற்ற வீரனாய் இருந்தமையால், அவன் தனது நாட்டுக்கு வடக்கிலிருந்த நாடுகளை வென்று, தனதாட்சிக்குள் கொண்டு வந்தான். அந்நாடுகளுள் **வேங்கி** நாடும் ஒன்று. அந்நாட்டு மன்னன் இராசராசனை வென்றானெனினும், அவனுக்குத் தன் தங்கையைத் திருமணம் செய்வித்து, அவனைத் தன் உறவினனாகக் கொண்டான்.

3. இராசேந்திரனுக்குப் பிறகு அவனுடைய மைந்தர் மூவர், ஒருவர் பின் ஒருவராகச் சோழப் பேரரசை ஆண்டு வந்தனர். அவர்களுள் இறுதியரசனான வீரராசேந்திரனுக்கு மக்கள் இன்மையால், அவன் தன் தங்கைக்கும் வேங்கி நாட்டு மன்னனான இராசராசனுக்கும் பிறந்த விசயதரன் என்பானை இளமை முதல் தன் அரண்மனையில் வைத்து வளர்த்து வந்தான்.

4. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்,' என்னும் முதுமொழிக்கிணங்க, விசயதரன் இளமையிலேயே அறிவு ஆற்றல் ஒழுக்கம் முதலிய உயர்குணங்களை உடையவனாயிருந்ததோடு, ஈடுமெடுப்புமற்ற வீரனாயுமிருந்தான். அப்போது வடநாட்டிலிருந்த சக்கரகோட்டத்துக்கு அதிபனான தாராவர்ஷன் என்பவன், சோழப் பேரரசில் குழப்பத்தை உண்டாக்கினான். அவனை

அடக்கித் திரும்புமாறு விசயதரனை ஏவினன் வீரராசேந்திரன். விசயதரன் தனக்கிடப்பட்ட கட்டளையை ஈடேற்ற வடநாடு சென்றிருந்த போது வீரராசேந்திரன் தனது கோநகரில் உயிர் நீத்தான். அப்போது அங்கிருந்த அரச குலத்தினர் ஆட்சி-யுரிமை காரணமாகக் கலகம் செய்ய முற்பட்டனர். அச்செய்தி கேட்ட விசயதரன், தன் பகைவனை வென்று, வாகை சூடி, விரைந்து வந்து, கங்கை கொண்ட சோழ புரத்தில் தாண்டவம் புரிந்துகொண்டிருந்த கலகத்தையும் குழப்பத்தையும் ஒழித்-துத் தனதுரிமைப்படி அரியணையிலமர்ந்து ஆட்சி புரிந்து வந்தான். அவனுக்கு அக்காலத்தில் குலோத்துங்கன், இராசேந்திரன், அபயன் என்ற பெயர்கள் வழங்கலாயின.

5. விசயதரன் பட்டத்துக்கு வந்த பின்பு சோழப் பேரரசில் அமைதி நிலவத் தொடங்கியது. அவனுடைய பகை-வர் அனைவரும் அவனை எதிர்த்துப் பொர அஞ்சி, அவனுக்கு அடங்கித் திறை செலுத்தி வந்தனர். இங்ஙனம் தன்னேரில்லாத் தனியரசு செலுத்தி வந்த விசயதரன், ஒரு கால் காவிரிக் கரையில் வேட்டையாடிக்கொண்டிருந்தபோது தனது ஆட்சிக்-குட்பட்ட தொண்டை நாட்டுப் பாலாற்றங்கரையிலும் வேட்டையாட விரும்பினன்.

6. மறு நாளே விசயதரன் தன்னுடைய பரிவாரங்களு-டன் தொண்டை நாடு நோக்கிப் புறப்பட்டான். முதலில் அவன் தனது குல தெய்வமாய் விளங்கிய தில்லை நடராசப் பெருமானைத் தரிசிக்க எண்ணிச் சிதம்பரம் சென்றான்; இறை-வனை வழிபட்ட பிறகு அங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சீபுரத்தை அடைந்தான். அக்காலத்தில் காஞ்சிமா நகரம் அவனது பேரரசின் வடபகுதியின் தலைநகராய் விளங்கியது. விசயதரன் கச்சியை அடைந்து, ஆண்டிருந்த தனது அரண்மனையிற்றங்-கினன்.

7. ஒரு நாள் விசயதரன் அரியணையில் அமர்ந்திருந்த போது அவனுக்கடங்கியிருந்த அரசர் பலர் திறைகளைக் கொணர்ந்து அவன் அடி முன் வைத்து வணங்கினர். அபயன் அவற்றை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு, அவரவர்க்குரிய மரியாதைகளைச் செய்தான். அவர்கள் தத்தம் இருக்கையி-

லமர்ந்த பிறகு, விசயதரன் தன் மந்திரவோலை நாயகனைப் பார்த்து, "இவர்களையன்றித் தம்முடைய திறைகளைச் செலுத்தாத வேறு வேந்தரும் உளரோ?" என்று வினவினான். உடனே கருமத் தலைவன் விசயதரனைப் பணிந்து, "அரசரேறே, எல்லா அரசர்களும் திறைகளுடன் வந்து நும் கழல் வணங்கினர். ஆனால், கலிங்க நாட்டு மன்னன் அனந்தவன்ம சோடகங்கன் மட்டும் உரிய திறையோடு வந்திலன்," என்று விடை பகர்ந்தான்.

8. அது கேட்ட அரசன் முகம், அன்றலர்ந்த செந்தாமரை போலப் பொலிவுற்றுப் புன்முறுவல் அரும்பியதே அன்றி, ஒரு சிறிதும் கோபக் குறியைத் தோற்றுவிக்கவில்லை. அது கண்ட அனைவரும் அப்புன்முறுவலின் விளைவு யாதோ என எண்ணிப் பேசாதிருந்தனர். அரசன் தானைத் தலைவரை விளித்து, "சோடகங்கன் படைப்பலமற்றவனெனினும், தனது குன்றரணைப் பெரிதாக மதித்துத் தருக்கியிருக்கின்றான் போலும்! அவனுக்குத் தக்க பாடம் கற்பித்தல் வேண்டும். நம்முடைய யானைப் படைகளுடன் சென்று அவனைச் சிறைசெய்து கொணர்மின்!" என்று சினந்து கூறினான்.

9. அது கேட்ட சோழப் பெரும்படையின் தலைவனும், வண்டை நகர்க்கதிபனுமான கருணாகரத் தொண்டைமான், விரைந்தெழுந்து, வேந்தனை வணங்கி, வெளிப்போந்து, தன் வீரரை அழைத்து, "வடகலிங்கத்தைத் தாக்கிச் சோடகங்கனைச் சிறைபிடித்து வருமாறு வேந்தர் கட்டளை பிறந்துள்ளது. எழுமின் போருக்கு!" என்று கூறித் தன் யானைமீதேறிப் புறப்பட்டான். உடனே துணைத் தானைத் தலைவர்களான வாணகோவரையன், முடி கொண்ட சோழன் முதலியவர், தத்தம் மத்தயானையின்மீது ஏறிப் புறப்பட்டனர். நால்வகைச் சேனைகளும் அவர் பின்னே புறப்பட்டன.

10. அச்சேனை ஊழிப் பெருவெள்ளம் போலக் காட்சி அளித்தது. சேனை வீரர்கள் இரை வேட்டெழுந்த புலிகள் போலக் காட்சியளித்தார்கள். அப்படை கடலொலி போலவும் இடிமுழக்கம் போலவும் ஆரவாரம் செய்துகொண்டு, பாலாறு, குசைத்தலை, முகரி, பெண்ணை, வயலாறு, மண்ணாறு, பேராறு,

கோதாவிரி, பம்பை, கோதமை என்னும் ஆறுகளைக் கடந்து, கலிங்க நாட்டுள் நுழைந்தது ; போர் முறைப்படி அந்நாட்டின் பகுதி களைத் தீக்கொளுவிச் சூறையாடத் தொடங்கியது.

11. அச்செயல்களால் துன்புற்ற கலிங்க மக்கள், நடு நடுங்கித் தங்கள் மன்னன் அவையை அடைந்து, "அரசரே, சோழன் படைகள் நமது நாட்டின்மீது படையெடுத்துவந்து, ஊர்களையும் பட்டணங்களையும் சூறையாடுகின்றன ! எங்களைக் காத்தருளவேண்டும் !" என்று கூறிச் சரண்புகுந்தார்கள். அது கேட்ட கலிங்க மன்னன், வெகுண்டெழுந்தான். கோபத்தால் அவன் புருவங்கள் நெற்றியிலேறின ; கண்கள் சிவந்தன ; மீசையும் உதடும் துடித்தன. அவன் பற்களைக் கடித்தான் ; "அமைச்சர் பெருமக்களே, தானைத் தலைவர்களே, நாம் திறை செலுத்த மறுத்தமையால், சோழன் தன் படையை நம்மீது ஏவியுள்ளான் போலும் ! நன்று நன்று ! அபயன் வலியனே ; ஆயினும், அவன் வரவில்லை. அவன் படைகள் மட்டுமே வந்துள்ளன. அப்படைகட்கு யான் எளியனோ ? காட்டரண், கடலரண், மலையரண் ஆகிய மூவரணையும் பெற்றது நமது நாடென்பதனைச் சோழன் மறந்தான் போலும் ! அவன் சேனையை எலிப்படையைப் பாம்பழிப்பது போலச் சிறிது நேரத்தில் அழிக்கின்றேன் ! புறப்படுங்கள் போருக்கு !" என்று படபடத்துக் கூறினான்.

12. அமைச்சர் குழாத்தைச் சேர்ந்த எங்கராயன் என்பான் எழுந்து, "வேந்தரே, நீர் சினந்தாலும், உமக்கு உறுதி கூற வேண்டுவது என் போன்றோர் கடமை. பாண்டியர் ஐவரையும் அவர் நாட்டிலேயே தோல்வியுறச் செய்தது இப்படையே அன்றோ ? சேரரைக் காந்தளூர்ச் சாலையிலும், விழிஞத்திலும் வெற்றி கண்டது இப்படைதான் என்பதை நீர் அறியீரா ? வத்தவனைச் சக்கர கோட்டத்தில் வாட்டியது எப்படை ? நவிலையிலும், அளத்தியிலும் சளுக்கியரைச் சாடிய இப்படையின் பெருமையை நீர் அறியீர் போலும் ! இவ்வெற்றிகள் எல்லாம் சோழன் நேரிற்சென்று பெற்றவை அல்லவே ! கருணாகரன் தலைமையிற்சென்ற தண்டின் கை வன்மையன்றோ இத்தனை வெற்றிகட்கும் காரணம் ? இன்று நம் நாட்டின்

மீது படையெடுத்து வந்திருப்பதும் அதே சேனைதான் என்பதையும், அத்தொண்டைமானே படைத் தலைவன் என்பதையும் சிந்தித்துப் பின்னர்ப் போர் தொடங்குவது நலமெனத் தோன்றுகிறது. யான் கூறவேண்டியவற்றைக் கூறிவிட்டேன். பின்பு உமது விருப்பம்!'' என்று கூறி அமர்ந்தான்.

13. எங்கராயன் எடுத்துரைத்த இன்மொழிகள் சோடகங்கன் காதில் இடம் பெறவில்லை. 'கேடு வரும் பின்னே; மதி கெட்டு வரும் முன்னே,' என்னும் முதுமொழிக்கிணங்கக் கலிங்க வேந்தன் தனக்கு நல்லறிவு கொளுவிய அமைச்சனைப் பலவாறு கடிந்து கூறித் தன் படைக்கு முன் எப்படையும் நிற்கும் தரத்ததன்று என்று சொல்லிச் சோழன் படையை எதிர்த்து அழிக்கும்படி தன்னுடைய தானைத் தலைவர்கட்குக் கட்டளை இட்டான்.

14. கலிங்கர் படை கலித்தெழுந்தது. தேர், கரி, பரி, காலாள் என்ற நால்வகைப் படைகளும் பல்லியங்களார்ப்பப் புறப்பட்டன. கலிங்கர் படைக்கும் சோழர் படைக்கும் கடும் போர் மூண்டது. தேரைத் தேரும், கரியைக் கரியும், பரியைப் பரியும் எதிர்த்து இரு திறச் சேனைகளும் கடும்போர் புரிந்தன. வெற்றி தோல்வியின்றி இரு படைகளும் நீண்டநேரம் பொருது கொண்டிருந்த காலைக் கருணாகரன் மதகளிற்றின்மீதமர்ந்து, போர் முனையில் நுழைந்து, சங்கநாதம் புரிந்து, தன் வாளாயுதத்தைக் கையிலேந்திக் கண்டவர் நடுங்கும்படி கடும்போர் புரியத் தொடங்கினன். அவன் போர்க்களத்திற்புகுந்ததைக் கண்ட சோழர் படைகள், வீராவேசத்துடன் பொரத்தொடங்கின. பற்பல போர்களைப் புரிந்து பண்பட்ட சோழர் படை, சிறிது நேரத்தில் கலிங்கர் படையை முற்றிலும் வளைத்துக் கொண்டு சின்னபின்னம் செய்தது. அதன் வலிமைக்கு ஆற்றாது கலிங்கர் படை கால் வாங்கத் தலைப்பட்டது. கரிப்படை மிக்க கலிங்கர் சேனை முழுதும் வளைக்கப்பட்டுவிட்டமையால், நொடிப்பொழுதில் போர்க்களத்தில் குருதியாறு பாயத் தொடங்கியது. கொன்று குவிக்கப்பட்ட கரியும், பரியும் எண்ணிறந்தன; குற்றுயிராய்ப் பதைத்துத் துடித்துப் பாரிற்புரண்-

டவை கணக்கற்றவை; வீரசுவர்க்கத்திற்கு விருந்தினரான வீரர் எண்ணிலடங்கார்.

15. தனது படைக்கு நேர்ந்த கதியைக் கண்ணுற்ற கலிங்க வேந்தனுன சோடகங்கன், உயிர் பிழைக்கக் கருதி ஓட்டமெடுத்தான். கலிங்கர் செல்வமனைத்தையும் கைக்கொண்டது கருணுகரன் படை. பின்னர்ச் சோழவீரர் சிலர் சோடகங்கனைச் சிறை பிடித்து வருமாறு ஏவப்பட்டனர். அவர்கள் கலிங்க வேந்தனைத் தேடித் திரிந்தபோது அவர்கள்முன் எதிர்ப்பட்ட கலிங்க வீரர், தம் தலையை முண்டனம் செய்துகொண்டு, தாம் சமண முனிவர் என்றும், பௌத்த பிட்சுக்கள் என்றும் கூறி, உயிர் பிழைத்தனர். சிலர், தம்மைப் பாணர் என்று கூறிக்கொண்டனர். வேறு வழியின்றிச் சிலர் சரண் புகுந்தனர். கலிங்க வீரர்கள் கதி இங்ஙனமாக, சோழ வீரர் சிலர் சாலையும், சோலையும், காடும், மலையும் ஆகிய எல்லா இடங்களிலும் தேடி, இறுதியில் ஒரு மலை முழையிற்பதுங்கியிருந்த கலிங்க வேந்தனைச் சிறை பிடித்துத் திரும்பினர்.

16. கருணுகரன் போரில் கிடைத்த பொருள்களோடும், கலிங்க வேந்தனேடும் வெற்றி வீரனுய்த் திரும்பினுன். அவன் அபயன் முன்னிலையில் சோடகங்கனை நிறுத்தி, அடி பணிந்து நின்றுன். சோழ மன்னன் அவனைப் பலபடப் புகழ்ந்து, அவனுக்குப் பட்டமும் பரிசிலும் வழங்கினுன். அங்ஙனமே பிற படைத் தலைவர்கட்கும் சிறப்புப் பல செய்த பின்னர்ச் சோழன் சோடகங்கனை அரசர்க்குரிய முறையில் இருக்கச் செய்து, அறிவுரை பல வழங்கித் தனக்கு அவன் அடங்கிக் கப்பம் செலுத்த இசைவித்து, அவனைக் கலிங்க நாட்டுக்கு அனுப்பினுன்.

17. 'வெண்பாவிற் புகழேந்தி; பரணிக்கோ ஜயங்கொண்டான்.' என்னும் வாக்கிற்கிணங்கக் குலோத்துங்கனுடைய அவைப் புலவர்களுள் ஒருவரான ஜயங்கொண்டார் இக்கலிங்கப் போரைச் சிறப்பித்துக் கலிங்கத்துப்பரணி என்னும் நூலை யாத்துள்ளார். அந்நூலின்கண் பண்டைத் தமிழர் நாகரிகத்தை விவரிக்கும் செய்திகள் பலவற்றைக் காணலாம். தமிழராகிய அனைவரும் படித்து இன்புறத்தக்கது அந்நூல்.

### பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. சோழ நாட்டுத் தலைநகரங்கள் யாவை?
2. 'கங்கை கொண்ட சோழபுரம்' என்னும் பெயர்க் காரணம் யாது?
3. விசயதரனுக்குரிய வேறு பெயர்கள் யாவை?
4. சோடகங்கனுக்கு அமைச்சன் எங்கராயன் கூறியது யாது?
5. "தனது குன்றரணைப் பெரிதெனமதித்துத் தருக்கியிருக்கின்றான் போலும்!"—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
6. இப்பாடம் எந்நூலைத் தழுவியது? அந்நூலின் ஆசிரியர் யார்? அவரைப்பற்றிப் புகழ்ந்து கூறியுள்ள செய்யுள் அடியை எழுதுக. அந்நூலிலிருந்து நாம் தெரிந்துகொள்ளக்கூடியது யாது?

II. எதிர்ச்சொல் எழுதுக :—

வெற்றி, குழப்பம், அவதி, கொடுமை, அலர்ந்த, கோபம், பொலிவு, புன்முறுவல், மறந்தான், பழி, அழி

III. வாக்கியத்தில் அமைத்தெழுதுக :—

ஈடுமெடுப்பும், நிகரற்ற, துணைத்தலைவர், தத்தம், காட்சி அளி, நடுநடுங்கி, குழாம், ஆர்த்தெழுந்தது, சின்னபின்னம்

IV. அகராதி பார்த்துப் பொருள் கூறுக :—

கோநகர், மக்கள், அதிபன், அரியணை, பொர, திறை, கழல், தருக்கி, தானைத்தலைவர், மத்தயானை, ஊழி, தீக்கொளுவி, வெகுண்டு, குழாம், சாடிய, தண்டு, கலித்தெழுந்தது, கரி, பரி, பல்லியங்களார்ப்ப, களிறு, கால் வாங்குதல், முறை

V. சொல்லியபடி செய்க :—

1. 'வேற்றுமை விரி' என்பது என்ன? சில உதாரணங்கள் தந்து விளக்குக.
2. 'விளித்தொடர்' என்பது என்ன? இப்பாடத்தினின்றும் சில உதாரணங்கள் தருக.
3. வேற்றுமை எத்தனை வகைப்படும்? அவற்றுள் ஒவ்வொன்றற்கும் உதாரணம் தருக.

# 9. செந்தமிழ்ப் புலவரும் ஷாஜஹானும்

1. நம் நாட்டிலிருந்த பண்டைக் காலப் புலவர் இருவகையினராவர்: அரிய செய்யுட்கள் பல இயற்றிப் புரவலர்கள் முன் பாடி, அவர்களை மகிழ்வித்துப் பரிசில்கள் பெற்று வாழ்க்கை நடத்தியவர் ஒரு வகையினர்; பிற தொழில்களில் ஈடுபட்டுப் புலமை எய்திச் செய்யுட்கள் இயற்றியவர் மற்றொரு வகையினர். ஔவையார், பெருஞ்சித்திரனார், பெருந்தலைச் சாத்தனார் முதலியோரை முதல் வகையிற்சேர்க்கலாம்; மருத்துவன் தாமோதரனார், கூலவாணிகன் சாத்தனார், உழவன் நாகனார் முதலியவரை இரண்டாம் வகையிற்சேர்க்கலாம்.

2. இவ்விரு வகையினரும், பரிசில் பெற்று வறுமை நோய் களைய வேண்டியவராயும், பொருளீட்டும் பிற துறைகளிற்புக்கு வாழ்க்கையைச் செவ்விதிலமைத்துக்கொண்டவராயுமிருந்தபோதிலும், தம் மானவுணர்ச்சி கேடுறும் நிலையை விரும்பினாரல்லர்; அரசர்களும் நெறி முறை வழுவியவிடத்து அவர்களைக் கண்டித்துத் திருத்துவதற்கு அச்சங் கொண்டாரல்லர்.

3. சங்க காலத்துப் புலவர் பெருமக்களிடத்தே காணப்பட்ட சிறந்த பண்பாடு, பிற்காலத்துப் புலவர்களிடத்தும் காணப்படாமற் போகவில்லை. பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட புலவர்கள், வாழ்க்கை நிலையிலும் நெஞ்சுறுதியிலும் மொழிப்பற்றிலும் மானவுணர்ச்சியிலும் சங்க காலப் புலவர்களுடன் ஒப்பு நோக்கக் கூடாதவர்களாயினரெனினும், ஒரு சிலர் அச்சிறப்புக்களுள் பலவற்றைப் பெற்றேயிருந்தனர். இத்தகைய பிற்காலப் புலவர்களுள் நெஞ்சுறுதிக்கு ஓர் எடுத்துக்காட்டாய் அமைந்தவர் பதினேழாம் நூற்றாண்டுப் புலவராய குமரகுருபரர் ஆவர்.

4. குமரகுருபரர், பொருனை ஆற்றங்கரை மீதுள்ள கைலாசபுரத்தில் (ஸ்ரீவைகுண்டம்), சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரி அம்மையாருக்கும் அருந்தவச்

செல்வராய் உதித்தார். இவர் ஐந்தாண்டளவும் ஊமையா-யிருந்து, பின்னர்ப் பேசும் திறன் பெற்றார். இவருடைய ஆசிரி-யர் எவரென்பது தெரியவில்லையாயினும், தருமபுர ஆதீனத்து நான்காவது குருவாகிய மாசிலாமணித் தேசிகரை இவர் தம் ஞானசிரியராகக் கொண்டிருந்தார்.

5. இவர் தம் ஞானசிரியரை அடையுமுன்னரே, கந்தர் கலி வெண்பா, கயிலைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, சிவகாமி-யம்மை இரட்டைமணி மாலை, பண்டார மும்மணிக் கோவை, திருவாரூர் நான்மணி மாலை என்னும் நூல்களை இயற்றியருளினார். ஞானா-சிரியரை அடைந்த பிறகு இவர் பாடியவை காசிக் கலம்பகம், சகல கலாவல்லி மாலை, காசித் துண்டி விநாயகர் பதிகம் என்பவை-களேயாகும்.

6. ஞானசிரியர் கட்டளைப்படி குமரகுருபரர் அறச்சாலை அமைக்கக் கருதிக் காசிக்குச் சென்றார். அக்காலத்தில், காசி மொகலாயர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. ஷாஜஹான் என்ற மொகலாயப் பேரரசர், அது போது வடநாட்டை ஆண்டு கொண்டிருந்தார். அவ்வடநாட்டு மக்கள் பேசிய மொழியும், அரசாங்க மொழியும் இந்துஸ்தானியாய் இருந்தது. அம்மொழி அறியாத தமிழர் வடநாடு சென்றால் இரண்டொரு நாள் தங்கி-யிருத்தலும் துன்பமாயிருந்தது.

7. அவ்வாறிருந்தும், குமரகுருபரர் காசிக்குச் செல்ல அஞ்சினாரல்லர். இவர் இளம்பருவத்திலிருந்தே அஞ்சாநெஞ்-சினர் ; தந்நலமற்றவர் ; பொருட்பற்றற்றவர் ; பரிசில் கருதிப் பாட விழையாதவர் ; மொழிப்புலமை நிரம்பியவர் ; துறவு பூண்டவர் ; எதனையும் எளிதில் உணரவல்லவர்; கற்கவல்லவர். இவ்வருங்குணங்களை அறிந்தே மாசிலாமணித் தேசிகர் இவரைக் காசிக்கு அனுப்பி வைத்தார்.

8. காசி சென்றடைந்த குமரகுருபரர், அங்கிருந்த மொழி வேறுபாட்டினை அறிந்தார்; அரசரை நேரிற்கண்டு உரையாடத்

தாம் கற்ற தமிழ் மொழி பயன்படாதென்பதை அறிந்தார்; அரசரைக் கண்டு அறநிலையம் காண இடமும் அனுமதியும் பெற வேண்டுமென அவாக் கொண்டார்; இந்த அவாவினை நிறைவேற்றக் கருதி, இந்துஸ்தானி மொழியை எளிதில் கற்றறிந்தார்.

9. குமரகுருபரர் ஒரு நாள் மன்னரைக் காண அரச அவைக்குச் சென்றார். அங்கிருந்த அவைப் புலவர்கள் வினாக்கள் பல எழுப்ப, அவற்றிற்குக் குமரகுருபரர், அரசரும் அவைப்புலவர்களும் வியக்குமாறு விடையிறுத்தார். குமரகுருபரர் இல்லறவியல் குறித்து விளக்கிய காலை, "இத்துணை நுண்ணிய விஷயங்களை அறிந்திருக்கும் இவர் உண்மைத் துறவியராயிருத்தல் இயலுமோ? அனுபவத்தாலன்றி இவை அறியக்கூடியவை அல்லவே!" என்னும் ஐயப்பாட்டை அவைப் புலவர் கிளப்பினர்.

10. குமரகுருபரர் அதைக்கேட்டு அஞ்சவில்லை. மறுநாள் இவ்வையப்பாட்டைக் களைவதாகக் கூறி, களிம்பேறிய செப்புப்பாத்திரம் ஒன்றை வருவித்து, அதை அவையோர் அறியுமாறு மலத்தில் புதைக்கச் செய்து, மருந்தில்லாமலே, மறுநாள் அதைப் பொன்னாக்குவதாகக் கூறி, அவையை விட்டகன்றார்.

11. மறுநாள் குமரகுருபரர் அவைக்கு வந்தபோது, அவருடைய பொன்செய்யும் வித்தையைக் காணப் பலர் பேரவாக் கொண்டு அங்குக் குழுமியிருந்தனர். குமரகுருபரர், மலத்திற் புதைத்திருந்த செப்புப் பாத்திரத்தைத் துப்புரவு செய்து, அவையின் முன் கொணரச் செய்து, அதனைத் துடைத்துப் பளபளப்பாக்கிப் பொன் என அரசர் முன் வைத்தார். அவையில் இருந்தார் அனைவரும் இச்செயல் கண்டு கொதித்தெழுந்து, "இது பொன் செய்யும் வித்தையன்று; மலத்தின் புளிப்புச் சத்தால் செப்பின்மேலிருந்த களிம்பு நீங்கிப் பாத்திரம் பளபளப்பாய்த் தெரிகிறது," என்று கூறினர்.

12. குமரகுருபரர், அவைப் புலவரின் ஆத்திரங் கண்டு அஞ்சாமல், புன்னகை பூத்த முகத்துடன், "நீங்கள் மலம் புளிப்புச் சத்துடையது என்றீர்களே! அதைத் தின்று அனுப-

வித்தே கூறுகின்றீர்கள் போலும்!'' என்றார். இதைக் கேட்ட-தும் வெகுண்டெழுந்த சிலர் அவரை அணுகியபோதும், அவர் உலையா உளவுரம் பூண்டு நின்று, ''நேற்று நாம் இல்லறவியல் குறித்து விளக்கம் கூறியபோது நீவிர் கோரிய அனுபவம் எமக்-கும் வெகுளியை உண்டாக்கியிருக்குமே! வெகுளி உம்முடைய தனிச் சொத்தன்றோ?'' என்று விடையிறுக்க, அவர்கள் அஞ்சித் தங்கள் இருக்கைகளுக்கேகினார்கள்; மற்றவர் நாணித் தலை குனிந்தனர்.

13. இங்ஙனம் குமரகுருபரர் அம்மன்னர் மன்னரின் அவையில் பல துறைகளில் சொற்போர் நிகழ்த்திப் புலவரை வென்றமை கண்ட ஷாஜஹான், மகிழ்ச்சிப் பெருக்கடைந்து, இப்புலவர் பெருமான் விரும்பிய யாவற்றையும் அளித்து, காசியில் அறச்சாலை அமைக்க அனுமதியும் இடமும் கொடுத்து உதவினார். குமரகுருபரர், நெடுநாள் காசியில் தங்கி, பலருக்குத் தமிழ் பயில்வித்தும் சமயத் தொண்டாற்றியும் வாழ்ந்து, பின்னர்க் காலகதி அடைந்தார்.

14. இப்புலவர் பெருமான், தம் வாழ்நாள் முழுவதும் தமக்கென இன்றித் தமிழுக்காகவும் தாம் மேற்கொண்டொழு-கிய சைவ சமயத்துக்காகவும் உலையாது உழைத்து வந்தார். இவர் எக்காரணம் கொண்டும், எவர்மாட்டும், தம் மனத்திற்-குச் சரியெனத் தோன்றாததைச் சொல்லியதுமில்லை; செய்ததும் இல்லை. அச்சமோ, இச்சகமோ இவர் மனத்தைச் சற்றும் அசைக்க முடியாதவைகளாயின. இவ்வருங்குணநலன்கள் அமையப்பெற்றிருந்தமையினாலேயே, மன்னர் மன்னராய் விளங்கிய ஷாஜஹானின் நட்பையும், புறச்சமய மக்களிடையே-யும் வேற்று மொழியினரிடையேயும் மட்டற்ற புகழையும் பெருமையையும் உதவியையும் இவர் பெற்றுத் திகழ்ந்தார்.

15. இவர் போன்ற புலவர் பலரைக் கொண்டது நம் தமிழ் நாடு. குமரகுருபரர் சமயத் துறையில் தொண்டாற்றத் தம் அறிவின் ஆற்றலை வெளிப்படுத்தி வடநாட்டில் வெற்றிக் கொடி நாட்டினார். வீரத்தை நிலை நாட்ட இமயத்தில்

இலச்சினை பொறித்த புலமை சான்ற தமிழ் மன்னர் பலரைக் கொண்டது நம் தமிழ் நாடு. இவர்களைப் பற்றிய விரிவான செய்திகளை நீங்கள் மேல் வகுப்புக்களிற்படிக்கலாம்.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. பண்டைக்காலப் புலவரை எத்தனை வகையினராகப் பிரிக்கலாம் ? ஏன் ?
2. அவர்களின் குணநலன்கள் யாவை ?
3. 'குமரகுருபரர்' என்பவர் யார் ?
4. குமரகுருபரர் இயற்றிய நூல்கள் யாவை ?
5. குமரகுருபரர் காசிக்குச் சென்றதேன் ?
6. ஷாஜஹான் அவையில் நடந்ததென்ன ?
7. பொன் செய்யும் வித்தை எதற்காகக் கூறப்பட்டது ?
8. இப்புலவரைக் குறித்து நீ அறிவன யாவை ?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

புரவலர், அச்சம், விருப்பம், செல்வர், தந்நலம், துறவறம், வேறுபாடு, எளிதில், வெகுளி, அறம்

III. வாக்கியங்களில் அமைக்க :—

அரிய செய்யுள்கள், மகிழ்வித்து, வறுமை நோய், மானவுணர்ச்சி, நெஞ்சுறுதி, மொழிப் பற்று, மொழிப் புலமை, பொருட்பற்று, வேறுபாடு, துப்புரவு, உலையா, உளவுரம்

IV. சொல்லியுள்ளபடி செய்க :—

1. குமரகுருபரர் மறு நாள் அச்செப்புப் பாத்திரத்தைப் பொன்னாக்குவதாகக் கூறினார். (தன் வினையைப் பிற வினையாக்குக.)

2. குமரகுருபரர் இதைக் கண்டு அஞ்சாமல், மறு நாள் ஐயப்பாட்டைக் களைவதாகக் கூறி, களிம்பேறிய செப்புப் பாத்திரம் ஒன்றை வருவித்து, அதை மலத்தில் புதைக்கச் செய்து, மறு நாள் பொன்னாக்குவதாகக் கூறினார். (இதை ஐந்து தனி வாக்கியங்களாக்குக.)

V. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

புரவலர், கூலவாணிகன், மரபு, மூக்கை, துப்புரவு, வெகுளி, உலையா, இருக்கை, இலச்சினை



# 10. திருமதி விஜயலட்சுமி அம்மையார்

1. திரேதாயுகத்தில் சம்பரனுடன் போர் புரியச் சென்ற தசரதனுக்குக் கைகேயி தேர்ச் சாரதியானுள் என்பதும், துவாபரயுகத்தில் நரகாசுரனுடன் போர் புரிந்த கிருஷ்ணனுக்-குச் சத்தியபாமை தேர் ஓட்டினுள் என்பதும் புராணக் கதைகள் என நம்பாமல் விலக்குகின்றவர் உளர். பல்லாயிர மைலுக்-கப்பாலுள்ள ரஷ்யா, அமெரிக்கா முதலிய நாடுகளுக்கு நம் நாட்டுப் பெண்மணிகள் இராயபாரிகளாகவும், ஸ்தானிகர்-களாகவும் சென்று பணியாற்றி வருகின்றுர்கள் இக்காலத்-தில். இது கண்டு நாம் உளம் பூரிக்கிறேம். இங்ஙனம் பணி-யாற்றும் பெண்களுள் தலைமை வாய்ந்தவர் திருமதி விஜய லட்சுமி அம்மையார்.

2. விஜயலட்சுமியம்மையாரின் முன்னேருள் ஒருவர் டில்லி பாதுஷாவின் அவையில் முதன்மையான அலுவலராய்

வேலை பார்த்து வந்தார். அவர் பெயர் கங்காதர நேஷ்ரு என்பதாகும். அவருடைய அருந்தவப் புதல்வராய் 1861-ஆம் ஆண்டு, மேத் திங்கள் நம் அம்மையாரின் தந்தையாராகிய பண்டித மோதிலால் நேஷ்ரு தோன்றினர். மோதிலால் நெஹ்ரு-விற்கு இருவர் தமையன்மாருமிருந்தனர்.

3. மோதிலால் நெஹ்ரு இளமையிலேயே கல்வியை நன்கு கற்று வக்கில் தேர்வில் தேறினர்; பின்னர் அலகாபாது நகரில் நீதிவாதத் தொழிலை மேற்கொண்டு வழக்கறிஞராய் வேலை பார்த்துப் பெரும்பொருள் ஈட்டினர். அது போது குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்த தமையன்மார் இரு-வரும் பெரும்பிரிவெய்தினர். அதனால், மோதிலால் தாமே தமது குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தக் கடமைப்பட்ட-வராயினமையின், சொரூப ராணி என்னும் அம்மையாரை மணந்தார். அவ்வம்மையார் அருங்குணம் வாய்ந்தவர். அவர்-களுடைய அன்பு கெழுமிய இல்லறம் நல்லறமாகத் திகழ்ந்து வருங்கால், ஒருவர் தனயரும் இருவர் புதல்வியரும் தோன்றி-னர். அத்தனயரே நம் நாட்டு முதலமைச்சராய ஜவாஹர்லால் நெஹ்ரு. புதல்வியர் இருவருள் மூத்தவரே திருமதி விஜய-லட்சுமி அம்மையார்.

4. விஜயலட்சுமியம்மையார் 1900-ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், 18-ஆம் நாள் பிறந்தார். இவர் அழகே உருவெடுத்தாற்போல விளங்கினமையாலும், சொரூபராணி-யாரின் குமாரியாராதலினாலும் 'சொரூப குமாரி' என்று வழங்-கப்பட்டார். மோதிலால் இவ்வம்மையார் தோன்றிய பின்பு எங்குச் செலினும், எத்தொழிலைப் புரியினும், வெற்றியே அடைந்து வந்தார். அதனால் அவர் தம் மகளாரை விஜயலட்சுமி என்று அன்புடன் வழங்கி வந்தார். இப்பெயரே இப்பொழுது பொது மக்களால் நன்கு மதித்து வழங்கப்படும் பெயர். அலகாபாது நகரில் அதி அழகாக அமைக்கப்பட்ட ஆனந்த பவனமே அம்மையாரின் இல்லம். அம்மையார் அதில் தம் தமையனருடன் அகமகிழ்ந்து, சீரும் சிறப்பும் பெற்று, வளர்ந்து வந்தார். இவர் தளர்நடைப் பருவத்தை எய்திய

பொழுது இவருடைய தந்தையார் ஒரு குதிரை வாங்கினர். அம்மையார் தம் தமையனுருடன் அக்குதிரைமீது ஏறி, அஞ்சாது சவாரிசெய்து வந்தார். இவரிடம் இளமையிலிருந்தே வீரமும், மனத் திடமும் நிலை பெற்றிருந்தன.

5. இவர் ஐயாட்டைப் பருவத்தை அடைந்தபொழுது, இவருடைய பெற்றோர் நற்குணம் நிறைந்த ஹபேர் என்ற ஆங்கில மங்கையரை இவருக்குச் செவிலித் தாயராக அமர்த்தினர். அம்மங்கையார் விஜயலட்சுமியம்மையாருக்கு வளர்ப்புத் தாயராய் இருந்ததோடமையாது, அறிவுறுத்தும் ஆசான் போலவும் இருந்து, வேண்டிய பணிகளைச் செய்து வந்தார். மோதிலால் தம் மகளாரைப் பள்ளிக்கனுப்ப மனமிசையாது, தம் இல்லத்திலேயே ஆசிரியரை அமர்த்திக் கல்வி கற்பித்து வந்தார். அவ்வமயம் மோதிலால் அரசியலில் தலையிடவே, அரசியல் வாதிகள் ஆனந்தபவனத்தில் வந்து குழுமினர்கள். அதனல், அம்மையாருக்குப் பெரியார்களைப் பேணும் வாய்ப்பும், அரசியலறிவும், பொது அறிவும் உண்டாயின.

6. பஞ்சாபில் 1919-ஆம் ஆண்டில் ஒரு பெரிய கலகம் நிகழ்ந்தது. அதனை அடக்க வெள்ளையர் இந்தியர் பலரைக் கொன்று குவித்தனர். இப்படுகொலையே விஜயலட்சுமியம்மையாரையும், நேஹ்ரூவையும் அரசியற்புரட்சியில் ஈடுபடச் செய்ததென்னலாம். இதுவே மிதவாதியாய் இருந்த மோதிலால் நேஹ்ரூவையும் புரட்சியிலிறங்கத் தூண்டியது.

7. காந்தியடிகள் 1920-ஆம் ஆண்டில் தமது அறப் போரை ஆரம்பித்தார். "நாட்டின் நலனுக்காக அஹிம்ஸையை மேற்கொள்ள வேண்டும். அடி, சிறை முதலியன ஏற்க நேரிட்டாலும், பொறுமையுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். தீங்கு செய்தார்க்கும் தீங்கு செய்யக் கூடாது. உயிரிழக்க நேரினும் உறுதியை இழத்தல் கூடாது," என்பவையே அவ்வியக்கக் கொள்கைகளாகும். இது சம்பந்தமாகக் காந்தியடிகளனுப்பிய சுற்றறிக்கையில் நம் விஜயலட்சுமியாரே முதலில் கையொப்பமிட்டனர். பின்னரே இவர் குடும்பத்தினர் கையொப்பமிட்டனர்.

8. சின்னாட்களுக்குப் பின்னர்க் காந்தியடிகள் விஜய லட்சுமியாரைச் சந்திக்க நேர்ந்தது. அப்பொழுது அவர் அம்மையாரின் அழகிற்கும் அறிவிற்கும் ஏற்ற கணவரொருவரைத் தேட வேண்டுமென எண்ணிச் சென்றூர். ஒரு சமயம் காந்தியடிகள் மகாதேவ தேசாயுடன் ஆனந்தபவனத்தில் தங்கினூர் ; அவ்வமயம் 'மாடர்ன் ரெவ்யூ' என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் வெளி வந்த 'குருநாதரின் பாதந்தில்' என்ற கட்டுரையைப் படித்துப் பார்க்கும்படி அப்பத்திரிகைப் பிரதியொன்றை அம்மையாரிடம் கொடுத்தார். அதனைப் பெற்றுப் படித்த அம்மையார், அதன் சொல்லழகையும் பொருளழகையும் கண்டார் ; அதனை இயற்றிய ஆசிரியரின் பெயரைக் கூறும்படி தேசாயை வினவினூர். அதற்கு அவர், "இக்கட்டுரையாசிரியர் நுண்ணறிவும், நற்குணமும் வாய்ந்தவர் ; பாரிஸ்டர் பட்டம் பெற்றவர் ; இரஞ்சித பண்டிதர் என்னும் பெயரினர்," என்று கூறினூர்.

9. நாட்கள் சில கடந்தன. ஒரு நாள் விஜயலட்சுமியாருக்குத் தாம் முன்பு படித்த கட்டுரை ஆசிரியரைக் காணும் வாய்ப்புக் கிட்டியது. ஒருவரை ஒருவர் கண்டபொழுதே இருவர் மனத்தும் ஒரு தனி அன்பு ஏற்பட்டது. அதை அறிந்த பெற்றோர், 1921-ஆம் ஆண்டு, மேத் திங்கள், பத்தாம் நாள் அம்மையாரை இரஞ்சித பண்டிதருக்குத் திருமணம் செய்வித்தனர்.

10. விஜயலட்சுமியம்மையார் பின்னர்ச் சின்னுள் கழித்துத் தமது கணவருடன் கந்நியவாருக்குச் சென்றூர். காதலர் இருவரும் கல்வியிற்சிறந்தவர் ; ஒரே கொள்கையைப் பின் பற்றுபவர் ; ஆதலின், கருத்தொருமித்து, மலரும் மணமும் போல இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையாக நடத்தி வந்தனர்.

11. அம்மையார் தம் கணவர், தமையனூர், மதனியார் முதலியவருடன் 1926-ஆம் ஆண்டு இங்கிலாந்துக்குச் சென்றூர். ஆண்டு அவர்கள் பல இடங்களிலும் வாழ்கின்ற மக்களின் நடை உடை பாவனைகளையும், செல்வச் செருக்கையும், ஆடம்பர வாழ்க்கையினையும் கண்டார்கள். அம்மையார்

மனங்கொதித்தார்: "இவர்கள் இவ்வாறு வாழ்வது நம் நாட்டுச் செல்வத்தைச் சுரண்டுவதனலன்றே!" என்று எண்ணினர்; "இதற்கொரு வழி ஏற்பட்டாலொழிய நம் அடிமைத்தளை தகராது," என்று எண்ணினர். பின்னர்ச் சில நாட்கள் கழித்து இந்தியா வந்தடைந்தனர்.

12. நெஹ்ருவின் தலைமையில் 1927-ஆம் ஆண்டு காங்கிரஸ் மகாசபை கூடியது. அப்பொழுது அச்சபையினர் சில தீர்மானங்களை நிறைவேற்றி, உரிமைப்போர் தொடங்கினர். அச்சமயம் ஆங்கிலேயர் 'சைமன் கமிஷன்' என்ற ஒன்பதின்மர் கொண்ட ஆராய்ச்சிக் குழுவை இந்தியாவுக்கு அனுப்பினர். அதனை ஏற்க மறுத்த காங்கிரஸார் வேலை நிறுத்தம் செய்து, போலீசாரிடம் தடியடி பட்டனர். இதனைக் கண்ணுற்ற அம்மையார் அடக்குமுறையை எதிர்த்துப் போர் தொடங்கினர்; இவருடைய வீர முழக்கத்தைக் கேட்ட அரசியலார், இவரையும், கமலா நேஹ்ருவையும், கிருஷ்ணபாயையும் சிறைப் படுத்தினர். அப்போது அம்மையாருக்கு ஓராண்டு கடுங்காவலும் அபராதமும் விதிக்கப்பட்டன. அம்மையார் பல இன்னல்களுக்கிடையில் சிறையில் ஓராண்டு இருந்து விடுதலை பெற்றார்.

13. 1936-ஆம் ஆண்டில் நடந்த தேர்தலில் பெரும்பாலும் காங்கிரஸாரே வெற்றி பெற்றனர். அதன் பயனாக அமைச்சர் சபை அமைக்கும் பொறுப்பும் அவர்க்குக் கிட்டியது. அப்பொழுது, பலர் தூண்டுதலால் விஜயலட்சுமியார் தேர்விற்கு நின்று வெற்றி பெற்றார். பின்னர் இவர் 1937-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் ஸ்தலஸ்தாபன மந்திரியாரானர்; பல சீர்திருத்தச் சட்டங்களை இயற்றித் தம் கடமையைத் திறம்படச் செய்தார். ஆனால், அச்சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர அரசாங்கம் இடந்தர மறுக்கவே, காங்கிரஸார் முழு உரிமைக்குப் போராடினர். அப்பொழுது இரண்டாம் உலகப் போர் தொடங்கியது. அதற்காக ஆங்கிலேயர் காங்கிரஸ் மந்திரிகளைக் கலந்தாலோசியாமல் இந்தியாவையும் அப்போரில் ஈடுபடச் செய்தனர். அதனல் வெறுப்புற்ற மந்திரிகள், 1939-ஆம் ஆண்டு பதவியிலிருந்து விலகினர்கள்.

14. பின்னர்க் காங்கிரஸார் போர்க்காலத்தில் அரசியலார்க்கு இன்னல் நேரா வண்ணம் மீண்டும் அறப்போர் தொடங்கினர். அதைக் கண்ட அரசாங்கம் வெகுண்டு, 1940-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், 9-ஆம் நாள், விஜயலட்சுமியாரைச் சிறைப்படுத்திப் பின்னர் விடுதலை செய்தது : 1942-ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், 12-ஆம் நாள் நள்ளிரவில் மீண்டும் இவரை அரசியலார் சிறைப்படுத்தினர். அதற்காகச் சிறிதும் மனம் கலங்காத அம்மையார், தம் மகளிரை எழுப்பி விஷயத்தைத் தெரிவித்து, விடை பெற்றுச் சென்றார். சிறை சென்ற அம்மையார் பல இன்னல்களை அனுபவித்து, மீண்டும் விடுதலையடைந்தார்.

15. அமெரிக்காவில் ஐக்கிய தேச மாநாடொன்று 1944-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் நடந்தது. விஜயலட்சுமியார் அங்குச் சென்று, இந்திய நாட்டு நிலையைப் பற்றிப் பலபடப் பகர்ந்தார். அதைக்கேட்ட மாநாட்டவர் அம்மையாரின் சொல் வன்மை, சுறுசுறுப்பு, அஞ்சாமை முதலியனவற்றைக் கண்டு வியப்பெய்தினர். அதனால், இந்திய நாட்டிற்கே ஒரு தனிப்பெருமை உண்டாயிற்று. இவர் தமது பேச்சால், இந்தியா விடுதலை பெற்றாலன்றி உலகம் அமைதி அடையாது என்பதை அமெரிக்கர் நன்கு உணரும்படி செய்து மீண்டார்.

16. இத்தகைய சிறந்த வீரத்தாயராய் விளங்கும் அம்மையார், இப்பொழுது இந்திய ஸ்தானிகர் குழுவினருள் ஒருவராய் விளங்குகிறார். இவருடைய நாட்டுப் பற்றையும், நாட்டுத் தொண்டையும், தந்நலமற்ற வாழ்க்கையையும் இந்திய மக்களாகிய நாம் போற்றக் கடமைப்பட்டுள்ளோம்.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. பெண்களின் வீரத்திற்கு இரு புராணச் சான்றுகள் தருக.
2. விஜயலட்சுமி அம்மையாரின் வரலாற்றைச் சுருக்கிக் கூறுக.
3. விஜயலட்சுமி என்ற பெயர் வரக் காரணம் யாது?
4. அம்மையார் அரசியலில் ஈடுபட ஏதுவாய் இருந்தது எது?

5. 1920ல் காந்தியடிகள் ஏற்படுத்திய இயக்கத்தின் கொள்கைகள் யாவை? அவ்வியக்கத்திற்சேர முதலில் கையொப்பமிட்டவர் யார்?

6. அம்மையாரது கணவர் பெயர் யாது? ஏன் அவரை மணக்க விரும்பினர்? எப்போது திருமணம் நடந்தது?

7. "இதற்கொரு வழி ஏற்பட்டாலொழிய நம்மடிமைத்தளை தகராது."—சந்தர்ப்பம் கூறி விளக்குக.

8. அம்மையார் எவ்வாண்டு, ஏன் சிறையிடப்பட்டார்?

9. 1939ல் காங்கிரஸ் மந்திரி சபை ஏன் கலைக்கப்பட்டது?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

வசை, கலகம், செருக்கு, எதிர்த்து, சுறுசுறுப்பு, விடுதலை

III. வாக்கியங்களில் வைத்தெழுதுக :—

செல்வச்செருக்கு, தகராறு, திறம்பட, நோவண்ணம், வெகுண்டு, பணியாற்றி, ஈட்டினர், பிரிவெய்தினர்

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

எய்து, ஈட்டு, வெகுளி, வண்ணம், செருக்கு, வசை, நங்கை, திரு, ஐயாட்டைப்பருவம், ஆசான், குழுமினர்

V. இலக்கணம் கூறுக :—

1. 2, 3, 4, 5, 6, 7 - ஆம் வேற்றுமைகளுக்கு இப்பாடத்திலிருந்து இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

2. சைமன் கமிஷனை ஏற்க மறுத்து வேலை நிறுத்தம் செய்தபோது காங்கிரஸ்காரர்கள் எல்லாரும் தடியால் அடிக்கப்பட்டனர்.—(தன்வினையாக்குக.)

# 11. பண்டைப் புலவர்களுடைய பண்பாடுகள்

1. சங்க காலப் புலவர்களின் பாடல்களை நன்கு ஆராய்ந்தால், அப்புலவர்களின் பண்பாடுகள் தெரிய வருகின்றன. பரந்த மனப்பான்மையும், பரிந்துருகும் அருங்கருணையும், சிறந்த செல்வாக்கும், அரசரும் பிறரும் நடுவுநிலை தவறின் அவர்கட்கு இடித்துரைக்கும் மனவுறுதியும் அவர்களிடத்தே திகழ்ந்த அருங்குணங்களாகும்.

2. சங்க நூல்களுள் 'புறநானூறு' என்பதும் ஒன்று. அது நானூறு பாக்களைக் கொண்டது. அப்பாக்களைப் பாடிய புலவர் பலர். அவர்களுள் கோவூர் கிழார் என்பவர் ஒருவர். அவர் காலத்தில் நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி என்ற சோழ மன்னர் இருவர் இருந்தனர். அவர் அரசுரிமை காரணமாகப் பல இடங்களில் பொருது, இறுதியில் நெடுங்கிள்ளி சோழ நாட்டைக் கைவசப்படுத்திக்கொண்டான். எனவே, நலங்கிள்ளி தனக்குரிய பாகத்தைப் பெறுதற்கெண்ணி, நெடுங்கிள்ளி தங்கியிருந்த ஆவூர்க்கோட்டையை முற்றுகை செய்தான்.

3. அம்முற்றுகை நெடுங்காலம் நீடித்தது. அது காரணமாகக் கோட்டைக்குள்ளிருந்த மக்களும் பிற உயிர்களும் இயம்புதற்கரிய இன்னல்களுக்குள்ளானார்கள். அவ்வுயிர்கள்பால் இரக்கம் கொண்ட கோவூர் கிழார், ஆவூர் அரணை அடைந்தார். அக்காலத்தில் அரசர்களை எத்தருணத்திலும் காணத்தக்க உரிமை புலவர்கட்கிருந்தது. ஆதலால், ஆவூர்க் கோட்டையை முற்றுகையிட்டிருந்த வீரர், புலவரைத் தடை செய்யாது உள்ளே போக விட்டனர். பகைவர் உள்ளே வாராதபடி அடைக்கப்பட்டிருந்த கோட்டை வாயில்கள், புலவர்க்குத் திறக்கப்பட்டன.

4. புலவர் உள்ளே சென்றார்; நெடுங்கிள்ளியை நேரிற் கண்டு, அவனால் பரிந்து வரவேற்கப்பெற்று, அவனருகில் அமர்ந்து, "அரசரே, யான் கூறுவதைக் கேளும்: யானைகள்

எல்லாம் நீரில் முழுகாமலும், அரிசிக்கவளங்களைப் பெறும-லும், நிலத்தின்மீது புரளும் கைகளை உடையனவாய்ப் பெரு-மூச்செறிந்து இடி போல முழங்கி நிற்கின்றன. வீடுதோறும் குழந்தைகள் பாலின்றி அழாநின்றன. மகளிர் தம்மை அலங்-கரித்துக்கொள்ளாமல் அலங்கோலமாகக் காட்சியளிக்கின்ற-னர். குடிமக்களெல்லாரும் பசிப்பிணியால் தவிக்கின்றூர்கள். இவற்றை நீர் ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல், உமது மாளி-கையில் இனிது வீற்றிருத்தல் கொடிதன்றோ? நீர் தரும முறை தவருதவராயின், உம் பங்காளியை அழைத்து, 'இக்கோட்டை உன்னுடையதன்றோ?' எனக் கூறித் திறந்து விடுவீராக. இன்றேல், போர் புரிந்து, உம் பகைவனைப் புறங்காட்டச் செய்து, உமது வீரத்தை வெளிப்படுத்துவீராக. இரண்டுஞ் செய்யாது, அடைக்கப்பட்ட அரணுக்குள்ளே அடங்கிக்கிடப் பது, ஆராயுமிடத்து, மிக நாணுந்தன்மையது!'' என்னும் அரிய கருத்துக்கள் அமைந்த செய்யுளைக் கூறி, அவன் கோட்டையைத் திறக்கும்படி செய்தனர்.

5. இவ்வரலாற்றால் அக்காலப் புலவர்கள் உயிர்-களிடத்தே கொண்டிருந்த கருணையும், அரசனுயினும், நெறி தவறியவிடத்து இடித்துக் கூறும் மனவுறுதியும் நன்கு அறி-யக் கிடக்கின்றன. அன்றியும், அக்காலப் புலவர்கள் அரசர்-கள் அளித்த பரிசிலுக்காகத் தங்களை அடிமைப்படுத்திக்கொள்-ளும் மனப்பான்மை ஒரு சிறிதுமின்றிச் சுயமரியாதை மிக்க-வர்களாய் வாழ்ந்தார்கள் என்னும் உண்மையை விளக்கும் பல செய்திகள் பண்டை நூல்களில் காணக் கிடக்கின்றன. அவற்-றுள் இரண்டனை ஈண்டுக் காண்போம்:

6. பண்டைக் காலத்தில் நம் தமிழ் நாட்டில் மும்முடி வேந்தரைத் தவிர, வேறு பல சிற்றரசர்களும் வாழ்ந்து வந்தார்-கள். அத்தகைய சிற்றரசர்களுள் இளங்கண்டீரக்கோ, இளவிச்-சிக்கோ என்ற இருவர் இருந்தனர். ஒரு நாள் அவ்விருவரும் ஓரிடத்திற் சேர்ந்திருந்த போது அவர்களைப் பெருந்தலைச் சாத்தனுர் என்ற புலவர் கண்டார். அவர் இளங்கண்டீரக்-கோவை மார்புறத் தழுவி, மகிழ்ச்சி தெரிவித்துவிட்டு, இள-விச்சிக்கோவைப் புறக்கணித்து அமர்ந்தார்.

7. புலவர் செயலாற் பெரிதுஞ் சினமுற்ற இளவிச்சிக்கோ, அவரை நோக்கி, "புலவீர், நீர் எம்மைத் தழுவாமைக்குக் காரணம் என்னை?" என்றான். அதற்குப் புலவர், "சிறந்த மலைப்பக்கத்தில் தம் கணவர் நெடுந்தூரம் சென்றாலும், அவர் பெண்டிரும் தம் தரத்திலே நின்று புலவர்கள் விரும்பப் பெண் யானைக் கன்றுகளைப் பரிசிலாயளிக்கும் பெரும்புகழுடைய கண்டீரக்கோ இவனாகலின், தழுவினேன். நீயும் நன்னன் குலத்துதித்த பெருமையும் இயற்கைக் குணங்களுமுடையவனாயினும், நின் குலத்துதித்த முன்னோனொருவன், புலவர்கட்கு வாயிற்கதவடைத்த கொடுஞ்செயல் காரணமாக உங்கள் மலையை எம்மவர் பாடாதொழிந்தனர். அது பற்றி நின்னைத் தழுவ இசைந்திலேன்," என்று பதிலிறுத்தார். என்னே அப்புலவரது மனப்பான்மை! என்னே அவரது சுயமரியாதை உணர்ச்சி!

8. பெருஞ்சித்திரனர் என்பவர் பழம்புலவர்களுள் ஒருவர். அவர் ஒரு நாள் வெளிமான் என்ற புரவலனிடம் பரிசில் நாடிச் சென்றார். அச்சிற்றரசன் அப்புலவரின் பெருமைகளை நன்கறியாது, சிறிது பொருளைப் பரிசிலாக அளித்தான். அது கண்ட புலவர், அவ்வரசன் தம்மை ஏளனம் செய்ததாக எண்ணிச் சினமுற்று, அப்பரிசிலை ஏற்க மறுத்து, அவ்விடம் விட்டகன்றார்; நேரே குமண வள்ளலை அடைந்தார். அவ்வள்ளல் புலவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்; அவருடைய பாடல்களைக் கேட்டு இன்புற்றார். அவருக்கு யானையுள்ளிட்ட பல பரிசில்களை நல்கினர்.

9. அவற்றைப் பெற்றுக்கொண்ட பெருஞ்சித்திரனர், தம்மை அவமானப்படுத்திய வெளிமான் மாளிகையை அடைந்தார்; அங்கிருந்த காவல் மரமொன்றில் தாம் கொணர்ந்த பரிசில் யானையைக் கட்டினர்; நேரே வெளிமானிடம் சென்றார். "அரசரே, இரப்பவர்க்குக் கொடுத்துப் பாதுகாப்பவன் நீ ஒருவனே அல்லை. புரவலர்கள் இரவலர்க்கு இல்லாமற் போகவுமில்லை. இனி, யாசிப்பார் இருப்பதையும் பார்! யாசிப்பவர்க்கு ஈவோர் இருப்பதையும் காண்! உனது ஊரில் உள்ள காவல் மரம் வருந்தும்படி யாம் கொண்டு வந்து கட்டிய யானை

எமது பரிசில். வேகம் மிக்க குதிரைகளை உடைய தலைவனே, இனி யாம் செல்வோம்,'' என்னும் கருத்தமைந்த பாடலைக் கூறிவிட்டுச் சென்றார். என்னே அப்புலவரது மனவுறுதி! என்னே அவரது சுயமரியாதை! தாம் பரிசிலுக்குச் சென்றிருந்தும், தமது நிலைக்குத் தக்க பரிசிலை வெளிமான் அளிக்கவில்லை என்பதற்காகச் சினந்து, அவ்வரசனுக்குத் தக்க முறையில் புத்தி கற்பித்த அவர் பெருமையை என்னென்று கூறுவது! இதுகாறும் அறியப்பெற்ற அக்காலப் புலவர்களிடம் காணப்பெற்ற மனப்பண்புகள் இக்காலத் தமிழ் மக்களுக்குப் பெரிதும் தேவைப்படுகின்றன என்று கூறுவது இழுக்காகாதன்றோ?

பயிற்சி:

I. விடை எழுதுக:—

1. சங்க காலப் புலவர்களிடம் காணப்பட்ட அருங்குணங்கள் யாவை?
2. கலங்கிள்ளி ஆவூர்க் கோட்டையை முற்றுகையிடக் காரணம் யாது?
3. சங்க காலத்தில் புலவர்களுக்கிருந்த சிறந்த உரிமை ஒன்றனைக் கூறுக.
4. "இக்கோட்டை உன்னுடையதன்றோ?"—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
5. "புலவீர், நீர் எம்மைத் தழுவாமைக்குக் காரணம் என்ன?" —இது யாரைப் பார்த்து யார் வினவியது? ஏன்?
6. வெளிமானைப் பார்த்துப் பெருஞ்சித்திரனார் கூறியது யாது?
7. பெருஞ்சித்திரனார் பாடிய பாட்டின் கருத்தென்ன?

II. எதிர்ச்சொற்கள் எழுதுக:—

அமர்ந்து, கொடிது, திறந்து, அடிமை, சுயமரியாதை, மகிழ்ச்சி, புகழ், முன்னோன், கொடுஞ்செயல், உணர்ச்சி, புரவலன், ஈவோர், சினந்து, நெடுந்தூரம்

III. வாக்கியங்களில் அமைக்க:—

நடுவுநிலை, அருங்குணம், அலங்கோலமாக, ஆராயுமிடத்து, மனப்பான்மை, ஈண்டு, தரம், கொடுஞ்செயல், ஏளனம், பாதுகாப்பவன், சுயமரியாதை, மனப்பண்பு.

IV. சொல்லியுள்ளபடி செய்க:—

1. அரசரே, நான் கூறுவதைக் கேளும்: யானைகளெல்லாம் நீரில் முழுகாமலும், அரிசிக்கவளங்களைப் பெறுமலும், நிலத்தின்மீது புரளும் கைகளை உடையனவாய்ப் பெருமூச்செறிந்து இடி போல முழங்கி நிற்கின்றன. (நான்கு தனி வாக்கியங்களாக எழுதுக.)

2. பகைவர் உள்ளே வாராதபடி அடைக்கப்பட்டிருந்த கோட்டை வாயில் புலவர்க்குத் திறக்கப்பட்டது. (செய்வினையாக மாற்றுக.)

3. அரிய கருத்துக்கள் அமைந்த செய்யுளைக் கூறி அவன் கோட்டையைத் திறக்கும்படி செய்வித்தனர். (தன்வினையாக மாற்றுக.)

V. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக:—

பண்பு, பொருநு, அரண், தரம், பரிசில், புரவலர், இசைத்திலேன், இரப்பவர், இரவலர்.

# 12. கோழிப் பண்ணை

1. நமது நாட்டில் கோழி வளர்த்தல் பொருளாதாரத் தொழில்களுள் ஒன்ருகக் கருதப்படவில்லை. இந்தியாவில் கோழிகள் இல்லாத கிராமமோ, பட்டணமோ இல்லை என்று கூறலாம். ஆனல், அவை, அவற்றின் கறிக்காகவும் முட்டை-களுக்காகவும் வளர்க்கப்படுகின்றனவேயன்றி, அவற்றின் மூலம் பொருள் திரட்டக்கூடும் என்னும் கருத்தோடு பண்ணை முறையில் வளர்க்கப்படுவதில்லை. ஆனல், அமெரிக்க நாடுகளிலும் ஐரோப்பிய நாடுகளிலும் கோழிப் பண்ணை ஒரு முக்கிய பொருளாதாரத் தொழிலாகக் கருதப்படுகிறது. 1937-ஆம் ஆண்டின் கணக்குப்படி அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 4,261 லட்சம் கோழிகளும், ஐரோப்பாவில் 3,419 லட்சம் கோழிகளும், நமது இந்தியாவில் (பாகிஸ்தான் உட்பட) 1,732 லட்சம் கோழிகளும் இருந்தன. இப்புள்ளி விவரங்களின் மூலம் இந்தியர் கோழி வளர்ப்பதில் அதிக முயற்சியை மேற்-கொள்ளவில்லை என்பது வெளியாகின்றது. இனி, கோழி-களைப்பற்றிய செய்திகளையும், கோழிப் பண்ணைகளை நடத்தும் முறைகளையும் சற்று ஆராய்வோம் :

2. இக்காலத்தில் உலகில் காணப்படும் வீட்டுக் கோழி-கள் அனைத்தும் இந்தியாவின் காட்டுக் கோழிகளின் வமிசத்-தைச் சேர்ந்தவை என்னும் உண்மை எல்லாராலும் ஒப்புக்-கொள்ளப்படுகிறது. உண்மை இங்ஙனமிருக்க, கோழியின் பிறப்பிடமாகிய நமது நாட்டில் உள்ள கோழிப் பண்ணைகளுக்கு வேண்டிய உயர்தர இனக்கோழிகள், பிற நாடுகளினின்றும் தருவிக்கப்படுகின்றன என்பதை அறிய நீங்கள் வியப்புறு-வீர்கள். அன்றியும், நாம் ஒரு பொருளாக மதியாத கோழி களின் விலை மதிப்பும் உங்களை வியப்புறச் செய்யும். இந்தியா வில் உள்ள கோழிகளின் மதிப்பு 7·6 கோடி ரூபாய்; சென்னை இராச்சியத்துக் கோழிகளின் மதிப்பு மட்டும் 1·4 கோடி ரூபாய் என்பதை அறியும்போது நாம் வியப்புருமல் என் செய்வது!

3. உலகில் எத்தனையோ வகையான கோழிகள் உண்டு. அவை எல்லாம் நமது நாட்டிற்கு ஏற்றவை அல்ல. வெண்காற் கொம்பு[1], கருமைனுர்க்கா[2], ரோட்தீவின் செவ்வல்[3] ஆகிய மூன்று வகைகள் மட்டுமே நமது நாட்டுக்குச் சிறந்தவை என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இவை சமவெளிப் பிரதேசங்களுக்கு ஏற்றவையேயன்றி, மலைப்பிரதேசங்களுக்கு ஏற்றவை அல்ல.



கருமைனுர்க்கா வெண்காற்கொம்பு ரோட்தீவின் செவ்வல்

4. கோழி வளர்ப்பு நமது நாட்டில் குடிசைத் தொழில்களுள் ஒன்றாக மேற்கொள்ளப்படின், சிறந்த ஊதியம் தரத்தக்கது என்று பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றார்கள். ஆதலால், கோழி வளர்ப்பைப்பற்றிய முக்கியமான சில செய்திகள் இங்குத் தரப்படுகின்றன :

5. கோழி வளர்ப்பொன்றையே தமது வருமானத்துக்கு வழியாகக் கருதுகின்றவர் குறைந்த பட்சம் இருநூறு ரூபாய் மூலதனம் வைக்க வேண்டுவது அவசியம். இவர்கள் தங்கள் பண்ணையைக் கிராமத்தினுள் அமைக்காமல், கிராமத்துக்கு வெளியே ஒரு தோப்பில் அமைப்பது நலம். அத்தோப்பில் மழை பெய்தால் நீர் தேங்காமல் விரைவில் வடிந்துவிடக்கூடிய இடத்தில் குறைந்த பட்சம் ஆறடி உயரமிருக்கும்படி இரும்புக் கம்பிகளாலாகிய வலையடித்து, காட்டுப் பூனை, குள்ளநரி முதலியன உள்ளே புக முடியாதபடி பலமான வேலியமைக்க

1. White leghorn. 2. Black minorca. 3. Rhode Island Red.

வேண்டும். வேலிக்கு உட்பட்ட பகுதியில் நிழல் தரக்தக்க மரங்கள் இருத்தல் வேண்டும். இவற்றின்கீழ்க் கூடுகள் இருக்க வேண்டும். ஒவ்வொரு ஜாதிக்கும் உரிய கூடுகள் வரிசையாக வைக்கப்பட்டு, ஓர் இனத்துக் கோழிகள் பிற இனங்களோடு கலவாமல் இருக்க இடையில் வேலிகள் அமைக்கப்பட வேண்டும். கோழிகள் உலாவித் திரிவதற்கேற்றவாறு தாராளமாக வெற்றிடம் இருத்தல் அவசியம்.

6. இவ்வாறு வேலியமைக்கவும் கூடுகள் அமைக்கவும் மூலதனம் வேண்டுமன்றோ? இவற்றிற்கு நூறு அல்லது நூற்றைம்பது ரூபாய் தேவைப்படும். கோழிகள் வாங்குவதற்கும் பணம் வேண்டும். முதலிலேயே உயர்தரக் கோழிகள் வாங்குவது இயலாது. ஆதலால், தொடக்கத்தில் இருபத்தைந்து அல்லது முப்பது நாட்டுப் பெட்டைகளும், நல்ல உயரினச் சேவல் ஒன்றும் வாங்கி வளர்க்கத் தொடங்கவேண்டும். இவற்றிற்கு ஏறத்தாழ நாற்பது ரூபாய் தேவைப்படும். இக்கோழிகள் முட்டையிடுவதற்காக வளர்க்கப்படுவனவாதலால், இவற்றின் முட்டைகளைச் சேகரித்து, வாரந்தோறும் சந்தைகளில் விற்றுப் பணமாக்கலாம்; அல்லது முட்டை வாங்குவதற்கென வரும் வியாபாரிகளிடம் விற்றும் பணமாக்கலாம். அன்றியும், முட்டைகளிற்சிலவற்றை இனவிருத்திக்காகச் சேகரித்து வைத்தல் அவசியம். அவற்றை அடைகாக்கும் கோழிகளைக்கொண்டு பொரிக்க வைக்க வேண்டும். இன விருத்தியாக விட்டுக் கோழிகளையும் விற்கலாம்.

7. இங்ஙனம் தொடக்கத்தில் நாட்டுக் கோழிகளை வைத்துப் பண்ணை நடத்திக்கொண்டே உயரினக் கோழிகளை விருத்தி செய்யத் தொடங்க வேண்டும். உயரினக் கோழிகளை அவை கிடைக்கக்கூடிய பண்ணைகளில் விலைக்குப் பெறலாம். ஆனால், அவற்றிற்குப் பெருந்தொகை வேண்டும். சாதாரணமாக உயரினக் கோழி ஒவ்வொன்றுக்கும் ஐந்து முதல் பத்து ரூபாய் வரையில் விலை கொடுக்க வேண்டும். ஆதலால், உயரினக் கோழிகளை விருத்தி செய்வதற்கு அவை வளர்க்கப்படும் பண்ணைகளிலிருந்து முட்டைகளை வாங்கி, நாட்டுக் கோழிகளைக்கொண்டு அடைகாக்கச் செய்து உற்பத்தி செய்வதும்,

அல்லது பண்ணைகளினின்று அன்று பொரித்த குஞ்சுகளை வாங்கி வளர்ப்பதும் குறைந்த செலவில் உயரினக் கோழிகளை விருத்தி செய்யும் முறைகளாகும்.

8. கோழி வளர்ப்பவர் அறிய வேண்டுவனவற்றுள் மிக முக்கியமானது, கோழிகட்குரிய உணவுப் பொருள்களைப் பற்றியதாகும். கோழிகட்குத் தினந்தோறும் மூன்று வகையான உணவுப் பொருள்கள் உபயோகிக்கப்பட வேண்டும். நெல், கேழ்வரகு, கம்பு, சோளம் முதலிய தானிய வகைகளுள் ஏதேனும் ஒரு வகையில் கோழியொன்றுக்குத் தினமும் இரண்டு அவுன்ஸ் தரவேண்டும். பன்னிரண்டு பாகம் அரிசித் தவிடும், ஆறு பாகம் கோதுமைத் தவிடும், ஆறு பாகம் கோதுமை அல்லது கேழ்வரகு மாவும், ஒரு பாகம் அடுப்புக்கரித் தூளும், ஒரு பாகம் மீனுணவும், ஒரு பாகம் எலும்புணவும், அரைப் பாகம் நிலக்கடலைப் பிண்ணுக்கும், அரைக்கால் பாகம் உப்பும் சேர்ந்த கலப்புணவு தினந்தோறும் கோழியொன்றுக்கு இரண்டு அவுன்ஸ் அளவு தரப்படல் வேண்டும். இவையன்றிக் கீரை உணவும் தினந்தோறும் அவசியமாக அளிக்கவேண்டும். எந்தக் கீரையாயினும், நன்ருகக் குறுக அரிந்து வைக்க வேண்டும். இவையன்றிக் கோழிகளுக்குக் குளிர்ந்த நீரைப் பாத்திரங்களில் நிழலில் வைத்து எப்போதும் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

9. மேற்கூறப்பட்ட முறையில் கோழியொன்றுக்கு வாரந்தோறும் மூன்றணுச் செலவாகும். எனவே, மாதமொன்றுக்குப் பன்னிரண்டணுச் செலவாகும். 'மாதந்தோறும் கோழியொன்றுக்குப் பன்னிரண்டணுச் செலவு செய்தால், அதற்கேற்ற இலாபம் கிடைக்குமா?' என்னும் வினு எழுகின்றது. இலாபம் கிடைப்பது நிச்சயம். ஆனல், இலாபத்தின் அளவு யாது என்பது வளர்க்கப்படும் கோழிகளைப் பொறுத்தது. சாதாரணமாக உயரினக் கோழிகள் வருடமொன்றுக்கு முந்நூறு முட்டைகளுக்குமேல் இடுவது நிச்சயம் என்பது ஆராய்ச்சியாளர் கூறும் உண்மை. இதன்படி கணக்கிட்டால், ஒரு முட்டை ஓர் அணு வீதம் ஒரு கோழியின் மூலம் வருடமொன்றுக்குப் பதினெட்டு ரூபாய் கிடைக்கும். ஆனல், அதற்குச் செலவு ஒன்பது ரூபாய் மட்டுமே.

10. இத்தகைய சிறந்த குடிசைத் தொழில் நமது நாட்டில் இதுவரையில் ஆராய்ச்சிக்காக அரசாங்கத்தினராலும், ஒரு சிலரால் பொழுது போக்குக்காகவும் மேற்கொள்ளப்பட்டுள்ளதேயன்றிக் கிராம மக்களால் மேற்கொள்ளப்படவில்லை. ஆனால், கிராமங்களில் கோழிகள் இல்லா வீடே இருப்பதில்லை. இவை தாமே தோட்டங்களில் அலைந்தும், வைக்கோற்போர்களைக் குடைந்தும் தீனி தேடிப் பிழைக்கின்றன. இவற்றை வளர்ப்பவர் இவற்றின் முட்டைகளை உபயோகிப்பதும், விருந்தினர் வந்தால் இவற்றுள் ஒன்றிரண்டைக் கொன்று விருந்தளிப்பதும் தவிர, ஊதியமடையத்தக்க முறையில் இவற்றை வளர்க்க முற்படாமை பெரிதும் வருந்தத் தக்கதேயாகும்.

## பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. கோழி வளர்ப்பதில் நம்மவருக்கும் அந்நியருக்கும் உள்ள கருத்து வேறுபாடு யாது?
2. நம் நாட்டுக்கு ஏகந்த மூன்று கோழி வகைகளைக் கூறுக.
3. கோழிப் பண்ணையைக் குறித்துப் பொருளாதார நிபுணர்கள் கருதுவது யாது?
4. கோழிப் பண்ணை அமைக்க விரும்பும் ஒருவர் கவனிக்கவேண்டிய விதிகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கூறுக.
5. எவ்வெவ்விதிகளைக் கடைப்பிடித்து நடந்தால் கோழிப் பண்ணையைக் குறைந்த செலவில் ஆரம்பித்துக் கொஞ்சம் கொஞ்சமாக விரிவடையச் செய்யலாம்?
6. கோழிப் பண்ணையாளன் உணவுப் பொருள்கள் விஷயத்தில் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்கள் யாவை?

II. வாக்கியத்தில் வைத்தெழுதுக :—

மூலம், பொழுது போக்கு, ஊதியம், பொருளாதாரம்

III. எதிர்ச்சொல் கூறுக :—

ஐக்கியம், முயற்சி, ஒப்புக்கொள், வியப்பு, மதிப்பு

IV. இலக்கணம் :—

1. ஆடு, காடு, மாடு, பாக்கு, கடு, காடு, பசு, பாடு, பட்டு, பாட்டு, அரங்கு, விடு, வீடு, கொசு, எஃகு, போற்று, குறு—குற்றியலுகரம் பொருந்திய சொற்களை எடுத்து எழுதுக.

# 13. திருக்குறளும் திருவள்ளுவரும்

"வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி?"

என்று மனோன்மணீய நூலாசிரியரால் புகழ்ந்து கொண்டாடப் பட்ட நூல், திருக்குறள். இந்நூல் பிற நூல்களைப்போலக் கால வேறுபாட்டாலும், கருத்து வேறுபாட்டாலும், மத வேறுபாட்டாலும் சீர்கெட்டுச் சிதைந்தொழியாமல், சிறப் புற்று அன்றும் இன்றும் பொது மறையாய்த் திகழ்ந்து வருகின்றது.

2. தமிழ் மொழியிலுள்ள பா வகைகளுள் முதலாவதாக வைத்து எண்ணப்படுவது வெண்பா. இவ்வெண்பா வகையில் முதற்கண்ணுள்ளது குறள் வெண்பா. 'குறள்' என்பதற்குக் 'குறுகிய பாட்டு' என்பது பொருள். இவ்வெண்பாவால் பாடப் பட்ட நூல் 'குறள்' எனப் பெயர் பெற்றது. 'திரு' என் பதற்குக் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை' என்பது பொருள்.

3. தமிழ் மொழியில் முதல் எழுத்துக்களாய் உள்ளவை, உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும் ஆகிய முப்பது எழுத்துக்கள். அவற்றுள் முதலில் நிற்பது அகரவுயிரும், ஈற்றில் நிற்பது னகர மெய்யும் ஆகும். குறளாசிரியர் தமிழ் மொழியின் சிறப்பை உலகத்தார்க்குப் பல்லாற்றானும் எடுத்-துக் காட்ட எண்ணி, தாம் பாடிய பொது மறையின் முதற் செய்யுளின் முதலெழுத்தாகத் தமிழில் முதலாயுள்ள அகரத்தை அமைத்துப் பாடியுள்ளார்; பின்னர் முதலெழுத்துக்கள் முப் பதில் ஈற்றிலுள்ள னகர மெய்யை இறுதிக் குறளின் இறுதி எழுத்தாகக் கொண்டு பாடிய திறம் வியக்கற்பாலது!

4. திருக்குறள், அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பெரும்பிரிவுகளைப் பெற்றுள்ளது. அறத்துப்பால், 'இல்லறவியல், துறவறவியல்' என்னும் இரண்டு உட்பிரிவு

களுடன், முப்பத்தெட்டு அதிகாரங்களை உடையது. பொருட்பால், 'அரசியல், அமைச்சியல், அங்கவியல், ஒழிபியல்' என்னும் நான்கு உட்பிரிவுகளுடன் எழுபது அதிகாரங்களை உடையது. காமத்துப்பால், 'களவியல், கற்பியல்' என்னும் இரண்டு உட்பிரிவுகளுடன் இருபத்தைந்து அதிகாரங்களை உடையது. இந்நூலின்கண் காணப்படும் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களுள் ஒவ்வொன்றும் தனித்தனியே பப்பத்துப் பாக்களைக்கொண்டு மிளிர்கின்றது.

5. மேனுடுகளிலிருந்து நம் நாடு வந்த அறிஞர் பலரும் இத்திருக்குறளின் சிறப்பை உணர்ந்து, இதனை நன்கு கற்றுத் தத்தம் மொழிகளில் பெயர்த்தெழுதியுள்ளனர். திருக்குறள் ரெவரெண்டு பெஸ்கி என்பவராலேதான் முதன்முதல் இலத்தீனில் மொழி பெயர்க்கப்பட்டது; பின்னர் ஜி. யு. போப்பையர் என்பவரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது; டாக்டர் கிரால் என்பவரால் ஜெர்மனியில் மொழி பெயர்க்கப்பட்டது. வேங்கடராம ஸ்ரீ வைத்தியநாதரால் தெலுங்கிலும், ஸ்ரீ அப்பா தீட்சிதரால் வடமொழியிலும், க்ஷேமானந்த ராஹத்து என்பவரால் ஹிந்தியிலும், திவான் பகதூர் கோவிந்தப் பிள்ளை என்பவரால் மலையாளத்திலும் பெயர்த்து எழுதப்பட்டுள்ளது. வேறு சில மொழிகளிலும் இந்நூல் பெயர்த்தெழுதப்பட்டுள்ள பெருமை பெற்றது.

6. திருக்குறள் உலகத்திலுள்ள பல மக்களாலும் போற்றப்பட்டுப் புகழ் பெற்றதையும், குறளாசிரியர் சாலப் புகழெய்தியதையும் கண்ட நமது நாட்டு மதவாதிகளுள் பலர் திருவள்ளுவரைத் தத்தம் மதத்தவரென்று வாதிக்கத் தொடங்கினர். திருவள்ளுவர் பௌத்தர் என்று பௌத்தரும், சமணர் என்று சமணரும், வைணவர் என்று வைணவரும், சைவர் என்று சைவரும் கூறலாயினர். ஆனல், வள்ளுவர் வாய்மொழி மத வேறுபாடில்லா மாட்சியுடன் ஆட்சி பெற்று எல்லா மதத்தவராலும் போற்றப்படும் நிலையில் அமைந்துள்ளது என்பது வெள்ளிடை மலை. இந்நூல் இறவாப் புகழுடன் நின்று நிலவுவதால், மக்கள் இதனை 'முப்பால், தமிழ் மறை, பொதுமறை, பொய்யாமொழி, திருவள்ளுவர்' எனப் பல பெயரிட்டு

வழங்கலானுர்கள். இவற்றிலிருந்தே இந்நூலின் சிறப்பு அங்கை நெல்லிக்கனியெனப் புலப்படுகின்றதல்லவா?

7. இந்நூலுட்காணப்படுகின்ற சொற்களுள் ஒவ்வொன்றும் வளமுற்றதாகவும், பொருட்செறிவுடையதாகவும், இனிமையும் எளிமையும் கொண்டு திகழ்வதாகவும் அமைந்துள்ளது. இந்நூலை மக்கள் நவிலுந்தொறும் கழிபேருவகை எய்துவார்கள்.

8. இத்தகைய பீடுடைய பெருநூலைப் பாடிய பெருந்தகையார், வான் புகழ் கொண்ட வள்ளுவர். இப்பெயர் குறளாசிரியரின் இயற்பெயரோ, புனை பெயரோ, அன்றிக் குடிப்பெயரோ என்பதை அறுதியிட்டுக் கூறுதலியலாது. 'இவர் மயிலையில் பிறந்து, 'வாசுகியார்' என்னும் வேளாண் குல மாதரை மணந்து, இல்லறவொழுக்கத்தைச் சிறந்த முறையில் நடத்திக் காட்டியவர்,' என்பர் சிலர்; 'இவர் மதுரையில் பிறந்தவர்,' என்பர் சிலர்; இன்னும் பலரும் பலவாருகக் கூறுப.

9. முற்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் தங்கள் தங்கள் வரலாற்றைக் குறித்து வைப்பது தற்பெருமையாகும் என்று எண்ணியோ, அன்றி வேண்டா என்று நினைத்தோ குறிக்காமல் விட்டுச் சென்றுவிட்டார்கள். அதனுற்றான் நாம் சிறந்த புலவர்களுடைய உண்மை வரலாறுகளை உள்ளபடி உணர்தல் இயலாதாயிற்று. பிற்காலத்தில் வாழ்ந்த பலரும், பெரும்புலவர்களைப் பற்றிச் செவிவழிச் செய்தியாகத் தாம் தாம்கேட்டறிந்தனவற்றைத் துணைக்கொண்டு தத்தம் கருத்துக்கேற்றவாறு கூட்டியும், குறைத்தும், புதுக்கியும், புனைந்தும் கூறலாயினர்.

10. திருவள்ளுவர் தமிழ் நாட்டிற்பிறந்தார்; தமிழுக்குத் தலைசிறந்த தொண்டு புரிந்தார். இவர் அறநூற்றுறை, அரசியற்றுறை, இன்பநூற்றுறை ஆகிய பல துறைகளிலும் சிறந்த புலமை பெற்ற பெரும்புலவர். இவருடைய பரந்த அறிவின் திறத்தை இவர் பாடிய நூலைத் தெளிவாகக் கற்றுணர்பவர் யாவரும் நன்கறியலாம்.

11. திருக்குறள் தமிழ்மொழியில் தொல்காப்பியர் காலத்திற்குச் சற்றுப் பிற்பட்ட காலத்தில் எழுந்த நூல்; மக்கள்

வாழ்க்கையின் உயர்வுக்கு வேண்டிய வழிகளைக் கொண்டுள்ள நூல். இத்தகைய தனித்தமிழ் வளம் செறிந்த கலைக்கருவூலமெனத் திகழும் பொது மறையை—அறிவுப் பெருமலையாய் விளங்கும் அருமறையை—நன்கு கற்கும் மாணவர் கற்ற வழியில் நிற்றல் வேண்டும்.

பயிற்சி :

I. விடையெழுதுக :—

1. மனோன்மணீய ஆசிரியர் திருக்குறளைச் சிறப்பித்துக் கூறும் அடிகளை எழுதி, அதற்குப் பொருளும் எழுதுக.
2. திருக்குறளின் அமைப்பை விவரிக்க.
3. திருக்குறள் எவ்வெம்மொழியில் யார் யாரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது ?
4. குறளுக்குரிய வேறு பெயர்களைக் கூறுக.
5. 'நாம் குறளால் எய்தும் பயன்கள்' என்பதைக் குறித்து ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் ஒரு கட்டுரை வரைக.

II. எதிர்ச்சொல் கூறுக :—

புகழ்ந்து, வேறுபாடு, ஈற்றில், பெருமை, எளிமை, உவகை, புகழ், அறம்

III. வாக்கியத்தில் அமைத்தெழுதுக :—

சிதைந்தொழியாது, ஈற்றில், வியக்கற்பாலது, போற்றப்பட்டு, மாட்சியுடன், நவிலுந்தோறும், கழிபேருவகை, செவிவழிச் செய்தி

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

அறம், வெள்ளிடை, அங்கை, மாட்சி, செறிவு, பேருவகை, எய்துவர், வான்புகழ், வேளாண்குலம், புனைந்து, செவிவழிச் செய்தி, கருவூலம், மறை

V. சொல்லியபடி செய்க :—

(1) கண்டாரால் விரும்பப்படும், முதல் எழுத்துக்களாக, இதன்கண்—தொடர் இலக்கணம் கூறுக.

(2) மாணவர்காள், குறளை, வெண்பாவால், ஆசிரியர்க்கு, திருக்குறளின், அதிகாரங்களையுடையது, இந்நூலின்கண்—இவை என்ன என்ன வேற்றுமைகள் என்பதை ஆதாரத்தோடு கூறுக.



# 14. மங்கோ பார்க்

1. ஏறத்தாழ இரண்டு நூற்றுண்டுகட்கு முன் இருண்ட கண்டமென வழங்கிவந்த ஆப்பிரிக்காக் கண்டத்தின் உட்பகுதிகளைக் கண்டறிந்த மாந்தரிலர். ஆயினும், கிழக்கிந்தியத் தீவுகளோடும், நமது பாரத நாட்டோடும் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த ஐரோப்பியர், இக்கண்டத்தின் சில கடற்கரைப் பிரதேசங்களையும், பட்டினங்களையும் அறிந்திருந்தனர். அஞ்சா நெஞ்சம் படைத்த ஐரோப்பியரும் இக்கண்டத்தின் உட்பகுதிகளை ஆராயாமலிருந்ததற்குக் காரணங்கள் பல உள. கண்டத்தின் உட்பகுதிகளில் இருந்த மனிதர் நுழைய முடியா அடவிகளும், அயலாரைக் கண்டவுடன் அரவமெனச் சீறி அவரைக் கொல்ல முற்பட்ட முரட்டுமக்களும், வெள்ளையர்க்குப் பொருந்தாத வெப்பதட்ப நிலையும் சில முக்கிய காரணங்களாகும்,

2. இத்துணை இடர்களையும் எதிர்த்துக்கொண்டு கண்டத்தின் உட்சென்று ஆய்வு நடத்தல் அரும்பெருஞ்செயலாகக் கருதப்பட்டது. ஆயினும், ஆற்றல் மிக்க ஆங்கிலேயர் சிலர், ஆப்பிரிக்காக் கண்டத்தை ஆராய்ச்சி நடத்த முற்பட்டவர்க்கு

அவசியமான உதவிகளைப் புரிவதற்கென ஒரு கழகத்தை நிறுவினர். அக்கழகத்தார், ஆப்பிரிக்காவின் வடபாதியில் டிம்பக்டூ என்னும் வாணிகச் சந்திப்பு ஸ்தலம் ஒன்றுண்டு என்பதைக் கேள்விப்பட்டு, அதைக் கண்டு திரும்பத்தக்க வீரர் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். அக்காலத்தில் டிம்பக்டூவைப்பற்றி எழுந்த வியத்தகு செய்திகளே இம்முயற்சிக்குக் காரணமாகும். ஆப்பிரிக்காக் கண்டத்தின் வடபாதியின் மேற்கில் நைஜர் என்னும் ஒரு நதி பாய்கின்றது. அந்த நதிப் படுகையில் அமைந்த டிம்பக்டூ பொற்குவியல்கள் நிறைந்தது என்னும் செய்தி அக்காலத்திற் பரவி வந்தது.

3. இத்தகைய பொன்னகரைக் காண விழைந்தார் ஓர் இளைஞர். அவர் அஞ்சா நெஞ்சமும், உலையா ஊக்கமும் உள்ளவர். அவரே மங்கோ பார்க் என்ற நாடாய்ந்த நல்லறிஞர். அவரைப்பற்றி இப்பாடத்திற் படிப்போம் :

4. மங்கோ பார்க், 1771ல் ஸ்காட்லாந்தில், செல்கர்க் ஷயரில் ஒரு குடியானவருக்கு ஏழாம் மகவாய்த் தோன்றினர். இவர் தொடக்கத்தில் வீட்டிலேயே கல்வி பயின்று, பிறகு கல்லூரியில் உயர்கல்வி கற்று, இறுதியில் மருத்துவக் கல்லூரியிற்சேர்ந்து மருத்துவர் பட்டம் பெற்றவர். சிறிது காலம் தமது தொழிலை மேற்கொண்டு நடத்திய பின்னர், இலண்டனுக்கும் கிழக்கிந்தியத் தீவுகளுக்குமிடையே சென்று வந்து கொண்டிருந்த ஒர்ஸெஸ்டர் என்ற கப்பலில் உதவி மருத்துவர் பதவியில் அமர்ந்தார்.

5. ஆப்பிரிக்க ஆராய்ச்சிக் கழகத்தார் டிம்பக்டூவைக் கண்டு மீளத் தக்கவர் மங்கோ பார்க்கே என நிச்சயித்து, அவரை அப்பணியில் ஊக்கினர். மங்கோ பார்க்கும் அப் பணியை மேற்கொண்டு, ஒரு நாவாயிலேறி, ஆப்பிரிக்காவின் வடபாதியின் மேற்குக்கரையில் பாயும் காம்பியா யாற்றின் கழிமுகத்தை அடைந்தார்; அங்கிருந்து உள் நாட்டிற் சிறிது தொலைவில் அமைந்துள்ள பைசானியா என்னும் பட்டணத்தை அடைந்தார். அக்காலத்திலும் ஆப்பிரிக்காவின் கடற்கரைப் பகுதிகளை ஐரோப்பியர் அறிந்திருந்தமையால், கிறித்தவப்

பாதிரிமார் பலர் அங்குக் குடியேறி, மதத்தொண்டு புரிந்து வந்தனர். அத்தகைய பாதிரிகளுள் ஒருவர் பைசானியாவில் இருந்தார். டாக்டர் லெய்ட்லி என்ற பெயரிய அவர், மங்கோ பார்க்குக்கு நல்வரவு கூறி, அவரைத் தம் இல்லத்தில் விருந்தினராய் இருக்கச் செய்தார். சில நாட்களில் மங்கோ பார்க்கை வெப்ப நோய் பீடித்தது. அந்நோயால் இரண்டு திங்கள் இடருற்ற மங்கோ பார்க், மிகவும் மெலிந்து, மேலும் நான்கு திங்கள் வரையிலும் தாம் மேற்கொண்ட பயணத்தில் ஈடுபட முடியாதவரானார்.

6. தமது மெலிந்த உடல் உரம் பெறும் வரை லெய்ட்லியுடன் தங்கியிருந்த மங்கோ பார்க், அந்த நான்கு மாதங்களையும் வறிதிற்கழியாது, அந்நாட்டு மக்களின் உடை நடை ஒழுக்கங்களை ஆராய்வதிலும், சுதேச மொழியைக் கற்பதிலும் கழித்தார். தமது உடல், பயணத்தை மேற்கொள்ளத் தக்க நிலை எய்தியவுடனே, இவர் பல வகைச் சோழிகள், பல வண்ண மணிகள், புகையிலை, இரண்டு திசை காட்டிகள், ஒரு வெப்பமானி, சில துப்பாக்கிகள், தமக்கவசியமான ஆடைகள் முதலியன நிறைந்த பொதிகளை இரண்டு கழுதைகளின்மீது ஏற்றிக்கொண்டு, சில நீகிரோப் பணியாளருடன் ஒரு குதிரையிலேறித் தமது பயணத்தை மேற்கொண்டார்.

7. இவர் மூன்று நாட்கள் பிரயாணம் செய்து மநீனு என்னும் பட்டணத்தை அடைந்தார்; அதன் அரசரைக்கண்டு அளவளாவித் தமது விருப்பத்தைத் தெரிவித்து, அவருடைய நட்பையும் உதவியையும் பெற்றுத் தமது பயணத்தைத் தொடங்கினர்.

8. மநீனுவை விட்டு நீங்கி, மேலும் சென்ற போது ஒரு மரத்தின் கிளைகளில் துணிக் கந்தைகள் கட்டித்தொங்கக் கண்டு, "இது என்ன? துணி காய்க்கும் மரமா?" என்று தம்முடன் வந்தவர்களை வினவினர். அவர்கள் பாலைவனப் பிரயாணிகள், அவ்வனக் கடவுளுக்குக் காணிக்கையாகச் சிறு கந்தைத் துணியைக் கட்டுவது வழக்கமென்று தெரிவித்ததைக் கேட்ட மங்கோ பார்க், அந்நாட்டு மக்களது விந்தைப் போக்கை உன்னிக்கொண்டே பயணத்தைத் தொடர்ந்தார்.

9. இவர் அங்கங்கே ஏற்பட்ட சிறு சிறு இடர்களை எதிர்த்துக்கொண்டு, காம்பியா நதிக்கும் செனிகல் நதிக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியைக் கடந்தார். அது வரை ஆங்கிலேயரைக் கண்டறியாத சுதேசிகள் இவரைக் கண்டதும் ஐயுற்று, அஞ்சி ஒடுங்கினார்கள். அதையறிந்த பார்க், அவர்களை அணுகி, அவர்களோடு நல்ல முறையில் பழகி, அவர்களது அச்சத்தை ஓட்டி, அவர்களது நன்மதிப்பைப் பெற்றார். பிறகு செனிகல் யாற்றின் மறு கரையிலிருக்கும் 'கார்டர்' என்னும் நகர் சேர்ந்து, அதன் அரசரை நேரிற்கண்டு, தமது நோக்கத்தை எடுத்தியம்பினார். அதற்கு அத்தலைவர் நைஜர் நதி சென்றடைவதற்குப் பாம்பார் நாட்டின் வழியே போக வேண்டும் என்றும், அந்நாட்டவருக்கும் தமக்கும் போர் மூண்டிருந்ததால் அவ்வழியே போக முடியாதென்றும், லூடமர் நாட்டின் மூலம் செல்வதே நலம் என்றும் கூறி வழியனுப்பினார்.

10. கார்டாவை விட்டுப் பார்க் மூர் எனும் இனத்தவரின் பதியாகிய லூடமர் நாட்டையடைந்தார். அதன் தலைவர் பெயர் அலி. பார்க், அலியிடம் சென்று தாம் அவ்வழியே செல்ல அனுமதிபெற்று வரும்படி தூதுவன் ஒருவனை அனுப்பினார். ஐரோப்பியர் தம் நாட்டில் புகுந்து வாணிகம் நடாத்துவதையும், நீகிரோக்களை அடிமைப்படுத்துவதையும் அறவே வெறுத்த அலி, தூதுவன் வாயிலாகச் சேதியைக் கேட்டதும், பார்க்கைச் சிறை பிடித்து வரும்படி தம் ஆட்களை ஏவினார். பார்க்கைச் சிறையில் வைத்து இன்னல்கள் பல இழைத்து வந்ததோடு நில்லாமல், அவரைத் தண்டிக்கத் தமது அரசவை அமைச்சருடன் ஆலோசித்த பிறகு, அரசி பாதிமாவையும் கலந்தாலோசித்தார். அரசி பார்க்கினிடம் பரிவு கொண்டு, இவரை விடுதலை செய்யும்படி அலியை வேண்டினாள். அதன்படி அலி பார்க்கை விடுதலை செய்து, ஜாராவுக்குச் சென்ற தம்முடைய ஆட்களோடு அனுப்பிவிட்டார்.

11. தம் மனைவியின் விருப்பப்படி பார்க்கை விடுதலை செய்த அலி, பார்க் ஜாரா சென்று அங்குத் தங்கியிருந்தபோது, மீண்டும் அவரைக் கைது செய்து வரும்படி ஏவிய ஆட்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். தம்மை மீண்டும் சிறை செய்ய வந்திருக்-

கிறார்கள் என்பதை அறிந்த பார்க், அவ்வீரர்கள் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தபோது நடுநிசியில் எவரும் அறியாவண்ணம் தம் புரவிமீது ஏறி, அவ்விடத்தை விட்டகன்றார். இவ்வாறு தப்பிய பார்க், இரவு முழுவதும் பிரயாணம் செய்ததால் களைப்படைந்தார். பார்க்கின் நிலையையறிந்தது போல வானம் அருள் கூர்ந்து மழை சொரிந்தது. பார்க் தமது துண்டை விரித்து, மழைநீரை ஏந்தி, அதைப் பிழிந்து தமது நீர் வேட்கையைத் தணித்துக்கொண்டார். தாகம் தணிந்து சோர்வு நீங்கியதும், "உய்ந்தேன்! உய்ந்தேன்!" என்று உளமகிழ்ச்சியோடு கூறினார்; பிறகு பாம்பார் நாட்டை வந்தடைந்தார்; அங்கு வாழ்ந்த நீகிரோக்களின் தோழமையைப் பெற்றார்; சில நாட்களுக்குப் பிறகு அந்நாட்டுத் தலைவன் வாழ்ந்த பட்டணமாகிய செக்கோவுக்குச் சில வணிகருடன் சென்றார். இடைவழியில் தம்முடன் வந்தவர்கள், "அதோ ஜோலிபா!" என்று கூவினர். அவர்கள் மொழியில் பெரு நீருக்கு 'ஜோலிபா' என்பது பெயர். நைஜர் யாற்றைத்தான் அவர்கள் அங்ஙனம் குறித்தார்கள் என்பதை அறிந்த பார்க், தம் பரியினின்றும் குதித்தோடி, அதன் தெள்ளிய நீரை அள்ளி அள்ளிப் பருகி உள்ளம் பூரித்து, "என் ஆண்டவனே! இடர் பல வந்துற்றபோது உறுதுணையாய் நின்று அவ்விடர்களினின்றும் விடுவித்து இன்றளவும் எவரும் காணாத இத்தூய நதியாம் நைஜர் நதியை யான் முதற்கண் காணும் பேற்றை எனக்கு ஈந்தனையே! நின் கருணையே கருணை!" என்று பலவாறு இறைவனை வந்தித்துச் சோகா நாட்டைச் சென்றடைந்தார்.

12. மங்கோ பார்க், சோகா நாட்டு அரசனைக் காண அனுமதி பெற்று வரும்படி தூதனை அவ்வரசன்பால் ஏவினார். தூதன் சென்று செய்தியை அரசற்குத் தெரிவித்ததும் அரசன் தன் நாட்டில் வழங்கிய நாணயங்கள் ஐயாயிரத்தைப் பரிசாக அனுப்பி, உடனே அவ்வெல்லையை விட்டு விலகும்படி பார்க்குக்குப் பணித்தான். பார்க் அவன் கட்டளையை மீற எண்ணமில்லாதவராய்த் தம் நாடு திரும்பிய போது, ஒரு கொள்ளைக் கூட்டத்தினரால் தாக்கப்பட்டுத் தம்வசம் இருந்த பொருள்கள் எல்லாம் பறிக்கப்பட்டார்; அவர் தம்முடைய தொப்பியை-

யும், குறிப்புப் புத்தகத்தையுங்கூட எடுத்துக்கொண்டனரே என்று பெரிதும் விசனித்துக்கொண்டிருந்த போது அக்கூட்டத் தலைவன் அப்புத்தகம் வெறுங்காகிதங்களாகவே இருக்கக் கண்டு அதை வீசி எறிந்துவிட்டான். அதைக்கண்ட பார்க் ஓடி அப்புத்தகத்தை எடுத்துக்கொண்டு பேரானந்தம் அடைந்-தார்.

13. மங்கோ பார்க் இங்கிலையில் இரண்டரை ஆண்டு கட்குப் பிறகு காம்பியா நதி முகத்துவாரத்திற்கு வந்து, கப்பல் ஏறி, இங்கிலாந்து வந்தடைந்து, ஆப்பிரிக்க ஆராய்ச்சிக் கழகத் தாருக்குத் தாம் நைஜர் யாற்றைக் கண்ட வரலாற்றினை விரிவாக எடுத்துரைத்தார். அதைக் கேட்ட கழகத் தலைவர், அவருடைய பிரயாணச் செய்திகளைத் தொகுத்து ஒரு நூலாக எழுதும்படி அவரை வேண்டிக்கொண்டார். அதற்கிணங்க அவர் அவ்வரலாற்றை எழுதி வெளியிட்ட போது அது அக்-காலத்துச் சிறந்த பிரயாண நூல்களுள் ஒன்றாய்த் திகழ்ந்தது.

14. சிறிது காலத்துக்குப் பிறகு, மங்கோ பார்க் மீண்-டும் மருத்துவத் தொழிலை மேற்கொண்டார்; டாக்டர் ஆண்டர்சன் என்பவரின் மகளை மணந்தார்; ஏழாண்டு இல்லறத்தை நன்முறையில் நடத்தி வந்தார்; மீண்டும் ஹோபார்ட்டுப் பிரபுவின் விருப்பத்திற்கிணங்கி, **1905**-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், **30**-ஆம் நாள் நைஜர் நதியின் முழுப்போக்கையும் காணப் போர்ட்ஸ்மௌத்து என்னுமிடத்திலிருந்து புறப்பட்டுப் பைசானி-யாவையடைந்தார். அதே ஆண்டு, மே மாதம், 4-ஆம் நாள் பைசானியாவை விட்டுப் புறப்பட்டுப் பம்மாக்கோ **(Bammako)** வந்தடைவதற்குள் இவரோடு வந்த நாற்பத்து நான்கு பேர்-களுள் எஞ்சியவர் பதினொருவரே. இப்பதினொருவருள் அறுவர் சான்சாண்டிங் **(Sansanding)**கை அடைவதற்குள் மடிந்தனர். எஞ்சிய ஐவருள் மூவர் வீரர்; நான்காமவர் லெப்டினன்ட் மார்டைன்; ஐந்தாமவர் பார்க். இவர் சான்சாண்டிங்கை விட்டு நவம்பர் மாதம் 19-ஆம் தேதி புறப்பட்ட போது, "நைஜர் யாற்றின் முடிவைக் காண்பேனேல், மீள்வேன்; இன்றேல், மடிவேன்," என்று சூளுரை கூறினர்.

15. இவர் ஆப்பிரிக்காவில் உள்ள சோகா நகரையடைந்து, நைஜர் செலவுக்குத் தேவையான கலம் கட்டுவித்துத் தம் நண்பரொடு தாமும் அதில் ஏறி, இடையிடையே ஏற்பட்ட இடர்கள் பலவற்றை எதிர்த்து, நைஜர் நதியில் பயணம் செய்தார். இவர்கள் நைஜர் நதிக்கரையில் வசித்த முரட்டுத்தன்மை படைத்த காட்டு மக்களுடைய இடையூறுத் தாக்குதலைப் பொருட்படுத்தாமலும் சிந்தை கலங்காமலும் அவர்களை எதிர்த்துப் போராடி டிம்பக்டு நகரைப் பின்னடையச் செய்து, நைஜர் நதியில் பல நூறு மைல் தொலைவு முன்னேறிச் சென்றார்கள்.

16. இறுதியில் கலம் புஸ்ஸா நகரை அடைந்த போது அங்கு வாழ்ந்த மக்கள் இவரையும் இவரைச் சார்ந்தவர்களையும் அம்பு, ஈட்டி முதலியவைகளைக் கொண்டு இடையூறு தாக்கினர். இவர்களது தாக்குதலுக்கு ஆற்றாது அவதிப்பட்டுக் கொண்டு இருக்கும்போது இவர் சென்ற கலம் ஒரு பாறையில் மோதி நின்றது. பார்க் உயிர் தப்புவான் வேண்டி யாற்றில் குதித்தார். இவர் எவ்யாற்றைக் காண் விழைந்து இத்துணை அல்லல்களுக்குட்பட்டுத் தளராது வந்தாரோ, அதே யாறு இவரது ஆவியைக் கவர்ந்தது.

17. அநேக ஆண்டுகளுக்குப் பிறகு இவரோடு இறுதி வரையில் இருந்த ஒரு வேலையாள் வாயிலாக இவர் அநேக அல்லல்களுக்குட்பட்டு இறந்துவிட்டார் என்பதைக் கேள்விப்பட்ட ஆங்கிலேயர், இவரது வீரத்தைப் புகழ்ந்தனர்; ஊக்கத்தைப் போற்றினர்; விடாமுயற்சியைப் புகழ்ந்தனர்; உறுதித் திறனை வியந்தனர்; இவரது பிறப்பிடமாகிய செல்கிர்க் ஷையரில் ஒரு சிலையையும் எடுப்பித்தனர். பிற்காலத்தில் இந்நதியின்மேல் ஆங்கிலேயர்களால் கட்டப்பட்ட பாலத்தில் 'மங்கோ பார்க் நினைவுக்காக' என்னும் சொற்கள் பொறிக்கப்பட்டன.

## பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. இருண்ட கண்டத்தை இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு மக்களுள் பலர் அறிந்திலர். ஏன்?

2. மங்கோ பார்க்கின் வரலாற்றையும் பிறப்பையும் சுருக்கமாக எழுதுக.
3. "இது என்ன துணி காய்க்கும் மரமா?"—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
4. மங்கோபார்க் எங்கு, யாரால் விருந்தினராக உபசரிக்கப் பட்டார்?
5. கார்டன் நகர் அரசர் பார்க்குக்குக் கூறியது யாது?
6. லூடமர் நாட்டு அரசன் பெயர் யாது? அவன் பார்க்கை என்ன செய்ய எண்ணினான்? பார்க் எங்ஙனம் அவ்விபத்தி-னின்று விடுவிக்கப்பட்டார்?
7. 'ஜொலிபா' என்பது என்ன? அது எதைக் குறிக்கிறது?
8. இரண்டாம் பயணத்தின் தொடக்கத்தையும் முடிவையும் சுருக்கமாக அரைப் பக்கத்திற்குள் எழுதுக.

II. வாக்கியத்தில் வைத்தெழுதுக :—

இனத்தவர், அனுமதி பெற்று, நடாத்து, இடைப்பட்ட, நல்வரவு, பீடித்தது

III. எதிர்ச்சொல் எழுதுக :—

அனுமதி, வரவு, பீடித்தது, உபகாரம், இறுதி, சிறிது காலம், அடிமை

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

ஆய்வு, சோழி, இடர், நடாத்து, பீடித்தது, பொற்குவியல், பட்டினம், அடவி, உலையா, விழைந்தார், ஊக்கினர், நாவாய்

V. இலக்கணம் கூறுக :—

அ. 1. விருப்பப்படி, 2. வந்திருக்கிறார்கள், 3. உறங்கிக்கொண் டிருந்த பார்க், 4. தமக்கவசியமான—தொடர் இலக்கணம் கூறுக.

ஆ. 1. அந்நாடு, 2. பதியாகிய, 3. அவருடைய, 4. வந்துகொண் டிருந்த—இவைகளைப் பிரித்தெழுதுக.

# 15. கன்னனும் கண்ணனும்

[ நாடகம் ]

## காட்சி—1

> களம்—குரு க்ஷேத்திரம்
>
> காலம்—காலை
>
> பாத்திரங்கள்—துரியோதனன், கன்னன், சல்லியன், அசுவத்தாமன், படை வீரர்கள்.

*[பாரதப்போரில் பதினேழாம் நாள் சூரிய உதயத்தின் பின் பாண்டவர் சேனையும் கௌரவர் சேனையும் போர்க்களத்தில் திரள்கின்றன. பாண்டவ வீரனான அருச்சுனன், தனது சேனையை அணிவகுத்து நிறுத்திவிட்டுப் போருக்கு ஆயத்தமாகிறான். கௌரவர் படைத் தலைவனான கன்னன், தனது சேனையைத் திரட்டி நிறுத்தி, துரியோதனனிடம் கூறுகின்றான்.]*

கன்னன்: நந்தியாவட்டத்தாரணிந்த நராதிபனே, என் முன் நிற்கும் இந்திரன் மகனுக்கு, எல்லாக் கலகமும் செய்ய வல்லவனும், வஞ்சனையே வடிவமாய் உள்ளவனுமான கள்வன் தேர்ப்பாகனாயமர்ந்துள்ளான். அவனையொப்பார் தேவருலகினுமில்லை. ஆயினும், குதிரைகளின் நெஞ்சறிந்து தேர் செலுத்த வல்லவனும், போரில் விரகறிந்து உரைக்கத்தக்கவனும் இப்புவியில் சல்லியனையன்றி வேறெவனுமிலன். சல்லியன் இன்று என் தேரிலமர்ந்து சாரத்தியம் செய்வானாயின், அருச்சுனனுக்குச் சிவபெருமானே வந்து தேர் செலுத்தினாலும், அவனை யான் வெல்வேன்; பாண்டவருள் எஞ்சிய மற்ற நால்வரும் ஒவ்வொரு பகழிக்கு ஆற்றார். இன்றுடன் போரை முடித்து உனக்கு நாளையே உலக முழுவதையும் அடிப்படுத்துவேன்! நராதிபனே, ஓரூரும் ஒரு குலமுமில்லாத என்னை, நீ உங்கள் குலத்துள்ளாரில் ஒருவனாகச் செய்தாய். தேர்ப் பாகன் வீட்டில் வளர்ந்த என்னைப் பொன்மணி முடி சூட்டி,

அரசரெல்லாம் போற்ற நின்னினும் சீர் பெற வைத்தாய். அத்துணைப் பெருநன்றி செய்த உனக்கன்றி, எனது உயிரை யார்க்கு அளிக்கப் போகின்றேன் ! துரியோதனு, எனது செஞ்சோற்றுக் கடன் கழிக்க முற்பட்டுவிட்டேன் ! சல்லியனை மட்டும் எனக்குத் தேரோட்ட இசைவிப்பாயானால், இன்று எனது போர்த்திறம் இன்னதென்பதனைக் கண்டு களிக்கலாம்.

துரியோதனன் : (சல்லியன் அருகிற்சென்று) மத்திர நாட்டரசே, நீர் யான் கூறுவதைக் கேட்டு எனக்கொரு வரம் நல்க வல்லிரோ ? (கும்பிடுகிறான்.)

சல்லியன் : குருகுலக் கொழுந்தே, நீர் என்னைக் கை கூப்பிக் கும்பிடுவது அழகன்று ! யான் தரத் தக்க வரம் யாதெனக் கூறும். உமது விருப்பப்படி அதனைத் தருகின்றேன் ; மறுத்துரையேன். கூறும்.

துரி : சல்லிய மன்னரே, பகைவர்களாகிய பாண்டவர்களைக் கண்ணன் எவ்வாறு காக்கின்றானே, அவ்வாறே நீரும் எங்களைக் காக்க வேண்டும். அதுவே யான் விரும்பும் வரம்.

சல் : நெடுந்தேர் நடாத்தும் அரசர்க்கரசரான நீர் என்னைக் காப்பதன்றி, உமது கட்டளை நிறைவேற்றி உமது குடையின்கீழ் வாழும் யானு உம்மைக் காக்க வல்லவன் ? அன்றியும், தேவனுகவும், மானுடமாகவும், சராசரங்களாகவும் இருந்து விளையாட்டயர்கின்ற ஆதி மூர்த்திக்கு யான் நிகராவதெங்ஙனம் ? அரவக் கொடியீர், உமது விருப்பம் யாதென வெளிப்படையாகக் கூறலாமே !

துரி : மத்திர நாட்டு மன்னரே, தேவேந்திரன் மகனுக்குத் தேர் செலுத்தும் முகுந்தனைப் போல, நீர் இன்று கன்னனுக்குத் தேர் செலுத்தினுலன்றிப் பாண்டவரை நாம் வென்று வாகை சூடுவது முடியாத செயலாகும். ஆதலால், அருள் புரிய வேண்டும்.

சல்: (கண் சிவக்கிறது; மீசை துடிக்கிறது; புருவம் நெற்றியிலேறுகின்றது.) துரியோதனரே, நீர் கூறுவது எத்துணைப் புன்மையதென்பதை உணராமற் கூறிவிட்டீர். மான் பணித்த வேலையை எங்கேனும் வல்லியம் புரியும் வழக்கமிருப்பின், மத்திரத்தானும் கன்னனுக்கு வலவனு-வான்! மற்றொருவன் இச்சொல்லைச் சொல்லி இருந்தால், அவன் நா என்ன பாடுபட்டிருக்கும்! சொல்லியவர் சுயோ-தனராதலிற் பொறுத்தேன்! துரியோதனரே, ஒன்று சொல்லுகிறேன்; கேளும்: இப்போது நம்மை எதிர்த்-துப் போர் புரிய அணி வகுக்கப்பட்டு நிற்கும் சேனையை இரு கூறாக்கி, ஒன்றை எனக்கும் மற்றொன்றைக் கன்ன-னுக்கும் விடுவீராயின், யான் எனது கூற்றை வென்று பிறகு கன்னனது கூற்றினையும் அழிக்கப் பின் வாங்கு-வேனேயாயின், நீர் கூறியபடி கன்னனுக்குக் கட்டாய-மாகத் தேர்ப்பாகனுவேன். இது சத்தியம்!

துரி: மத்திர மன்னரே, யான் கூறுவதைக் கோபமின்றிக் கேளும்: சிவபெருமானுக்குப் பிரமனும், அருச்சுன-னுக்குக் கண்ணபிரானும், உத்தரகுமாரனுக்கு அருச்சுன-னும் தேரோட்டியதை நீர் அறியீரா? அன்றியும், எல்லாக் கலைகளிலும் வல்லவர்க்கன்றி மற்றவர்க்குக் குதிரைகளின் தன்மையறிந்து தேர் செலுத்துவது இயலுமோ? ஆத-லால், அன்பு கூர்ந்து என் வேண்டுகோட்கு இணங்கி, கன்னனுக்கு இன்று தேரோட்ட வேண்டுகிறேன.

சல்: நன்று நன்று! துரியோதனரே, இராசாதி ராசரான உமது வேண்டுகோளை யான் எங்ஙனம் மறுக்கக் கூடும்? உமது விருப்பப்படியே செய்வேன்.

துரி: சல்லிய பூபதி, உமக்கு எனது நன்றி உரியது! உமது இவ்வரிய உதவியை நான் என்றும் மறவேன்!

[திரை]

## காட்சி—2

களம்—குரு க்ஷேத்திரம்

காலம்—மாலை

பாத்திரங்கள்—கண்ணபிரான், அருச்சுனன், கன்னன், சல்லியன், சேனவீரர்.

*[கன்னனுடைய உடலெங்கும் அருச்சுனன் விடுத்த கணைகள் தைத்துக் குருதி வழிகின்றது. கன்னன் நிலை தவறி நிற்கின்றான் அவனுடைய கைகள் மட்டும் அம்புகளை ஏவும் தொழிலை நிறுத்தவில்லை.]*

கண்ணபிரான் : *(தமக்குள்)* இஃதென்ன! விந்தையாயிருக்கின்றதே! கன்னன் பிரஞ்ஞையற்று இருக்கின்றான். அருச்சுனன் விடும் அத்தனை அம்புகளும் அவன் உடலிற் பாய்கின்றன. ஆயினும், அவன் உயிர் போகவில்லையே! அன்றியும், கன்னனுடைய கைகள் மட்டும் அம்புகளை ஏவிக்கொண்டிருக்கின்றனவே! *(சற்று யோசிக்கிறார்.)* ஆம்! அறிந்தேன்! கன்னன் கொடை வள்ளல். ஆதலின், அவன் செய்த தருமம் இப்போது அவன் பக்கலில் நின்று அவன் தலையைக் காக்கின்றது. அத்தரும தேவதை கன்னன் பக்கலில் நிற்கும் வரை அவன் உயிரைக் கூற்றுவனும் கவர முடியாது. சரி; ஏதேனும் உபாயம் செய்து கன்னனுடைய புண்ணியம் அனைத்தையும் பெற்றாலன்றி, அருச்சுனனால் அவன் உயிரைப் போக்க முடியாது என்பது நிச்சயம். *(அருச்சுனனைப் பார்த்து)* அருச்சுனா, போர் புரிவதை நிறுத்து. சற்றுப் பொறுத்திரு. இதோ நான் வந்துவிடுகிறேன். *(பிராமண வடிவத்துடன் கன்னனிடம் செல்கிறார்.)*

பிராமணன் : வெகு வேகமாகச் செல்லக்கூடிய புரவிகள் பூட்டிய விசாலமான தேரையுடைய பிரகாசம் பொருந்திய சூரியன் அளித்த சுதனே, அலை வீசும் பெருங்கடலால்

சூழப்பட்ட இப்பூமியில் தளர்ந்தவர் எவராயினும், அவர்க்கு வேண்டிய அனைத்தும் வரையாது வழங்கும் வள்ளல் நீயெனக் கேள்வியுற்று, மேருமலைச் சாரலில் தவம் புரிந்துகொண்டிருந்த யான், எனது வறுமையைப் போக்கிக்கொள்ள விரும்பி உன்னை வந்தடைந்தேன். உன்னாலியன்ற பொருள் ஏதேனும் உதவியருள வேண்டுகின்றேன்.

கன்னன் : (இரதத்தில் சாய்ந்த வண்ணம் புன்முறுவல் பூத்த முகத்துடன்) நன்று ! அந்தணரே, நன்று ! இந்நிலையில் யான் தரத்தக்க பொருள் ஏதேனுமிருப்பின், கேளும். நிச்சயமாகத் தருகிறேன்.

பிராம : கன்னா, உன்னிடம் இந்நிலையில் யான் யாசிக்கத் தக்க பொருளொன்றுமின்று. ஆயினும், நீ வறிஞர்கட்கு வரையாது கொடுத்து அளவற்ற புண்ணியத்தைத் திரட்டி வைத்திருக்கின்றாய் ; அதனைத் தருவதே போதும்.

கன் : அந்தணரே, எனது ஆவி நிலை கலங்கி நிற்கின்றது. அஃது எனது உடலின் அகத்தில் உள்ளதா, புறத்தேயுள்ளதா என்பது திட்டமாக அறிதற்கில்லை. அது நீங்கி விடுவதற்கு முன்பு, பூவில் வாழ்கின்ற பிரமனும் நிகரற்ற உமக்கு, இடைவிடாமல் யான் செய்த புண்ணியம் அனைத்தும் மனப்பூர்வமாக இதோ கொடுத்தேன் ! பெற்றுக் கொள்ளும். (இரு கைகளையும் கூப்பி வணங்குகின்றான்.)

பிரா : கன்னா, மகிழ்ச்சி ! மிக்க மகிழ்ச்சி ! உன் புண்ணியமனைத்தும் எனக்குக் கொடுத்துவிட்டதாக வாயாற் சொல்லிவிடுவது போதுமா? தானம் செய்கின்ற முறைப்படி கையில் நீர் விட்டுக் கொடுத்தாலன்றோ அத்தானம் ஏற்புடையதாகும்?

கன் : அந்தணரே, இப்போர்க்களத்தில் நீருக்கு எங்குப் போவது? (சற்று யோசிக்கிறான். முகம் மலர்கின்றது. தனது மார்பில் புதைந்திருக்கும் பாணங்களுள் ஒன்றைப் பிடுங்கி வெளிப்படும் உதிரத்தைக் கையில் ஏந்திக்கொள்-

கிறான்.) அந்தணரே, இங்குத் தாரை வார்த்துத் தர வேறு நீர் கிடையாமையால், இச்செந்நீரை விட்டு என் புண்-



ணியமனைத்தும் தத்தம் செய்கிறேன்! பெற்றுக்கொள்-ளும்!

பிரா: கன்னு, எனது அகம் மகிழ்ந்தது! நான் சென்று வரு-கிறேன். ஆனல், அதற்கு முன் நீ வேண்டும் வரங்களை அளிக்க விரும்புகிறேன். என்னென்ன வரங்கள் வேண்-டுமோ, கேள். தடையின்றித் தருகிறேன். தாமதியாதே! கேள்.

கன்: அந்தணரே, முன் பிறப்பிற் செய்த தீவினையால் எனக்குப் பிறப்புகள் இனி ஏற்படுமாயின், ஒவ்வொரு பிறப்பிலும் 'இல்லை' என்று வந்து, என்னை யாசிக்கின்றவர்கட்கு 'இல்லை' என்று சொல்லாத இதயத்தை எனக்கு அருளக் கோருகிறேன். இது ஒன்றே யான் வேண்டும் வரம்.

பிரா: (கன்னனை மார்போடு தழுவி, கண்ணீர் சொரிந்து) கன்னு, நீ எத்தனை பிறவிகள் எடுத்தாலும், அப்பிறவிகள்

அனைத்திலும் ஈகையும் செல்வமும் எய்தி, முடிவில் முத்தியும் பெறுவாயாக! (கன்னன் கரம் கூப்பித் தொழுகிறான். பிராமணன் மறைகிறான்; திருமால் வடிவில் கன்னனுக்குக் காட்சியளிக்கிறான்.)

[ திரை ]

பயிற்சி:

I. விடை எழுதுக:—

1. கன்னன் துரியோதனனைப் பார்த்துச் சொன்னது என்ன?
2. "பாண்டவர்களைக் கண்ணன் எவ்வாறு காக்கின்றானோ, அவ்வாறே நீரும் எங்களைக் காக்கவேண்டும்."—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
3. சல்லியன் துரியோதனனுக்குச் சினந்து கூறியது யாது?
4. கன்னனது உயிரைப் போக்கக் கண்ணபிரான் செய்த சூழ்ச்சி யாது?
5. கண்ணபிரானைப் பார்த்துக் கன்னன் கேட்ட வரம் யாது?

II. எதிர்ச்சொல் எழுதுக:—

புண்ணியம், உதயம், வஞ்சனை, வீரன், முடி, போற்று, விருப்பு, மறுத்தல்

III. வாக்கியத்தில் அமைத்தெழுதுக:—

கோபமின்றி, இரு கூறாக்கி, இணங்கி, அன்பு கூர்ந்து, நிலை தவறி, காக்கின்றது

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக:—

விரகதிந்து, சாரத்தியம், பகழி, சராசரங்கள், வலவன், கூற்று, பிரஞ்ஞை, பக்கலில், சுதன், தாரை, பாகன், நெடுந்தேர், முகுந்தன்

V. சொல்லியுள்ளபடி செய்க:—

1. பெற்றாலன்றி, உடலிற்பாய்கின்றது, உடலெங்கும், பொறுத்திரு (பிரித்தெழுதுக.)

2. (1) ஏவி + கொண்டு, (2) இ + பூமி, (3) மலை + சாரல், (4) உன்னால் + இயன்ற, (5) அந்தணர் + ஏ, (6) இரு + கைகள், (7) வந்து + அடைந்தேன். (சேர்த்தெழுதுக.)

3. தளர்ந்தவர் எவராயினும், அவர்க்கு வேண்டிய அனைத்தும் வரையாது கொடுக்கும் வள்ளல் நீயெனக் கேள்வியுற்றேன்; எனது வறுமையைப் போக்கிக்கொள்ள விரும்பினேன்; உன்னை வந்தடைந்தேன். (ஒரே வாக்கியமாக்குக.)

# 16. ஐக்கிய நாட்டுச் சபை

1. சில ஆண்டுகட்கு முன் ஓர் உலகப் போர் நிகழ்ந்தது என்பதை நீங்கள் கேள்வியுற்றிருப்பீர்கள். அதில் மக்கட்கு நேர்ந்த இன்னல்கட்கு இரங்கி, இனி உலகில் போர் ஒழிக்கப் பட்டு நிலையான அமைதி ஏற்படுத்தப்பட வேண்டும் என்னும் பெருநோக்குடன், 1945-ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 26-ஆம் தேதி உலகின் பல பாகங்களினின்று வந்த ஐம்பது நாட்டுப் பிரதிநிதிகள், அமெரிக்காவிலுள்ள ஸான் பிரான்ஸிஸ்கோ நகரில் ஒன்று கூடி உலகப் பொதுச் சபை ஒன்று நிறுவவேண்டு மென்று தீர்மானித்தனர். இவ்வாறு உருப்பெற்ற அச்சபை-யின் முதற்கூட்டம், 1945-ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 24-ஆம் நாள் கூடியது. இப்பொழுது இச்சபையில் அறுபது நாடுகள் அங்கம் வகிக்கின்றன.

2. **இச்சபையின் நோக்கங்கள்:** உலகின்கண் போரினால் ஏற்படும் அச்சத்தையும் துன்பத்தையும் ஒழித்து, நாடு களிடையே சமாதானத்தையும் பாதுகாப்பையும் நிலைபெறச் செய்து, அவைகளுக்கு இடையே உள்ள நட்பை வளர்த்தல்; அவைகளின் சமூக, பொருளாதார, கல்வி வளர்ச்சிகளுக்கு உதவல்; இன, மத, மொழி வேறுபாடுகளின்றி, ஒவ்வொரு நாட்டிலுமுள்ள ஆண், பெண் ஆகிய இரு பாலாரும் சம உரிமைகளுடன் வாழச் செய்தல்; அதனால், சமூகம் வளர்ச்சி-யுறவும், மக்களின் வாழ்க்கையை உயர்த்தவும் பாடு படுதல் ஆகிய இவை இச்சபையின் நோக்கங்கள். இந்நோக்கங்களுக்-காக மேற்கூறிய அறுபது நாட்டினரும் பொறுமை, சகிப்புத்-தன்மை, நட்புறவு இவைகளை மேற்கொண்டு, அவரவர் நாட்டி-லுள்ள படைகளையும் பொறிகளையும், மக்கள் நன்மைக்கும் வளர்ச்சிக்கும் அன்றிப் பயன்படுத்துவதில்லை என்னும் உறுதி கூறி, இப்பேரவையின் அங்கத்தினர் ஆகி உள்ளனர். அன்றி-யும், மேற்கூறிய நாடுகள் அவ்வாறே நடந்து உலக சமாதா-னத்தை நிலைநிறுத்தப் பாடு பட்டும் வருகின்றன.

3. இச்சபையில் இதன் அடிப்படைக் கொள்கைகளுக்கு முரணாக நடக்கும் விஷயங்களோ அன்றிப் பல நாடுகளுக்குப்

பொதுவான சிக்கலோ அல்லது இவை போன்ற பிரச்சினை-களோதாம் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். இச் சபையின் பொது மொழிகளாகக் கொள்ளப்பட்டவை சீனம், ஆங்கிலம், பிரெஞ்சு, ருஷ்ய, ஸ்பானிய மொழிகளாகும். ஆனால், நடைமுறையில் இருப்பன ஆங்கிலமும் பிரெஞ்சுமேயாம்.

4. இச்சபை தன்னுடைய வேலைகளைச் சரிவர நடத்து-வதற்காக, ஆறு பெரும்பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை, 1. பொதுச் சபை, 2. பாதுகாப்பு ஆலோசனைச் சபை, 3. சமுதாய பொருளாதார ஆலோசனைச் சபை, 4 தருமகர்த்தர் சபை, 5. உலகப் பொது நீதி மன்றம், 6. தலைமைக் காரியா-லயம் என்பனவாம். மற்றும் பல தனிப்பட்ட சபைகளும் இச் சபையுடன் இணைக்கப்பட்டுள்ளன.

5. பொதுச் சபையில் ஐக்கிய நாட்டுச் சபையில் உள்ள எல்லாரும் அங்கத்தினர் ஆவர். ஒவ்வொரு நாடும் இதன் ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஐந்து அங்கத்தினர்களை அனுப்பலாம். எல்லா விஷயங்களையும் இச்சபை தீர்மானிக்க அதிகாரம் பெற்-றுள்ளது. மற்றப் பெரும்பிரிவுகளின் வேலைகளைக் கவனிப்ப-தும், அவைகளுக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதும், எல்லாப் பொது விஷயங்களையும் விவாதிப்பதும் இச்சபையின் முக்கிய வேலைகளாகும். இதில் வரும் முக்கியமான தீர்மானங்-களெல்லாம், அங்கத்தினர்களுள் மூன்றில் இரு பங்கு தொகை-யினர் ஓட்டளித்தால்தான் அங்கீகரிக்கப்படும்.

6. பாதுகாப்பு ஆலோசனைச் சபையில் சீனா, பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், ரஷ்யா ஆகிய ஐந்து நாட்டின் நிரந்தர அங்கத்தினர்களும், ஆறு தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் களும் உண்டு. நாடுகளுக்கு இடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்க்கவும், அவைகளுக்குச் சமாதானத்தையும் பாதுகாப்பை-யும் அளிக்கவும், உலக சமாதானத்துக்கு இடையூறு விளைவிக்-கும் எந்நாட்டின்மீதும் படையெடுத்து அதை அடக்கவும், பொதுச் சபை இதன்கண் கொண்டு வரும் பிரச்சினைகளை ஆராய்ந்து முடிவு கட்டவும் வேண்டிய பொறுப்புக்கள் இச் சபையினுடையவை ஆகும். இதன் கீழ்ப் பல துறைகளில்

வேலை செய்யப் பல சிறு குழுக்களும் அமைக்கப்பட்டுள்ளன. இச்சபை எப்பொழுதும் வேலை செய்யும் நிரந்தரமான சபையாகும்.

7. சமுதாய பொருளாதார ஆலோசனைச் சபை, தாழ்விலாச் செல்வமும், உயர்ந்த நீதியும், சீரும் சிறப்பும் மிக்க ஒரு புது உலகத்தைத் தோற்றுவிக்க முற்படுகின்றது. பொருளாதார, கல்வி, சமூக, கலாசார, சுகாதாரத் துறைகளிலும் மேலும் பல்வேறு துறைகளிலும் ஆராய்ச்சி செய்தும், மக்களுக்கு உள்ள சுதந்தரத்தைப்பற்றி அங்கம் வகிக்கும் நாடுகட்கு அறிவித்தும் உதவி செய்கிறது. இஃது இவ்வாறு மக்கள் முன்னேற்றத்திற்கும் உலக முன்னேற்றத்திற்கும் அடி கோலுகிறது. இதன் அங்கத்தினர் தொகை பதினெட்டு.

8. தருமகர்த்தர் சபை என்பது, இன்னும் சுய ஆட்சி பெருத பிற்போக்கு நாடுகளைக் கல்வி, சமூகம், பொருளாதாரம், அரசாங்கம் ஆகிய துறைகளில் முன்னேற்றம் அடையச் செய்து, அவை தம்மைத் தாமே ஆண்டுகொள்ளும் நிலைமைக்கு வரும்வரை பாதுகாக்கும் பொறுப்புள்ள சபையாகும். இஃது ஒரு தனிப்பட்ட அதிகாரியை நியமித்தோ, அல்லது வேறொரு நாட்டையோ அல்லது இரண்டு மூன்று நாடுகளையோ அப்பிற்போக்கு நாடுகளின் ஆட்சியை நடத்தும்படி கூறியோ அவ்வப்போது அவற்றினிடமிருந்து அறிக்கைகளைப் பெற்று, ஆவன செய்து, அந்நாடுகளை முன்னேறச் செய்கிறது. இம்முறையில் இப்பொழுது ஒன்பது நாடுகள் ஆளப்பட்டு வருகின்றன.

9. உலக நீதிமன்றம், பதினைந்து நீதிபதிகளைப் பெற்றுள்ளது. இது பொதுச் சபைக்கு உலகத்தின் பல நாடுகளிலும் உள்ள சட்டங்களைப்பற்றி எடுத்துக் கூறியும், சச்சரவுகளைத் தீர்த்தும், உலகின்கண் நீதி நீடித்து நிற்கச் சமன் தூக்கிச் சீர் செய்யும் சபையாகும். எந்த நாடும் எல்லைச் சண்டை, சட்டங்களை எடுத்துரைத்தல் போன்றவற்றில் தோன்றும் சந்தேகங்களைத் தீர்த்து வைக்க இதை அணுகலாம். இந்த நீதி மன்றம் கூறும் தீர்ப்பை அவ்வாறு அணுகிய நாடு ஏற்றுக்கொள்ள வேண்டுவதவசியம்.

*10.* மேற்கூறிய எல்லாவற்றையும் நடத்தி வைக்க ஒரு பெருங்காரியாலயம் தேவை. இஃது அமெரிக்காவிலுள்ள ஸான்பிரான்ஸிஸ்கோ நகரில் அமைந்துள்ளது. இதை நடத்தப் பொதுச் செயலாளர் ஒருவர் உள்ளார். இப்போது உள்ள செயலாளர் டிரிக்வி லீ (Trygve Lie) என்பவர். இவர் நார்வே தேசத்தவர். இக்காரியாலயம் எட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டு, வேலை செய்கிறது. இவைகளுக்கு அங்கத்தினர்கள் உலகின் பல தேசங்களினின்றும் நியமிக்கப்படுகிறார்கள். இவ்வாறு பல நாட்டு மக்களும் ஒன்று கூடிப் பொது நலனுக்குப் பணியாற்றுவது மிகவும் உயர்ந்த தொண்டன்றோ?

*11.* இவ்வவைகளை நடத்தப் பெரும்பொருள் செலவாகும். உதாரணமாக, *1948*-ஆம் ஆண்டு இவற்றுக்குச் செலவான தொகை சுமார் 3½ கோடி டாலர்கள் ஆகும். உலகப் பொது நலனை நோக்குங்கால், இஃது ஒரு பெருந்தொகை அன்று.

*12.* மேற்கூறிய சபைகளைத் தவிர, சில தனிப்பட்ட சபைகளும் ஐக்கிய நாட்டுச் சபையுடன் இணைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இணைக்கப்பட்டுள்ளவை பதின்மூன்றாகும். அவற்றுள் உலகத் தொழிலாளர் ஸ்தாபனம், உலக உணவு விவசாய ஸ்தாபனம், ஐக்கிய நாட்டுக் கல்வி கலாசார விஞ்ஞான ஸ்தாபனம், சர்வதேசத் தபால் யூனியன், சர்வதேசப் பாங்கு, சர்வதேசச் சுகாதார சங்கம் என்பன சிலவாகும்.

*13.* இதில் சர்வதேசப் பாங்கு, உலகத்தின் பல பாகங்களிலும் தொழில்கள் வளர்ந்து நாடுகள் முன்னேற உதவி அளிக்கும். இதே போல, உலக உணவு ஸ்தாபனம், உலக மக்களுக்கு உணவைச் சரியானபடி பகிர்ந்து அளித்து, மக்களின் உணவுச் சத்தை அதிகரித்து, உலகப் பொருளாதார நிலையை உயர்த்த உதவுகிறது. தொழிலாளர் நிலையை உயர்த்தத் தொழிலாளர் ஸ்தாபனமும், உலக சுகாதாரம் உயர்ந்து மக்கள் எல்லாரும் சுகவாழ்வு வாழ்வதற்காகச் சுகாதார ஸ்தாபனமும் பணியாற்றுகின்றன.

*14.* இத்தகைய ஸ்தாபனங்களில் இந்தியாவின் பொறுப்பு மகத்தானது. ஐக்கிய நாட்டுச் சபையின்கீழ் உள்ள

எல்லா முக்கிய ஸ்தாபனங்களிலும் அநேகமாக இந்தியா அங்கம் வகிக்கின்றது. இச்சபைக்கு இந்தியா ஒரு நிரந்தர அங்கத்தினரை அனுப்பியுள்ளது. அவர் பெயர் பெனகல் நரசிங்க ராவ் என்பதாகும். அவரைப் போன்ற அறிஞர்களால் நம் நாடு உலக அரங்கில் புகழ் பெற்று வருகின்றது.

15. உலகமானது இன்பம், சமாதானம், செல்வம் ஆகிய எல்லாம் தழைத்தோங்கி, பஞ்சம், வறுமை, போர், பிணி எல்லாம் நீங்கி, வளமிக்கு வாழவேண்டும் என்னும் பெருநோக்குடன் உண்டாக்கிய இப்பேரவை, நீடூழி வாழ்வதாக! பெருந் தலைவர்கள் முயற்சி தழைத்தோங்கி, மண்ணுலகம் சிறந்து வாழ்வதாக!

### பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. ஐக்கிய நாட்டுச் சபை எங்கு, எப்போது தொடங்கப் பட்டது ?
2. ஐக்கிய நாட்டுச் சபையின் முக்கிய நோக்கங்கள் யாவை ?
3. ஐக்கிய நாட்டுச் சபை எத்தனை பிரிவுகளைக் கொண்டது ? அவைகள் யாவை ?
4. சிறு குறிப்பு வரைக :—

   1. பொதுச் சபை, 2. தருமகர்த்தர் சபை, 3. பாதுகாப்பு ஆலோசனைச் சபை, 4. உலகப் பொது நீதி மன்றம், 5. சமுதாயப் பொருளாதார ஆலோசனைச் சபை.
5. ஐக்கிய நாட்டுச் சபையைப்பற்றி ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் கட்டுரை வரைக.

II. எதிர்ச்சொல் எழுதுக :—

சமாதானம், நிரந்தரம், அழிக்க, அச்சம், நட்பு, வளர்த்தல், பொறுமை

III. வாக்கியத்தில் அமைந்தெழுதுக :—

ஆலோசனை, சீரும் சிறப்பும், முற்படு, பிற்போக்கு, தழைத்-தோங்கி, பணியாற்றுவது

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

நிரந்தரம், முரண், பணி, நிறுவ, திங்கள், பொறிகள், சிக்கல், மன்றம், துறை, அரங்கு, பேரவை, தழைத்தோங்கி

V. சொல்லியுள்ளபடி செய்க :—

1. பெருந்தொகை, தொண்டன்றே, மேற்கூறிய, முதற்கூட்டம், பொருளாதாரம், தாழ்விலா—பிரித்தெழுதுக.

2. நாடுகளின் சமூக, பொருளாதார, கல்வி வளர்ச்சிகளுக்கு உதவல்; இன, மத, மொழி வேறுபாடுகளின்றி, ஒவ்வொரு நாட்டிலுள்ள ஆண் பெண் ஆகிய இருபாலாரும் சம உரிமைகளுடன் வாழச் செய்தல்; அதனால், சமூகம் வளர்ச்சியுறவும், மக்களின் வாழ்க்கையை உயர்த்தவும் பாடுபடுதல் ஆகிய இவை இச்சபையின் நோக்கங்கள்.—(இரு வாக்கியங்களாக எழுதுக.)

# 17. ஒரு விநோதப் பாட்டு

1. பண்டைக் காலத்தில் பாண்டி நாட்டில் முத்தமிழ் வல்ல புலவர் ஒருவர் இருந்தார், முத்தமிழில் வல்லுநராயிருந்தது குறித்தோ, பிற காரணம் குறித்தோ, அவருக்கு முப்பழப் புலவர் என்ற பெயர் வழங்கி வந்தது. அவருக்கு வாய்த்த மனைக்கிழத்தியாரின் பெயர், சண்பகவடிவு என்பது. அவ்வம்மையார் மிக்க அழகு வாய்ந்தவர்; கணவர் சொற்கடவாத சீரிய குணம் படைத்தவர்; கல்வியறிவு நிரம்பியவர். ஆனால், அற்ப விஷயத்திற்கும் அளவற்ற சினங்கொள்ளும் இழுக்கொன்று மட்டும் அவ்வம்மையாரிடம் குடிகொண்டிருந்தது.

2. புலவர் சாந்த குண சீலர். "இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய் கவர்ந்தற்று." என்னும் மறைமொழிப் பொருளையுணர்ந்து, எவரிடத்தும் இனிமை ததும்பப் பேசும் வழக்கமுள்ளவர். ஆதலால், தம் மனைவியார் சினங்கொண்டு சீறிப் பேசும் பொழுதெல்லாம், அவர் தம் இனிய சொற்களாலும், சாதுரிய மொழிகளாலும் அவரது கோபத்தை அகற்றி, அவரை முறுவலிக்கச் செய்துவிடுவார். இறைவன் அருளால் புலவருக்குப் புதல்வர் இருவர் இருந்தனர். ஒருவனுக்கு வயது பத்து; மற்றவனுக்கு வயது எட்டு. அவ்விருவரையும் புலவர் எந்தக் குருகுலத்துக்கும் அனுப்பாமல், தாமே அவர்க்குத் தமிழ் கற்பித்து வந்தார். அச்சிறுர் இருவரும், குறும்பு மிக்கவர்; தந்தையார் வீட்டை விட்டு வெளியேறிய உடனே ஏடு எழுத்தாணிகளை எறிந்துவிட்டு விளையாடத் தொடங்குவர். அவர்களுடைய விளையாட்டு இறுதியில் சச்சரவாய் முடியும். அன்னையாருக்கு அவர்களுடைய சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதே ஓயாத வேலையாய் இருக்கும்.

3. ஒரு நாள் புலவர் வெளியே சென்றிருந்து, பசியோடு வீடு திரும்பினர்; வீட்டிற்குள் நுழையும்போதே, "சண்பகம், சமையலாகிவிட்டதா?" என்று கேட்டுக்கொண்டே வந்தார். சமையலறையிலிருந்த சணபகம், சினந்த முகத்துடன் சரேலென வெளியில் வந்து, "நீங்கள் பிள்ளைகளைப் பெற்று

வைத்திருக்கிற இலட்சணத்தில் சமைப்பது எங்கே? நீங்கள் வாயிலுக்கு வெளியே கால் வைக்க வேண்டுவதுதான் தாமதம்! இந்தப் பிள்ளைகள் கையிலிருக்கும் ஏடு எழுத்தாணிகளை எறிந்துவிட்டு, வானரங்கள் போலக் கிளம்புகின்றார்கள். ஒருவன் ஓடி வந்து, 'அம்மா, அம்மா, அண்ணன் அடித்ததைப் பார்!' என்று கூறுகிறான். மற்றவன் ஓடி வந்து, 'அந்தப் பயல் என்னை எப்படிக் கிள்ளினான் பாரம்மா! அதனால்தான் அடித்தேன்,' என்கிறான். 'சும்மா இருக்கும் போதே கிள்ளுவேனா? நீ அவனுக்குக் கொடுத்த அதிரசத்தை அவசர அவசரமாகத் தின்றுவிட்டு, என்னிடமிருந்ததைப் பிடுங்கி வாயிற் போட்டுக்கொண்டால், நான் கிள்ளாதிருப்பேனோ?' என்று காரணம் கூறுகிறான் மற்றவன். இவர்கள் சச்சரவை நீக்கவே சரியாய் இருக்கின்றது. சமைக்க நேரம் எங்கே? ஒன்று சொல்கிறேன் : நாளை முதல் நீங்கள் வெளியே போகும்போது உங்கள் பிள்ளைகளையும் அழைத்துப் போகாவிட்டால், பட்டினி கிடக்க வேண்டுவதுதான்!'' என்று சட்ட திட்டமாகக் கூறினார்.

4. சண்பகத்தின் சொற்பொழிவைக் கேட்ட புலவர்பால் இருந்த பசி பறந்துவிட்டது. அவர் சற்றுச் சிந்தித்தார்; சண்பகத்தின் சீற்றத்தை மாற்ற முற்பட்டார். "சண்பகம், நீ நன்கு கல்வி கற்றவள். ஆயினும், உனது கல்வி பேடியின் கையிலுள்ள வாள் போல உனக்கு ஒரு சிறிதும் பயன்படுவதில்லை. நீ உலக அறிவு சிறிதுமின்றிக் கிணற்றுத் தவளை போல இருக்கின்றாய். வீட்டுக்கு வீடு மண்ணடுப்பேயன்றிப் பொன்னடுப்பைக் கண்டவர் எவருமிலர். வீட்டில் குழந்தைகள் இருந்தால், குறும்புகள் செய்யாமலும், சச்சரவிட்டுக்கொள்ளாமலும் இருப்பார்களா? இது நீ அறியாததா? இந்நிலை மண்ணுலகத்தில் மட்டுந்தான் இருப்பதாக நேற்று வரை யான் எண்ணியிருந்தேன். நேற்று இரவு நானும் என் ஆருயிர் நண்பர் சிவப்பிரகாசரும் கைலையம்பதிக்குக் கண்ணுதலைத் தரிசிக்கச் சென்றிருந்தோம். அங்கு நிகழ்ந்ததைக் கண்ட பிறகுதான் நம்முடைய பிள்ளைகள் எத்துணையோ மேலானவர்கள் என்னும் முடிவுக்கு வந்தேன்,'' என்று கூறினார்.

5. அது கேட்ட சண்பகத்தின் முகத்திலிருந்த சினக் குறி சிறிது சிறிதாக மாறி வியப்புக் குறி தோன்றியது. "என்ன! கைலாயம் சென்றீர்களா! இவ்வளவு பெரிய பொய் பேச எங்குக் கற்றீர்கள்? 'காளை மாடு கன்று போட்டது,' என்றால், 'பிடித்துக் கட்டு,' என்பவருள் என்னையும் ஒருத்தியாக வைத்து எண்ணுகின்றீர் போலும்! நீராவது, கைலாயமாவது, போவதாவது! இவையனைத்தும் அண்டப் புளுகு!" என்றார் அவ்வம்மையார்.

6. "சண்பகம், நான் சொல்வது பொய்யன்று; எழுத்துக்கெழுத்து உண்மையானது. நான் மட்டும் போனேன் என்று கூறினால் நீ நம்பாமற் போகலாம்; என்னுடன் சிவப்பிரகாசரும் வந்திருந்தார் என்று கூறுகின்றேனே! அதினின்று அஃது உண்மையா, பொய்யா என்பதை உன்னால் நிச்சயித்துக்கொள்ள முடியவில்லை என்றால், பிறகு நான் என்ன கூறுவது! நான் என் கதையை நிறுத்திக்கொள்கிறேன். ஆகவேண்டுவதைக் கவனிப்போம்," என்று கூறிப் புலவர் பேச்சை நிறுத்திவிட்டார்.

7. புலவர் அவ்வாறு பேச்சை நிறுத்தியவுடனே சண்பகத்தின் உள்ளத்திலிருந்த வியப்பு ஓங்கி நின்றது. 'கைலையில் ஏதோ காட்சியைக் கண்டதாகக் கூறினரே, அதைக் கூறுவதற்குமுன் நாம் அவசரப்பட்டுவிட்டோமே!' என்று தமக்குள் எண்ணிய சண்பகம், "கிடக்கட்டும், கைலையில் நீங்கள் கண்டதென்ன? அதைக் கூறும்; கேட்கிறேன்," என்றார். "நான் கைலைக்குப் போனதை நீ நம்பாத போது, அங்கு நான் கண்ட காட்சி எங்ஙனம் உண்மையாகும்? வேண்டா. நான் கூறமாட்டேன்," என்று புலவர் சிறிது மிடுக்காய்ப் பேசினார்.

8. உடனே சண்பகம் புலவரைப் பார்த்து, "கோபித்துக்கொள்ள வேண்டா. உண்மையோ, பொய்யோ, சொல்லத் தொடங்கியதைச் சொல்லுங்கள். அதையும் கேட்டுவிட்டால், உண்மை விளங்கிவிடுகிறது," என்றார். புலவர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, "நானும் நண்பர் சிவப்பிரகாசரும் சென்றோமா? முதலில் நந்தி தேவர் எங்களை நன்கு அறிந்து-

கொள்ளாமல் உள்ளே விட மறுத்தார்; பிறகு நாங்கள் முத்தமிழ் வல்ல முதுபெரும்புலவர்கள் என்பதையறிந்தவுடனே முகமன் கூறி உள்ளே அனுப்பினுர். அவையின் உள்ளே சென்று ஒரு பக்கம் அமர்ந்தோம். சிவபெருமானும், மலைமகளாரும் அரியணையில் அமர்ந்திருந்தனர். நாரதர் வீணு கானம் செய்துகொண்டிருந்தார். அத்தருணத்தில் சிவபெருமானுடைய புதல்வர் இருவரும் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக்கொண்டே அவையிற்புகுந்தனர். அது கண்ட சிவபெருமான் வீணு கானத்தை நிறுத்தச் சொல்லி, அவர்களைப் பார்த்தார். உடனே ஐங்கரராகிய விநாயகர் தந்தையார் அருகில் வந்து அழத் தொடங்கினுர். சிவபெருமான், 'விநாயகா, அழாதே! என்ன நேர்ந்தது உனக்கு?' என்று கேட்டார். விநாயகர், 'அப்பா, ஆறுமுகன் என் காதை நன்ருகக் கிள்ளிவிட்டான்! வலி தாங்க முடியவில்லை!' என்று கூறிவிட்டுச் சிணுங்கத் தொடங்கினுர்.

9. "உடனே சிவபெருமான் வேலவரைப் பார்த்து, 'ஏன் நீ அவ்வாறு செய்தாய்?' என வினவினுர். வேலவர் தந்தையாரின் அருகிற்சென்று, 'அப்பா, இவர் சும்மா இருந்தால் நான் கிள்ளுவேனு? இவர் என் தலைகளில் உள்ள கண்களை 'ஒன்று, இரண்டு' என்று எண்ணினுர். அதனுல், நான் இவர் காதைக் கிள்ளினேன்,' என்று பகர்ந்தார். அது கேட்ட இறைவர், ஐங்கரரை நோக்கி, 'இலம்போதரா, நீ ஏன் அவ்வாறு விகடம் செய்தாய்?' என்று கேட்டார். ஐங்கரர், 'அப்பா, நான் அப்படிச் செய்தது உண்மைதான். ஏன் செய்தேன் தெரியுமா? இந்தப் பயல் எனது துதிக்கையைப்பற்றி முழம் போட்டானப்பா,' எனப் பதிலிறுத்தார். அப்போது சிவபிரானுடைய நாட்டம் முருகர்மீது விழுந்தது. அவர் தலையைக் குனிந்துகொண்டு ஒன்றும் பேசாமல் முறுவலித்து நின்ருர்.

10. "அது கண்ட இறைவர், 'பார்வதி, உன்னுடைய பிள்ளைகளின் திருவிளையாடல்களைப் பார்!' என்று கூறி நகைத்தார். உமாதேவியார் உடனே தம் மூத்த பிள்ளையாராகிய விநாயகரை அருகழைத்து அணைத்துக்கொண்டார். இத-

னைக் கண்ட நாங்கள், 'மண்ணுலகிற்றான் மக்களால் இத்தகைய தொல்லைகள் நேர்கின்றனவென்றால், கைலாயத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானையும் பார்வதியாரையுங்கூட இத்தொல்லை விட்டபாடில்லையே!' என்று பேசிக்கொண்டே மண்ணுலகத்தை அடைந்தோம். வரும் போதே நாங்கள் கண்ட காட்சியை நண்பர் சிவப்பிரகாசர் அழகிய செய்யுளாகப் பாடி முடித்தார். அதனைக் கூறுகிறேன். கேள்:

**'அரனவனி டத்திலே ஐங்கரன் வந்துதான்**
**'ஐய! என் செவியைமிகவும்**
**அறுமுகன் கிள்ளினான்!' என்றே சிணுங்கிடவும்,**
**அத்தன்வே லவனைநோக்கி**
**விரைவுடன் வினவவே, 'அண்ணன்என் சென்னியில்**
**விளங்குகண் எண்ணினன்,' என**
**வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து,'நீ அப்படி**
**விகடமேன் செய்தாய்?' என,**
**'மருவுமென் கைந்நீளம் முழமளந் தான்' என்ன,**
**மயிலவன் நகைத்துநிற்க,**
**மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி,'நின்**
**மைந்தரைப் பாராய்!' எனக்**
**கருதரிய கடலாடை உலகுபல அண்டங்**
**கருப்பமாய்ப் பெற்றகன்னி**
**கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டனள்**
**களிப்புடன் உமைகௌரியே.'**

11. இப்பாடலைக் கேட்ட சண்பகத்தின் கோபமெல்லாம் பறந்துவிட்டது. அவர் தம் கணவரின் சமயத்துக்கேற்ற சாதுரியமான கட்டுக்கதையிற்கருத்தூன்றிக் களிப்பெய்தினார்.

பயிற்சி:

I. விடை எழுதுக :—

1. **"இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."**

என்பது எங்ஙனம் முப்பழப் புலவருக்குப் பொருந்தும்? விவரிக்க.



2. "நீராவது, கைலாயமாவது, போவதாவது! இவையனைத்-தும் அண்டப் புளுகு!"—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
3. குழந்தைகளின் சச்சரவைக் கூறிய சண்பகவடிவுக்குமுப்பழப் புலவர் கூறியது யாது?
4. "பார்வதி, உன்னுடைய பிள்ளைகளின் திருவிளையாடல்களைப் பார்!"—இதை யார், எப்போது, எதற்காகக் கூறினார்?

II. எதிர்ச்சொல் எழுதுக :—

சினம், இனிமை, நிரம்ப, படித்தவர், சாந்தம், இலட்சணம், தாமதம்

III. வாக்கியத்தில் அமைந்தெழுதுக :—

சட்டதிட்டமாக, முற்பட்டார், கண்ட பிறகு, மிடுக்காக, முகமன், பதிலிறுத்தான்.

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

முகமன், சிறுார், அரியணை, முதுபெரும்புலவர், மலை மகளார், அமர், கானம், அவை, சிணுங்க, எய்து, சென்னி, அரன், அத்தன், அண்டம்

V. சொல்லியுள்ளபடி செய்க :—

நானும் கம்பர் சிவப்பிரகாசரும் சென்றோமா? முதலில் நந்தி தேவர் எங்களை நன்கு அறிந்துகொள்ளாமல் உள்ளே விட மறுத்தார். பிறகு நாங்கள் முத்தமிழ் வல்ல முதுபெரும்புலவர்கள் என்பதையறிந்-தார்; உடனே முகமன் கூறி உள்ளே அனுப்பினார். (ஒரே வாக்கிய மாக்குக.)

# 18. எங்கள் இன்பச் செலவு

1. 1950-ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 7-ஆம் நாள் இரவு எங்கள் பள்ளியிற்பயிலும் ஆரும் படிவ மாணவர் நாற்பதின்மரும், தலைமை ஆசிரியர் உட்பட ஆசிரியர் ஐவரும் சென்னை எழும்பூர்ப் புகை வண்டி நிலையத்தில் 'திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ்' எனப்படும் புகை வண்டித் தொடரிற் புறப்பட்டோம். ஒரு வார காலத்தில் திருக்குற்றாலத்தையும், மதுரை மாநகரையும் பார்த்துவிட்டுத் திரும்புவது என்பது எங்கள் திட்டம். அதன்படி எழும்பூரினின்று நேரே திருக்குற்றாலத்துக்குச் சென்றோம். நாங்கள் ஏறிய புகை வண்டி இரவு முழுவதும் மறுநாட்பகல் முழுவதும் சென்று, நள்ளிரவில் தென்காசி என்னும் புகை வண்டி நிலையத்தை அடைந்தது. குற்றாலத்தைப்பற்றிக் கூற வேண்டுபவை நிரம்ப இருத்தலினால், இடைவழியில் நாங்கள் துய்த்த இன்பங்களைப்பற்றி ஈண்டு விவரியாது விடுகின்றேன் :

2. திருநெல்வேலியினின்று திருவனந்தபுரம் செல்லும் மார்க்கத்தில் உள்ளது தென்காசி என்னும் புகை வண்டி நிலையம். அங்கிருந்து மூன்று கல் தொலைவில் உள்ள திருக்குற்றாலத்துக்கு மாட்டு வண்டி, குதிரை வண்டி முதலிய வாகனங்களிற் செல்லலாம். நாங்கள் தென்காசிப் புகை வண்டி நிலையத்தில் இரவைக் கழித்து, மறுநாட்காலையில் அங்குச் சிற்றுண்டி அருந்திவிட்டு, எங்கள் மூட்டை முடிச்சுக்களை நான்கு மாட்டு வண்டிகளில் ஏற்றிவிட்டு, அனைவரும் நடந்தே சென்றோம். நாங்கள் சென்றது சாரற்காலமாதலின், காலைக் கதிரவன் சற்று மங்கிய கிரணங்களோடு காட்சி அளித்தான். நாங்கள் சென்ற சாலையின் இரு புறங்களிலும் காணப்பட்ட மரங்களும் செடி கொடிகளும் பச்சைப்பசேலெனக் காட்சி அளித்தன.

3. திருக்குற்றாலம் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், மணிவாசகர் ஆகிய மூவர் நாயன்மாரால் புகழ்ந்து பாடப்பெற்ற புண்ணியத் தலமாகும். கூத்தப்பெருமான் ஆனந்த நடனம் புரியும் பஞ்ச சபைகளுள் இது சித்திரசபை எனப்படுவது. இங்குத் திருக்-

கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குத் திரிகூடநாதர் என்பது பெயர்; தேவியாரின் பெயர் குழல்வாய் மொழியம்மை என்பது. இத்தலத்தின் விருட்சம் குறும்பலா-வாகும்.

4. இறைவனது திருக்கோவிலின் வலப்புறத்தும் பின் புறத்தும் மேற்கு மலைத்தொடரின் ஒரு பிரிவாகிய குற்றால மலை அமைந்துள்ளது. திரிகூட மலை என்பது குற்றால மலைக்கு வழங்கும் வேறு பெயர். இம்மலையின் உச்சியினின்று ஓர் அருவி ஓடி வந்து கோவிலின் அண்மையில் விழுகின்றது. இதுவே புகழுக்குரிய 'குற்றால நீர் வீழ்ச்சி' எனப்படுவது. இது



சித்திரா நதியின் போக்கில் அமைந்துள்ளதாகும். சுமார் இருநூறு அடி உயரத்தினின்று இவ்வருவி வெள்ளிய நுரை-களுடன் கரும்பாறையின்மீது ஓடி வந்து விழுவது கண் கொள்ளாக் காட்சியாகும். இதனை நேரிற்கண்டு களிக்க

வேண்டுமேயன்றிச் சொற்களால் இதன் எழிலினை வருணித்-தல் இயலாததொன்றும். இவ்வருவியானது பேரிரைச்சலோடு விழும்போது இடையிலுள்ள பாறைகளால் தாக்குண்டு பல பக்கங்களிலும் சிதறி எழும் நீர்த்திவலைகள், பனிநீர் தெளிப்பது போலக் காணப்படும். கதிரவன் ஒளி இத்திவலைகளின்மீது விழும்போது இவை பல வகை வண்ணங்களோடு காட்சி அளிக்கும்.

5. அருவி விழும் இடம் பாறைகளாலாய சமதலமாய் உள்ளது. அவ்விடத்தை அடைந்து அருவியில் நீராடுவதற்குப் பல இருப்புக் கம்பிகள் நாட்டப் பெற்றுள்ளன. அக்கம்பி-களைப் பற்றிக்கொண்டு எவ்வித அச்சமுமின்றி அருவியில் நீராடலாம். ஆனால், நீராடுவதற்கு முன், மக்கள் தலைக்கும் உடம்புக்கும் எண்ணெய் தேய்த்துக்கொண்டே செல்வார்கள். இந்த எண்ணெய், அருவியின்கீழ் நின்ற சில நிமிஷங்களில் இருந்த இடம் தெரியாது மறைந்துவிடும். ஆதலால், நீண்ட நேரம் நீராட விரும்புபவர் மூன்று நான்கு முறை எண்ணெ-யைத் தேய்த்துக்கொள்வர். இவ்வாறு நாள்தோறும் பன்-முறை அருவியில் நீராடுவதே இங்கு வரும் மக்களின் இனிய பொழுது போக்காகும். இக்குற்றாலத்துக்குச் சாரற்காலத்தில் வந்து தங்கும் மக்கள் உண்பதும் நீராடுவதுமாகவே காலத்-தைக் கழிப்பார்கள்.

6. நாங்கள் சென்றது சாரற்காலமாதலினாலும், எங்கள் விடுதி கோவிலின் அருகிலேயே இருந்தமையாலும் முதல் நாள் முற்பகலில் இரண்டு முறை அருவியில் நீராடினோம். எங்களுட் சிலர் கம்பிகளைப் பற்றிக்கொண்டு செல்லும்போது பெரும்-பயத்தோடு சென்றனர். அவர்களுக்கு ஆசிரியர்களும் மற்ற-வர்களும் உடனிருந்து உதவி புரிந்தார்கள். சிலர் நீர் வீழ்ச்சி-யின் வேகத்தைத் தாங்க முடியாமல், தலையை நீரில் நீட்டுவதும் இழுப்பதுமாய் நின்றதைக் கண்ட மற்றவர், விலாப்புடைக்கச் சிரித்தனர்.

7. பிற்பகலில் நாங்கள் திரிகூட மலையின்மீது ஏறினோம். மலையின்மீது ஏற அருவியின் அருகிலேயே வழியிருக்கின்றது.

அவ்வழியே சென்று, சுமார் நூறடி உயரத்தில் உள்ள பொங்குமாகடல் என்னும் அருவித்துறையை அடைந்தோம். சித்திரா நதி இந்த இடத்தில் விழுந்து பொங்கிப் பிறகுதான் நீர் வீழ்ச்சி ஆகிறது. சித்திரா நதி இங்குப் பொங்கிப் பரந்தெழும் காரணத்தால், இதற்குப் 'பொங்குமா கடல்' என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

8. பொங்குமா கடலினின்று மேலும் மலைமீது சென்றால், சுமார் ஒன்றரைக் கல் தொலைவில் ஓர் அருவி காணப்படுகிறது. அதற்குச் **சண்பகாதேவி** என்னும் பெயர் வழங்குகிறது. அங்கு ஒரு சிறு ஆலயமிருக்கின்றது. அதற்குச் **சண்பகா தேவி கோவில்** என்பது பெயர். அந்த இடத்தில் எங்குப் பார்த்தாலும் சண்பக மரங்கள் காட்சியளிக்கின்றன. ஆதலால், சண்பகக் காடு என்னும் பொருளுடைய சண்பகாடவி (சண்பக + அடவி) என்னும் தொடரே இக்காலத்தில் சண்பகா தேவி என மருவி வழங்குகின்றதென்பதை எங்களுடன் வந்திருந்த தமிழாசிரியர் விளக்கினர். அவ்விடத்தில் முன்னே கூறப்பட்ட கோவிலைத் தவிர, சிறு குகைகள் பல காட்சியளிக்கின்றன. அவை சித்தர்கள் இருந்த இடங்களெனக் கூறப்படுகின்றன. அவற்றைக் கண்ட போது அவை தமிழ் வளர்த்த தவமுனிவரும் அவருடைய அரிய மாணவர்களும் அக்காலத்தில் தங்கியிருந்த குகைகளாய் இருக்கலாமோ என்னும் ஐயம் எங்களுக்குப் பிறந்தது. ஆசிரியர்களைக் கேட்ட போது 'அப்படியும் இருக்கலாம்,' என்ற விடைதான் கிடைத்தது.

9. சண்பகாதேவி அருவியினின்று மேலும் ஒன்றரைக் கல் தொலைவு நாங்கள் சென்ற போது மலைமீது சொரியும் மற்றோர் அருவியைக் கண்டோம். அதன் நீரொழுக்கு மெல்லியதாய் இருந்தது. அதற்குத் '**தேனருவி**' என்பது பெயர் என்று எங்களுக்கு வழி காட்டியாய் வந்த அவ்வூரார் கூறினர். அந்த அருவியுள்ள இடத்தில் பாறைகளில் பல தேன்கூடுகள் காணப்பட்டன. அக்கூடுகளினின்று தேன் துளிகள் அந்த அருவியில் சொட்டுவதால் அதற்குத் தேன் அருவி என்னும் பெயர் வழங்குகிறது என்று அறிந்தோம். தேனருவியை நாங்கள் அடைந்த

போது மாலை ஐந்து மணி இருக்கலாம். மேலும் சில வழிகள் இங்குமங்கும் செல்லக்கண்ட நாங்கள், தொடர்ந்து மலை உச்சிக்குப் போக விழைந்தோம். ஆனால், எங்களுடன் வந்திருந்தவர், பொழுது போய்விட்டதென்றும், மேலும் செல்வது கூடாதென்றும் கூறி, எங்களை அழைத்துக்கொண்டு திரும்பிவிட்டார். நாங்கள் வெகு வேகமாய் நடந்தும் மலையடிவாரம் அடைவதற்குள் இருள் சூழ்ந்துவிட்டது.

*10.* குற்றால மலையின் சிறப்பை விவரிப்பது எளிதன்று. இம்மலையின் எம்மருங்கும் ஓங்கி வளர்ந்த மரங்களும், தழைத்துப் படர்ந்த செடிகொடிகளும் காணப்படுகின்றன. பற்பல வகையான மலர்களின் நறுமணம் மனத்தை மகிழ்விக்கிறது. பச்சைப்பசேலென்று காட்சியளிக்கும் தாவரங்களினிடையே வெண்மேகம் சஞ்சரிப்பது வியத்தகு காட்சியாகும். இக்குற்றாலத்தைப்பற்றிய நூல்கள் பல உண்டென்றும் அவற்றுள் குற்றாலத் தலபுராணமும், குற்றாலக் குறவஞ்சியும் மிகச் சிறந்தவை என்றும் கூறி, எங்கள் ஆசிரியர் குறவஞ்சி நூலினின்று சில பாட்டுக்களை எங்களுக்குப் பாடிக் காட்டினார். நாங்கள் அவற்றைக் கேட்டு இன்புற்று இரவைக் கழித்து, மறுநாள் மதுரைக்குப் புறப்பட்டுவிட்டோம். மதுரையிற்கண்டவற்றை மற்றொரு சமயம் விவரிப்பேன்.

## பயிற்சி:

I. விடை எழுதுக :—

1. திருக்குற்றாலம் யார் யாரால் புகழ்ந்து பாடப்பட்டது? அங்குள்ள சபையின் பெயர் யாது? அங்குள்ள பெருமானது பெயரும், தேவியரின் பெயரும் என்ன? அத்தலத்தின் விருட்சம் யாது?
2. திரிகூடமலையின் அமைப்பை விவரிக்க.
3. 'பொங்குமா கடல்' என்னும் பெயர்க் காரணம் யாது?
4. 'சண்பகாதேவி' என மருவியது எது என்பதை விளக்குக.
5. "அப்படியும் இருக்கலாம்,"—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
6. தேனருவி என்னும் பெயர்க் காரணம் யாது?

7. திருக்குற்றாலத்தைப் புகழ்ந்து கூறும் நூல்கள் எவை? அவைகளைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

II. எதிர்ச்சொல் எழுதுக :—

இயலா, வீழ்ச்சி, உதவி, வேகம், இன்புற்று, வெண்மேகம், நறு-மணம்.

III. வாக்கியத்தில் அமைத்தெழுதுக :—

அவ்வழியே, இருக்கலாமோ, விழைந்து, சஞ்சரித்து, நறுமணம், கண் கொள்ளாக் காட்சி

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

எழில், வருணித்தல், எட்டுணை, திவலைகள், அருவி, கதிரவன், ஒளி, சாரற்காலம், அடவி, விழைந்து, நறுமணம்

V. சொல்லியுள்ளபடி செய்க :—

1. அருவியானது பேரிரைச்சலோடு விழும்போது இடையிலுள்ள பாறைகளால் தாக்குண்டு பல பக்கங்களிலும் சிதறி எழும் நீர்த்திவலை-கள், பனிநீர் தெளிப்பது போலக் காணப்படும்—மூன்று சிறு வாக்கி-யங்களாக்குக.

2. சண்பகாடவி என்னும் பெயரே இக்காலத்தில் சண்பகாதேவி என மருவி வழங்குகின்றதென்பதை எங்களுடன் வந்திருந்த தமிழா-சிரியர் விளக்கினார்—அயற்கூற்றை நேர்க்கூற்றாக்குக.

## 19. சாதுரியப் பேச்சு

1. இன்பத்தை விரும்புவதும், துன்பத்தை வெறுப்பதும் எல்லா உயிர்கட்கும் இயல்பு. ஆதலாற்றான் மாந்தர் எப்போதும் இன்பத்திற்றிளைத்திருக்க விரும்புகின்றனர். மனத்தில் இன்ப உணர்ச்சி உண்டாகும்போது சிரிப்பு வெளிப்படுகின்றது; அவல உணர்ச்சியின் பயனாக அழுகை தோன்றுகின்றது. சிரிப்பு, அழுகை இரண்டனுள் முன்னது உடலுக்கு உரத்தையும், பின்னது பலவீனத்தையும் உண்டுபண்ணுகின்றன. ஆதலால், மக்கள் வாழ்க்கையில் சிரிப்புக்கு முக்கிய இடம உண்டு.

2. இக்கொள்கை பற்றியே முற்கால மன்னர்களின் அவைகளில் நகைச்சுவை தோன்றுமாறு பேசுந்திறமை வாய்ந்த விதூஷகர்கள் இருந்து வந்தார்கள். அரசர்களின் மனச்சோர்வை அகற்றி அவர்கட்குச் சிரிப்பைத் தோற்றுவிப்பதே அவ்விதூஷகர்களின் கடமை. இத்தொழில் எளிதன்று; இதற்குச் சிறந்த கல்வியும் ஆழ்ந்த அறிவும் அவசியம். எவர் மனத்தையும் புண்படுத்தாமல் தாம் பேசும் சொற்களால் கேட்பார் மகிழ்வுற்றுச் சிரிக்கும்படி செய்வது எல்லார்க்கும் எளிதன்று. இதற்குத் தனிப்பண்பு வேண்டும். இத்தகைய பண்பு நம் தமிழ் நாட்டு அறிஞர்களிடையே பேரளவில் இருந்ததென்பதைப் பல செய்திகளால் அறிகிறோம். அவற்றுள் சில ஈண்டுத் தரப்படுகின்றன :

3. தொண்டை நாட்டுப் புலவர்களுள் அந்தகக் கவி வீரராகவ முதலியார் என்பவரைப்பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவர் ஒரு சமயம் சந்திரவாணன் என்ற புலவர்மீது ஒரு கோவை நூலைப்பாடி அரங்கேற்றினார். அவ்வரங்கேற்றத்திற்குப் புலவர் பெருமக்களுள் பலர் வந்திருந்தனர். புலவர் தாம் இயற்றிய நூலின் ஒவ்வொரு செய்யுளையும் தமது மாணவரைப் படிக்கச்செய்து, அதன் பொருள் நயங்களை எடுத்துக் கூறி வந்தார். ஒரு செய்யுளில் ஒரு பெண்ணின் வருணனையைக் கூறும போது, "முப்பழச் சேற்றின் அமுத வயல் மேலே

முளைத்த கரும்போ" என்று கூறப்பட்ட சொற்களைக் கேட்டுச் சபையிலிருந்த அம்மைச்சி என்ற பெண்பாற்புலவர், "கவிராயருக்குக் கண்தான் கெட்டது; மதியும் கெட்டதோ?" என்று கூறினார். அது கேட்ட புலவர், அவ்வம்மையார் தமது செய்யுளிற்கண்ட குற்றம் இன்னதென்பதை உணர்ந்து, மாணவரைப் பார்த்து, "ஐய, சேற்றில் உள்ள கொம்பை வெட்டிக் காலை நடு," என்று கூறினார். கூரிய அறிவு படைத்த அம்மாணவரும் ஆசிரியரின் கூற்றின் பொருளை எளிதில் உணர்ந்து, 'சேற்றில்' என்ற சொல்லைச் 'சாற்றில்' என்று மாற்றிப் படித்தார். அது கண்ட சபையினர் அனைவரும் புலவர் கூறிய சாதுரியமான சொற்களையும், அவற்றின பொருளை அறிந்து ஆசிரியரின் பெருமையை வெளிப்படுத்திய மாணாக்கரின் திறமையையும் புகழ்ந்து போற்றினர்.

4. எட்டையபுரத்து அவைப் புலவராய் விளங்கிய கடிகைமுத்துப் புலவர் என்பவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அத்தருணத்தில் அவர் மகள் அழுக்குத் துணியில் வடிகட்டிய பாலை அவர் வாயில் ஊற்றினாள். பால் அழுக்கு நாற்றம் வீசியபடியால், புலவர் பாலைக் கீழே துப்பினார். அது கண்ட மகள், "அப்பா, பால் கசக்கிறதோ?" என்று கேட்டாள். உடனே புலவர், "பாலும் கசக்கவில்லை, கந்தையும் கசக்கவில்லை," என்று பதில் இறுத்தாராம். அது கேட்ட மகள் நாணுற்றாள்; அங்குக் குழுமியிருந்த புலவர்கள், கடிகைமுத்துப் புலவரின் உடல் நலியுற்றபோதும், அறிவு நலியாமல், நகைச்சுவை ததும்ப அவர் கூறிய சொற்களைக் கேட்டு அகமகிழ்ந்தார்கள்.

5. கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தை அரசவைகளிலும், புலவர் சபைகளிலும் பிரசங்கம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு சபையில் ஜனக மன்னரிடம் இருந்த சிவபெருமானது வில்லைப்பற்றிய செய்திகளைக் கூறும் செய்யுட்களைப் புகன்று பொருள் உரைத்தார். அப்போது ஒரு செய்யுளில் அவ்வில்லை வீரர் அறுபதினாயிரவர் இழுத்துவந்து ஜனகர் சபையில சேர்த்தனர் என்ற செய்தி குறிப்பிடப்பட்-

டிருந்தது. கம்பர் அச்செய்யுளைக் கூறியவுடனே, சபையி-லிருந்த ஒரு புலவர் எழுந்து, "புலவர் பெருமானே, சிவபெரு-மான் வில்லை வீரர் ஐயாயிரவர் இழுத்து வந்தனர் என்பது வான்மீகியார் கூற்றாயிருக்கத் தாங்கள் அறுபதினாயிரவர் என்று கூறுவது முரணன்றோ?" என்ற ஒரு வினாவை எழுப்-பினர். உடனே கம்பர் ஒரு சிறிதும் தயங்காமல், "அன்பரே, யானும் அதைத்தானே கூறியுள்ளேன்? 'அறு பதினாயிரம்' என்னும் தொடரை அறுக்கப்பட்ட பதினாயிரம், அதாவது பாதியாக்கப்பட்ட பதினாயிரம் என்று பொருள் கொள்ளின், வீரர் தொகை ஐயாயிரந்தானே ஆகும்? எனது கூற்று முரணாவதெங்ஙனம்?" என்று சாதுரியமாகப் பதிலிறுத்தார். அது கேட்ட புலவர் அனைவரும் கம்பருக்குப் புகழ் மாலை சூட்டினர்.

6. **சிவகங்கை** என்பது இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள ஒரு பெரிய ஜமீன். அதன் ஜமீந்தாரை 'அரசர்' என்று வழங்குவது அக்கால வழக்கம். பத்தொன்பதாம் நூற்றாண்-டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தி-லும் சிவகங்கையை ஆட்சிபுரிந்து வந்தவர் சிறந்த தமிழறிஞர். ஆதலால், அவர் அடிக்கடி தமிழ்ப்புலவர்களைத் தமது சபையிற் கூட்டி, அவர்களோடு அளவளாவித் தமிழின்பம் நுகர்ந்து மகிழ்வெய்துவார். **வேல் கவிராயர்** என்பவர் அவரது அவைப் புலவராய் இருந்தவர் ஆதலால், அவர் மட்டும் எப்போதும் அரசருடனிருப்பார். அக்காலத்தில் அந்தப் பக்கத்தில் வேறு பல சிறந்த புலவரும் இருந்தனர். அவர்களுள் ஒருவர் **புலிக் குட்டிக் கவிராயர்** என்பவர். அவர் ஒரு நாள் சிவகங்கை அரச-ரைக் காணச் சென்றார். அவர் அரசரை நன்கு அறிந்தவர். அரசரும் அவரை நன்கு அறிந்தவர். ஆதலால், கவிராயர் காவலனை நோக்கி, 'புலிக்குட்டி வந்திருக்கிறது என்று அரச-ருக்கு அறிவி,' என்றார். காவலன் அங்ஙனமே அரசர்க்கு அறி-வித்தான். அது கேட்ட அரசர், வந்திருப்பவர் புலிக் குட்டிக் கவிராயர் என்பதை அறிந்தார்; கவிராயருடைய சாதுரிய மொழிகளுக்குத் தாமும் சாதுரியமாகப் பதில் சொல்லியனுப்ப விழைந்தார்; "இங்கு வேல் இருக்கிறது. அச்சமின்றேல்,

புலிக்குட்டி வரலாம்,'' என்ற பதிலைக் காவலன் மூலம் தெரிவித்தார். அது கேட்ட கவிராயர், அரசருடைய சமயோசிதமான பதிலைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே சபையை அடைந்தார். அங்கிருந்த அனைவரும் சிரித்துக்கொண்டே அவரை வரவேற்றனர்.

7. இராமநாதபுரம் ஜில்லாவில் சங்கரன் பிள்ளை என்ற புலவர் ஒருவர் இருந்தார். ஒரு நாள் அவரைக் காண அவர் நண்பர் ஒருவர் வந்தார். அத்தருணத்தில் சங்கரன் பிள்ளை ஏதோ சிற்றுண்டி செய்வதற்காக ஒரு சட்டியிற் சிறிது மாவை இட்டு வறுத்துக்கொண்டிருந்தார். அது கண்ட புலவர், "என்ன, சங்கரன் பிள்ளை, சட்டியிலே மாவறுக்கும் தொழிலை மேற்கொண்டுவிட்டீர்?'' என்று குறும்பாகக் கேட்டார். அது கேட்ட சங்கரன் பிள்ளை, "சட்டியிலே மாவறுக்கும் தொழில் சங்கரன் பிள்ளைக்கன்றி வேறு யார்க்கு உரியது?'' என்று சாதுரியமாக விடை பகர்ந்தார். 'சஷ்டித் திதியில் மாமர வடிவத்தில் நின்ற சூரபன்மனை அறுத்துத் தள்ளிய போர்த்தொழில் சங்கரனாகிய சிவபெருமானின் புதல்வரான முருகப்பெருமானுக்கே உரியது' என்னும் பொருள்படப் புலவர் கூறிய பதில் சிந்தித்து மகிழ்வதற்குரியதன்றோ! இங்ஙனம் தமிழறிஞர் பொருட்செறிவும் நகைச்சுவையும் தோன்ற அவ்வப்போது கூறிய சாதுரிய மொழிகள் எண்ணில. அவை அனைத்தையும் திரட்டி நூலாக்கிப் பொன்னே போலப் போற்றுவது தமிழ் மக்கள் கடமையாகும்.

பயிற்சி :

I. விடை எழுதுக :—

1. வாழ்க்கையில் சிரிப்புக்கு முக்கிய இடம் உண்டு என்பது எங்ஙனம் பொருந்தும்?
2. விதூஷகர் என்பவர்களைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?
3. "கொம்பை வெட்டிக் காலை நடு," என்பதை விளக்குக.
4. கடிகை முத்துப் புலவரின் கூற்றுக்களை எழுதிப் பொருள் தருக.
5. 'அறுபதினாயிரம்' என்னும் தொடருக்குக் கம்பர் கூறிய பொருள் யாது?

6. "இங்கு வேல் இருக்கிறது. அச்சமின்றேல், புலிக்குட்டி வரலாம்," என்பதற்குரிய இரண்டு பொருள்கள் யாவை?

7. 'சட்டியிலே மாவறுத்தல் சங்கரன் பிள்ளைக்குரியது,' என்னும் வாக்கியத்திற்குக் கூறத்தக்க இரண்டு பொருள்களை எழுதுக.

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

விருப்பம், உரம், சோர்வு, எளிது, ஈண்டு, கூரிய, முரண், சிற்றுண்டி, விடை

III. வாக்கியங்களில் அமைக்க :—

இயல்பு, நகைச்சுவை, புண்படுத்தாமல், மகிழ்வுற்று, பண்பு, பொருள் நயம், கூறிய, கூரிய, கூற்று, சாதுரியம், நோய்வாய்ப்பட்டு, முரண், புகழ் மாலை

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

அவலம், உரம், விதூஷகன், பண்பு, கோவை, அரங்கேற்றினர், வருணனை, கூற்று, சாதுரியம், ததும்ப, பிரசங்கம், தயக்கம், பதிவிறுத்தார், சமயோசிதம்;

# 20. திரைப் படம்

1. பிள்ளைகளே, உங்களுள் பலர் அடிக்கடி திரைப் படக் காட்சிக்குச் சென்று இன்பத்தில் திளைக்கின்றீர் ; அன்றியும், உங்கள் பள்ளியிலும் படக் காட்சிகளைக் கண்ணுற்றுக் களிக்கின்றீர்கள். ஆனால், உயிரற்ற உருவங்கள் உயிருள்ளவை போலப் பேசுவதும், பாடுவதும், நடிப்பதும் எங்ஙனம் நடைபெறுகின்றன என்பதைப்பற்றி உங்களுள் ஒருவரேனும் சிந்தித்ததுண்டா? 'இல்லை,' என்று திட்டமாகக் கூறிவிடலாம். இங்கு அவை உங்களறிவுக்குரிய அளவில் விவரிக்கப்படும் :

2. நீங்கள் சினிமாவில் பயன்படுத்தும் 'பில்ம்' சுருள்களைப் பார்த்திருப்பீர்கள் ; அவற்றின் சிறு துண்டுகளைக் கொண்டு விளையாடியுமிருப்பீர்கள். பில்ம் சுருளில் ஓர் அடி-நீளத்தில் பதினாறு படங்கள் இருப்பதைக் காணலாம். புகைப் படம் எவ்வாறு எடுக்கப்படுகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். புகைப் படம் எடுக்க முற்காலத்தில் 'எமல்ஷன்' என்னும் மருந்து தடவப்பட்ட கண்ணாடி உபயோகிக்கப்பட்டது. அக் கண்ணாடிக்கு ஆங்கிலத்தில் 'நெகட்டிவ்' என்பது பெயர். நெகட்டிவால் தனித்தனியே படம் எடுக்க முடியுமேயன்றித் தொடர்ச்சியாக எடுக்க முடியாது. ஈஸ்ட்மன் கோடக் என்பவர், தமது அரிய ஆராய்ச்சியாலும் விடா முயற்சியாலும் 'ரோல் பில்ம்' எனப்படும் சுருள் பில்மைக் கண்டு பிடித்தார். இதைக்கொண்டு தொடர்ச்சியாகப் பல படங்களை மிக விரைவில் எடுக்கலாம். இச்சுருள் பில்ம் ஆயிரமடி நீளங்கூட இருக்கும். ஆனால், முன்னமே கூறப்பட்டபடி இச்சுருள் பில்மில் ஓர் அடி நீளத்தில் முக்கால் அங்குல உயரமுள்ள படங்கள் பதிவு செய்யத்தக்க சாதனங்கள் பதினாறு இருக்கும்.

3. இத்தகைய பில்ம் சுருளைச் சினிமாப் படம் பிடிக்கும் கருவியாகிய 'சினி - காமிரா'வில் இட்டு, இயந்திரத்தின் உதவியால் பில்ம் சுருளை இயக்கிப் படம் பிடிக்கும் போது, அச்சுருளில் உள்ள பகுதி ஒவ்வொன்றின்மீதும் ஒரு வினாடியில் இருபத்து நான்கில் ஒரு கூறு ($\frac{1}{24}$ வினாடி) நேரத்தில் படம்

பதிவாகிறது ; அதாவது, ஒரு வினுடியில் ஒன்றரையடி நீள-முள்ள பில்மில் படம் பதிவாகிறது. எனவே, ஒரு வினுடியில் இருபத்து நான்கு படங்கள் பதிவாகின்றன. இக்கணக்கின்படி ஒரு நிமிஷத்தில் தொண்ணூறடி நீளமுள்ள பில்மில் படப்-பதிவுகள் ஏற்படும்.

4. இவ்வாறு பதிவு செய்யப்பட்ட பில்ம் சுருள் திரைப் படக் கொட்டகையிலுள்ள இயந்திரத்திலிட்டு, படம் எடுக்-கப்பட்ட அதே வேகத்தில் இயக்கப்படுகிறது. அதாவது, நிமிஷத்திற்குத் தொண்ணூறடி வேகத்தில் பில்ம் நகர்கிறது. ஆகவே, ஒரு படம் திரையின்மீது தோன்றி மறைவதற்கும், அடுத்த படம் வந்து தோன்றுவதற்கும் இடைப்பட்ட நேரம் மிக மிக நுண்ணிதாதலின், திரையின்மீது விழும் உருவங்கள் இடையீடின்றிச் செயலாற்றுவதுபோல நமக்குத் தெரிகிறது. இதனை ஓர் எடுத்துக்காட்டால் நன்கு அறியக் கூடும். மின்சார விசிறியில் மூன்று அல்லது நான்கு இலைகள் அமைந்திருப்பதை நாம் அறிவோம். ஆனால், அவ்விசிறி வேகமாய் இயங்கும்போது அதன் இலைகள் நம் கண்ணுக்குத் தனித்தனி தெரியாமல், விசிறி இடைவெளியின்றி ஒரே வட்டம் போலத் தெரிகிறது. இங்ங-னமே பல படங்களைப் பெற்றுள்ள பில்ம் வேகமாக நகரும் போது இடை வெளியின்றிப் படங்கள் பலவும் ஒரே படம் போலக் காணப்படும். இது நமது கண் மயக்கேயன்றி வேறன்று.

5. இனித் திரையின்மீது படம் எங்ஙனம் விழுகிறது என்பதைச் சற்றுக் கவனிப்போம் : சினிமாக் கொட்டகையில் ஒரு கோடியில் திரை அரங்கும், மற்றொரு கோடியில் இயந்திர அறையும் இருப்பதை நீங்கள் அறிவீர்கள். இயந்திர அறை-யில் 'ப்ரொஜக்டர்' என்னும் இயந்திரம் அமைக்கப்பட்டிருக்-கும். இந்த இயந்திரம் உங்கள் பள்ளிகளில் படக்காட்சி காட்டுவதற்கு உபயோகிக்கப்படும் இயந்திரம் போன்றதே. இதில் பேரொளி பரப்பும் சாதனம் ஒன்று அமைக்கப்பெற்-றிருக்கும். அவ்வொளி ஒரு கண்ணுடியின் மூலம் நேர் எதிரில் உள்ள வெண்மையான திரையின்மீது விழும்படி செய்யப்படு-கிறது. இந்த ஒளிக்கும் திரைக்கும் இடையில் 'பில்ம்'

செலுத்தப்படுகிறது. அப்போது பில்மில் உள்ள படத்தின் சாயை திரையின்மீது விழுகிறது. முன் கூறியவாறு பில்ம் சுருள் மிக விரைவாக இயங்குவதால், படங்களில் உள்ள உருவங்கள் செயலாற்றுவது போன்ற தோற்றம் உண்டாகின்றது.

6. தனித்தனி படங்கள் மிக விரைவாக இயக்கப்பட்டுச் செயலாற்றுவதுபோலத் தோற்றமளிக்கச் செய்யும் விவரத்தை அறிந்தோம். இனி, திரையின்மீது விழும் சாயைகள் பேசுவதும், பாடுவதும் எங்ஙனம் நிகழ்கின்றன என்பதைக் கவனிப்போம்: ஒருவருடைய குரல் ஒலி, பதிவு செய்யப்பட்டுக் 'கிராமபோன்' என்னும் இயந்திர சாதனத்தின் மூலம் வெளியிடப்படுவதை நாம் அறிவோம். அங்ஙனமே, திரைப்படக் கதையில் நடிப்பவர்களின் பாட்டையும் பேச்சையும் ஒலிப்பதிவு செய்து பில்மில் ஏற்றவாறு இணைப்பர். பேசும் படத்தின் பில்மை நீங்கள் பார்த்தால், அதன் ஓரத்தில் கோடு இருப்பதை அறியலாம். அக்கோடுதான் பில்மின் ஒலிப்பதிவு. படம் இயங்கும்போது இப்பதிவு இடத்திற்கேற்ற ஒலியை வெளியிடும். 'கிராமபோன்' இயந்திரத்தில் உள்ள ஒலிப் பெட்டி இசைத்தட்டின் கோடுகளாய் அமைந்துள்ள ஒலிப்பதிவை வெளியிடுவதை நாம் அறிவோம். அவ்வாறே பில்மில் உள்ள ஒலிப்பதிவை ஓர் இயந்திரம் ஒலியாக வெளியிடுகிறது. அவ்வொலியே அதன் பதிவுக்கேற்றவாறு பாட்டாகவும் பேச்சாகவும் கேட்கப்படுகிறது.

7. இதில் உங்களுக்குச் சில ஐயங்கள் எழலாம். அவற்றுள் தலையாயது, படப் பிடிப்பும், ஒலிப்பதிவும் திரையில் தோன்றுவது போல ஒரே காலத்தில் நடைபெறுகின்றனவா என்பதாம். படப் பிடிப்புத் தனியாகவும், ஒலிப்பதிவு தனியாகவும் நடைபெறும் என்பதே இந்த ஐய வினவுக்கு விடையாகும்.

8. படம் பிடிக்கும் இடத்திற்கு ஆங்கிலத்தில் 'ஸ்டுடியோ' என்பது பெயர். அங்கு வீடுகளும் காடுகளும், சோலைகளும் சாலைகளும், மடுக்களும் மலைகளும் அமைப்பதற்குரிய சாதனங்-

கள் உண்டு. படத்திற்குரிய காட்சிகளை ஓவியர் இயற்கையோடியையுமாறு அமைப்பார். படம் பிடிப்பவர், படம் பிடிப்பதற்கு வேண்டிய ஒளிச்சாதனங்களை அமைப்பார். நடிகர்கள் உரிய வேடங்களைத் தரித்துக்கொண்டு தயாராய் நிற்பார்கள். எல்லாம் ஒழுங்குபட அமைந்துள்ளனவா என்பதைப் படம் தயாரிக்கும் பொறுப்புள்ள 'டைரெக்டர்' தணிக்கை செய்த பிறகு படம் பிடிக்கப்படும். ஒரு கதைக்குரிய எல்லாக் காட்சிகளையும் 'ஸ்டுடியோ'வினுள்ளேயே படம் எடுப்பது இயலாது. ஆதலால், சில சமயங்களில் பெரிய மலைகள், ஏரிகள், ஆறுகள், காடுகள் முதலியன உள்ள இடங்கட்குச் சென்று படம் பிடிப்பதும் உண்டு.

*9.* ஸ்டுடியோவில் ஒலிப்பதிவு செய்யும் இடம் தனியே அமைக்கப்பட்டிருக்கும். இவ்வறை, வெளியிலிருந்து எவ்வித ஒலியும் உட்புகாதபடி அமைக்கப்பெற்றிருக்கும். இங்கேதான் நடிகர்களின் பேச்சு, பாட்டுக்களின் ஒலி பதிவுசெய்யப்பட்டு, படம் பிடிக்கப்படும்போது அவ்வொலிப்பதிவு, இயந்திரத்தின் மூலமாக ஒலிககிறது. நடிகர்கள் நடிக்கும்பொழுது அவர்கள் பேசவோ பாடவோ வேண்டா; இடத்திற்குத் தக்கபடி இயந்திரத்தினின்று வெளிப்படும் ஒலிக்கேற்றவாறு வாயசைத்தல் மட்டும் போதும். ஒலிக்கேற்றபடி பேசுவதாலும் பாடுவதாலும் தவறொன்றும் ஏற்பட்டுவிடாது.

*10.* பிள்ளைகளே, மௌனத் திரைப் படம், பேசும்படங்களைப்பற்றி நீங்கள் அறிந்துகொள்ள வேண்டிய முக்கிய விஷயங்கள் மட்டும் கூறப்பட்டன. மேல் வகுப்புக்களில் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் எத்தனையோ உண்டு. அவற்றையும் நீங்கள் அறிந்துகொள்ள முயல வேண்டும்.

பயிற்சி:

I. விடை எழுதுக:—

1. *திரையின்மீது விழும் சாயைகள் செயலாற்றுவன போலத் தோன்றக் காரணம் என்ன?*
2. *திரையின்மீது விழும் உருவங்கள் பேசுவதும் பாடுவதும் எங்ஙனம் நிகழ்கின்றன?*

3. 'ஸ்டுடியோ' என்பது என்ன? அங்கு என்னென்ன அமைப்புக்கள் காணப்படும்?

4. குறிப்பெழுதுக :—பிலிம் சுருள், ப்ரொஜக்டர்

II. எதிர்ச்சொற்கள் எழுதுக :—

அடிக்கடி, இன்பம், களிப்பு, உயிரற்ற, தொடர்ச்சி, விரைவு, நுண்ணிது, பேரொளி, வினா

III. வாக்கியங்களில் அமைக்க :—

கண்ணுற்று, புகைப் படம், தனித்தனி, நுண்ணிது, இயங்குதல், பேரொளி, வேடந்தரித்து

IV. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

திளைத்தல், சாதனங்கள், நுண்ணிது, எடுத்துக்காட்டு, அரங்கு, சாயை, செயலாற்றுதல், ஐயம்

# செய்யுட்பகுதி

## I. கடவுள் வணக்கம்

அருள்பழுத்த பழச்சுவையே! கரும்பே! தேனே!
ஆரமிர்தே! என்கண்ணே! அரிய வான
பொருளனைத்தும் தரும்பொருளே! கருணை நீங்காப்
பூரணமாய் நின்றஒன்றே! புனித வாழ்வே!
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவி யாதி
விரிவினையுங் கூட்டிஉயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே! யான்சொலும்விண் ணப்பம்
[கேளே. 1

சிதம்பர ரகசியம்] [தாயுமான சுவாமிகள்

யாவையும் எவருந் தானாய்
அவரவர் சமயந் தோறும்
தோய்விலன் புலனைந் துக்கும்
சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளால்
யாதுமோர் பற்றி லாத
பாவனை யதனைக் கூடில்
அவனையுங் கூட.லாமே. 2

திவ்வியப்பிரபந்தம்] [நம்மாழ்வார்

'வெள்ளந்தாழ் விரிசடையாய்! விடையாய்! விண்ணோர்
பெருமானே!' எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்கிற்க என்னை யாண்டாய்க்(கு)

உள்ளந்தா னின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாங் கண்ணா யண்ணா!
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே! 3

திருவாசகம்] [மாணிக்கவாசகர்

உலகமெலாந் தனிநிறைந்த உண்மை யாகி,
யோகியர்தம் அனுபவத்தி னுவப்பா யென்றும்
கலகமுறா உபசாந்த நிலைய தாகி,
களங்கமற்ற அருண்ஞானக் காட்சி யாகி,
விலகலுறா நிபிடஆ னந்த மாகி,
மீதானத் தொளிர்கின்ற விளக்க மாகி,
இலகுபரா பரமாய்ச்சிற் பரமா யன்பர்
இதயமலர் மீதிருந்த இன்பத் தேவே! 4

திருவருட்பா] [இராமலிங்க அடிகள்

மண்புனல்தீ வளிவெளியாய் மன்னிநிற்குந் தெய்வம்,
மதிகதிராய் மன்னுயிராய் மகிழ்விக்குந் தெய்வம்,
கண்முதலாம் உறுப்புயிர்க்குக் கதிக்கின்ற தெய்வம்,
கருத்தினிலே கோயில்கொண்டு காக்கின்ற தெய்வம்,
எண்ணெழுத்தால் ஏழிசையால் இசைப்பயனாந் தெய்வம்,
எம்மறையுங் குருவழியே இயம்புகின்ற தெய்வம்,
உண்மையறி வானந்த உருவான தெய்வம்,
ஒருநெறியாம் பொதுமையிலே ஓங்குதெய்வம் ஒன்றே.

—திரு. வி. கலியாணசுந்தரனார்

## II. நீதிப் பகுதி

### 1. நாலடியார்

துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க;
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும். 1

உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
தாம்செய்வ தல்லால் தவற்றினல் தீங்கூக்கல்
வான்தோய் குடிப்பிறந் தார்க் கில். 2

'புன்னுனிமேல் நீர்போன்ம் நிலையாமை,' என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை ;—இன்னினியே
நின்ருன் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்ருன் எனப்படுத லான். 3

குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல ;—நெஞ்சத்து
' நல்லம்யாம்,' என்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே அழகு. 4

கல்வி கரையில ; கற்பவர் நாள்சில ;
மெல்ல நினைக்கின் பிணிபல ;—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து. 5

கல்லாரே யாயினும் கற்ருேரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. 6

பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்ருதாம் ;—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்ருதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. 7

மல்லன்மா ஞாலத்து வாழ்பவ ருள்ளெல்லாஞ்
செல்வ ரெனினும் கொடாதவர்—நல்கூர்ந்தார் ;
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார். 8

—சமண முனிவர்கள்

## 2. நன்னெறி

என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீ(து)அற்றோர் ;—துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய்! பூங்கை புகழுவோ
நாவிற்(கு) உதவும் நயந்து? 1

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி(து); ஏனையவர்
பேசுற்ற இன்சொல் பிறி(து)என்க ;—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ, நன்னுதால்! ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு? 2

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும் ;—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. 3

உள்ளம் கவர்ந்(து)எழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க ;—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு. 4

'எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்(து),' என்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ?—பைந்தொடீஇ!
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவுங் கனி. 5

இன்சொலால் அன்றி, இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே ;—பொன்செய்(து)
அதிர்வளையாய்! பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்குங் கடல். 6

கைம்மாறு உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம்செய்வர் ;—அம்மா!
முளைக்கும் எயிறு, முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று. 7

கல்லா அறி(வு)இல் கயவர்பால் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகனம் நண்ணுரே ;—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணுய் ! நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள். 8

—சிவப்பிரகாச சுவாமிகள்

## 3. ஏலாதி

கொலைபுரியான் கொல்லான் புலான்மயங்கான் கூர்த்த
அலைபுரியான் வஞ்சியான் யாதும்—நிலைதிரியான்
மண்ணவர்க்கு மன்றி மதுமலிபூங் கோதாய்!
விண்ணவர்க்கு மேலாய் விடும். 1

உடன்படான் கொல்லா னுடன்ருர்கோய் தீர்த்து
மடம்படான் மாண்டார்நூன் மாண்ட—இடம்பட
நோக்கும்வாய் நோக்கி நுழைவானேல் மற்றவனை
யாக்குமவா யாக்கு மணைந்து. 2

கற்ருரைக் கற்ற துணரா ரெனமதியார்
உற்ருரை யன்னண மோராமல்—அற்ருர்கட்
குண்டி யுறையு ளுடுக்கை யிவையீந்தார்
பண்டிதராய் வாழ்வார் பயின்று. 3

கொலைக்களம் வார்குத்துச் சூதாடு மெல்லை
அலைக்களம் போர்யானை யாக்கும்—நிலைக்களம்
முச்சா ரிகையொதுங்கு மோரிடத்து மின்னவை
நச்சாமை நோக்காமை நன்று. 4

பொய்யுரையான் வையான் புறங்கூருன் யாவரையும்
மெய்யுரையா னுள்ளனவும் விட்டுரையான்—எய்யுரையான்
கூந்தல்மயி லன்னுய்! குழீஇயவான் விண்ணோர்க்கு
வேந்தனு மிவ்வுலகம் விட்டு. 5

பெரியார்சொற் பேணிப் பிறழாது நின்று
பரியா வடியார்ப் பறியான்—கரியார்சொல்
தேரு வியையான் தெளிந்தடிசி லீத்துண்பான்
மாருன்மண் ணுளுமா மற்று. 6

—கணிமேதையார்

## 4. நீதி நெறி விளக்கம்

நீரிற் குமிழி இளமை; நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள் ;—நீரில்
எழுத்தாகும் யாக்கை ; நமரங்காள்! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று ? 1

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும் ;
புறங்கடை நல்லிசையும் நாட்டும் ;—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் ; கல்வியின் ஊங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. 2

முற்றும் உணர்ந்தவர் இல்லை ; ‘ முழுவதூஉம்
கற்றனம் !’ என்று களியற்க ;—சிற்றுளியால்
கல்லும் தகரும் ; தகரா கனங்குழாய் !
கொல்லுலைக் கூடத்தி னல். 3

குலமகட்குத் தெய்வம் கொழுநனே ; மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் ;—அறவோர்க்
கடிகளே தெய்வம் ; அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. 4

காலம் அறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து—மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை ஆளப் படும். 5

மெய்வருத்தம் பாரார் ; பசிநோக்கார் ; கண்டுஞ்சார் ;
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் ;—செவ்வி
அருமையும் பாரார் ; அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர். 6

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும், கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும்,—நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும், நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. 7

—குமரகுருபரர்

## 5. அறநெறிச் சாரம்

இன்றுளார் இன்றேயும் மாய்வர் ; அவருடைமை
அன்றே பிறருடைமை யாயிருக்கும் ;—நின்ற
கருமத்தர் அல்லாத கூற்றின்கீழ் வாழ்வார்
தருமம் தலைநிற்றல் நன்று. 1

மக்க ளுடம்பு பெறற்கரிது ; பெற்றபின்
மக்க ளறிவும் அறிவரிது ;—மக்கள்
அறிவ தறிந்தார் அறத்தின் வழுவார்
நெறிதலை நின்றொழுகு வார். 2

'பலகற்றோம் யாம்!'என்று தற்புகழ வேண்டா ;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும் ;
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்(கு)
அச்சாணி யன்னதோர் சொல். 3

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்கும் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையா நின்ற நிலை. 4

ஒளியும் ஒளிசான்ற செய்கையும் சான்றோர்
தெளிவுடைய ரென்றுரைக்குந் தேசும்—களியென்னும்
கட்டுரையாற் கோதப் படுமேல், இவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து. 5

—மூனைப்பாடியார்

# III. வருணனை

## 1. விண்மீன்

விண்மீன் இனங்காள் ! விண்மீன் இனங்காள் !
வற்கடஞ் சென்றுழி வள்ளலார் போல
அற்கடல் மான அதிர்ந்தெழு ஞான்று
கலைமதி தணந்த காலையும் ஒளிசெய்(து)

உலேவின்(று) உலகினர்க்(கு) உதவுங் கருவிகாள் !
நீலக் கம்பளத்(து) ஏலப் பரப்புபு
செயிர்தீர்ந்(து) இலங்கும் வயிரமணி என்கோ ?
விண்ணெனுங் கடலுள் மேவுமுத்(து) என்கோ ?
நீலவான் படத்தின் நிகழ்புழை வழித்தெரி
கோலம்ஆர் கயிலேக் குன்றின்ஒளி என்கோ ?
விண்தங்கு வெவ்வேறு(று) அண்டங்கள் என்கோ ?
வானமா மரைஇலே மேல்நனி மிளிரும்
புனல்துளி என்கோ ? புகலுமின் !
மினல்தகை கொண்டவெண் மீன்இனங் காளே !

—வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்

## 2. மருதம்

தண்டலே மயில்க ளாடத்
தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக்
குவளேகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ.

—கம்பநாடர்

## 3. நெற்கதிர்த் தோற்றம்

சொல்,அருஞ் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்ல வே கருஇருந்(து) ஈன்று மேலலார்
செல்வமே போல்தலே நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே.

—திருத்தக்க தேவர்

## 4. கார்

காரே!உன் நீரைஎல்லாம் கள்ளன் கவர்ந்தானே ?
நீரே உதவாய், நெறிஆமோ?—நேரேதான்

வாரிஉண்டு வாரிமொண்டு வாரிஉண்டு வான்இருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய். 1

செல்என்றுன் நாமத்தைச் செப்பினதே அல்லாது
செல்என் றுனைநாங்கள் செப்பினமா ?—அல்லென்று
மெய்யா உவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமற் போனதென்னே? பேசு. 2

வேண்டுங்கால் நீபெய்யாய் ; வேண்டாத போதுபெய்வாய் :
தாண்டிநீ செய்வவெல்லாந் தப்புகளே.—நீண்டுலவும்
வட்டமுகி லே!உனக்கு மாசெனப்பேர் தந்தோர்க்குப்
பட்டமது கட்டுவேன் பார் ! 3

மேகமே ! நீயும்அந்த மேகநோய் போற்கறுத்தாய்
சோகமே செய்துளியைத் தூறியே—வேகம்
மிகுவெட்டை யைக்கிளப்பி வேதைசெய்வ தாலே
தகுமேஉன் பேர்உனக்குத் தான். 4

மையே ! எமைமுன் வளர்த்தநீ கைவிட்டால்
ஐயே ! இனிஎமையார் ஆதரிப்பார் ?—பெய்யே
கடகட என்றுங் களகள என்றுஞ்
சடசட என்றும்நீ தான். 5

—மாயூரம் வேதநாயகம் பிள்ளை

## IV. கதைப் பகுதி

### 1. கண்ணன்—என் தோழன்

பொன்னவிர் மேனிச் சுபத்திரை மாதைப்
புறங்கொண்டு போவதற்கே—இனி
என்ன வழியென்று கேட்கி லுபாயம்
இருகணத் தேயுரைப்பான் ;—அந்தக்
" கன்னன்வில் லாளர் தலைவனைக் கொன்றிடக்
காணும் வழியொன்றிலேன்—வந்திங்
குன்னை யடைந்தனன்," என்னி லுபாயம்
ஒருகணத் தேயுரைப்பான் ; 1

கானகத் தேசுற்று நாளினு நெஞ்சிற்
கலக்கமி லாதுசெய்வான்;—பெருஞ்
சேனைத் தலைநின்று போர்செய்யும் போதினில்
தேர்நடத் திக்கொடுப்பான்;—என்றன்
ஊனை வருத்திடு நோய்வரும் போதினில்
உற்றம ருந்துசொல்வான்;—நெஞ்சம்
ஈனக் கவலைக ளெய்திடும் போதில்
இதஞ்சொல்லி மாற்றிடுவான்; 2

பிழைக்கும் வழிசொல்ல வேண்டுமென் றாலொரு
பேச்சினி லேசொல்லுவான்;
உழைக்கும் வழிவினை யாளும் வழிபயன்
உண்ணும் வழியுரைப்பான்;
அழைக்கும் பொழுதினிற் போக்குச்சொல் லாமல்
அரைநொடிக் குள்வருவான்;
மழைக்குக் குடைபசி நேரத் துணவென்றன்
வாழ்வினுக் கெங்கள்கண்ணன். 3

கேட்ட பொழுதிற் பொருள்கொடுப் பான்;சொல்லுங்
கேலி பொறுத்திடுவான்;—எனை
ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும்
ஆறுதல் செய்திடுவான்;—என்றன்
நாட்டத்திற் கொண்ட குறிப்பினை யிஃதென்று
நான்சொல்லு முன்னுணர்வான்;—அன்பர்
கூட்டத்தி லேயிந்தக் கண்ணனைப் போலன்பு
கொண்டவர் வேறுளரோ? 4

உள்ளத்தி லேகரு வங்கொண்ட போதினில்
ஓங்கி யடித்திடுவான்;—நெஞ்சில்
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தைசொன் னாலங்குக்
காறி யுமிழ்ந்திடுவான்;—சிறு

பள்ளத்தி லேநெடு நாளழு குங்கெட்ட
பாசியை யெற்றிவிடும்—பெரு
வெள்ளத்தைப் போலருள் வார்த்தைகள் சொல்லி
மெலிவு தவிர்த்திடுவான். 5

சின்னக் குழந்தைகள் போல்விளை யாடிச்
சிரித்துக் களித்திடுவான் ;—நல்ல
வன்ன மகளிர் வசப்பட வேபல
மாயங்கள் சூழ்ந்திடுவான் ;—அவன்
சொன்னப டிநட வாவிடி லோமிகத்
தொல்லை யிழைத்திடுவான் ;—கண்ணன்
தன்னை யிழந்துவி டில்,ஐய கோ!பின்
சகத்தினில் வாழ்வதிலேன் ! 6

கோபத்தி லேயொரு சொல்லிற் சிரித்துக்
குலுங்கிடச் செய்திடுவான் ;—மனத்
தாபத்தி லேயொன்று செய்து மகிழ்ச்சி
தளிர்த்திடச் செய்திடுவான் ;—பெரும்
ஆபத்தி னில்வந்து பக்கத்தி லேநின்
றதனைவி லக்கிடுவான் ;—சுடர்த்
தீபத்தி லேவிழும் பூச்சிகள் போல்வருந்
தீமைகள் கொன்றிடுவான். 7

உண்மை தவறி நடப்பவர் தம்மை
உதைத்து நசுக்கிடுவான் ;—அருள்
வண்மையி னலவன் மாத்திரம் பொய்கள்
மலைமலை யாவுரைப்பான் ;—நல்ல
பெண்மைக் குணமுடை யான்;சில நேரத்திற்
பித்தர் குணமுடையான் ;—மிகத்
தண்மைக் குணமுடை யான்;சில நேரம்
தழலின் குணமுடையான். 8

கோல்லுங் கொலைக்கஞ்சி டாத மறவர்
　　குணமிகத் தானுடையான் ;—கண்ணன்
சொல்லு மொழிகள் குழந்தைகள் போலொரு
　　சூதறி யாதுசொல்வான் ;—என்றும்
நல்லவ ருக்கொரு தீங்குநண் ணாது
　　நயமுறக் காத்திடுவான் ;—கண்ணன்
அல்லவ ருக்கு விடத்தினில் நோயில்
　　அழலினி லுங்கொடியான். 9

காதல் விளைய மயக்கிடும் பாட்டினில்
　　கண்மகிழ் சித்திரத்தில்—பகை
மோதும் படைத்தொழில் யாவினு மேதிற
　　முற்றிய பண்டிதன்காண் ;—உயர்
வேதமு ணர்ந்த முனிவ ருணர்வினில்
　　மேவு பரம்பொருள்காண் ;—நல்ல
கீதை யுரைத்தெனை யின்புறச் செய்தவன்
　　கீர்த்திகள் வாழ்த்திடுவேன் ! 10

—சி. சுப்பிரமணிய பாரதியார்

## 2. கயவன் கல்வியருமை அறிந்தது

சீர்மிகும் பெயரா னெங்குந்
　　திருகின்ற வூரில் வாழ்வோன் ;
நீர்மிகும் நிலங்க ளுள்ளோன் ;
　　நிறைபல ஏர்க ளுள்ளோன் ;
கார்மிகும் மேதி யுள்ளோன் ;
　　கானடை பலவு முள்ளோன் ;
ஏர்மிகு மில்ல முள்ளோன்
　　எல்லனென் றியம்பும் பேரோன். 1

மையெனக் கறுத்த மெய்யன் ;
　　வாங்கியுட் குழிந்த கண்ணன் ;
பையெனச் சுருங்கும் வாயன் ;
　　பலகறை படிந்த பல்லன் ;

கையினிற் கொண்ட கோலன்;
    காம்பெனத் திரண்ட காலன்;
மெய்யினு னீண்ட பாம்பின்
    வயிற்றினன்; வெடித்த சொல்லன். 2

காக்கைகண் விழிக்கு முன்னே
    கண்விழித் தெழுந்து, வாயிற்
பாக்குட னிலையை மென்று,
    பண்ணையை நோக்கிச் செல்வான்;
ஊக்கமாய் வரப்பின் மீதே
    உலவிவந் துறுவைக் கோலை
மேக்குறத் திரித்துப் பல்லை
    மினுக்குறத் துலக்கு வானே. 3

உச்சியிற் பொழுது நிற்கும்
    ஒருபகல் வேளை நண்ண
வெச்சுடன் வீட டைந்து,
    வெறியகூழ் கலக்கி யுண்டு,
இச்சையில் சொக்கட் டானை
    இன்புடன் விரித்துக் கொண்டே
அச்சம யத்தி லாட
    அயலவர் தமைய ழைப்பான். 4

அழைத்தவ ருடனி ருந்தே
    ஆடுவ னங்க னோர்நாள்
செழித்தநல் லறிவு சான்ற
    தேசிக னொருவன் போந்து,
'பழுத்தநற் பெரியீர்! நுந்தம்
    பாலனும் படித்தி டாமற்
பழித்திடத் திரிய வைத்தல்
    பான்மையோ? பகரும்,' என்றான். 5

'கல்வியிங் கெமக்கேன்? எங்கள்
கழனியைக் கண்கா ணித்துச்
செல்வமாய் வளர்ந்து மேனி
திகழுற விருந்தாற் போதும்;
'கல்விவே கத்தாற் செல்வம்
நாசமே யாகும்,' என்னச்
சொல்லின ரெங்கள் முன்னோர்;
சூதல; மற்றும் கேளும்: 6

'எங்கள்முற் பாட்ட னருக்
கிருவராங் குமரர் தம்முள்
அங்கொரு வனைப்பள் ளிக்கே
அனுப்பின ரவனு மன்றே
பொங்கிய காய்ச்சல் கண்டு
போயின னென்ப ரந்தோ!
இங்கென்மைந் தனையு மவ்வா
றிழந்திடச் சொல்கின் றீரே! 7

'பிள்ளையும் படிக்க வேண்டா;
பிரம்படி படவும் வேண்டா;
சள்ளையாஞ் சுவடி தூக்கிச்
சங்கடப் படவும் வேண்டா;
முள்ளெனு மாணி கொண்டு
முறியினி லெழுத வேண்டா;
பிள்ளையென் றிருந்தாற் போதும்
பெற்றவள் களிக்க,' என்றான். 8

'ஐய,நீர் சுவடி தம்மை
அடுக்கடுக் காகக் கற்றும்
உய்யவோர் வழியு மின்றி
உழல்கிறீர் வீடு தோறும்;

கையினிற் பொருளுள் ளார்க்குக்
கல்வியாற் பயன்றான் யாதோ ?
செய்யுமோர் தொழிலி லார்க்குச்
செப்புமிக் கதையை,' என்ன 9

'நல்லதென் மைந்தன் றன்னை
நலனுறப் படிப்பித் தற்குச்
செல்லுமோர் தொகைதான் யாது ?
செப்பிடும் பார்ப்போம் !' என்றான் ;
'எல்லரே ! உமது மைந்தன்
எழுதவும் படித்தி டற்கும்
வல்லவ னாவ தற்கு
வராகனோர் நாலைந் தாமே.' 10

என்றனன் ; என்ற லோடும்
எல்லனு மிறும்பூ தெய்தி,
'என்றது நாலு மைந்தோ,
இருபதோ ? இருப தாயின்
இன்னொரு கடாவும் வாங்கி
ஏரினிற் பூட்டி நன்றாய்க்
குன்றென நெல்வி ளைத்துக்
குவியலாய்க் குவித்தி டேனோ ? 11

'இருபது வராக னந்தோ !
எழுபது வெள்ளி யன்றோ ?
ஒருபதோ டிருப தாயின்
ஒருவிதத் தொழிக்க லாகும் ;
வருவதிங் கதனா லென்ன ?
வண்டியோ, மணியோ, மாடோ ?
தருவதிங் கெழுத்தே யன்றோ ?
தலையெழுத் தழிவ துண்டோ ?' 12

என்னவே வெறுத்துக் கூறும்
எல்லனை யிழித்து நோக்கி,
நன்னய வுபாத்தி யாயன்,
'நரைமுதிர் கிழவ ரே!நீர்
பொன்னையே பெரிதாக் கொண்டீர்;
புந்தியைச் சிறிதாக் கண்டீர்;
பின்னையப் பொருளைக் கொண்டோர்
பெருங்கடாக் கொள்ளு வீரேல், 13

'அப்பொழு தும்மி டத்தே
அருங்கடா விரண்டி ருக்கும்;
ஒப்புட னேரிற் பூட்டி
உழுதிட லாகும்,' என்ன,
'எப்படி யிரண்டுண் டாகும்?
யான்கொள்வ தொன்றே யன்றோ?
அப்படி யிரண்டுண் டாயின்
அதிட்டமென் றடைவே னன்றோ? 14

'சொல்லுமவ் வுபாயம்,' என்றே
துளைத்திட, உபாத்தி யாயன்,
'எல்லரே! நீவிர் கொள்ளும்
எருமையொன் றுடனே யுந்தம்
கல்வியில் லாத மைந்தன்
கடாவெனத் திரிவ னன்றே?
வல்லவா யிரண்டு மேதி
வரும்வழி யறிகி லீரோ?' 15

என்றனன்; அதனைக் கேட்ட
எல்லனும், 'என்னே! என்னே!
என்றனோர் மைந்தன் றன்னை
எருமையே யாக்கி விட்டீர்!

இன்றெனக் கதனை நன்று
இயம்புக,' எனவந் நல்லோன்
ஒன்றிய கல்வி யின்சீர்
உழுவனுக் குரைப்ப தானன் : 16

'மன்னிய வுயிர்க டம்முள்
மானிடன் சிறந்து நிற்றல்
அன்னவ னரிதிற் கொண்ட
அறிவின லன்றோ வையா !
துன்னுமவ் வறிவு நாளுந்
துலங்கிடச் செய்யுஞ் சீர்மை
நன்னயக் கல்விக் கல்லால்
நாடுமற் றெதற்கு முண்டோ ? 17

'வித்தையில் லாத மக்கள்
விலங்கினுங் கடைய ராவர் ;
புத்தியில் லாத மாந்தர்
புல்லினும் புல்ல ராவர் ;
மெய்த்திறங் காண்ப தற்கு
வித்தையே விழிய தாகும் ;
கைத்தலப் பொருளோ நந்தங்
கருத்தினை மயக்கு மன்றே ? 18

'கற்றறி வில்லா மாந்தர்
கண்கெட்ட மாடே யாவர் ;
மற்றவர் மண்ணின் மீதே
மடமையின் மாழ்கி நிற்பர் ;
உற்றமற் றவர்க ளிந்த
உலகுக்கோர் சுமையே யாவர் ;
பெற்றவர் செய்த பாவம்
பிள்ளையாய்ப் பிறந்த தாமே ! 19

'அந்தநாள் தொட்டு நந்தம்
ஆன்றவ ராய்ந்து வைத்த
அந்தமில் பொருளைக் கல்லான்
அறிவனோ? அரிதின் நாளும்
இந்தநல் லுலகிற் றோன்றும்
இயல்பினை யறிகி லானை
அந்தமில் கிடாயே யென்றல்
அதிசய உத்தி யாமோ? 20

'மாண்புறு கல்வி மாந்தர்
மடமையைக் கொல்வ தல்லாற்
பூண்பணி போன்று மக்கள்
பொன்றிடக் கொல்லா தையா!
வீண்பழி சுமத்த னன்றோ
வித்தையால் விளிந்தா னென்றே?
ஆண்பெண்ணென் றிருபா லாரும்
அறிவுறக் கற்கை நன்றால்.' 21

என்னவே கூறக் கேட்ட
எல்லனு மிதய நைந்து,
'முன்னமே யறியா தியானும்
மூடரின் முதன்மை பெற்றேன்!
இன்னமு மறிவு மாழ்கி
இருந்திட லெளிமை யாமே!
மன்னிய கல்வி யென்றன்
மைந்தனுக் குணர்த்து'கென்ன 22

தேசிகன் றன்னை வேண்டிச்
சிறுவனை யவன்பா லாக்கி,
'நேசமா யிவனை நல்ல
நெறியினி லுய்க்க,' என்ன,

மாசிலவ் வுபாத்தி யாயன்
மைந்தனைத் தன்பாற் கொண்டே
ஆசிகள் பலவுங் கூறி
அறிவுநூல் புகட்டி னனே. 23

—கா. ரா. நமச்சிவாய முதலியார்

### 3. நளவெண்பா

நளன் தமயந்தியிடம் தூது சென்றது

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்,
'ஏவற் றொழிலுக் கிசை,'என்றான் ;—ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினால் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து. 1

'செங்கண் மதயானைத் தேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக,' என்றான்;அத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்றானக் கோ. 2

[நளன், "தேவர் தேவே, நீர் கூறியபடியே செய்வேன்: ஆனால், அந்த நகரத்து அரண்மனையின் அந்தப்புரத்தை அதன் காவல்களைக் கடந்து நான் எப்படி அடைவது?" என்றான்.]

வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்,—'யாருமுனைக்
காணார்;போய் மற்றவளைக் காண்,'என்றான் கார்வண்டின்
பாணுறுந் தாரானைப் பார்த்து. 3

[கன்னிமாடம் புகுந்த நளனைக் கண்ட தமயந்தி,]

'காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்!
யாவனோ விஞ்சைக் கிறைவனோ ?—தேவனோ ?
உள்ளவா சொல்,'என்றாள் ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு. 4

[நளன் தமயந்தியை நேரிற்கண்டானாயினும், அவளிடம் தான் கொண்டிருந்த விருப்பத்தைத் தன் அறிவின் மிகுதியால்

அடக்கிக்கொண்டு, அவள் வினவியவற்றிற்குப் பதிலாகத் தான் தேவர்கள் தூதனாய் வந்த செய்தியைச் சொல்லித் தன் நாடு பெயர் முதலியவைகளையுங் கூறினான்.]

'என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவாய்,' என்றான் தொடையிற்றேன் தும்பிக்கே
ஊட்டுவான் எல்லாம் உரைத்து. 5

'இயமரநின் றார்ப்ப இனவளைநின் றேங்க
வயமருதோள் மன்னா! வருத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டால் என்று நினை'என்றாள் நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து. 6

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ ட்வையகத்தே—'சோதிச்
செழுந்தளர வெண்குடையாய்! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க,' என்றாள் எடுத்து. 7

வானவர்கோன் ஏவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டார் உவப்பக் கலந்து. 8

விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியும் தேவர் மனம்கிழத் தான்மொழிந்த
மென்மொழியும் சென்றுரைத்தான் மீண்டு. 9

'அங்கி அமுதநீர் அம்பூ அணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்துச்—சங்கையறப்
பெற்றாய்,' எனவருணன் ஆகண் டலன்தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம். 10

தமயந்தி திருமணம்

பூசுரர்தம் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியும் தாமரையும் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையாள் ஆழ்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது. 11

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார் ;—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணநின்
றாசலா டுற்றா ளுளம். 12

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் ? வானவரும் வந்திருந்தார்
பொற்றோர் நளனுருவாய்ப் போந்து. 13

'மின்னும்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியான் ஆகில் கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அருள்,'என்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. 14

கண்ணிமைத்த லாலடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு. 15

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். 16

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது. 17

[பிறகு, வீமராஜன் நல்ல முகூர்த்தத்தில் தமயந்திக்கும் நளனுக்கும் திருமணத்தைச் சிறப்பாகச் செய்வித்தான். அதைக் கண்டு தேவர் நால்வர் தவிர மற்றவர் எல்லாரும் பெருமகிழ் வெய்தினர்.]

—புகழேந்திப் புலவர்

## V. பல்சுவைப் பகுதி

### 1. சீட்டுக்கவி

கல்விச் சமுத்திரங் கமலால யந்தமிழ்க்
கடன்மடை திறந்தவெள்ளம்
கற்பனை பிறப்பிடங் கலைமக ளிருப்பிடங்
கவிமாரி பொழியுமேகம்
சொல்விற் பனம்விளையு மதுரக் களஞ்சியந்
தோன்றுகார்ப் பூரதீபம்
சுகிர்தகுண அவதானி சரவணப் பெருமாள்கை
தொட்டெழுதி விட்டசனது:
வில்லுக் கருச்சுனன் சொல்லுக் கரிச்சந்த்ரன்
வெற்றிக்கு விக்ரமார்க்கன்
வித்தைக் ககத்தியன் முத்துக் கருப்பண்ண
விலட்சண னெதிர்க்துகாண்க:
மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலென்றுகா
மாவென்று காவென்று நாவொன்று பாவொன்று
வருகின்ற தருள்புரிகவே!

—சரவணப்பெருமாள் கவிராயர்

### 2. மீனாட்சியம்மை குறம்

திங்கள்முடி சூடுமலை; தென்றல்விளை யாடுமலை;
தங்குபுயல் சூழுமலை; தமிழ்முனிவன் வாழுமலை;
அங்கயற்கண் ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை; பொதியமலை என்மலையே.

—குமரகுருபர சுவாமிகள்

### 3. திருவரங்கக் கலம்பகம்

தேனமருஞ் சோலைத் திருவரங்கர் எப்பொருளும்
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலர்காண் அம்மானை ;
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலரே ஆமாகில்,
சானகியைக் கொள்வரோ தாரமாய்? அம்மானை ;
தாரமாய்க் கொண்டதுமோர் சாபத்தால் அம்மானை.

—பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்

### 4. சதகம்

பணந்தானே அறிவாகும் ; பணந்தானே வித்தையுமாம் ;
பரிந்து தேடும்
பணந்தானே குணமாகும் ; பணமில்லா தவர்பிணமாம்
பான்மை சேர்வர் ;
பணந்தானே பேசுவிக்கும் ; தண்டலைநீள் நெறியாரே !
பார்மீ தில்தான்
பணந்தானே பந்தியிலே, குணந்தானே குப்பையிலே
படுக்குந் தானே.

—தண்டலையார் சதகம்

### 5. பிள்ளைத்தமிழ்—நாலப்பருவம்

சோறு மணக்கும் மடங்களெலாம் ;
தூய்மை மணக்கும் சிந்தையெலாம் ;
சுவண மணக்கும் ஆடையெலாம் ;
தொங்கல் மணக்கும் தோள்களெலாம் ;
சேறு மணக்கும் கழனியெலாம் ;
செல்வ மணக்கும் மாடமெலாம் ;
தென்றல் மணக்கும் மேடையெலாம் ;
தெய்வ மணக்கும் செய்யுளெலாம் ;
நீறு மணக்கும் நெற்றியெலாம் ;
நெய்யே மணக்கும் கறிகளெலாம் ;
நெருப்பு மணக்கும் குண்டமெலாம் ;
நேய மணக்கும் வீதியெலாம் ;

சாறு மணக்கும் குன்றத்தூர்த்
தலைவா! தாலோ! தாலேலோ!
சகலா கமபண் டித!தெய்வச்
சைவா! தாலோ! தாலேலோ!

—சேக்கிழார்

## VI. தனிப் பாடல்கள்

### 1. சுதந்தரச் சிறப்பு

மீன்கடலே எழுந்தாலும், விண்சுடரே விழுந்தாலும்,
மான்மலைகள் சாய்ந்தாலும், மண்கம்ப மானாலும்,
ஊன்கொந்திக் கண்டதுண்டம் ஒன்னலர்கள் செய்தாலும்,
வான்மருவ நேர்ந்தாலும் மறப்பதன்று சுதந்தரமே.

—திரு. வி. கல்யாணசுந்தரனார்

### 2. தாய் தமர்கள் இல்லாததால்

சேராத வேடன் செருப்பா லுதைக்கவும், தீண்டவும்,தண்
ணீர்வா யுமிழவும், உச்சிட்டம் போடவும், நீண்டசிலைத்
தாரா லடிக்கவும், கண்ணீர் ததும்பவும் தாய்தமர்கள்
ஆரா கிலுமில்லை யோதிருக் காளத்தி யப்பனுக்கே!

—சொக்கநாதப் புலவர்

### 3. பொன்

'பொன்னென உலக மெல்லாம்
போற்றிடும் பொருளே! உன்றன்
மின்னிகர் வண்ணம் எங்கே
பெற்றனை விளம்பாய்,' என்றேன்;
'அன்னையர் தமிழ்ப்பா வாற்றம்
மதலையர் அழுகை போக்கும்
கன்னியந் தமிழ்நன் னாட்டுக்
கன்னிய ரிடத்தி னன்றே?'

—பரலி சு. நெல்லையப்பர்

### 4. தமிழ்த் தெய்வம்

பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே இருந்து வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்தோர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்.

—வரந்தருவார்

### 5. குரங்கு வந்த காரணம்

புராதன மான தமிழ்ப்புல வீரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென் னோ?வகை கேட்டிலையோ ?
தராதலம் வென்ற தமிழ்மா றனையுந்தன் தம்பியையும்
இராகவ னென்று மிலக்குவ னென்று மிருந்ததுவே.

—இரட்டையர்

## VII. திருக்குறள்

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 1

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 2

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. 3

செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி. 4

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். 5

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 6

அன்பின் வழியது உயிர்நிலை ; அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. 7

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல். 8

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 9

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் ; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 10

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி. 11

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் ; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 12

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. 13

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் ; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். 14

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். 15

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 16

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு? 17

சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 18

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வியாது அடிஉறைந் தற்று. 19

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 20

ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 21

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 22

வசைஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 23

பொருளற்றார் பூப்பர் ஒருகால்; அருளற்றார்
அற்றார்;மற் றாதல் அரிது. 24

வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 25

வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின்? 26

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 27

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும். 28

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 29

இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 30

பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும். 31

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்
செல்லாது உயிருண்ணுங் கூற்று. [நாள்மேல் 32

ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல. 33

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. 34

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 35

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. 36

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. 37

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை ; அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். 38

அறிவுடையார் எல்லாம் உடையார் ; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். 39

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை ; நயவற்க
நன்றி பயவா வினை. 40

முதலிலார்க்கு ஊதியம் இல்லை ; மதலையாஞ்
சார்பிலார்க்கு இல்லை நிலை. 41

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். 42

எண்ணித் துணிக கருமம் ; ‘ துணிந்தபின்
எண்ணுவம்’ என்பது இழுக்கு. 43

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 44

எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல். 45

தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். 46

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தொடு
எய்த உணர்ந்து செயல். 47

சுற்றத்தாற் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். 48

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின். 49

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண். 50

திறனறிந்து சொல்லுக சொல்லை ; அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல். 51

துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 52

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்து
நல்லார் அவையஞ் சுவார். 53

அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 54

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையின் பேதையார் இல். 55

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். 56

பணியுமாம் என்றும் பெருமை ; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 57

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு? 58

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 59

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 60

# செய்யுட்பகுதி—குறிப்புரை

## I. கடவுள் வணக்கம்

1. அருள் பழுத்த - கருணை முதிர்ந்த ; அரியவான பொருளனைத்தும்—கிடைத்தற்கு அருமையான பொருள்கள் எல்லாவற்றையும் ; பூரணமாய் - குறைவற்றதாய் ; கருவி - காரணம் ; விரிவினை - பார்த்த வினை ; உயிர்த்திரள் - உயிர்களின் கூட்டம் ; விழுப்பொருள் - மேலான பொருள்.

2. தோய்விலன் - தங்காதவன் ; புலன் ஐந்து - உணர்தல், உருசி, காட்சி, மோத்தல், கேட்டல் ஆகியவை.

3. வெள்ளந்தாழ் விரிசடையாய் - கங்கையைச் சடையிற்றாங்கிய சிவபெருமானே ; விடையாய் - எருதை வாகனமாகக் கொண்டவனே ; வேட்ட - விரும்பிய.

4. உவப்பு - மகிழ்ச்சி ; கலகமுறு - குற்றமற்ற ; விலகலுறு - நீங்குதல் இல்லாத ; மீதானம் - ஆகாயம்.

5. புனல் - நீர் ; வளி - காற்று ; வெளி - ஆகாயம் ; மன்னி - தங்கி ; மதி கதிர் - சந்திர சூரியர் ; ஒரு நெறி - ஒப்பற்ற மதம் ; பொதுமை - சமரசம்.

## II. நீதிப் பகுதி

### 1. நாலடியார்

1. அகள் தீர் - குற்றமற்ற ; பகடு நடந்த கூழ் - எருமைக்கடாவை ஏரிற்பூட்டி உழுது பயிரிடப்பட்ட தானியம் ; அகடுற - நிலைபெற ; சகடக்கால் - வண்டியின் சக்கரம்.

2. ஓராதே - நினையாமல் ; ஆற்ற - மிகுதியாக ; தீங்கு ஊக்கல் - தீங்கு செய்வதில் மனம் கொள்ளுதல் ; வான் தோய் - உயர்ந்த.

3. நீர் - பனிநீர் ; இன்னினியே - இப்பொழுதே ; இருந்தான் - உட்கார்ந்திருந்தான் ; கிடந்தான் - படுத்திருந்தான் ; கேள் - சுற்றத்தார் ; சென்றான் - மரணமுற்றான்.

4. குஞ்சி - தலை மயிர் ; தானை - ஆடை ; கோட்டமுகு - கரையின் அழகு.

5. தெள்ளிதின் ஆராய்ந்து - நன்கு ஆராய்ந்து ; அமைவுடைய - தகுதியுள்ளவற்றை ; குருகின் - அன்னப் பறவை போல.

6. தலைப்படுவர் - அமையப் பெறுவர் ; தொல் சிறப்பு - பழமையான புகழ் ; ஒண்ணிறம் (ஒள் + நிறம்) - ஒளி மிக்க நிறம் ; புத்தோடு - புதப்பானை.

7. அளாய - கலந்த ; தேரின் - ஆராயின் ; சிறுமை - புன்மை.

8. மல்லல் - வலி பொருந்திய ; மாஞாலம் - பெரிய உலகம் ; நல்கூர்ந்தார் - தரித்திரர் ; பெருமுத்தரையர் - ஒரு சிற்றரச வமிசத்தவர்.

## 2. நன்னெறி

1. முகமன் - வரவேற்றல் ; துன்று - நிறைந்த ; குழலாய் - கூந்தலை உடைய பெண்ணே.

2. மாசற்ற - குற்றமற்ற ; இன்சொல் பிறிது என்க - இன்சொல்லை வன்சொல் என்று கொள்க ; நல்லோன் எறிசிலை - சாக்கிய நாயனுரால் வீசி எறியப்பெற்ற கல் ; நன்னுதால் - அழகிய நெற்றியை உடைய பெண்ணே ; கருப்பு வில்லோன் - கரும்பு வில்லை உடைய மன்மதன்.

3. புயல் - மேகம் ; பெய்யாக் கொடுக்கும் - பெய்து உபகரிக்கும்.

4. கவர்ந்து - பற்றி ; சினம் - கோபம் ; தடங்கரை - விசாலமான கரை.

5. எந்தை - எம் தந்தை ; நல்கூர்ந்தான் - வறுமையடைந்தான் ; பைந்தொடீ - பசுமையான பொன்னாலாகிய வளையலை அணிந்த பெண்ணே ; அரம்பை - வாழை.

6. இரு நீர் - பெரிய கடல் ; வியனுலகம் - அகன்ற உலகம் ; அதிர் வளையாய் - ஒளிக்கின்ற வளையலையணிந்த பெண்ணே ; அழற்கதிர் - சூரியன் ; தண்ணென் கதிர் - சந்திரன்.

7. உகவாமல் - விரும்பாமல் ; எயிறு - பல் ; வலியன - வன்மையான பொருள்களை.

8. கயவர் - கீழ் மக்கள் ; வில்லார் - வில்லிற்பொருந்திய ; கணையின் - அம்பு போல ; பொலியும் - விளங்கும் ; நொய்தாம் — அற்பமான, சிறிய ; புணை - தெப்பம்.

## 3. ஏலாதி

'ஏலாதி' என்பது, ஏலம், இலவங்கம், சிறு நாவற்பூ, மிளகு, திப்பிலி சுக்கு என்னும் இவ்வாறு சரக்குகளால் செய்யப்பட்ட சூரணத்தைக் குறிக்கின்றது. இம்மருந்து மக்களுடம்பில் உண்டாகும் பிணிகளை நீக்குவது போல, ஒவ்வொரு பாட்டிலும் அவ்வாறு விஷயங்களைக்

கொண்ட இந்நூல் மக்களின் அறியாமைப் பிணியை அகற்ற வல்லது. இதனையுட்கொண்டே இந்நூலுக்கு இப்பெயர் இடப்பெற்றது.

1. கொலை புரியான் - பிறர் செய்யும் கொலைத் தொழிலை விரும்பாதவன்; கொல்லான் - தான் கொலை செய்யாதவன்; புலால் மயங்கான் - மாமிசத்தை அறிவு மயங்கித் தின்னாதவன்; கூர்த்த - மிகுந்த; அலை - (பிறரை) வருத்தும் தொழில்; யாதும் - சிறிதும்; நிலை திரியான் - தன் கொள்கையினின்று மாறாதவன்; மது மலி - தேன் நிறைந்த; பூங்கோதாய் - பூவை அணிந்த கூந்தலை உடைய பெண்ணே.

2. உடன்படான் - பிறர் செய்யும் கொலைக்குத் தான் சம்மதியாமல்; கொல்லான் - தானும் கொல்லாமல்; உடன்றார் - அன்புறுகின்றவர்; மடம் படான் - அறிவில்லாச் செயலில் ஈடுபட மாட்டான்; மாண்டார் - மாட்சிமை பொருந்தியவர்; மாண்ட - மாட்சிமைப்பட்ட; இடம்பட - பெருகும்படி; நோக்கும் வாய் - ஆராய்வதற்குரிய பெரியாரிடத்தில்; நோக்கி-ஆராய்ந்து; நழைவானேல் - ஒழுகுவானானால்; யாக்கும் - நீங்காதிருக்கும்.

3. உற்றாரை - நட்பினரை; அன்னணம் - அவ்வாறே; அற்றார்கட்கு - துறவிகட்கு; உறையுள் - இருப்பிடம்; உடுக்கை - ஆடை.

4. வார்குத்து - நீரானது நிலத்தைப் பிளந்தோடும் இடம்; அலைக்களம்-வருத்துகின்ற சிறைச்சாலை; யாக்கும் - நிலைபெற்றிருக்கும்; முச்சாரிகை - யானை, தேர், குதிரை இம்மூன்றும் சாரியிட்டு ஓடுகின்ற; இன்னவை - இவற்றை; நச்சாமை - விரும்பாமை.

5. வையான் - இகழாதவன்; மெய் கூரையான் - (ஒருவர்க்கு நேர இருக்கும் துன்பத்தை அகற்றுதற்காக) நடந்த உண்மையை வெளியிடாதவன்; உள்ளனவும் - தான் அறிந்தவற்றையும்; விட்டுரையான் - வாய் விட்டுச் சொல்லாதவன்; எய் - துன்பம்; குழீஇய - கூடியுள்ள.

6. பேணி - காத்து; பரியா - விரும்பாமல்; அடியார் - பணியாளர்; பறியான் - நீக்கான்; கரியார் - வஞ்சகர்; தேறான் - நம்பான்; இயையான் - நட்புக் கொள்ளான்; அடிசில் - உணவு; மாறான் - நீக்கமின்றி.

## 4. நீதி நெறி விளக்கம்

1. நெடுந்திரைகள் - நீண்ட அலைகள்; யாக்கை - உடம்பு; நமராங்காள் - நம்மவர்களே; எம்பிரான் மன்று-எம் கடவுளின் சிற்சபை.

2. வீடு - மோட்சம் ; புறங்கடை - வீட்டின் புறத்தே ; நல்லிசை - நல்ல புகழ் ; காட்டும் - நிலைநிறுத்தும் ; உறுங்கவல் - வந்தடையும் துன்பம் ; உற்றுழியும் - வந்த போதும் ; கை கொடுக்கும் - துணை புரியும் ; கல்வியின் ஊங்கில்லை - கல்வியைக்காட்டிலும் மேலானது இல்லை.

3. முற்றும் உணர்ந்தவர் - எல்லாவற்றையும் அறிந்தவர் ; களியற்க - மகிழ்ச்சியடையாதே ; தகரும் - உடையும் ; தகரா - உடையா; கனங்குழாய் - பொற் குண்டலங்களை அணிந்த பெண்ணே ; கொல் உலை - கொல்லனுடைய உலைக்களம் ; கூடம் - சம்மட்டி.

4. கொழுநன் - கணவன் ; மன்ற - நிச்சயமாக ; அறவோர் - துறவிகள் ; அடிகள் - குரு.

5. மூலம் - காரணம் ; வினைவறிந்து - பயன் அறிந்து ; சூழ்வன - ஆராய வேண்டுவனவற்றை ; சூழ்ந்து - ஆராய்ந்து ; ஆள்வினை - முயற்சி ; ஆளப்படும் - செய்யப்படும்.

6. மெய் - உடல் ; கண் துஞ்சார் - தூங்கார்.

7. அவை - சபை ; மெய் - உடல் ; விதிர்ப்பார் - நடுங்குவார் ; ஆகுலச் சொல் - ஆரவாரப் பேச்சு ; நவை - குற்றம் ; ஈத்துண்ணுர் - பிறர்க்குக் கொடுத்துத் தாமும் உண்ணுதவர் ; நல்கூர்ந்தார் - வறியவர் ; பூத்தலின் பூவாமை நன்று - தோன்றுவதைக் காட்டிலும் தோன்ருதிருத்தல் நலம். ஈத்து - ஈந்து என்பதன் வலித்தல் விகாரம்.

## 5. அறநெறிச் சாரம்

1. மாய்வர் - இறப்பர் ; கூற்றின்கீழ் - இயம பயத்துக்குட்பட்டு ; தலை நிற்றல் - ஈடுபட்டு நிற்றல்.

2. நெறிதலை - அற நெறியிலே ; நின்றொழுகுவார் - நின்று வாழ்வார்.

3. அலர் கதிர் - விரிந்த கிரணங்கள் ; ஞாயிற்றை - சூரியனை.

4. முகத்தினும் - முகக் குறிகளாலும் ; வாயினும் - சொற்களாலும் ; சான்றோர் - வஞ்சப் புகழ்ச்சியாய் இழிந்தோர் என்னும் பொருள் தந்தது.

5. தேசு - புகழ் ; களி என்னும் கட்டுரை - கட்குடியன் என்னும் சொல் ; கோதப்படுமேல் - மாசு அடையுமானல்.




# III. வருணனை

## 1. விண்மீன்

விண்மீன் - நட்சத்திரம், வற்கடம் - பஞ்சம்; வள்ளலார் - வரையாது கொடுப்பவர்; அற்கடல் - இருண்ட கடல்; மான - ஒப்ப; கலைமதி - கிரணங்களையுடைய சந்திரன்; உலைவின்று - (உலைவின்றி) ஓய்வில்லாமல்; செயிர் தீர் - குற்றமற்ற; கோலம் ஆர் - அழகு பொருந்திய; வானமாமரை இலை - வானமாகிய தாமரை இலை; புனல் துளி - நீர்த்துளி; மினல் தகை - மின்னுந் தன்மை.

## 2. மருதம்

தண்டலை - தண் + தலை - குளிர்ச்சி பொருந்திய இடம்; விளக்கம் - விளக்கு; கொண்டல் - மேகம்; முழவு - மிருதங்கம்; குவளை - நீலோற்பல மலர்; தெண்டிரை - தெள் + திரை - தெளிந்த அலை; எழினி - திரைச்சீலை; மகரயாழ் - நரம்புகள் பிணிக்கப்பட்ட மகர மீன் போன்ற உருவமுள்ள ஒரு வகை இசைக் கருவி; மருதம் - மருத நிலமாகிய மங்கை (வயலும் வயல் சார்ந்த இடமும்).

## 3. நெற்கதிர்த் தோற்றம்

சொல் - நெல்; சூல் - கரு; பசும்பாம்பு - பச்சைப் பாம்பு; ஈன்று - கதிர் விட்டு; மேலலார் செல்வம் - கீழ் மக்களின் செல்வம்; தலை நிறுவி - தலை நிமிர்ந்து; இறைஞ்சி - வணங்கி.

## 4. கார்

1. கார் - மேகம்; வாரி உண்டு - கடலை உண்டு; வாரி மொண்டு - அள்ளி முகந்து; வாரி உண்டு — நீரை உட்கொண்டு.
2. செல் - மேகம்; செல் - போ; அல்லென்று - இருள் என்று, அல்ல என்று.
3. முகில் - மேகம்; மாசு - மேகம், குற்றம்.
4. மேக நோய் - மக்களுக்குக் கெட்ட நீரால் உண்டாகும் நோய்; வெட்டை - வெப்பம்; வேதை - வேதனை.
5. மை - மேகம், 'கடகட, களகள, சடசட' - ஒலிக்குறிப்புக்கள்.

# IV. கதைப் பகுதி

## 1. கண்ணன்—என் தோழன்

இது பாரதியாரால் இயற்றப் பெற்ற தொடர்நிலைச் செய்யுள்களுள் ஒன்று.

சுபத்திரையைத் துரியோதனன் மணக்க விரும்பினன். அவனுக்கு அவள் வாழ்க்கைப்படக் கூடாதென எண்ணிய கண்ணன் தன் தங்கையாகிய அவளை ஓர் உபாயத்தால் அருச்சுனனுக்கு மணம் முடித்து வைத்தான்.

1. பொன்னவிர் - பொன் போலப் பிரகாசிக்கும்.
2. தேர் நடத்திக் கொடுப்பான் - கண்ணன் பாரதப் போரில் அருச்சுனனுக்குத் தேர் செலுத்தினன்; ஊனை - உடலை.
3. வினையாளும் வழி - காரிய சித்திக்குரிய உபாயம்.
4. நாட்டத்தில் - கருத்தில்.
5. மெலிவு - தளர்ச்சி; தவிர் - நீக்கு.
6. வன்ன மகளிர் - அழகு பொருந்திய பெண்கள்.
7. மனத்தாபத்தில் - பகையில்; தீபத்திலே விழும் பூச்சி - விட்டிற் பூச்சி.
8. பித்தர் குணம் - பைத்தியம்; தழலின் - நெருப்பின்.
9. மறவர் - வீரர்; நண்ணுறு - அணுகாது; அல்லவர் - கெட்டவர்; விடத்தினில் - விடத்தைக்காட்டிலும்; அழலினில் - நெருப்பைக் காட்டிலும்.
10. படைத் தொழில் - போர்த் தொழில்; பரம்பொருள் - மேலான பொருள்; கீதை - கிருஷ்ண பகவான் அருளிய பகவத்கீதை என்னும் நூல்.

## 2. கயவன் கல்வியருமை அறிந்தது

1. திரு - இலக்குமி, செல்வம்; கார் - கருமை; மேதி - எருமை; காலடை (கால் + நடை) - ஆடு மாடு முதலியவை; ஏர் - அழகு. (முதலில் வந்துள்ள ஏர், உழுவதற்குப் பயன்படும் கருவி.)
2. மை - இருள், கறை, மாசு; கரை - விளிம்பு, எல்லை; மெய்யினீண்ட - மெய்யினால் + நீண்ட; பாம்பின் வயிற்றினன் - பாம்பு போன்ற ஒட்டிய வயிற்றினன்.
3. பாக்குடனிலையை - பாக்குடன் + இலையை; இலையை - வெற்றிலையை; மேக்கு - மேலே; மினுக்குற - பளபளப்பாகுமாறு.
4. நண்ண - நெருங்க; வெச்சுடன் - வெயிலால் ஏற்பட்ட வெப்பத்துடன்; வெறிய - புனித்த; இச்சையில் - விருப்பமில்லாத; அயலவர் - அக்கம்பக்கத்திலுள்ளோர்.

5. ஆடுவனுங்கணோர் (ஆடுவன் + ஆங்கண் + ஓர்) - ஆடுவான் அங்கே ஒரு ; தேசிகன் - ஆசிரியன் ; பழுத்த - வயதில் முதிர்ந்த ; பான்மையோ - தகுதியாகுமோ ; பகரும் - சொல்லும்.

6. மேனி - உடல் ; திகழுற - விளக்கமுற, அழகுற ; நல்விவேகம் - நல்லறிவு ; சூதல - பொய்யன்று.

7. போயினன் - இறந்தான்.

8. சள்ளை - தொந்தரை ; முறி - பனையோலை, எழுதுமுறி.

9. உய்ய - பிழைக்க ; உழல்கிறீர் - சுற்றுகிறீர் ; செப்பும் - கூறும் ; என்னு - என்று கூற.

10. வராகன் - மூன்றரை ரூபாய்.

11. இறும்பூது - மகிழ்ச்சி.

13. நன்னயம் - நற்குணம் ; புந்தி - அறிவு ; பெருங்கடா - பெரிய எருமைக்கடா.

14. அதிட்டம் - அதிருஷ்டம், நல்வாய்ப்பு.

15. துளைத்திட - தொந்தரை செய்திட ; வல்லவாம் - வலிமை பொருந்தியவையாகிய ; அறிகிலீரோ - அறியமாட்டீரோ.

16. இயம்புக - கூறுக ; ஒன்றிய - பொருந்திய.

17. மன்னிய - நிலை பெற்ற ; உயிர்கடம்முள் - உயிர்கள் + தம்முள் ; அரிதில் - அருமையாக ; துன்னும் - மேம்படும், அதிகமாகும் ; துலங்கிட - சிறக்க ; சீர்மை - கீர்த்தி, புகழ் ; நன்னயம் - சிறப்பு ; நாடும் - விரும்பும்.

18. கடையர் - கடைசி நிலையிலுள்ளோர் ; புல்லர் - அற்பர் ; மெய்த் திறம் - மெய்ஞ்ஞானம் ; விழி - கண் ; கைத்தலம் - கையாகிய இடம் ; நந்தம் - நம் + தம் - நம்முடைய.

19. மாழ்கி - மயங்கி.

20. ஆன்றவர் - மூதாதையர் ; அந்தமில் - அழகில்லாத, முடிவில்லாத ; அறிகிலானை - அறியாதவனை ; கடாய் - எருமைக்கடா ; அதிசய உத்தி - உயர்த்திப் பேசுதல்.

21. மாண்புறு - பெருமை பொருந்திய ; பூண் பணி - அணிந்துள்ள நகைகள் ; பொன்றிட - இறக்க ; சுமத்தனன்றே - சுமத்தல் + நன்றே ; விளிந்தான் - இறந்தான்.

22. இதயம் - மனம் ; நைந்து - வருந்தி.

23. நெறியினில் - வழியில் ; உய்க்க - செலுத்துக ; மாசில் (மாசு + இல்) - குற்றமற்ற.

## 3. நளவெண்பா

1. விண்ணவர் கோன் - இந்திரன், தேவர்களின் அரசன் ; ஏவல் தொழிலுக்கு - நாம் ஏவுகின்ற வேலைக்கு ; இசை - உடன்படு ; ஓராது - நினையாமல் ; நேர்ந்தான் - சம்மதித்தான்.

2. தேமாலை - தேன் பொருந்திய மலர்மாலை ; இயல் வீமன் - முயற்சி மிக்க வீமன் ; தோகை - மயில் (இங்கு உவமை ஆகுபெயராய்த் தமயந்தியை உணர்த்தியது.) ; ஆகத்தால் - மனத்தால் ; கோதாக (கோது + ஆக) - சாரமற்ற பொருளாக ; கோ - மன்னன்.

3. வார் - நீண்ட ; வெஞ்சிலை - கொடிய மைநாக மலை ; வச்சிரத் தால் - வச்சிராயுதத்தால் ; மால் - பெரிய ; வரை - மலை ; கார் - கரிய ; பாணாறும் (பாண் + நாறும்) - பாட்டுத் தோன்றும் ; தாரானை - மாலை தரித்த நளனை.

4. விஞ்சை - வித்தை ; இறைவனோ - தலைவனாகிய வித்தியாதரனோ ; ஊசற்குழை - ஊசலாடும் காதணி ; வெள்ளவாள் - கடல் போன்ற ஒளி மிக்க கண்.

5. இமையவர் - தேவர் ; பொன்னுலகம் - சொர்க்க லோகம் ; புரவலன் - இந்திரன் ; தொடை - மாலை ; தும்பி - தேனீ.

6. இயமரம் - இசைக்கருவிகள் ; ஆர்ப்ப - ஒலிக்க ; இனவளை - இனமாகிய சங்கு ; ஏங்க - ஒலிக்க ; வயம் மரு - வலிமை பொருந் திய ; நைவாள் - வாடுகிறவளான தமயந்தி.

7. போது - தாமரை மலர் ; அரிக்கண் - இரேகையையுடைய கண் ; மாதராள் - தமயந்தி ; தாளம் - முத்து.

8. வாணுதல் (வாள் + நுதல்) - ஒளி பொருந்திய நெற்றி ; முரலும் - ஒலிக்கும் ; வண்டார் (வள் + தார்) - அழகான மாலை.

9. வன்மொழி - கடினச் சொற்கள்.

10. அங்கி - நெருப்பு ; சங்கையற - சந்தேகமில்லாமல் ; ஆகண்டலன் - இந்திரன் ; மற்றோனும் - அக்கினித் தேவனும்.

11. பூசரர் - பிராமணர் ; பூங்குமுதம் - அழகிய ஆம்பல் ; முகிழ்ப்ப - குவிய ; வாசம் - வாசனை ; கோதையாள் - தமயந்தி ; புலர்ந்தது - விடிந்தது.

12. பூவரைந்த - மலர் சூட்டப்பெற்ற; ஊசல் ஆடிற்ருள் - ஊசலாடு வது போலச் சஞ்சலமடைந்தாள்.

13. பூண் - ஆபரணம்; நாண் - வெட்கம்; போந்து - வந்து.

14. மெய்ம்மரபில் - சத்தியமுள்ள குலத்தில்; சூழ்விதி - சேர்ந்த விதி.

15. காசினி - பூமி; தோய்தலால் - படிதலால்.

16. வெள்கி - வெட்கப்பட்டு; சுளிக்க - சுருங்க; களிகூர - மகிழ்ச்சி மிகுந்திருக்க; பொன் - இலக்குமி போன்ற தமயந்தி.

17. திண்டோள் (திண் + தோள்) - வலி மிக்க புயம்; ஒண்டாரை (ஒள் + தாரை) - ஒளியும் கூர்மையும் உடைய; கோ - வச்சிரா யுதம்; குலமாலை - குலத்திற்குப் பூமாலை போன்ற தமயந்தி.

## V. பல்சுவைப் பகுதி

1. ஆலயம் - இருப்பிடம்; மடை - நீரணை; விற்பனம் - வன்மை; சுகிர்தம் - இன்பம்; சனது - நற்சான்றி, ஓலை.

2. தென்றல் - இளங்காற்று; தமிழ் முனிவன் - அகத்தியன்; அங் கயற்கண் (அம் + கயல் + கண்) - அழகிய கயல்மீன் போன்ற விழி.

3. தேன் அமரும் சோலை - தேன் பொருந்திய பூமரங்கள் அடர்ந்த பூங்கா; தாரம் - மனைவி.

4. பான்மை - வகை; பார் - பூமி.

5. சிந்தை - மனம்; சுவணம் - பொன்; தொங்கல் - மாலை; நீறு - திருநீறு; குண்டம் - ஓமக்குழி; நேயம் - அன்பு; சகலாகமம் - மறையனைத்தும்.

## VI. தனிப் பாடல்கள்

1. விண் சுடர் - நட்சத்திரம்; கம்பம் - தூண்; கொந்தி - கொய்து; ஒன்னலர்கள் - பகைவர்கள்; மருவ - கலக்க.

2. உமிழவும் - துப்பவும்; உச்சிட்டம் - எச்சில்; நமர்கள் - உற வினர்கள்.

3. தமிழ்ப்பாவாற்றம் - தமிழ்ப்பாவால் + தம்; மதலையர் - குழந் தைகள்.

4. பொருப்பிலே - (பொதிகை) மலையிலே; தென்னன் - பாண்டியன்; இருப்பிலே - இருக்கையிலே; பேதை - பெண்; மருங்கிலே - பக்கத்திலே.

5. புராதனம் - பழமை; மராமரம் - ஒரு வகை மரம்; தராதலம் - பூமி; தமிழ் மாறன் - பாண்டியன்.

## VII. திருக்குறள்

1. பிறவி - வாழ்க்கை, இறைவன் - கடவுள், அடிசேராதார் - அடிபணியாதவர்.

2. கெடுப்பதூஉம் - அதிகம் பெய்து கெடுப்பதும், கெட்டார்க்கு - இல்லாமல் வருந்துபவர்க்கு, சார்வாய்-துணையாய், எடுப்பதூஉம்- காப்பதும்.

3. குன்று - சிறு மலை, வெகுளி - கோபம்.

4. செயற்பாலது - செய்யத் தக்கது, அறன் - தருமம், உயற்பாலது - ஒழிக்க வேண்டுவது, ஒரும் - அசை.

5. வையம் - உலகம், வாழ்வாங்கு - உலகில் வாழவேண்டிய அறநெறியின்படி, வானுறையும் - விண்ணுலகில் இருக்கும்.

7. என்பு - எலும்பு.

8. அகனமர்ந்து - மனம் விரும்பி, செய்யாள் - திருமகள், முகனமர்ந்து - முகமலர்ச்சியோடு, ஓம்புவான் - உபசரிப்பவன்.

9. இனிய - இனிமையான சொற்கள், இன்னாத - கடுமையான சொற்கள், கவர்ந்தற்று - புசிப்பது போல ஆகும்.

10. நன்றி - தருமம், உய்வு - தப்பிப் பிழைக்கும் வழி, செய்ந்நன்றி - ஒருவர் செய்த உதவி.

11. சமன் செய்து - சமமாக, கோல் - துலாக்கோல், ஒருபால் - ஒரு பக்கம், கோடாமை - சாயாமை, சான்றோர் - பெரியோர், அணி - அழகு.

12. தகைத்து - போன்றது.

13. அழுக்காறு - பொறாமை, ஆக்கம் - செல்வம், ஒழுக்கமிலான் - நல்லொழுக்கம் இல்லாதவன்.

14. ஒறுத்தார்க்கு - தீங்கு செய்தவர்களைத் தண்டிப்பவர்க்கு, பொன்றும் துணையும் - (உலகம்) அழியும் வரையில்.

15. அழுக்கறுப்பான் - பொறாமை கொள்பவன்.

16. வெஃகி - விரும்பி, அறனல்ல - தருமத்திற்குப் புறம்பானவற்றை.

17. ஏதிலார் - அயலார், காண்கிற்பின் - உணரவல்லாராயின், மன்னும் உயிர்க்கு - நிலைபெற்ற உயிர் வாழ்க்கைக்கு.

19. வீயாது - அழியாது, அடிஉறைந்தற்று - அடியில் தங்கியிருத்தலைப் போன்றது.

20. ஊருணி - ஊரார் நீருண்ணும் குளம், உலகவாம் - உலகம் அவாவுமாறு, திரு - செல்வம்.

21. ஆற்றுவார் - தவ வலிமையுடையவர், ஆற்றல் - வலிமை.

22. அற்றார் - செல்வமில்லாதவர், அழிபசி - கடும்பசி, பெற்றான் - செல்வமுடையவன், பொருள்வைப்பு - பிற்காலத்தில் உதவும்படி சேமித்து வைத்தல்.

23. வசை - பழி, இசை - புகழ்.

24. பூப்பர் - வளம்பெற்று விளங்குவர், அற்றார் - பயனற்றவர், மற்றுதல் - எப்போதும் சிறந்து விளங்குதல்.

25. வலியார் - வல்லமையுடையவர், மெலியார் - மெலிந்தவர்.

26. வானுயர் - வானத்தைப் போன்ற உயர்ந்த, எவன் - என்ன பயன், குற்றப்படின் - தவறு செய்தால்.

27. அளவல்ல - அளவல்லாதவை, வீவர் - கெடுவர், தேற்றாதவர் - நம்பித் தெளியாதவர்.

28. அன்ன - போன்ற, எய்யாமை - அவன் அறியாமலே, அறம் - நன்மை.

30. இறந்தார் - கோபம் மிகுந்தவர், இறந்தார் அனையர் - இறந்தவருக்குச் சமமானவர், துணை - ஒப்பாவர்.

31. இன்னு - துன்பம்.

32. கூற்று - யமன்.

33. கருதுப - எண்ணுவன, கோடியும் அல்ல பல - கோடிக்குமேல் மிகப்பல.

34. தொட்டனைத்து - தோண்டிய அளவுக்கு.

35. கேடில் - அழிவற்ற, விழுச் செல்வம் - சிறந்த செல்வம், மாடு - செல்வம்.

36. இன்னாது - கொடியது, திரு - செல்வம்.

37. கேளாத்தகையவே - செவிட்டுத்தன்மை உடையனவே, கேள்வி - கேள்வி அறிவால், தோட்கப்படாத - துளைக்கப்படாத.

38. பேதைமை - அறியாமை, அறிவார் - அறிவுடையவர்.

40. வியவற்க - (தன்னைத்தான்) வியந்து மதியாதிருப்பானாக, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், நயவற்க - புரிய விரும்பாதிருப்பானாக, நன்றி - நன்மை.

41. ஊதியம் - இலாபம், மதலையாம் சார்பிலார்க்கு - தம்மைத்தாம் தாங்கும் துணை இல்லாதவர்க்கு.

42. ஊங்கு - காட்டிலும், அல்லல் படுப்பது - துன்பப்படுத்துவது.

43. இழுக்கு - குற்றம்.

44. அஃது இறந்து - அதையும் தாண்டி, ஊக்கின் - மேலும் ஏற முயன்றால், இறுதி - முடிவு.

45. எய்தற்கரியது - கிடைத்தற்கு அரிய காலம், இயைந்தக்கால் - வாய்க்குமானால், அந்நிலையே - அப்போதே.

46. தேறற்க - நம்பாதே, தேராது - ஆராயாமல், தேறுக - சந்தேகப்படாமல் நம்பு.

47. வினை - காரியத்தின் தன்மை, எய்த - பொருந்த.

48. சுற்றப்பட - சூழப்பட.

49. உள்ளியது - எண்ணியது, மற்றுந்தான் உள்ளப்பெறின் - விடாமல் எண்ணினால்.

50. விழையான் - விரும்பாதவன், விழைவான் - விரும்புகிறவன், கேளிர் - சுற்றத்தார், துடைத்து - நீக்கி, ஊன்றும் - தாக்குகின்ற.

52. உறவரினும் - மிக வந்தாலும்.

53. கடை - கீழானவர், அவை - சபை.

54. திறனறிந்து - திறமையறிந்து.

55 தானடங்கா - தான் அவற்றின் நெறியில் ஒழுகாத.

56. குன்றுவர் - தாழ்வடைவர், குன்றுவ - தாழ்வுக்குக் காரணமான செயல்களை, குன்றி - குன்றிமணி, அனைய - அவ்வளவாக.

57. அணியுமாம் - பாராட்டுவான்.

58. சால்பு - பெருமை, பயத்தது - பயனுடையது.

60. கிழவன் - நிலம் உடையவன், செல்லான் - சென்று பார்க்காமல், புலந்து - வெறுத்து, ஊடிவிடும் - பிணங்கிவிடும்.

# அகராதி

### அ - ஆ

அகழ்தல் — தோண்டுதல்
அங்கை — உள்ளங்கை
அச்சுறுத்தி — பயமுறுத்தி
அடவி — காடு
அண்டம் — உலகம்
அணி — ஆபரணம்
அணுக்கம் - சமீபம்
அத்தன் — கடவுள் அல்லது உயர்ந்தோன்
அதிபன் - தலைவன்
அமர் — போர்
அமையாது - பொருந்தாது
அரங்கு — மேடை
அரங்கேற்றம் — ஒருவர் தாம் செய்த நூலைச் சபையிலுள்ள பெரியோர்களுக்குப் படித்துக் காட்டி அதனை வெளியிட அவரது சான்று வாங்கல்
அரண் — காவல்
அரன் — சிவன்
அரிதின் — அருமையாக
அரிய — அருமையான
அரியணை — சிம்மாசனம்
அருவி — மலையிலிருந்து விழும் ஆறு
அவலம் — துன்பம்
அவை — சபை
அறம் — தருமம்
ஆசான் — குரு, உபாத்தியாயன்
ஆய்வு — தேர்வு

### இ - ஈ

இசைந்திலேன் — சம்மதித்திலேன்
இடர் — துன்பம்
இதழ் — பூவிதழ்
இந்திரவிழா — மழையின் பொருட்டு இந்திரனை வழிபடும் திருநாள்
இரப்பவர், இரவலர் — யாசிப்பவர்
இருக்கை — ஆசனம்
இலச்சினை — முத்திரை
இழித்து — பழித்து
ஈட்டு — திரட்டு
ஈர்க்க - கவர

### உ - ஊ

உரம் — வலிமை
உலையா — அழியாத
உறை — வாசஞ்செய்
உறைவிடம் — வசிக்குமிடம்
ஊக்கினர் — உற்சாகமூட்டினர்
ஊர்ந்து — நகர்ந்து
ஊழி - விதி

### எ - ஐ - ஒ

என்ஞான்றும் — எப்பொழுதும்
எட்டுணை — எள்ளளவு
எடுத்துக்காட்டு — மேற்கோள் அல்லது உதாரணம்
எய்து — அடை
எய்துவர் — அடைவர்
எரியுண்ண — தீப்பற்ற
எழில் — அழகு
ஐயந்திரிபற — சந்தேகமும் மயக்கமும் நீங்க
ஐயாட்டைப் பருவம் — ஐந்தாம் வயது
ஒப்பனை — அலங்கரிப்பு
ஒளி — பிரகாசம்
ஒன்பான் சுவை — ஒன்பது சுவை

### க - கா

கட்புலன் — கண் பார்வை
கதிரவன் — சூரியன்
கமலவாவி — தாமரைக் குளம்
கரி — யானை, நெருப்புக் கரி
கருவூலம் — பொக்கிஷம்
கல்வி — வித்தை
கலித்தெழுந்து — ஒலியிட்டு எழுந்து
கழல் — வீரத்தண்டை
களிறு — ஆண் யானை

காதல் — அன்பு
கால் வாங்குதல் — அடியெடுத்தல், போதல்
காவியம் — காப்பியம், சிறந்த கதா நாயகனைப்பற்றிக் கூறும் பெரிய நூல்
கானம் — வனம், இசைப் பாட்டு

### கி - கு

கிழார் — உரியோர், தோட்டம்
குரவர் - ஆசிரியர்
குருதி — இரத்தம்
குழாம் — கூட்டம்
குழுமினர் — கூடினர்
குறவர் — ஒரு சாதியார்
குறள் — இரண்டடிகளால் யாக்கப் பட்ட வெண்பா, குட்டை
குறுநிலம் — சிறு நிலப்பரப்பு

### கூ - கோ

கூலவாணிகன் — தினை, சாமை முதலிய தானியம் விற்போன்
கூற்று — எமன்
கோட்பாடு — கொள்கை
கோடாமை — நேர்மை
கோநகர் — தலை நகரம்
கோப்பெருந்தேவி — (அரசனின்) பட்டத்தரசி
கோவை — ஒரு வகைத் தமிழ் நூல், வரிசை
கோள் — புறங்கூறல்

### ச - சா

சமயம் — தருணம், மதம்
சமயோசிதம் — சந்தர்ப்பத்திற் குத் தக்கவாறு
சராசரங்கள் — நடையுள்ளதும் இல்லாததுமாகிய பிரபஞ்சம்
சாடிய — மோதிய
சாதனங்கள் — வசதிகள்
சாதுரியம் — சாமர்த்தியம்
சாயை — பிரதி பிம்பம்
சாரத்தியம் — தேரோட்டும் வித்தை
சாரற்காலம் — மாரி காலம்
சான்று — மேற்கோள்

### சி - சு

சிக்கல் — குழப்பம்
சிணுங்க — மூக்காலே அழ
சிறார் — சிறுவர்
சுதன் — மகன், இராச குமாரன்

### சூ - செ - சோ

சூடு கொள் — வெப்பம் அடை
செயலாற்றுதல் — தொழில் புரிதல்
செருக்கு — அகங்காரம்
செவ்விதின் — செம்மையாக
செவிலித்தாய் — வளர்ப்புத் தாய்
செவிவழிச் செய்தி — காதோடு வழிவழியாக (கர்ண பரம்பரை யாகக்) கேட்ட விஷயம்
செறிவு — நெருக்கம்
சென்னி — தலை, சோழன்
சோழி — பலகறை

### த - தா

தக்கார் — தகுதி உடையோர்
தட்பம் — குளிர்ச்சி
தண்டு — சந்நியாசித்தடி
ததும்ப — வழிய
தயக்கம் — தேங்குதல், பின் தங்கல்
தரன் — தரம்; மேல் கீழ் என்னும் பிரிவு
தருக்கி — கர்வங்கொண்டு
தழைத்தோங்கி — ஓங்கி வளர்ந்து
தாரை — விண்மீன், கால்வாய்
தானைத் தலைவர் — சேனாபதி

### தி - தீ

திங்கள் — சந்திரன், மாதம்
திரு — இலக்குமி, செல்வம்
திருடி — கள்ளி, கவர்ந்து
திரை — திரைச்சீலை
திவலைகள் — துளிகள்
திளைத்தல் — தோய்தல்
திறல் — வலி, போர்

தீக்கொளுவி – நெருப்புக் கொளுத்தி

## து - தொ

துப்புரவு – பரிசுத்தம், மேன்மை
துறக்கம் – சுவர்க்கம்
துறவு – இல்லறத் துறக்கம்
துறை – நீர்த்துறை
தொகுத்து – ஒன்ருகச் சேர்த்து

## ந - நா

நங்கை – பெண்
நடாத்து – வழி நடத்து, செய்
நல்லியல்பு – நற்குணம்
நலிவு – மெலிவு, அழிவு
நறுமணம் – நல்ல வாசனை
நாவாய் – மரக்கலம்

## நி - நு

நிகழ்ச்சி – சம்பவம்
நிரந்தரம் – எப்பொழுதும்
நிலக்கிழார் – நில உரிமையாளர்
நிறுவ – ஸ்தாபிக்க, அமைக்க
நுண்கலை – வேலைத்திறமுள்ள, நுட்பமான கல்வி
நுண்ணிது – சிறியது

## நெ - நை

நெஞ்சையள்ளும் – மனத்தைக் கவரும்
நெடுந்தேர் – பெரிய தேர்
நைய – வருந்த, நசுங்கும்படி

## ப - பா

பக்கலில் – அருகில்
பகழி – அம்பு
பட்டினம் – கடற்கரை நகரம்
பணி – தொழில்
பதிலிறுத்தான் – விடையளித்தான்
பயக்கத்தக்க – அளிக்கக்கூடிய
பரி – குதிரை
பரிசில் – வெகுமதி
பல்லியங்களார்ப்ப–பல வாத்தியங்கள் ஒலிக்க
பாகன் – யானை, குதிரை முதலியன நடத்துவோன்
பாணர் – பாடிப் பிழைக்கும் ஒரு வகை இனத்தார்

## பி - பீ

பிணக்கு – கோபம்
பிரசங்கம் – விரித்துப் பொருள் சொல்லுதல்
பிரஞ்ஞை – உணர்ச்சி
பிறழ்வு – தவறுதல், ஒழுங்கின்மை
பீடித்தது – வருத்தியது

## பு - பெ

புரவலர் – காப்பாளர், அரசர்
புனைந்தது – அலங்கரிக்கப்பட்டது
பெரும்பிரிவெய்தினர் - இறந்தார்
பெருமிதம் – களிப்பு

## பே - பொ - போ

பேரவை – மகாசபை
பேருவகை – மிக்க களிப்பு
பொருது – போரிட்டு
பொற்குவியல் – தங்கக் குவியல்
பொறிகள் – விசைகள், இயந்திரங்கள்
போந்து – பனை மரம், வந்து

## ம - மா

மக்கள் – ஜனங்கள்
மணம் – கலியாணம்
மத்தயானை – மதம்பிடித்த யானை
மதி நுட்பம் – அறிவுக் கூர்மை
மரபு – வமிசம்
மலை மகளார் – பார்வதியார்
மறை – வேதம்
மன்றம் – சபை
மனையறம் – இல்லறம்

## மி - மு

மிளிர்தல் – விளங்குதல்
முகமன் – உபசாரம்

முகுந்தன் — மகாவிஷ்ணு
முதுபெரும்புலவர் — வயது மிக்க புலவர்
முரண் — வேறுபாடு, மாறுபாடு
முழை — குகை
முற்றம் — மேல் தளம், வாசல்

### மூ - மே

மூங்கை — ஊமை
மூதறிஞர் — பேரறிஞர்
மேகலை — பெண்கள் இடையில் அணியும் ஒரு வகை ஆபரணம்

### வ - வா

வசை — இகழ்ச்சிச் சொல்
வண்ணம் — நிறம், அழகு
வருணனை — சிறப்பித்தல், விவரித்தல்
வருவாய் — வருமானம்
வலவன் — சமர்த்தன், தேர்ப் பாகன்
வழுத்து — போற்று
வழுதி — பாண்டியன்
வனப்பு — அழகு
வாய்ப்பு — தருணம்
வான் புகழ் — உயர்ந்த புகழ்

### வி - வீ

விண்ணுலகம் — மேலுலகம்
விதூஷகன் — இராச சபையில் உள்ள கோமாளி
விரகறிந்தார் — உபாயம் அறிந்தார்
விரவி — கலந்து
விழைந்து — விரும்பி
விறலியர் — பாண் மகளிர்
வீடு — இல்லம், மோக்ஷம்

### வெ - வே

வெகுண்டு — கோபித்து
வெகுளி — சினம்
வெப்பம் — உஷ்ணம்
வெள்ளிடை மலை — வெளிப்படை
வேளாண் குலம் — வேளாளச் சாதி

